# ஐங்குறு நூறு

மூலமும் உரையும்

தி. சதாசிவ ஐயர்



International Institute of Tamil Studies
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# ஐங்குறுநூறு

## மூலமும் உரையும்

---

பதிப்பாசிரியர்

**தி. சதாசிவ ஐயர்**



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

**தரமணி, சென்னை 600 113.**

# Bibliographical Data


| | | |
|---|---|---|
| Title | : | **Iṅkuṟu nūṟu** |
| Author | : | **T. Sadhasiva Iyyar** |
| Publisher | : | **International Institute of Tamil Studies,**<br>C.I.T. Campus, Tharamani,<br>Chennai - 600 113. |
| Publication No. | : | **346** |
| Language | : | **Tamil** |
| Date of Publication | : | **1999** |
| Edition | : | **Reprint** |
| Paper used | : | **TNPL 18.6 Kg Super Printing** |
| Size of the book | : | **1/8 Demy** |
| Printing types | : | **10 Points** |
| No.of pages | : | **XXXII + 360 = 392** |
| Price | : | **85/-** |
| No. of Copies | : | **1200** |
| Subject | : | **Literature** |
| Wrapper Design | : | **V. Karunanithy** |
| Printed by | : | ***The PARKAR***<br>293, Ahamed Complex, 2nd Floor,<br>Royapettah High Road, Chennai 14. |

---

தமிழ் வளர்ச்சித்துறையின் அரிய நூல் வெளியிடும் திட்டத்தின்கீழ் நிதியுதவி பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது.

முனைவர் ச. சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 11.

## அணிந்துரை

ஒரு மொழியில் தோன்றும் இலக்கியங்கள் அம்மக்களின் வாழ்வியல் நெறிகளை அறியத் துணைசெய்கின்றன. அந்த வகையில் பழந்தமிழ் மக்களின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் நமக்கு உணர்த்துபவை சங்க இலக்கியங்கள் ஆகும். மேலும் தமிழ்ச் சமூகத்தின் வரலாற்றையும் சங்க இலக்கியங்களின் வழி அறியலாம்.

சாதி, சமய வேறுபாடுகள் வளராத சமூகம் சங்க காலச் சமூகம். இத்தகைய சிறப்புப்பெற்ற சங்கச் சமூக இலக்கியங்களை மேலை நாட்டறிஞர் போற்றுகின்றனர். சங்க இலக்கியங்களால் தமிழ்ச்சமூகம் பெருமை பெற்றது எனலாம். சங்க இலக்கியங்களை அகம் என்றும் புறம் என்றும் இரு வகையாகப் பிரிப்பர். அகம் என்பது காதலையும் புறம் என்பது காதலைத் தவிர்த்த பிற நிலைகளையும் குறிக்கும்.

சங்க இலக்கியங்களைப் பாட்டு, தொகை என்று இரண்டாகப் பிரிப்பர். இவற்றில் இரண்டாவதாக உள்ளது தொகை நூலாகும். தொகை என்பது எட்டுத்தொகை எனப்படும்.

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்று
இத்திறத்த எட்டுத் தொகை

என்ற பழம்பாடல் எட்டுத்தொகை நூல்களைப் பற்றி விளக்கம் தருகிறது.

இந்த எட்டுத் தொகையில் மூன்றாவதாக இடம் பெற்றுள்ளது ஐங்குறுநூறு.

ஐங்குறுநூறு எனும் இந்நூலைத் தொகுப்பித்தவர் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை. தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர்க்கிழார். 'புலவர்கள் போற்றும் புலவர்' என்பதால் 'புலத்துறை முற்றிய கூடலூர்க் கிழார்' என்று சிறப்பாக அழைக்கப்பட்டார்.

நற்றிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு முதலியவை அகப்பாடல்களைக் கொண்ட நூற்களாகும்.

பதிற்றுப்பத்து, புறநானூறு முதலியவை புறப்பாடல்களைக் கொண்ட நூற்களாகும். பரிபாடலில் மட்டும் அகமும் புறமும் கலந்த பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

ஐங்குறுநூறு எனும் இந்நூல், ஐந்திணைப் பாகுபாடுகளைப் பின்பற்றி அமைந்த நூலாகும். இவ்வாறு திணையைப் பின்பற்றி அமைந்த சங்க நூல்கள் இரண்டாகும். ஒன்று ஐங்குறுநூறு, இரண்டாவது கலித்தொகை.

மருதத் திணையை ஓரம்போகியாரும் நெய்தல் திணையை அம்மூவனாரும் குறிஞ்சித் திணையைக் கபிலரும் பாலைத் திணையை ஓதலாந்தையாரும் முல்லைத் திணையைப் பேயனாரும் பாடியுள்ளனர். இவர்கள் ஐவரும் ஒவ்வொரு திணைக்கும் 100 பாடல்கள் வீதம் 500 பாடல்கள் பாடியுள்ளனர். கடவுள் வாழ்த்துப் பாடலைச் சேர்த்து மொத்தம் 501 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூலில் உள்ள கடவுள்வாழ்த்துப் பாடலைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியுள்ளார். அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, நற்றிணை முதலிய நூல்களிலும் இவரது கடவுள் வாழ்த்துப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. பாரதக் கதையை இவர் தமிழில் பாடியதால் 'பாரதம் பாடிய பெருந்தேவனார்' என்று சிறப்பாக அழைக்கப்பட்டார்.

ஒவ்வொரு 100 பாடல்களையும் பத்துப் பத்தாகப் பிரித்து அப்பத்தில் உள்ள, கருத்தாழம் மிக்க தொடர்களைத் தலைப்பாக அமைத்திருப்பது பாராட்டுக்குரியது.

எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ள அகநானூறு, புறநானூறு ஆகிய இரு நூல்களிலும் 400 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஆனால் ஐங்குறுநூற்றில் 500 பாடல்கள் இடம்பெற்றுள்ளமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

தமிழ்ப் பாடல்களைப் பத்துப் பத்தாகவும் நூறு நூறாகவும் பகுத்துப் பெயரிட்ட முறை தொன்றுதொட்டு இருந்து வருகிறது. பத்துப் பாடல்களைக் கொண்ட தொகுப்பைப் பதிகம் என்றும் 100 பாடல்களைக் கொண்ட தொகுப்பைச் சதகம் என்றும் குறிப்பிடுவர்.

நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு முதலிய நூற்களில் இடம்பெற்றிருப்பவை தனிநிலைச் செய்யுள்களாகும். ஐங்குறுநூறு, கலித்தொகை முதலிய நூல்களில் இடம் பெற்றிருப்பவை தொடர்நிலைச் செய்யுள்களாகும்.

தொடர்நிலைச்செய்யுள் என்பது பொருளும் சொல்லும் ஒன்றை ஒன்று தழுவி அமையப்பெற்றிருக்கும். ஐங்குறுநூற்றில் உள்ள பாடல்கள் அகவற்பாவால் அமைந்தவை. அவை 3 அடிச் சிற்றெல்லையும் 6 அடிப் பேரெல்லையும் கொண்டவை. அகவற்பாவின் சிற்றெல்லை 3 அடியாகும்.

ஒரு பொருளைப் பற்றி விரித்துப் பாடுவது மிகவும் எளிது. ஆனால் சுருக்கமாகப் பாடுவது கடினம். ஐங்குறுநூறு சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் உத்தியைப் பின்பற்றி இயற்றப் பட்ட பாடல்களைக் கொண்ட நூலாகும். இந்நூலுள் உள்ளுறை, இறைச்சி முதலியவை சிறப்பாக ஆளப்பட்டுள்ளன.

டாக்டர் உ.வே. சாமிநாதஐயர் அவர்கள் 1903இல் இந்நூலை முதன்முதலாகப் பதிப்பித்தார். டாக்டர் உ.வே. சாமிநாதஐயர் தமது நூலில் 129, 130 ஆகிய பாடல்கள் கிடைக்கவில்லை என்றும் 416, 490 ஆகிய பாடல்களில் இரண்டாம் அடி சிதைந்துள்ளது என்றும் குறிப்பிட்டுள்ளார். ஐங்குறுநூறைப் பதிப்பித்த அவ்வை துரைசாமி, ஆசிரியர் சீர்காழி கோவிந்தசாமி ரெட்டியார் தந்த கைப் பிரதியில் 490ஆம் பாடல் முழுமையாக உள்ளது எனக்

குறிப்பிட்டுள்ளார். மேலும் ஔவை துரைசாமி, 416ஆம் பாடலில் இரண்டாம் அடியில் உள்ள சீரை முதலடியில் ஈற்றுச் சீராகச் சேர்த்துப் பாட்டை நான்கு அடிகளாகத் திருத்தி அமைத்துள்ளார். எனவே அவ்வை துரைசாமிப் பிள்ளையின் கருத்துப்படி 129, 130 முதலிய பாடல்கள் மட்டும் கிடைக்கவில்லை எனக் கூறலாம்.

ஐங்குறுநூறு எனும் இந்நூலின் பதிப்பாசிரியர் ஈழத் தமிழறிஞர் தி. சதாசிவ ஐயர் ஆவார். 1910 முதல் 1940 வரை உள்ள காலக்கட்டத்தில் யாழ்ப்பாணத்தில் செல்வாக்கு மிக்க தமிழறிஞர்களுள் ஒருவராக விளங்கியவர் தி. சதாசிவ ஐயர்.

இவர் கல்வித்துறையில் கல்வியியல் ஆய்வாளராகப் (Inspector of Schools) பணியில் சேர்ந்து மாவட்டக் கல்வியாளராகப் (District Inspector) பணி உயர்வு பெற்று, பின்னர்ப் பணியில் இருந்து ஓய்வு பெற்றார். இப்பதவி காரணமாக இலங்கையின் பல பாகங்களிலும் பணியாற்றினார்.

இவருடைய இலக்கிய ஈடுபாடு போற்றத்தக்கது. கிழக்கிலங்கையிற் கல்வியியல் ஆய்வாளராகப் பணியாற்றிய பொழுது, மட்டக்களப்புப் பகுதியில் வழங்கும் நாட்டுப்புறப் பாடல்களான வசந்தன் பாடல்களைத் தொகுத்துப் பதிப்பித்தார். அந்நூலின் பெயர் வசந்தன் கவித்திரட்டு. இலங்கை நாட்டுப்புற இலக்கியத்துறையில் தொடக்கக் காலத்தில் வெளிவந்த நூற்களில் இதுவும் ஒன்று.

சதாசிவ ஐயர் யாழ்ப்பாண ஆரிய திராவிட பாஷாபி விருத்திச் சங்கச் (The Jaffna Oriented Studies Society) செயலாளராகப் பணியாற்றியுள்ளார்.

சங்கப் பணிகளைச் சிறப்பாக வழி நடத்தியவர். இந் நிறுவனம் மதுரைத் தமிழ்ச் சங்கம் போன்று பண்டித, பால பண்டித, பிரவேச பண்டிதத் தேர்வுகளை நடத்திச் சான்றிதழ்களை வழங்கிற்று. யாழ்ப்பாணத் தமிழறிஞர்கள் பலர் ஆரிய திராவிட பாஷா அபிவிருத்திச் சங்கப் பண்டிதர்கள்.

இந்தத் தேர்வுக்கு அரசு அங்கீகாரம் அளித்திருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்நிறுவனம் 'கலாநிதி' எனும் ஆராய்ச்சி இதழை வெளியிட்டது. அதன் ஆசிரியராகத் தி. சதாசிவ ஐயர் பணியாற்றினார். யாழ்ப்பாணத்தில் ஆறுமுக நாவலர், சி. வை. தாமோதரம் பிள்ளை முதலியோர் பதிப்புப் பணியில் முன்னோடிகளாக விளங்கினர். அவர்களைத் தொடர்ந்து அவர்கள் காலத்திற்குப் பின்னர்ப் பதிப்புப் பணியில் ஈடுபாட்டுடன் உழைத்த அறிஞர்களில் ஒருவர் தி. சதாசிவ ஐயர்.

ஐங்குறுநூறு எனும் இந்நூலில் காணப்படும் இவருடைய பதிப்புரை, இவருடைய தமிழ்க் கல்வியின் ஆழத்துக்கும் அகலத்திற்கும் எடுத்துக்காட்டாகும்.

யாழ்ப்பாணத்திலிருந்த ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம் இந்நூலை 1943ஆம் ஆண்டு வெளியிட்டது.

டாக்டர் உ.வே. சாமிநாதஐயர் பதிப்பித்த ஐங்குறுநூறுக்குப் பழைய உரை எழுதிய உரையாசிரியர் தெரியவில்லை. அதேபோல் ஈழத்தில் வெளியிடப்பட்ட இந்த நூலின் உரையாசிரியரைப் பற்றியும் அறிய இயலவில்லை. இச்செய்தியை இந்நூலின் பதிப்புரையில் காணலாம். பதிப்பாசிரியர் தி. சதாசிவ ஐயர் இந்நூலின் உரையின் எழுத்துருவை திரு. ஆ. தா. சுப்பிரமணியம் தந்ததாகவும் அதில் ஐங்குறுநூற்றின் பாடல்கள் முழுவதற்கும் பொழிப்புரை, இலக்கணக் குறிப்பு எழுதப்பட்டு இருந்ததாகவும், எழுத்துருவைத் தந்த சுப்பிரமணியத்தின் வேண்டுகோளை ஏற்று ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தின் சார்பாக வெளியிட்டதாகவும் சுட்டியுள்ளார். இந்த எழுத்துருவைத் தந்த ஆ. தா. சுப்பிரமணியம் இந்த உரையை மேலைப் புலோலி நா. கதிரைவேற்பிள்ளை மாணவரான ஆறுமுகம் பிள்ளை எழுதியிருக்கலாம் எனக் கருதுகிறார். 1920இல் மதுரையில் இருந்து வெளிவந்த 'செந்தமிழ்' இதழில் ஈழத்தைச் சார்ந்த தமிழறிஞர் ஆறுமுகம் பிள்ளை என்பவர் தொடர்ந்து ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார்.

ஆயினும் செந்தமிழ் இதழில் எழுதிய ஆறுமுகம் பிள்ளைதான் இந்த நூலுக்கு உரை எழுதிய ஆறுமுகம் பிள்ளை என்று உறுதியாகக் கருத இயலவில்லை என்று கலாநிதி சிவலிங்க ராஜா தம்முடைய ஆய்வுரையில் குறிப் பிட்டுள்ளார். ஈழத்தமிழ் இலக்கிய வரலாற்றில் சுட்டப் படுகின்ற இவ்விரு ஆறுமுகம் பிள்ளைகளில் எந்த ஆறுமுகம் பிள்ளை உரை எழுதினார் என்று திண்ணமாகக் கூற முடி யாது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

டாக்டர் உ.வே. சாமிநாதஐயர் பதிப்பித்த ஐங்குறு நூற்றின் முதல் பதிப்பு 1903ஆம் ஆண்டிலும் இரண்டாவது பதிப்பு 1920ஆம் ஆண்டிலும் வெளிவந்தன.

இந்த நூலுக்கு உரை எழுதிய ஆசிரியர் உ.வே. சாமிநாத ஐயர் 1920ஆம் ஆண்டு வெளியிட்ட ஐங்குறுநூற்றுப் பதிப்பை அடிப்படையாகக் கொண்டு எழுதியுள்ளார்.

டாக்டர் உ.வே. சாமிநாதஐயர் ஐங்குறுநூற்றைப் பழைய உரையுடன் வெளியிட்டார். ஆயின் ஐங்குறுநூறு முழுமைக்கும் உரையில்லை. ஐங்குறுநூறு முழுமைக்கும் முதன்முதலாக உரை எழுதியவர் இந்த நூலின் உரையா சிரியர் ஆவார். இவருக்குப் பின்னரே ஐங்குறுநூறு முழு மைக்கும் அவ்வை துரைசாமிப்பிள்ளை உரை எழுதினார். அவருடைய உரை 3 தொகுதிகளாக வெளிவந்தன. அண்ணா மலைப் பல்கலைக்கழகம் 1957ஆம் ஆண்டில் முதல் தொகுதி யையும் இரண்டாம் தொகுதியையும் 1958ஆம் ஆண்டில் மூன்றாம் தொகுதியையும் வெளியிட்டது. அவ்வை துரை சாமிப் பிள்ளைக்குப் பின் பெருமழைப்புலவர் சோமசுந்தர னார் நூல் முழுமைக்கும் உரை எழுதினார். அவருடைய உரை யைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் முதற் பதிப்பாக 1961இல் வெளியிட்டது.

மேலும் டாக்டர் உ.வே. சாமிநாதஐயர் அவர்களுக்கு ஈழத்தைச் சார்ந்த ஜே. எம். வேலுப்பிள்ளை என்பவர் ஐங் குறுநூறு என்னும் ஏட்டுப் பிரதியைத் தந்துள்ளார். சங்க

இலக்கியப் பயிற்சி ஈழத்தில் செல்வாக்குப் பெற்றிருந்ததை இதன் மூலம் உணரலாம்.

தமிழன்பர்கள் இந்த நூலின் உரைத் திறத்தை அறிந்து கொள்ளத் துணைநிற்கும் வகையில் முனைவர் சிவலிங்க ராஜா எழுதிய **ஈழத்துத் தமிழ் உரை மரபு** எனும் ஆய்வேட்டில் இந்நூல் குறித்து இடம்பெற்றுள்ள கருத்துக்களைச் சுருக்கமாகத் தந்துள்ளோம்.

இந்நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திரு. சு. இராமகிருட்டிணன் இ.ஆ.ப. அவர்களுக்கும் எங்கள் நன்றி.

அரிய நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் இந்நூலை வெளியிட நிதி நல்கிய தமிழ் வளர்ச்சித்துறையின் முன்னாள் இயக்குநர் முனைவர் ச. நாகராசன் அவர்களுக்கும், இந்நாள் இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

இந்நூலினைக் கவினுற அச்சிட்டுத்தந்த 'தி பார்க்கர்' நிறுவன உரிமையாளர் திரு. வே. கருணாநிதி அவர்களுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

**இயக்குநர்**

# உள்ளுறை

# ஆய்வுரை

## முனைவர் சிவலிங்க ராஜா

ஐங்குறுநூற்றிற்கு ஈழத்து அறிஞர் எழுதிய உரையின் தன்மைகளைப் பின்வருமாறு பகுத்தாராயலாம்.

1. துறை சுட்டி விளக்குதல்
2. பொருள் கூறுதல்
3. சொற்பொருள் விளக்கம் கூறுதல்
4. அகப்பொருள் விளக்கம் உரைத்தல்
5. மேற்கோள் காட்டுதல்
6. இலக்கணக் குறிப்புத் தருதல்
7. பாடபேதம் சுட்டுதல்

துறைசுட்டி விளக்கல்

ஐங்குறுநூறு சுட்டும் துறைகளை முதலிற் குறிப்பிட்டு விளக்கியதன் பின்னரே இவ்வுரையாசிரியர் பொருள் கூறத் தொடங்குகிறார். அகப்பாடல்களின் திறவுகோலாயமைவது துறையேயெனலாம். நச்சினார்க்கினியர் முதலான உரையாசிரியர்களும் தொல்காப்பிய உரையிலே துறை விளக்கந் தரும் இடங்களிற் பெருமளவுக்கு ஐங்குறுநூற்றுச் செய்யுட்களை மேற்கோள்காட்டி உள்ளமையும் அவதானிக்கத் தக்கது.

அகப்பொருளிலக்கண மரபு மீறாது துறை சுட்டி விளக்கும் இவ்வுரையாசிரியர் தமக்கு ஆதாரமாகத் தொல்காப்பியத்தையே கொண்டுள்ளார். எனினும் சிற்சில இடங்களில் இறையனார் களவியலுரையையும் பிற்கால அகப்பொருளிலக்கண மரபுகளையும் உள்வாங்கிச் செல்வதையும் அவதானிக்க முடிகின்றது.

ஒவ்வொரு பத்திற்கும் துறைகளைத் தெளிவாகக் குறிப்பிட்டு விளக்குவது இவருரையின் குறிப்பிடத்தக்க சிறப்பியல்பு.

ஐங்குறுநூற்றுப் பழைய உரையாசிரியர் துறை சுட்டும் பொழுது விதிகாட்டி விளக்கவில்லை. ஆனால் இவர் ஒவ்வொரு பத்துக்கும் துறைசுட்டி விளக்கும் பொழுது பொருத்தமான பொருளிலக்கண விதியை மேற்கோளாகக் காட்டி விளக்கிக் கூறுகின்றார்.

தாம் சுட்டிய ஒவ்வொரு துறைக்கும் விதியாயமையும் இலக்கண நூற்பாத் தொடர்களை விளக்கமாகத் தந்து, அவற்றிற்குப் பொருளுமுரைத்து விளக்கியமை இவரிடம் உரையாசிரியத் தன்மையும் ஆய்வறிவுச் சிந்தனைப் போக்கும் இணைந்திருந்தமையைப் புலப்படுத்துகின்றது.

பொருள் கூறுதல்

இதன்பொருள் என்று தலைப்பிட்டுச் செய்யுள் சுட்டுகின்ற பொருளைத் தெளிவாகக் கூறுகின்றார். இப்பகுதி பொழிப்புரையின் தன்மையைக் கொண்டுள்ளபோதிலும் பலவிடங்களில் விளக்கவுரைப் பாங்கினையும் கொண்டு அமைவதையும் அவதானிக்க முடிகின்றது.

பாடலின் பொருளைத் தொகுத்துப் பொழிப்புரையாகக் கூறுவதோடு தேவையானவிடத்துப் பொழிப்புரையை விரித்துப் பொருளுரைப்பதையும் அவதானிக்க முடிகின்றது. பாடலைக் கொண்டுகூட்டி, எழுவாய் எடுத்துத் திரண்ட பொருளைப் பொழிப்புரையாகக் கூறுகின்றார். சிற்சில இடங்களில் எழுவாயை வருவித்துப் பொருளுரைப்பதும் உண்டு. பொழிப்புரை செறிவும் இறுக்கமும் உடையதாகக் காணப்பட்டபோதிலும் தெளிவும் விளக்கமும் கொண்டதாகவும் அமைந்துள்ளது.

பழையவுரையை இவ்வுரையாசிரியர் ஒரளவுக்குத் தழுவிச் சென்றுள்ளபோதும் பழையவுரை கிடைக்காத பாடல்களுக்கும் சிறப்பாக உரையெழுதியுள்ளார். இவ்வுரையாசிரியரின் இலக்கிய இலக்கண ஆளுமையையும் உரை கூறுந்திறனையும் பழையவுரை கிடைக்காத பாடல்களுக்கு எழுதிய உரைமூலம் தெளிவாகக் கண்டுகொள்ளலாம். தமது

உரை பழைய உரையில் இருந்து மாறுபடும் இடங்களில் தமது உரையுடன் பழைய உரையையும் தருகின்றார்.

சொற்பொருள் விளக்கம்

இவ்வுரையாசிரியர் சொற்பொருள் சுட்டுவதிலும் அதனை விளக்கிக் கூறுவதிலும் அதிக கவனஞ் செலுத்தினார் என்று குறிப்பிடலாம்.

பொழிப்புரைக்குக் கீழே சில அருஞ் சொற்களுக்குப் பொருள் கூறிச் செல்கின்றார். பெரும்பாலும் அகராதிப் போக்கிலேயே அருஞ்சொற்பொருள் உரைக்கின்றார்.

சொற்பொருள் உரைக்கும்பொழுது அச்சொல் வேறு இலக்கியங்களிற் பயின்றுவந்தவிடத்து அதற்குப் பண்டைய உரையாசிரியர்கள் கூறும் கருத்தினைச் சுட்டிக் காட்டுவதும் இவ்வுரையாசிரியரின் இயல்பாகும்.

சொற்களுக்குத் தனியே பொருள்கூறிய இவ்வுரையாசிரியர், சொற்பொருள் விளக்க அடிப்படையிற் சொற்றொடர்களைப் பகுத்துத் தனியே அவற்றிற்கும் பொருள் கூறிச் செல்கின்றார். சொற்பொருள் விளக்கங் கூறுவது ஒரு வகையிலே சொற்பொருள் நயம் கூறுவதாகவும் அமைகின்றதெனலாம்.

ஒரு சொற்றொடருக்குப் பொருத்தமான பல பொருளைச் சுட்டிக்காட்டி விளக்குவதும் இவ்வுரையாசிரியரின் இயல்பெனலாம். சொற்றொடர்ப் பொருளுரைக்குமிடங்களில் விருத்தியுரைப்பாங்கும், நயவுரைப்பாங்கும் காணப்படுவதையும் அவதானிக்க முடிகின்றது.

அகப்பொருள் விளக்கம்

பாடல்கள் சுட்டும் அகப்பொருட் கூறுகளைத் தெளிவுற விளக்குவதில் இவ்வுரையாசிரியர் மிகுந்த கவனஞ் செலுத்தியுள்ளார். அகத்திணை மரபின் பல்வேறு கூறுகளையும் ஆங்காங்கே இவ்வுரையாசிரியர் விளக்கிச் செல்வதையும் அவதானிக்க முடிகின்றது.

செய்யுளுக்குரிய மெய்ப்பாடும் பயனும் உரைத்துச் செல்கின்றார். பாடலின் பொருட் பரப்பை மனங்கொண்டு அகப்பொருட்கூறுகளை விரித்துரைப்பதுமுண்டு.

பொருளிலக்கணப் பரப்பிலே சர்ச்சைக்குரியதாகக் காணப்படும் சில பகுதிகளைச் சுட்டிக் காட்டித் தமது கருத்தினை முன்வைப்பதனையும் இவரது உரையினூடு காண முடிகின்றது. தமது கருத்துக்கு ஆதாரமாக அகப்பொருள் இலக்கண விதிகளையும், பண்டைய உரையாசிரியர்களின் கருத்துக்களையும் சுட்டிக் காட்டுவதும் இவரது உரையின் தன்மையாகும். ஒவ்வொரு திணையையும் அறிமுகஞ் செய்யும் பொழுது மிக விரிவாக அவற்றின் கூறுகளைத் தெளிவு படுத்துகின்றார். ஒவ்வொரு திணையின் முதற்பாடலை விளக்கும் பொழுது அகப்பொருட்கூறுகள் பலவற்றைத் தொகுத்து விளக்கம் தருகிறார்.

அகப்பொருள் விளக்கம் கூறுமிடங்களில், தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் வழியும், பண்டைய உரையாசிரியர்கள் வழியும் நின்றே தம் கருத்தைக் கூறிச் செல்கின்றார். தமது உரையினூடு அகப்பொருள் மரபு பற்றி நிலவும் கருத்து வேறுபாடுகளைச் சுட்டிக் காட்டிச் செல்வதும் இவரது வழக்கமாகும்.

சில பாடல்களுக்கு மிகச் சுருக்கமாகத் தாம் கருதியவற்றை விரித்துரைத்துச் செல்வதையும் அவதானிக்க முடிகின்றது. ஒவ்வொரு பாடலுக்கும் மெய்ப்பாடும் பயனும் கூறிச் செல்வது இவ்வுரையின் சிறப்பமிசமெனலாம்.

துறைசுட்டிவிளக்குதல் முதல், மெய்ப்பாடும் பயனும் கூறுகின்ற வரை, அகப்பொருள் மரபின் பல்வேறு கூறுகளையும் தெளிவாகவும் தேவை நோக்கி விரிவாகவும் கூறிச் செல்வது இவ்வுரையாசிரியரின் பொதுப் பண்பெனலாம்.

மேற்கோள்காட்டுதல்

துறைசுட்டிவிளக்கல், பொருள்கூறுதல், அகப்பொருள் விளக்கம் உரைத்தல், இலக்கணக் குறிப்புகள் தருதல் முத

லான அமிசங்களிலே உரைவகுத்துள்ள இவ்வுரையாசிரியர் இவ்வொவ்வோர் அமிசங்களுக்கும் பொருத்தமான மேற்கோள்களைக் காட்டியே விளக்கிக் கூறியுள்ளார். அவ்வக் குறிப்புக்களை விளக்குமிடங்களிலே உதாரணங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

பொருள் விளக்கத்திற்கு மாத்திரமன்றி ஒப்பீட்டு அடிப்படையிலே ஐங்குறுநூற்றுச் செய்யுள்களை ஆய்ந்தறியவும் இவர் காட்டும் மேற்கோள்கள் உதவுகின்றன எனலாம்.

ஒரு சொல் ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துணர்த்தும் எனத் தாம் கருதியவிடத்து, அச்சொல் வேறு பொருளில் வழங்குப் பொருளை விளக்கும் இலக்கியத்தை மேற்கோளாகச் சுட்டிக் காட்டுவதும் இவ்வுரையாசிரியரின் இயல்பு.

இலக்கிய இலக்கண நூல்களிலிருந்து மேற்கோள் காட்டித் தம் மதம் நிறுவியது போலவே பண்டைய உரையாசிரியர்களையும் பல்வேறிடங்களிலும் மேற்கோள் காட்டித் தம் கருத்தினை அரண் செய்கின்றார்.

இலக்கணக் குறிப்புக்கள்

ஐங்குறுநூறு சுட்டும் பொருளிலக்கண மரபுகளைத் தகுந்த மேற்கோள்களுடன் புலப்படுத்தியது போலவே செய்யுளிற் பயின்றுவரும் எழுத்திலக்கண, சொல்லிலக்கணக் கூறுகளையும் பொருத்தமான மேற்கோள்களுடன் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். எழுத்திலக்கணக் குறிப்புக்களைக் காட்டிலும், பொருளிலக்கணத்திற்கு அடுத்தபடியாகச் சொல்லிலக்கணக் கூறுகளுக்கே முக்கியத்துவம் கொடுத்திருக்கின்றார்.

வேற்றுமை, வேற்றுமை மயக்கம், எச்சங்கள், அசை, இடைச்சொல், ஆகுபெயர் முதலானவை பற்றித் தெளிவான நுட்பமான குறிப்புக்களைக் கூறிச் செல்கின்றார். யாப்பிலக்கணம் பற்றிய குறிப்புக்களும் தந்துள்ளார்.

செய்யுளின் பொருளை விளங்கிக்கொள்ளவும் செய்யுளின் நயத்தை உணர்ந்துகொள்ளவும் இலக்கணக் குறிப்

புக்கள் கூறிய இவ்வுரையாசிரியர், செய்யுளைத் திறனாய்வு நோக்கிலே பார்த்து மூலநூற்பாவை விமரிசிக்கும் போக்கிலேயும் இலக்கணக் குறிப்புக்களைக் கூறியுள்ளார்.

மிக நுட்பமான இலக்கணக் குறிப்புகளைப் பொருத்தமான மேற்கோள்களுடன் குறிப்பிடுவது இவ்வுரையாசிரியரின் இலக்கணப் புலமையைத் தெளிவுபடுத்துகின்றது.

பாடபேதம் காட்டுதல்

இவர் குறிப்பிடும் பாடபேதங்களிற் பெரும்பாலனவை 1920ஆம் ஆண்டு வெளிவந்த உ.வே.சாவின் பதிப்பிலே பிரதிபேதம் என்று அடிக்குறிப்பாகக் குறிப்பிடப்பட்டவையேயாகும். உ.வே.சா பதிப்பிலே இடம்பெறாத பாடபேதங்களையும் ஈழத்து உரையாசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார்.

பெருமளவுக்கு உ.வே.சா. சரியான பாடம் எனக் கொண்டவற்றையே இவ்வுரையாசிரியரும் சரியான பாடமாகக் கொள்கின்றார். எனினும் சிலவிடங்களில் உரைவழி நின்று பாடபேதங்களைச் சுட்டிச் சரியான பாடம் எதுவென நிறுவ முயலுகின்றார்.

தாம் பொருத்தமான பாடம் எனக் கருதிய பிரதிபேதங்களுக்கே இவ்வுரையாசிரியர் பொருள்கூறும் இயல்புடையவராகக் காணப்படுகின்றார். பொருத்தமின்று எனத் தாம் கருதிய பிரதிபேதங்களை, 'என்றும் பாடம்', 'எனவும் பாடம்' எனக் குறிப்பிட்டுப் பொருளுரைக்காது விட்டுவிடுவதும் இவரது இயல்பாகும்.

பிரதிபேதமாக வரும் பாடங்களின் பொருந்தாமையைத் தக்க சான்றுகாட்டிப் பலவிடங்களில் மறுத்துரைக்கும் தன்மையும் இவ்வுரையாசிரியரிடம் காணப்படுகின்றது. உ.வே.சா, பதிப்பிலே அடிக்குறிப்பாக வந்த பிரதிபேதங்கள் யாவற்றிற்கும் ஏதோ ஒருவகையிலே இவ்வுரையாசிரியர் விளக்கம் கொடுப்பதையும் அவதானிக்க முடிகின்றது. இந்தவகையிலே ஈழத்து உரையாசிரியரும் ஐங்குறுநூற்றிற்குக் குறிப்பிடக்கூடிய பாடபேதங்களைச் சுட்டிக் காட்டியவராகின்றார்.

# முகவுரை

ஐங்குறுநூறு என்பது ஒரு சங்க நூல். சங்க நூல் என்பது சங்கத்துப் புலவர்களால் இயற்றப்பட்ட நூல்கள் யாவற்றை யுங் குறிக்கும். சங்கம், தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச் சங்கம் என மூன்றாம். அவற்றுள், தலைச்சங்கம் இருந்த இடம் கடலாற் கொள்ளப்பட்ட மதுரை என்பது; இடைச் சங்கம் இருந்த இடம் கபாடபுரம் என்பது; இதுவுங் கட லாற் கொள்ளப்பட்டது. இவ்விரு சங்க காலத்து நூல்கள், தொல்காப்பியம் ஒன்று நீங்கலாக எல்லாம் கடல்வாய்ப் பட்டு அழிந்தொழிந்தன. தொல்காப்பியம் முதற் சங்கத்தி னிறுதியில் இயற்றப்பட்ட இலக்கண நூல். இனி, கடைச் சங்கம் இருந்த இடம் இப்பொழுதுள்ள மதுரை என்பது.

கடைச்சங்க நூல்களாக இப்போது உள்ளன பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்னுந் தொகை நூல்களாம். அவற்றுள், பத்துப்பாட்டு என்பது பத்தாகிய பாட்டுக்களையுடைய ஒரு நூல். இப்பத்துப் பாட்டுக்களில் ஒவ்வொன்றும் ஒரு தனி நூலாகக் கொள் ளக் கூடியதாகும். அவையாவன:

1. திருமுருகாற்றுப்படை,
2. பொருநராற்றுப்படை,
3. சிறுபாணாற்றுப்படை,
4. பெரும்பாணாற்றுப்படை,
5. முல்லைப்பாட்டு,
6. மதுரைக்காஞ்சி,
7. நெடுநல்வாடை,
8. குறிஞ்சிப்பாட்டு,
9. பட்டினப்பாலை,
10. மலைபடுகடாம்,

என்பன.

இதனை,

> முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
> பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய
> கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
> பாலை கடாத்தொடும் பத்து.

என்பதனாலறிக. இவை யாவும் ஆசிரியப் பாக்களால் ஆனவை.

எட்டுத்தொகை என்பது எட்டாகிய தொகை நூல்கள் என்னும் பொருளது. ஈண்டுத் தொகை என்பது பொருள், அளவு, பாட்டு என்னும் இவை பற்றித் தொகுக்கப்பட்ட நூல்களை உணர்த்தியது. அவ் எட்டு நூல்களாவன: 1. நற்றிணை, 2. குறுந்தொகை, 3. ஐங்குறுநூறு, 4. பதிற்றுப்பத்து, 5. பரிபாடல், 6. கலித்தொகை, 7. அகநானூறு, 8. புறநானூறு என்பனவாம். இவையாம் என்பதனை,

> நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ(று)
> ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
> கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்(று)
> இத்திறத்த எட்டுத் தொகை

என்னும் வெண்பாவாலறிக. அவற்றுள் நந்றிணை என்பது பொருளானும், குறுந்தொகை பதிற்றுப்பத்து என்பன அளவானும், பரிபாடல் கலித்தொகையென்பன பாட்டானும், ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு என்பன பொருள் அளவு என்னும் இரண்டானும் அமைந்த பெயர்களாம். அகநானூற்றிற்கு நெடுந்தொகை எனவும் மற்றொரு பெயருண்டு. இந்நூலின் பெயர்கள் இரண்டனுள், அகநானூறு என்பது 'புறநானூறு' என்பதை நோக்கியும், நெடுந்தொகையென்பது 'குறுந்தொகை' என்பதை நோக்கியும் அமைந்த பெயர்களாமென்பது இவ்வெட்டு நூலுள் 'பதிற்றுப்பத்து', 'புறநானூறு' என்னும் இரண்டும் புறப்பொருள் பற்றிய இலக்கியங்கள்; மற்றை ஆறும் அகப்பொருள்பற்றிய இலக்கியங்களாம்.

*பதினெண்கீழ்க்கணக்கு என்பது, 'மேற்கணக்கு' எனவும் 'கீழ்க்கணக்கு' எனவும் கூறப்படும் இருவகைத் தொகை நூல்களுள், கீழ்க்கணக்கு என்னும் வகையிற் சேர்ந்த பதினெட்டு நூல்களைக் குறிப்பதாகும். அப்பதினெட்டு நூல்களாவன:*

*1. நாலடியார், 2. நான்மணிக்கடிகை, 3. இனியவை நாற்பது, 4. இன்னா நாற்பது, 5. கார் நாற்பது, 6. களவழி நாற்பது, 7. ஐந்திணை ஐம்பது, 8. ஐந்திணை எழுபது, 9. திணைமொழி ஐம்பது, 10. திணைமாலை நூற்றைம்பது, 11. முப்பால் (திருக்குறள்), 12. திரிகடுகம், 13. ஆசாரக் கோவை, 14. பழமொழி, 15. சிறுபஞ்சமூலம், 16. முதுமொழிக்காஞ்சி, 17. ஏலாதி, 18. கைந்நிலை என்பனவாம். இதனை,*

நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு,

*என்பதனாலறிக. 'மேற்கணக்கு', 'கீழ்க்கணக்கு' என்பவற்றிற்கு இலக்கணம்,*

1. மேற்கணக் கெனவுங் கீழ்க்கணக் கெனவும்
   பாற்படு வகையாற் பகர்ந்தனர் கொளலே.

2. ஐம்பது முதலா ஐந்நூ றீறா
   ஐவகைப்பாவும் பொருணெறி மரபில்
   தொகுக்கப் படுவது மேற்கணக் காகும்.

3. வெள்ளைத் தொகையும் அவ்வகை வேண்டின்
   எள்ளறு கீழ்க்கணக் கெனவுங் கொளலே.

4. அடிநிமிர் வில்லாச் செய்யுட் டொகுதி
   அறம்பொரு ளின்ப மடுக்கி அவ்வகைத்
   திறம்பட வருவது கீழ்க்கணக் காகும்.

*எனவரும் பன்னிருபாட்டியற் சூத்திரங்களால் அறியப்படும்.*

## II

## ஐங்குறுநூறு

ஐங்குறுநூறு என்பது ஐந்திணையினும் (தனித்தனி) அமைந்த குறுமையாகிய நூறுநூறு செய்யுட்களை உடையது எனப் பொருளாலும் அளவாலும் இந்நூலுக்கு வந்த பெயராம். பொருள் ஐந்திணை (அகப்பொருள்); அளவு குறுமை என்பது. இந்நூல் ஐந்து புலவர்கள் தனித்தனி நூறு நூறாகப் பாடிய ஐந்நூறு செய்யுட்களும், கடவுள் வாழ்த்துச் செய்யுள் ஒன்றுமாக ஐந்நூற்றொரு அகவற்பாக்களையுடையது. இப்பாக்கள் மூன்று அடிச் சிற்றெல்லையும் ஆறு அடிப் பேரெல்லையும் உடையவை. (இந்நூலின் 129ஆம் 130ஆம் செய்யுட்கள் ஒரு பிரதியிலுங் காணப்படவில்லை. 416, 490ஆம் செய்யுட்களின் இரண்டாம் அடிகளிற் சில சீர்கள் காணப்படவில்லை.)

கடவுள் வாழ்த்துச் செய்யுள் பாரதம் பாடிய பெருந்தேவனாராலும், முதல் நூறாகிய 'மருதம்' ஓரம்போகியாராலும், இரண்டாம் நூறாகிய 'நெய்தல்' அம்மூவனாராலும், மூன்றாம் நூறாகிய 'குறிஞ்சி' கபிலராலும், நான்காம் நூறாகிய 'பாலை' ஓதலாந்தையாராலும், ஐந்தாம் நூறாகிய 'முல்லை' பேயனாராலும் பாடப்பட்டவை. இந்நூலைப் பாடியவர்கள் இவர்களென்பதை,

மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருது குறிஞ்சி கபிலர் – கருதிய
பாலையோத லாந்தை பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு.

என்னும் வெண்பாவான் அறியலாம். ஒவ்வொரு நூறும் பத்துப் பத்துக்கள் கொண்டது. ஒவ்வொரு பத்தும் ஒவ்வொரு பெயர் உடையது. இந்நூலின் ஈற்றில் "இத்தொகை தொகுத்தார் புலத்துறை முற்றிய கூடலூர்கிழார். இத்தொகை

தொகுப்பித்தார் யானைக்கட்சேய்மாந்தரஞ் சேரலிரும் பொறையார்." என்பது காணப்படுகின்றது.

இந்நூல் மிக்க சொற்சுவையும் பொருட்சுவையுமுடையது. செய்யுட்கள் தண்ணிய இனிய ஓசை நயம் வாய்ந்து தமிழ் மொழியின் விழுமிய நடைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குவன; இயற்கைக் காட்சி அழகையும், தமிழ் நாட்டுப் பழைய தமிழ் மக்களின் வாழ்க்கை இயல்புகளையும் நயம்பட உரைக்கும் செவ்விவாய்ந்தன. தேனினுமினிய மெல்லிய ஓசை நயம் பொருந்தி, சிறிய சொற்களால் இயன்று அழகிய கருத்துக்களைத் தம்முளடக்கி, அரிய மணிகள் போல மிளிரும் சிறுசிறு பாடல்களைக் கொண்ட இந்நூல் சங்க இலக்கியப் பயிற்சி தொடங்கும் மாணவர் முதற் கண் படித்தற்கு மிக ஏற்றதென்பது. அதுமட்டோ! கற்றுவல்ல பெரியோரும் இந்நூலை மிக நன்கு மதித்துப் பாராட்டிப் போற்றுவர். அகப்பொருட் பகுதியாகிய துறைகளுக்கு உதாரணமாக இந்நூற் செய்யுட்களை நிரம்ப எடுத்துக் காட்டுவர் தொல்காப்பிய உரையாசிரியர்கள். இன்னும், இறையனாரகப் பொருளுரை, இலக்கண விளக்கவுரை, யாப்பருங்கல விருத்தியுரை, நன்னூல் விருத்தியுரை, நாற்கவிராச நம்பியகப் பொருளுரை என்னும் இவற்றிலெல்லாம் இந்நூற் செய்யுட்கள் உதாரணமாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இதனால் இந்நூலின் அருமை பெருமைகள் நன்கு விளங்கக் கிடப்பனவாகும்.

இந்நூலுக்குப் பழையவுரையொன்று உண்டு. அது மிகச் சுருக்கமானது. கருத்துரை, இலக்கணக் குறிப்பு, சொல் முடிபு, பொருள் முடிபுகளையும், உள்ளுறையுவமம், இறைச்சிப் பொருள் என்பவற்றையும் அங்கங்கே எடுத்துக்காட்டிச் செல்வது. அநேக பாடல்களுக்கு உரை காணப்படவில்லை. எனினும், உள்ளவரையில் செய்யுட்களின் பொருளையறிதற்கு இவ்வுரை பெரிதும் உபகாரமானது. இந்நூலைப் பழையவுரையுடன் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் மிக்க பிரயாசத்தின் பயனாக 1903இல்

அச்சிட்டு வெளிப்படுத்தினார்கள். அந்நாள் முதல் தமிழுலகம் இவ்வரிய நூலைப் படித்தின்புறுவதாயிற்று.

> ஆன்றபயன் பிறர்நுகர அகத்தினிமை யுளதாகத்
> தோன்றியநல் அறிஞர்

ஆகிய இத்தமிழ் வள்ளல் பழம்பெருந் தமிழ் ஆகரத்திலிருந்தெடுத்துத் தமிழுலகிற்கு வழங்கிய அரும்பெறல் மணிகளுள் இந்நூலும் ஒன்றென்பது நன்றியறிதலோடு நாம் நினைவில் வைக்கற்பாலது.

○○○

# III

## தொகுப்பித்தவர் முதலியோர் வரலாறு

### *(1) யானைக்கட்சேய்மாந்தரஞ் சேரலிரும் பொறையார்*

இவர் ஒரு சேர அரசர். இவரே இந்நூலைத் தொகுப் பித்தவர். இவர் பெயர் கோச்சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை எனவும் வழங்கும். இப்பெய ரால் அறியப்படுஞ் செய்திகளை, "அரசன் என்பதோர் சாதி யும், சேரமான் என்பதோர் குடியும், வேழ நோக்கினையுடை யான் என்பதோர் வடிவும், சேய் என்பதோர் இயற் பெய ரும், மாந்தரஞ்சேரலிரும்பொறை என்பதோர் சிறப்புப் பெயரும்" எனப் பரிமேலழகர், "எப்பொருள் எத்தன்மைத் தாயினும்" என்னும் குறளுக்குக் கூறிய விசேடவுரையால் அறி யலாம். இவர் வீரம், கொடை, புலவரை ஆதரித்தல் ஆதிய குணங்களிற் சிறந்தவர்.

### *(2) கூடலூர்கிழார்*

யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும் பொறையாரின் வேண்டுகோளின்படி இந்நூலைத் தொகுத்தவர் இவரே. இவர் மலைநாட்டிலுள்ள கூடலூரிற் பிறந்தவர்; வேளாளர். கல்வி கேள்விகளிற் சிறந்தவர். இவரது புலமை மிகுதியை நோக்கி இவரைப் 'புலத்துறை முற்றிய கூடலூர்கிழார்' எனச் சான்றோர் சிறப்பித்துக் கூறுவர். இவர் கடைச் சங்கப் புல வர்களுள் ஒருவர். முற்கூறிய சேர அரசரால் ஆதரிக்கப் பெற்ற இவர், அவ்வரசர் இறந்தபோது பிரிவாற்றாது மிக வருந்தி 'ஆடியல் அழற் குட்டத்து' என்று தொடங்குஞ் செய்யுளைச் சொல்லிப் புலம்பினர்(புறநானூறு-229ஆம் செய்யுள்). இவரியற்றியனவாகக் 'குறுந்தொகை'யில் மூன்று செய்யுள் உள்ளன. பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்

றாகிய 'முதுமொழிக் காஞ்சி'யை இயற்றிய (மதுரைக்) கூட லூர்கிழார் வேறு, இவர் வேறு என்ப.

### (3) பாரதம் பாடிய பெருந்தேவனார்

பெருந்தேவனார் எனப் பிறரும் உளராதலின் அவரின் வேறென்பது தெரிய, இவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் என அடைமொழி கொடுக்கப்பட்டார். இவர் தமிழில் பாரதக் கதையை உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக இயற்றிய ஆசிரியர். இதனை, தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையிற் பரக்கக் காணலாம். இவர் பாடியனவாக 'நற்றிணை', 'குறுந்தொகை', 'ஐங்குறுநூறு', 'அகம்', 'புறம்' என்னும் இவ்வைந்து தொகை நூல்களின் காப்புச் செய்யுள் ஐந்தும், 'திருவள்ளுவமாலை' யில் வரும் "எப்பொருளும் யாரும்" என்னும் வெண்பா ஒன்றும் ஆக ஆறு செய்யுட்கள் கிடைத்திருக்கின்றன. 'பாரத வெண்பா' என இப்போது அச்சில் வந்து வழங்கும் நூலில் தெள்ளாற்றிற் போர்வென்ற ஓர் அரசன் சிறப்புங் கூறுதல் காரணமாக, இவர் பிறந்த இடம் தொண்டை நாடு எனப் படிக்காசுப் புலவர் தமது தொண்டை மண்டல சதகத்திற் கூறுவர். அது ஒருசாராராக; இன்னொரு சாரார், தெள்ளாற்றிற் போர்வென்றது கடைச்சங்கம் அழிந்த பல்லாண்டுகளுக்குப் பின்னராதலின் அதனைக் கூறும் பெருந்தேவனார், பாரதம் பாடிய கடைச் சங்கத்துப் புலவரல்லர் என்றும், அவர் பாடிய நூல் முழுவதும் அழிந்து விட்டது என்றும், அதனை மறுத்துக் கூறுவர். அதனால் இவர் தொண்டை நாட்டினர் என நிச்சயமாகச் சொல்லல் முடியாதென்பது.

### (4) ஓரம்போகியார்

இந்நூலின் முதல் நூறாகிய 'மருதம்' பாடிய இவர் கடைச் சங்கப் புலவருள் ஒருவர். மருதத் திணையை விரித்து உள்ளுறையுவமம் இறைச்சி முதலாயவற்றை அமைத்துப் பலவகை மெய்ப்பாடும் புலப்படக் காட்டித் தெளிவாகக் கூறும் ஆற்றலுடையவர். இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு பாடல்களும், குறுந்தொகையில் நாலும், ஐங்குறு

நூற்றில் முதல் நூறும், அகத்தில் இரண்டும், புறத்தில் ஒன்று மாக 109 பாடல்கள் கிடைத்திருக்கின்றன. இவற்றுள் 108 மருதத்திணை பற்றியன.

## (5) அம்மூவனார்

இந்நூலின் இரண்டாம் நூறாகிய 'நெய்தல்' பாடிய இவர் கடைச் சங்கப் புலவருள் ஒருவர். 'மூவன்' என்னும் இவர் இயற்பெயர் அடைமொழி சேர்த்து அம்மூவனார் எனப்பட்டது என ஊகிக்கலாம் போலும். இவர் பாடலில் மேலைக் கடற்கரைக்கணுள்ள தொண்டி, மாந்தை முதலாய சேரநாட்டு ஊர்கள் சிறப்பித்துப் பாடியிருப்பது பற்றி இவர் சேரநாட்டு மேலைக் கடற்கரையில் இருந்தவர் என எண்ண இடமுண்டு. பாண்டி நாட்டுக் கொற்கை நகரும், நடுநாட்டின் கண்ணதாகிய திருக்கோவலூரும், பெண்ணையாறும், சோழ நாட்டுக் கோயில்வெண்ணியும் இவராற் பாடப்பட்டுள்ளன. இவரியற்றியனவாக நற்றிணையில் பத்துப் பாடல்களும், குறுந்தொகையில் பதினொன்றும், ஐங்குறு நூற்றில் நெய்தற்பாட்டு நூறும், அகத்தில் ஆறும், ஆக 127 பாடல்கள் கிடைத்திருக்கின்றன. இவற்றுள் 126 பாடல்கள் நெய்தற்றிணை பற்றியன. இவர் நெய்தல் நிலவளத்தைச் சிறப்பித்துப் பாடுதலில் வல்லவராவர்.

## (6) கபிலர்

இந்நூலின் மூன்றாம் நூறாகிய குறிஞ்சித் திணையைப் பாடிய இவர், பாண்டி நாட்டிலே திருவாதவூரில் அந்தணர் மரபிற் பிறந்தவர்.

இது,

நீதியார் மதூக நீழல் நெட்டிலை யிருப்பை யென்றோர்
காதல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர்
சோதிசேர் வகுளநீழற் சிலம்பொலி துளங்கக்காட்டும்
வேதநா யகனார் வாழும் வியன்றிரு வாத வூரால்.

(திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்,
27வது திருவி. 3 - ம் செய்.)

என்பதனாலும் "யானே, பரிசிலன் மன்னும் அந்தணன்" (புறம்-200) என்பதனாலும் அறியப்படும். இவர் தமிழில் ஒப் பாரு மிக்காருமில்லாத பயிற்சியுடையராய்க் கடைச் சங்கப் புலவரில் ஒருவராகிப் பரணர், இடைக்காடர், ஔவையார் முதலாயினோரிடத்துப் பெருகிய நட்புடையராய் விளங்கி னவர்.

இவர் கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய வேள் பாரியின் உயிர்த் தோழனாகி, அவனது அவைக்களத்துப் புலவராக வீற்றிருந்தனர். அக்காலத்துப் பாரியைப் பாடிய பாடல்கள் படிப்போருள்ளத்தை மகிழ்விக்குந் தன்மையன. தமிழ்நாட்டு மூவேந்தரும் அழுக்காற்றினால் அவனைக் கொல்லக் கருதிப் பெரும் படையோடு சென்று அவன் மலையை வளைந்து போர் செய்த காலையில், கபிலர் அவர் களை மதியாது இகழ்ந்தும் பாரியைப் புகழ்ந்தும் பாடினர். அவனிறந்தபின்பு இவர் பிரிவாற்றாது பலவாறு புலம்பி அவன் புதல்வியரை அழைத்துச் சென்று அவர்களை மண முடிக்கும்படி பல சிற்றரசர்களை வேண்டியும் அவர் மறுத்த தனால் அவரை வெறுத்துச் சென்றனர். செல்வக்கடுங்கோ வாழியாதனிடஞ் சென்று பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்துப் பாடி அவன் அளவிறந்த பரிசில் கொடுக்கப் பெற்று மீண்டு பாரி மகளிர்க்கு மணஞ் செய்வித்தனர். பாரியைப் பிரிந்த துன்பம் பொறுக்கலாற்றாது தாமும் உயிர்விடக் கருதி, வடக்கு முகமாக இருந்து இந்திரியங்களை ஒடுக்கி உணவு முதலியன வேண்டாது உயிர் துறந்தனர்.

இவர் குறிஞ்சித்திணை பாடுதலில் ஒப்பற்ற சிறந்த வல் லமை உடையவர். இவர் 'வாய்மொழிக் கபிலன்', 'நல்லி சைக் கபிலன்', 'வெறுத்தகேள்வி விளங்குபுகழ்க் கபிலன்', 'புலனழுக்கற்ற அந்தணாளன்', 'பொய்யா நாவிற் கபிலன்' என்று பல புலவர்களாற் பலவாறாகப் புகழ்ந்து பாராட் டப்பட்டுள்ளவர்.

இவர் பாடியனவாக நற்றிணையில் 20 பாடல்களும் குறுந்தொகையில் 29-உம், ஐங்குறுநூற்றில் குறிஞ்சித் திணை நூறும், பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்தாகிய 10 பாடலும்,

அகத்தில் 16-உம், புறத்தில் 31-உம், "நெட்டிலையிருப்பை"* என்னுந் தனிச்செய்யுள் ஒன்றும், திருவள்ளுவ மாலையில் ஒன்றும், இன்னா நாற்பதில் 40-உம், ஆரிய அரசன் யாழ்ப் பிரகத்தனுக்குத் தமிழின் சிறப்பு அறிவுறுத்தற்குப் பாடிய குறிஞ்சிப்பாட்டு (பத்துப்பாட்டுள்) ஒன்றும், கலித்தொகையில் குறிஞ்சிக்கலி 29-உம் ஆக 278 பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

பதினொராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ள மூன்று பிரபந்தங்களையும் அருளிச் செய்த கபிலதேவர் இவரே என்றும்; இவரல்லர், அவர் வேறு பிற்காலத்தவர் என்றும் அபிப்பிராயபேதம் உண்டென்பதறிக.

### (7) ஓதலாந்தையார்

இந்நூலின் நான்காம் நூறாகிய பாலைத்திணையைப் பாடிய இவர் கடைச்சங்கப் புலவருள் ஒருவர். ஆதன் தந்தை என்பது ஆந்தை என மருவியது என்ப. இவர் பாலைத்திணையில் மிக்க பயிற்சியுடைவர். குறுந்தொகையில் மூன்று பாடல்களும், ஐங்குறுநூற்றில் பாலைத்திணை நூறும் ஆக 103 பாடல்கள் இவர் பாடியனவாகக் கிடைத்துள்ளன.

### (8) பேயனார்

இவர் இந்நூலின் ஐந்தாநூறாகிய முல்லைத்திணையைப் பாடியவர்; கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர் பெயர் பேயன் என்றும் பேயார் என்றுங் காணப்படுகின்றது. இவர் முல்லைத்திணையைச் சிறப்பித்துப் பாடுதலில் மிக வல்லுநர். இவர் பாடியனவாகக் குறுந்தொகையில் நாலும் ஐங்குறுநூற்றில் நூறுமாக, 104 பாடல்கள் கிடைத்துள்ளன. இவற்றுள் 103 பாடல்கள் முல்லைத்திணை பற்றியன.

---

* நெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ
வாடா தாயிற் பீடுடைப் பிடியின்
கோடேய்க் கும்மே வாடிலோ பைந்தலைப்
பரதர் மனைதொறும் உணங்குஞ்
செந்தலை யிறவின் சீரேய்க் கும்மே. (தமிழ் நாவலர் சரிதை.)

# IV

## முதலாம் பதிப்பின் பதிப்புரை

இற்றைக்குச் சில ஆண்டுகளுக்குமுன், பருத்தித்துறையைச் சார்ந்த துன்னாலைப்பதிவாசரும், கரவெட்டி மேற்கு மெதடிஸ்த தமிழ்ப் பாடசாலைத் தலைமை ஆசிரியராயிருப்பவரும் ஆகிய திருவாளர் ஆ. தா. சுப்பிரமணியம் அவர்கள் ஐங்குறுநூறு முழுவதற்கும் உரையெழுதிய காகிதக் கையெழுத்துப் பிரதி ஒன்று தம்மிடமிருப்பதாகக் கூறி அப் பிரதியையும் எனக்கு அளித்தார்கள். அதில் எல்லாச் செய்யுட்களுக்கும் பொழிப்புரை, இலக்கணக் குறிப்பு முதலியன எழுதப்பட்டிருந்தன. இவ்வுரையை எழுதியவர் யாவர் என்பது அதில் எவ்விடத்தேனுங் காணப்பட்டிலது. எனினும், இவ்வுரையாளர் பொருள் இலக்கணத்தில் மிக்க பயிற்சியுடைவர்கள் என்பதும், ம. ம. டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பித்த புத்தகத்துள்ள மூலபாடத்தையும் பழையவுரையையும் ஆதாரமாக கொண்டே இதனை எழுதியுள்ளார் என்பதும் புலனாயின.

இவ்வுரைப் பிரதியை எனக்களித்த திரு. சுப்பிரமணியமவர்கள் இதனை அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டும் என விரும்பினமையால், யான் அவர் வேண்டுகோளையும் அவர் தந்த உரைப் பிரதியையும் 'யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்க'த்து நிருவாக சபையாருக்குச் சமர்ப்பித்தேன். அவர்கள் அதனை ஆராய்ந்து பார்த்து, நூல் முழுவதற்கும் உரையிருப்பதனால் அதனை அச்சிட்டு வெளிப்படுத்துதல் நூலைப் படிப்போர்க்குப் பெரிதும் உபகாரமாக இருக்குமெனக் கண்டு, அதனைச் சங்க வெளியீடாக அச்சிட்டு வெளிப்படுத்தும்படி அப்போது சங்கக் காரியதரிசியாக இருந்த எனக்கு உத்தரவளித்தார்கள். அங்ஙனமே இவ்வுரை பிரதியிற் கண்டபடியே அச்சி டப்பட்டு இப்போது வெளியிடப்படுகின்றது.

தம்மிடத்திருந்த உரைப் பிரதியைச் சங்கத்துக்கு உபகரித்து இப்புத்தகம் வெளிவருவதற்குக் காரணரான திருவாளர் ஆ. தா. சுப்பிரமணிய ஆசிரியரவர்களது பெரும் நன்றியும் தமிழார்வமும் என்றும் பாராட்டற்பாலன. இப்புத்தகத்தை அச்சிட்டு வெளிப்படுத்துதற்கண் மிக்க துணை புரிந்த வண. சைவப்பிரகாச அச்சியந்திரசாலை அதிபருக்கும், சுன்னாகம் திருமகள் அச்சியந்திரசாலை அதிபர் திரு. நா. பொன்னையா அவர்களுக்கும் நன்றி கூறும் கடப்பாடுடையன். சிறிது சிலமுற்று எழுத்து மங்கியிருந்த சுவடியைப் பிரதிபண்ணும்போதும் அச்சுத்தாள்களை ஒப்புநோக்கித் திருத்தும்போதும் நேர்ந்த சோர்வினால் சில பிழைகள் அச்சில் உளவாயின. அவற்றுட் சில பிழை திருத்தத்திற் காட்டப்பட்டுள்ளன. இரண்டாம் பதிப்பு வருங்கால் இவையெல்லாந் திருத்தமுற்றுச் செப்பமாகும் எனத் தெரிவித்துப் பிழை பொறுக்குமாறு தமிழ் அறிஞர்களைப் பணிந்து வேண்டுகின்றேன்.

இங்ஙனம்
யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபி
விருத்திச் சங்கத்திற்காக
தி. சதாசிவ ஐயர்
பதிப்பாசிரியர்

சுன்னாகம்,
15 - 1 - 1943.

# ஐங்குறுநூறு

## விஷய சூசிகை

### 1. மருதம்



### 2. நெய்தல்

## 3. குறிஞ்சி



## 4. பாலை

## 5. முல்லை





# ஐங்குறு நூறு

## கடவுள் வாழ்த்து

நீல மேணி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே.

இச்செய்யுள் இந்நூல் தொகுக்குங் காலத்துப் பாரதம் பாடிய பெருந்தேவனாரார் பாடப்பட்டது.

*இதன்பொருள்: நீலமாகிய திருமேனியையும் ஒளி பொருந்திய ஆபரணத்தையுமுடைய இடப் பாகமமைந்த ஏக கர்த்தாவாகிய பரமசிவனுடைய இரண்டு பாதமாகிய நிழலிடத்தைத் தஞ்சமென்று கருதி மூவகைத்தாகிய உலகின் கண்ணுள்ள ஆன்மாக்கள் யாவும் முறையே (சென்றடைவான்) கைகூப்பி வணங்குவன. எனவே யானுமம்முறை செய்வே னென்றவாறாம்.*

*நீலமேனி வாலிழைபாகத் தொருவனெனவே, ஈருருக் கொண்டு விளங்கி இகபரசாதனங்களைக் கொடுப்பவனென்றும், தோற்றுதல் மறைத்தலாகிய தன்மையுடையவனென்றும், அவனே முழுமுதற் கடவுளென்றும் கூறினாராயிற்று.*

*ஆதலின் இந்நூல் நின்று நிலவுமாறு இயைபுடையனாகிய அக்கடவுளை வணங்கினாராயிற்று. இது ஏற்புடைக் கடவுள் வாழ்த்து.*

............................ *தழைத்தெழு
தாளியுங் கொன்றையுந் தழைத்தலின் முல்லையும்
பாந்தளுந் தரக்கும் பயிறலிற் குறிஞ்சியும்
முடைத்தலை எரிபொடி யுடைமையிற் பாலையும்
மாமையுஞ் சலமும் மேவலின் மருதமும்
கடுவுஞ் சங்கமு மொளிர்தலி னெய்தலும்
ஆகத் தனது பேரருண் மேனியிற்
றிணையைந் தமைத்த விணையிலி நாயகன்

எனக் கல்லாடத்திற் கூறுதலானும், பெண்ணையோர் பாகத்தே கொண்டு இருத்தலானும், இவ்வகத்திணை நூற்கு ஏற்புடைக் கடவுளென்ப துணரப்படும்.

நீலமேனி - பண்புத்தொகை; கீழ் - ஏழாம் வேற்றுமைச் சொல்; மூவகையுலகு - சுவர்க்க மத்திய பாதாளம்; ஏகாரம் - தேற்றம். ஈற்றசையுமாம்.

"வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே"[1] என்பதின் வகையாற் கொள்ளப்படும் அறுமுறை வாழ்த்துப் போலன்றிப் படர்க்கைப் பொருட்குப் பயன்படப் படர்க்கைக்கண் வாழ்த்திய கடவுள் வாழ்த்தாம். நாற்பாவினாலும் பாடுக வென்றலின் அகவலாற் கூறினார். அப்பாவிற்குச் சிறுமை கூறுங்கால் அடி மூன்றெனவும் சீரெல்லை கூறுங்கால் "ஈற்ற யலடியே யாசிரிய மருங்கிற் - றோற்ற முச்சீர்த்தாகும்"[2] என் பதால் ஈற்றயலடி முச்சீரானுங் கூறி ஒருவாற்றானிந்நூற் பெயர்க் காரணமும் விளங்க வைத்தாரென்பதுணரப்படும்.

இந்நூலைச் செய்யுங்காலத்து நூல் அகத்தியமும் தொல்காப்பியமுமாதலானும், பிற நூல்கள் நிரம்பிய இலக் கணத்தன அன்மையானும் அவைகளையே இலக்கணமாகக் கொள்க. இலக்கியமுமவ்விதமேயாம்.

---

*. கல்லாடம் : செய் - "செங்கோற்றிருவுடன்" ... வரிகள் 14-21

1. தொல். பொ. செய்யுளியல். சூத். 109.

2. தொல். பொ. செய்யுளியல். சூத். 68.

# 1. மருதம்

## 1. வேட்கைப் பத்து

1. வாழி யாதன் வாழி யவினி
நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க
வெனவேட் டோளே யாயே யாமே
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாண ரூரன் வாழ்க
பாணனும் வாழ்க வெனவேட் டேமே.

என்பது : புறத்தொழுக்கத்திலே நெடுநாளொழுகி இது தகாது எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு தலைவியோடு கூடி ஒழுகாநின்ற தலைமகன் தோழியோடு சொல்லாடி 'யான் அவ்வாறொழுக நீயிர் நினைத்ததிறம் யாது' என்றாற் குத் தோழி சொல்லியது.

இ-ள்: அரசன் காவற்பொருட்டு வாழ்வானாக, மேல், விருந்தாற்றுதற் பொருட்டு நெற்பல பொலிக, இரவலர்க் கீதற் பொருட்டு பொன் உண்டாகுக என யாய் இல்லறத் திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகியதல்லது பிறிது நினைந் திலள்; அவள் இத்தன்மையளாக, நீ ஒழுகிய ஒழுக்கத்தால் நினக்கும்நின் ஒழுக்கத்திற்குத் துணையாகிய பாணனுக்கும் தீங்கு வருமென்றஞ்சி யாணரூரன் வாழ்க பாணனும் வாழ்க என விரும்பினேம் யாங்களென்றவாறு.

இங்கே தலைவியை யாயென்றது, புலத்தற்குக் காரண மாயின உளவாகவும் அவை மனங்கொள்ளாத சிறப்பை நோக்கி. தோழி யாங்களென் றுளப்படுத்தது ஆயத்தாரை நோக்கி எனக் கொள்க.

நனைய காஞ்சிச் சினைய சிறுமீன் யாணரூரன் என்ப தால், பலரானுங் கொண்டாடப்படும் குலமகளிரோடு பல ரானு மிகழப்படும் பொது மகளிரையும் ஒப்பக் கொண் டொழுகுவானென்பதாம். ஊரன் வாழ்க என்பதால் துனி யுறு கிளவி (தொ. பொ. அ. சூ. 303).

"தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக் கூறு தற்குரியர் கொள்வழி யான"[1] என்பதால் உள்ளுறையுவமங் கூறினார்.

பயன் - உவகை. மெய்ப்பாடு - அச்சம்.

ஆதனவினி என்பான் சேரமான்களிற் பாட்டுடைத் தலைமகன். இதில் ஆதன்அவினி எனப் பழைய உரைகாரர் எழுதியது ஆதன் மகன் அவினி என்பது பற்றியாகும். "வாழி யாதன் வாழியவினி" என்பது தந்தையையும் மகனையும் வாழ்த்தியதாகும்.

'வாழியாதன் வாழியவினி' என்பது வாழியாதன் வாழிய, இனி; எனவுங் கொள்ளலாம்போற் காணப்படுகின்றது. இவ் வாழியாதன், பதிற்றுப்பத்தில் கபிலர் பாடிய ஏழாம் பத் தின் பாட்டுடைத் தலைவனாகிய சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் ஆகலாம். இனி என்பது மேல் என் னும் பொருட்டு.

அடையடுப் பறியா அருவி ஆம்பல்
ஆயிர வெள்ள ஊழி
வாழியாத வாழிய பலவே.

என்னும் பதிற்றுப்பத்து 63ஆம் செய்யுட் பகுதியையு நோக் கிக் கொள்க.

வேட்கைப் பத்தாவது - வேட்கை என்னுஞ் சொல் வரு வதினும் வேட்கையைக் கூறுவதினும் இப்பத்து இப்பெயர் பெற்றது போலும்.

மருத முதலாகத் தொகுத்தல் "மாயோன் மேய"[2] என் னுஞ் சூத்திரத்துச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே என்பதைச் சொல்லாத முறையாற் சொல்லவும் படுமெனக் கொண்டு பிற தொகைகளிலும் தடுமாறிக் கோத்தவாறு காண்க.

தொன்மை - தோல் - அம்மை - அழகு - என்பவற்றில் இந்நூல் அழகென்னும் உறுப்புடைத்து. (1)

---

1. தொல். பொரு. உவ. சூத். 31.
2. தொல். பொ. அகத். சூத். 5.

2. வாழி யாதன் வாழி யவினி
விளைக வயலே யருக விரவல
ரெனவேட் டோளே யாயே யாமே
பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்குந்
தண்டுறை யூரன் கேண்மை
வழிவழிச் சிறக்க வெனவேட் டேமே.

*இதுவுமது.*

*இ-ள்: தலைவி, அரசன் வாழ்வானாக; மேல், வயல் விளைவதாக, அதனால் இரவலர் இல்லாது போகுக என வாழ்த்தியிருந்தாள்; யாங்கள் பலவிதழ்களையுடைய காவி மலரோடு மாறுகொள்ளும் நெய்தல் மலர் பொருந்திய குளிர்ந்த துறைகள் பொருந்திய இவ்வூரனது உறவு மேலும் மேலும் வளர்வதாக என விரும்பினோம், எ-று.*

*பழையவுரை: தலைவி இல்லறமே நினைந்து ஒழுகினாள்; யாங்கள் நின் காதல் அவள்மேற் சுருங்குகின்றதிற நோக்கி, நின்கேண்மை வழிவழிச் சிறக்க என விரும்பினேம், எ-று.*

*பல்லிதழ் நீலமொடு நெய்தனிகர்க்கும் ஊரன் என்றது. நீலம் தலைவி, நெய்தல் பரத்தை, குலமகளிரோடு மாறு கொள்ளும் பொதுமகளிரையுடைய ஊரன்.*

*ஒடு-அதனோடியைந்த ஒப்பலொப்புரை (தொல், சொல். 74).* *(2)*

3. வாழி யாதன் வாழி யவினி
பால்பல வூறுக பகடுபல சிறக்க
வெனவேட் டோளே யாயே யாமே
வித்திய வுழவர் நெல்லொடு பெயரும்
பூக்கஞ லூரன் றன்மனை
வாழ்க்கை பொலிக வெனவேட் டேமே.

*இதுவுமது*

*இ-ள்: அரசன் வாழ்வானாக; மேல், பால்மிகப் பெருகுக, பகடுகள் பலவாகச் சிறக்குக என்று விரும்பினாள் தலைவி; யாங்கள் வித்தைவித்திய உழவர் விளைந்த நெல்லைக்*

கொண்டு போம் வளம் நெருங்கிய ஊரன் தனது மனை வாழ்க்கையிடத்துப் பொலிவானாக என விரும்பினேம், எ-று.

வித்திய வுழவர் நெல்லொடு பெயரும் பூக்கஞு லூரன் என்றது. பின்வரும் பரத்தையர்க்கு வருவாய் செய்து அக்கா லத்துப் பரத்தையருடன் இன்பம் நுகரும் ஊரன், ஒருவாற் றானும் குறைவில்லாதவன் தன் மனைக்கண் வாழ்க்கையி டத்துப் பொலிக என்பதாம்.

பால்பல என்பது வழக்குப் பற்றியது. இன்னும், வித்திய வுழவர் நெல்லொடு பெயரும் என்றது, இதஞ்செய்வார் போறகாட்டி அகிதஞ் செய்வார் என்பது. (3)

4. வாழி யாதன் வாழி யவினி
பகைவர்புல் லார்க பார்ப்பா ரோதுக
வெனவேட் டோளே யாயே யாமே
பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்
கழனி யூரன் மார்பு
பழன மாகற்க வெனவேட் டேமே.

இதுவுமது

இ-ள்: அரசன் வாழ்வானாக; மேல், பகைவர் புல்லு ணவை உண்பாராக, பார்ப்பார் ஓதுவாராக என்று விரும் பினாள் தலைவி; யாங்கள் பூத்த கரும்பையும் காய்த்த நெல் லையுமுடைய கழனியையுடைய ஊரனது மார்பு சோலை யல்லவாகுக என்று விரும்பினேம், எ-று.

பூத்த கரும்பிற் காய்த்தநெல்லிற் கழனியூரன் என்றது ஈன்றாற் பயன்படாத பொது மகளிரையும் ஈன்றாற் பயன் படுகின்ற குலமகளிரையும் ஒக்க நினைப்பவன் என்பது. அன்றி, முன்னினிதாய்க் காட்டும் பொது மகளிரையும் எக் காலமும் ஒரு தன்மையாயிருக்கும் குலமகளிரையும் ஒப்ப நினைப்பான். முன்னினிதாதல் காண்போர்க்கு இம்மரம் பூத்தமையிற்பின் காயுமுண்டாமென எண்ணச் செய்து அக் காயில்லாது போதல், எக்காலமு மொருதன்மையாவது காயே எக்காலமுந் தோன்றுதல். பழனமாவது யார்க்கும் விரும்புஞ் சுகத்தைக் கொடுக்குஞ் சோலை. (4)

5. வாழி யாதன் வாழி யவினி
பசியில் லாகுக பிணிசே ணீங்குக
வெனவேட் டோளே யாயே யாமே
முதலைப் போத்து முழுமீ னாருந்
தண்டுறை யூரன் றேரெம்
முன்கடை நிற்க வெனவேட் டேமே.

*இதுவுமது*

*இ-ள்: அரசன் வாழ்வானாக, பசியில்லாது போகுக, நோய் மிகத் தூரத்தே போவதாக என்று விரும்பினாள் தலைவி; யாங்கள் முதலைப் போத்தானது முழு மீனையுண்ணும் குளிருந் துறையையுடைய ஊரன் றேரானது பிற மகளிர் முன் கடைநிற்ற லொழிந்து என்முன் கடைநிற்க வென விரும்பினேம், எ-று.*

*முதலைப் போத்து முழுமீனாருந் தண்டுறை யூரன் என்றது ஒருங்கு வாழ்வாரை உரிமை நோக்காது உயிர் கவர்வான் என்பதாம்.*

*முதலைக்குப்போத்தென்னும் பெயர் "நீர்வாழ் சாதியிலறுபிறப்புரிய"[1] என்பதாற் கொள்வது. இவற்றிற் கெல்லாம் மெய்ப்பாடு பெருமிதம். பயன் மகிழ்வித்தல். (5)*

6. வாழி யாதன் வாழி யவினி
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
வெனவேட் டோளே யாயே யாமே
மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுறை, யூரன் வரைக
வெந்தையுங் கொடுக்க வெனவேட் டேமே.

*எ-து: "அற்றமில்லாக் - கிழவோட் சுட்டிய தெய்வக் கடத்தினும்"[2] களவொழுக்கம் புலப்பட ஒழுகுதலில்லாத தலைவியைத் தலைவன் வரைந்து கோடலைக் குறித்துப் பரவிய தெய்வம் அதனை முடித்தலின் அப்பரவுக்கடன்*

---

*1. தொல். பொரு. மர. சூத். 42.*

*2. தொல். பொ. கற். சூத். 9. வரி 3,4.*

கொடுத்தல் வேண்டுமெனத் தலைவற்குக் கூறுமிடத்தும் என்ற விதியின் இது பரவுக்கடன் செய்தது கூறியதாம்.

அது களவினிற் பலகாலொழுகிப் பின் வரைந்து கொண்ட தலைமகன் தோழியோடு சொல்லாடி, யான் வரையாது ஒழுகுகின்ற நாள் நீயிர் இழைத்திருந்த திறம் யாது? என்றாற்கு அவள் சொல்லியது.

இ-ள்: நின்னை எதிர்ப்பட்ட அன்றே நீ வரைந்தாய் எனக்கொண்டு இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஆதன் வாழி, அவினி வாழி, அரசன் பகை தணிவானாக, யாண்டு பலவாகப் பெருகுக என ஒழுகினாள் தலைவி; யாங்கள் விரிந்த பொய்கையிடத்து முகிழ்த்த தாமரையையுடைய தண்டுறை யூரன் இவளை வரைவானாக, எந்தையுங் கொடுப் பானாக என விரும்பினேம், எ-று.

ஈண்டுத் தலைவியை யாயென்றது கற்புக்கடம் பூண் டொழுகுகின்றமை நோக்கி, மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத் தண்டுரையூரன் என்றது - இவனே இவளுக்குத் தக்கான், இவளே இவனுக்குத் தக்காள் என்பதாம். (6)

7. வாழி யாதன் வாழி யவினி
யறநனி சிறக்க வல்லது கெடுக
வெனவேட் டோளே யாயே யாமே
யுளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்குந்
தண்டுறை யூரன் றன்னூர்க்
கொண்டனன் செல்க வெனவேட் டேமே.

இதுவுமது

இ-ள்: தலைவி ஆதன் வாழ்க, அவினி வாழ்க, தருமம் மென்மேலுஞ் சிறக்க, பாவங் கெடுவதாக என்று விரும்பி னாள்; யாங்கள் அகவிதழ் அழகிய பூவையுடைய மருத மரத் தின்கண் நாரையினங்கள் இருக்கும் தண்டுறையூரன் தன் னூர்க்குக் கொண்டு செல்வானாக என விரும்பினேம், எ-று.

உளைப்பூமருதம் "கருந்தகட்-டுளைப்பூமருதின்"[1] என்ப தாலறிக. உளைப்பூ மருதத்துக் கிளைக்குருகிருக்குந் தண்

1. திருமுரு. வரி 27,28

டுறையூரன் என்றது செல்வமனைக்கண் கிளையோடு கிளை ஞர் குறைவின்றி வாழுமூரன் என்றதாம். உளைப்பூ - உவமத் தொகையுமாம். (7)

8. வாழி யாதன் வாழி யவினி
யரசுமுறை செய்க களவில் லாகுக
வெனவேட் டோளே யாயே யாமே
யலங்குசினை மாஅத் தணிமயி லிருக்கும்
பூக்கஞு லூரன் சூளிவண்
வாய்ப்ப தாக வெனவேட் டேமே.

இதுவுமது

இ-ள்: ஆதன் வாழ்க, அவினி வாழ்க, அரசு முறை செய்க, களவில்லாது போவதாக என்று விரும்பியொழுகினாள் தலைவி; யாங்கள் அசையா நிற்கும் கொம்பர் பொருந்திய மாமரத்தின்கண் அழகிய மயிலானதிருக்கும் அழகு நிறைந்த ஊரன் கூறிய உண்மை வசனம் இவ்விடத்து வாய்ப்பதாக வென விரும்பினேம், எ-று.

அலங்குசினைமா அத்தணிமயிலிருக்கும் பூக்கஞுலூரன் என்றது, செல்வமனைக்கு அணியாம் வண்ணம் இவளும் இருத்தற்கேதுவாகியவூரன். (8)

9. வாழி யாதன் வாழி யவினி
நன்றுபெரிது சிறக்க தீதில் லாகுக
வெனவேட் டோளே யாயே யாமே
கயலார் நாரை போர்விற் சேக்குந்
தண்டுறை யூரன் கேண்மை
யம்ப லாகற்க வெனவேட் டேமே.

இதுவுமது.

இ-ள்: தலைவி ஆதன் வாழ்க, அவினி வாழ்க, நன்மை மிகவும் வளர்வதாக, தீமை சிறிதும் இல்லாது போவதாக என்று விரும்பியொழுகினாள். யாங்கள் கயலாகிய உணவை உண்கின்ற நாரை நெற்போரிடத்து இராநின்ற தண்டுறை

யூரனிடை நம்முறவு வெளிப்படா தொழிவதாக வென்று விரும்பினோம், எ-று.

அம்பல் - அரும்பினாற் போல்வது. கயலார் நாரை போர்விற் சேக்குந் தண்டுறையூரன் என்றது, நாரை இரை தப்பாது கவர்ந்து கொள்ளற்குக் காலம் பார்த்துத் தங்கி யிருத்தல்போல அவனுந் தப்பாது வரைந்து கொள்ளுமூரன் என்பதாம்.

இன்னும், "இன்ப நுகர்ந்தவன் செல்வமனைக் கண்ணே வைகும் வண்ணம் வரையுந்துணையும் அவன் கேண்மை அம்பலாகாதொழிக" என்பது பழையவுரை. (9)

10. வாழி யாதன் வாழி யவினி
மாரி வாய்க்க வளநனி சிறக்க
வெனவேட் டோளே யாயே யாமே
பூத்த மாஅத்துப் புலாலஞ் சிறுமீன்
றண்டுறை யூரன் றன்னொடு
கொண்டனன் செல்க வெனவேட் டேமே.

இதுவுமது

இ-ள்: தலைவி, அரசனாகிய ஆதன் வாழி, அவினி வாழி மழை தப்பாது பெய்வதாக, அதனால் வளங்கள் மிகப் பெருகுவதாக என்று விரும்பியொழுகினாள். யாங்கள் பூத்த மாவினையும் புலாலஞ் சிறுமீனையுமுடைஊரன் இங்கு வரையானாயின் தன்னூர்க்குக் கொண்டு செல்வானாக என்று விரும்பினேம், எ-று.

பூத்தமாஅத்துப் புலாலஞ்சிறுமீன் றண்டுறை யூரன் என்றது, நன்மையுந் தீமையுமுடையானென்பதாம், அறத்தொடு நிலையாற் கற்பும், களவொழுக்கத்தால் அலருமாம்.

வேட்கைப் பத்து முற்றிற்று

---

## 2. வேழப் பத்து

11. மனைநடு வயலை வேழஞ் சுற்றுந்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்றும் யாமே
யல்ல னென்றுமென் றடமென் றோளே.

*எ-து: "வாயிலின் வரூஉம்வகை"[1] - வாயில்களினேது வாகத் தலைவிக்கு வருங் கூற்று வகை. கூற்று வகையாவது - உடன்படுதலும் மறுத்தலும். வாயில்களாவார் பாணன் முதலியோர்.*

*பரத்தையிற் பிரிந்த தலைமகன் தலைமகளுழைப் பாணன் முதலியோரை வாயிலாய்விட மறுக்கக் கண்டு பாங்கனையேவ அவன் கழறிக் கூறுமிடத்து வாயினேர் வாள் சொல்லியது.*

*இ-ள்: மனை நடுவில் நிற்கும் வசலைக் கொடியானது, மனைப்புறத்தில் நிற்குங் கொறுக்கையின்மேற் சென்று படருந்துறை பொருந்தியவூரன் நமக்குச் செய்யுங் கொடுமைக்கு நாணியும் யாம் நல்லனென்றே கூறுகின்றேம். யாமப் படியாகவும் பெருமை பொருந்திய மெல்லியவாகிய தோள்களானவை யல்லாதவனென்று கூறுகின்றன, எ - று.*

*மனைநடுவயலை வேழஞ்சுற்று மூரனென்றது, மணமனைக்கண்ணே வைகுஞான்றும் பரத்தையர் திறமே நினைந்திருக்கு மூரன் என்பதாம்.*

*"வண்ணம் பசந்து புலம்புறுகாலை - யுணர்ந்த போலவுறுப்பினைக் கிழவி - புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே"[2] என்பதனால் தலைவி உறுப்பினை உணர்வுடைய போற் கூறியது. மெய்ப்பாடு அழுகை; பயன் வாயினேர்தல்.* *(1)*

---

1. தொல். பொ. கற் சூத். 6, வரி 46.
2. தொல். பொ. பொரு. சூத். 8.

12. கரைசேர் வேழங் கரும்பிற் பூக்குந்
துறைகே ழூரன் கொடுமை நன்று
மாற்றுக தில்ல யாமே
தோற்க தில்லவென் றடமென் றோளே.

*எ-து: உழையர் நெருங்கிக் கூறிய திறமும் தனது ஆற்றாமையு நினைந்து வாயில் நேரக்கருதிய தலைமகள் பரத்தையர்க்குப் பின்பும் அவன் சிறப்புச் செய்தானென்பது கேட்டுப் பொறாளாய்க் கருத்தழிந்து தன் நெஞ்சொடு கூறியது.*

*இ-ள்: கரைமருங்கு நிற்கின்ற வேழமானது, வயலகத்து நிற்குங் கரும்பு போலப் பொலிகின்ற துறை பொருந்திய வூரன் செய்யுங் கொடுமை நன்றாயிருத்தலின் மாற்ற வேண்டும் விருப்பமுடையம்; யாமப்படியாகவும், முயக்கத்தை விரும்பி மெலிவடையா நிற்கின்றன பெருமையுடைய மெல்லிய தோள்கள், எ - று.*

*கரைசேர் வேழங் கரும்பிற் பூக்குமூரன் என்றது, சேரிக்கண்ணுள்ள பரத்தையரும் மனைக்கண்ணுள்ள குலமகளிரைப் போலத் தோன்றச் சிறப்புச் செய்யுமூரனென்றதாம். தில் - விழைவின்கண் வந்தது. மெய்ப்பாடு - அழுகை; பயன் ஆற்றாமை நீங்குதல்.* (2)

13. பரியுடை நன்மான் பொங்குளை யன்ன
வடைகரை வேழம் வெண்பூப் பகருந்
தண்டுறை யூரன் பெண்டிர்
துஞ்சூர் யாமத்துந் துயிலறி யலரே.

*எ-து: வாயிலாய்ப் புக்கார்க்குத் தலைமகள், அவன் பெண்டிர் நள்ளென் யாமத்துந் துயிலார்; அவரறியாமல் அவன் வருந்திறம் யாது? எனச் சொல்லி வாயில் மறுத்தது.*

*இ-ள்: தாங்குதலைத் தொழிலாகவுடைய பெருமை பொருந்திய குதிரையது தலையிலணியப்பட்ட பொலிவாகிய வெண்கவரி போல் அடைகரைக்கண் நிற்கும் வேழம் வெண்*

பூவைக் கொடுக்குந் தண்டுறையூரனது பெண்டிர் இவ்வூரி லுள்ள யாருமொருசேரத் துயில்கின்ற யாமத்துங் தாங் கொண்ட காதலாற்றுயிலறியாராக, அவர் வருந்திறம் யாது? எ-று.

மெய்ப்பாடு - மருட்கை; பயன் வாயின் மறுத்தல்.

பரியுடைநன்மான் பொங்குளையன்ன வடைகரை வேழம் வெண்பூப்பகருந் தண்டுறையூரனென்றது, தாமினியரென்று காட்டித் தம்மை விரும்புவார்க்குப் பொய் நலத்தை விற்று வாழும் பரத்தையரையுடைய வூரனாதலினவனு முண்மை யான கூற்றில் நிற்பவனன் றென்றவாறு.

புரியுடை நன்மானென்றும் பாடம். அதற்கு, விருப்பத்தை யுடைய நன்மான் எனப் பொருள் கொள்க. (3)

14. கொடிப்பூ வேழந் தீண்டி யயல
வடுக்கொண் மாஅத்து வண்டளிர் நுடங்கு
மணித்துறை யூரன் மார்பே
பனித்துயில் செய்யு மின்சா யற்றே.

எ-து: "கொடுமை யொழுக்கந் தோழிக்குரியவை - வடு வறு சிறப்பிற் கற்பிற்றிரியாமைக் - காய்தலுமுவத்தலும் பிரித்தலும் பெட்டலு - மாவயின் வரூஉம் பல்வேறு நிலை யினும்,"[1] என்பதால், 'தலைமகன் கொடுமையை நினை யாது அவனை நினைந்து ஆற்றாயாகின்றது என்னை?' என்ற தோழிக்குத் தலைமகள் 'அவன் கொடியனேயாயினும் அவன் மார்பு இனிய துயிலைச் செய்யுஞ் சாயலையுடைத்து, ஆதலிற்காண்' என உவந்து கூறியது.

இ-ள்: நீண்ட பூவினையுடைய வேழந் தீண்டப் பக்கத் தில் நிற்கு மாவினது வடுவமைந்த வளவிய தளிரசையும் அழ கிய துறையூரனது மார்பே மனம் மகிழுமினிய துயிலைத் தாரா நின்ற மென்மையையுடைத்து; அதனாலாற்றேனா கின்றேன், எ-று.

1. தொல். பொ. கற். சூத். 6 வரி 38-41.

*கொடிப்பூவேழந் தீண்டி யயல வடுக்கொண் மாஅத்து வண்டளிர் நுடங்கும் என்றது, பரத்தையரால் வருந்துன்பத் தால் வருந்தும் யானென்றவாறு. அது தலைவன் மனைக் கண் வாராது தங்குதல்.*

*மெய்ப்பாடு - அழுகை; பயன் - புணர்ச்சி விரும்பல். (4)*

**15.** **மணலாடு மலிர்நிறை விரும்பிய வொண்டழைப்**
**புனலாடு மகளிர்க்குப் புணர்துணை யுதவும்**
**வேழ மூதூ ரூர**
**னூர னாயினு மூரனல் லன்னே.**

*எ-து: சேணிடைப் பிரிந்து வந்து உடனுறைகின்ற தலை மகற்குப் புறத்தொழுக்கம் உளதாகின்றதென்று குறிப்பினா னுணர்ந்து தலைமகள் வேறுபட்டாளாகத் தோழி அதனை யறியாது 'அவனுடனுறையவும் நீ வேறுபடுகின்றது என்னை?' என்றாட்கு அவள் சொல்லியது.*

*இ-ள்: மணலைக் கரைத்துச் செல்லும் வெள்ளமாகிய புதுப் புனலிடத்து ஆடுதலை விரும்பிய மகளிர்க்குத் தழை யையுடைய ஒள்ளிய வேழமானது புணர்ந்தார் தன்மையைச் செய்யும் பெரியவூரினையுடையவூரன் நின்னாற் சொல்லப் படும் பற்றுக்கோடுடையனாயினும், அவ்வாற்றான் என் னாற் கொள்ளப்படுந் தன்மையிலன், எ-று.*

*புனலாடு மகளிர்க்குப் புணர்துணையுதவும் வேழவூ ரன் என்றது, நமக்குத் தெரியாவண்ணம் பரத்தையர்க்கு வேண்டுஞ் சிறப்புக்களெல்லாஞ் செய்வான் என்பதாம். மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நிலைதல். (5)*

**16.** **ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்காற்**
**சிறுதொழு மகளி ரஞ்சனம் பெய்யும்**
**பூக்கஞ லூரனை யுள்ளிப்**
**பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே.**

*எ-து: "பாணர் கூத்தர் விறலிய ரென்றிவர்-பேணிச் சொல்லிய குறைவினை யெதிரும்,"*[4] என்பதால் தோழி, வாயிலாய் வந்தார்க்கு அவன் வரவையே நினைத்து இவள் கண்ணும் பசந்தன, இனி அவன் வந்து பெறுவது யாது, எனச் சொல்லி வாயின் மறுத்தது.

*இ-ள்:* உயர்ந்து தோன்றும் பூவையுடைய வேழத்தி னது உட்டுளை பொருந்திய திரண்ட தண்டு சிறிய தொழில் மகளிர் அஞ்சன மையிட்டு வைத்தற்கு அமையும் பொலிவு நிறைந்த வூரனைப் பலகாலும் நினைத்து அழகிய மையுண்ட கண் பசலையான் மூடப்பட்டன; இனியவனடையும் பய னில்லை, எ-று.

வேழத்தண்டு மகளிரஞ்சனம் பெய்து வைக்கு மூர னென்றது, பரத்தையர்க்குப் பயன்படு மூரன் என்றதாம். மெய்ப்பாடு - வியப்பு; பயன் - பரத்தைமை நீக்குதல். (6)

17. புதன்மிசை நுடங்கும் வேழ வெண்பூ
விசும்பாடு குருகிற் றோன்று மூரன்
புதுவோர் மேவல னாகலின்
வறிதா கின்றென் மடங்கெழு நெஞ்சே.

*எ-து: (இதற்கு 14ஆம் செய்யுளின் விதி; இது பிரித்தல்.)* தலைமகன் பரத்தையிற் பிரிந்தவழி, இவ்வாறு ஒழுகுதலும் ஆடவர்க்கு இயல்பன்றே; நீ இதற்கு நெஞ்சு அழிகின்றது என்னை? என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

*இ-ள்:* புதரின்மே லசையா நின்ற வேழத்தினது வெள் ளியபூ கரிய வாகாயத்தின்கண் பறக்குங் குருகுபோலத் தோன்றுகின்ற வூரன் புறத்தொழுக்க முளதாகிய துணையே யன்றிக் கனவில் வந்து நாடோறும் வருத்துதலுடையனாத லால் என்னெஞ்சு பெருமையிழந்து வருந்துகின்றது, எ-று.

---

4. தொல். பொ. கற். சூத். 9. வரி, 25-6.

வேழவெண்பூ விசும்பாடு குருகிற்றோன்று மூரன் என்றது தான் செய்கின்றன பிறர்க்குத் தோன்றாதொழுகும் தன்மையுடையன் என்றபடி. மெய்ப்பாடு - அவலம்; பயன் - ஆற்றாமை நீங்குதல். (7)

18. இருஞ்சா யன்ன செருந்தியொடு வேழங்
கரும்பி னலமருங் கழனி யூரன்
பொருந்துமல ரன்னவென் கண்ணழப்
பிரிந்தன னல்லனோ பிரியலெ னென்றே.

எ-து: (இதற்கு 11ஆம் செய்யுளின் விதி). பரத்தையிற் பிரிந்து வந்து தெளித்துக்கூடிய தலைமகன் பின்னும் பரத்தையிற் பிரிந்துபோய்த் தலைவியிடத்து வரவிட்ட வாயில்கட்கு அவள் சொல்லியது.

இ-ள்: கரிய தண்டான் கோரை போலும் பஞ்சாய்க் கோரையோடு வேழமானது கரும்பு போலச் சுழலும் வயலூரன் பொருந்திய மலர்போலும் எனது கண் நீரைச் சொரியப் பிரிந்தானல்லனோ, இனியொருபோதுமினிப் பிரியேனென்று தெளிவித்து, எ-று.

செருந்தியொடு வேழங் கரும்பினலமருங் கழனியூரனென்றது, தஞ்சேடியரோடு பொது மகளிர் குலமகளிரைப் போலத் தருக்கிவாழு மூரனென்றதாம். சாய் தண்டான் கோரை என்பதைக் கலித்தொகை 76ஆம் செய்யுளுரையானுணர்க. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - பரத்தைமை நீக்குதல். (8)

19. எக்கர் மாஅத்துப் புதுப்பூம் பெருஞ்சினை
புணர்ந்தோர் மெய்ம்மணங் கமழுந் தண்பொழில்
வேழ வெண்பூ வெள்ளுளை சீக்கு
மூர னாகலிற் கலங்கி
மாரி மலரிற் கண்பனி யுகுமே.

எ-து: (இதற்கு -14ஆம் செய்யுளின் விதி.) பன்னாட் சேணிடைப் பிரியவும் ஆற்றி யுளையாகிய நீ அவன்

சின்னாட் புறத்தொழுகுகின்ற இதற்கு ஆற்றாயாகின்றது என்னை? என்ற தோழிக்கு எதிர்ப்பாடின்றி ஒரூர்க்கண்ணே யுறைகையினாலே ஆற்றேனாகின்றேன் எனத் தலைவி கூறியது. (வாயிலாய்ப் புகுந்தார் கேட்டு நெருங்காது மாறுதல் கருத்து)

இ-ள்: நீரிட்ட மணற்றிடற் கண்ணேயுள்ள மாமரத்தினது பெரிய புதுப்பூவினையுடைய சினையானது வதுவை மகளிர் மெய்மணங் கமழக் கடவ பொழிலை அப்பூ அரும்பாகிய பருவத்தே வேழத்தின் பூவானது துடைக்குமூரனாதலின், கலக்கமுற்று மாரிக் காலத்து மலர் நீரைச் சிந்துந் தன்மை போல என் கண்களாயின நீர்த்துளியைச் சிந்தா நிற்கும், எ-று.

புதுப்பூம்பெருஞ்சினை புணர்ந்தோர் மெய்ம்மணங் கமழுந் தண்பொழில்வேழ வெண்பூ வெள்ளுளை சீக்குமூரனென்றது, ஒரூர்க்கண்ணிருக்கவும் இன்பநுகராது தடுக்கும் பரத்தையரை யுள்ளவூரன் என்பதாம். மெய்ப்பாடு - இளிவல்; பயன் - பரத்தைமை நீக்குதல். (9)

20. அறுசில் கால வஞ்சிறைத் தும்பி
நூற்றிதழ்த் தாமரைப் பூச்சினை சீக்குங்
காம்புகண் டன்ன தூம்புடை வேழத்துத்
துறைநணி யூரனை யுள்ளியென்
னிறையே ரெல்வளை நெகிழ்போ டும்மே.

எ-து: காதலர் கொடுமை செய்தாராயினும் அவர் திறம் மறவாதொழியல் வேண்டும் என்று முகம் புகுகின்ற தோழிக்கு அவரை நினைத்ததன் பயனன்றே என் கைவளை நில்லாதாகின்றது, இனியமையும், எனத் தலைமகள் சொல்லியது.

இ-ள்: ஆறு சிலவாய கால்களையுடைய அழகிய சிறகர்களையுடைய வண்டினது நூறாகிய விதழ்களையுடைய தாமரைப் பூவின்கண்ணுள்ள முட்டைகளைக் கெடுக்கும் மூங்கில் போலு முள்ளீடு பொருந்திய வேழங்களமைந்த துறையையுடையவூரனை நினைத்தலின் என்கையிலணியப்பட்ட அழகிய

வளையல்கள் நெகிழ்ந்து கழலா நிற்கும், எ-று. நினைந்ததற் பயன் யாது என்பதாம்.

நூற்றிதழ்த் தாமரைத் தும்பிச்சினை நீக்கும் வேழத்துத் துறை நணியூரனென்றது, தன்மாட்டு என் புதல்வனுறை தலை யும் விலக்குவாராகிய பரத்தையரையுடைய வூரனென்றதாம். மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - வாயின் மறுத்தல். (10)

வேழப் பத்து முற்றிற்று

---

## 3. கள்வன் பத்து

21. முள்ளி நீடிய முதுநீ ரடைகரைப்
புள்ளிக் கள்வ னாம்ப லறுக்குந்
தண்டுறை யூரன் றெளிப்பவு
முண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ-து: "அடங்கா வொழுக்கத் தவன்வயினழிந் தோளை - யடங்கக் காட்டுதற் பொருளின் கண்ணும்"[1] என்பதாற், 'புறத்தொழுக்கம் எனக்கு இனியில்லை' என்று தலைமகன் தெளிப்பவும், 'அஃது உளது' என்று வேறுபடுந் தலைமகட் குத் தோழி சொல்லியது.

இ-ள்: முள்ளிச் செடி வளர்ந்து நீண்ட முதுநீரடை கரைக்கண் வாழும் வரிகளையுடை நண்டு சென்று ஆம்பலை யறுக்கின்ற தண்டுறையூரன் தெளிவிக்கவும் மை தீட்டிய கண்கள் பசப்படைவது யாது கொல்லோ, எ-று.

புள்ளிக்கள்வன் - வரிகளையுடைய நண்டு என்பதைக் கலித்தொகை 88ஆ-ம் செய்யுளுரையிற் காண்க. இங்கே தோழி தலைவியை அன்னாயென்றது, "அன்னையென்னை யென்றலுமுளவே - தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினுந் - தோன்றாமரபின வென்மனார் புலவர்"[2] என்னும் விதி.

---

1. தொல். பொ. கற். சூத். 9, வரி 6,7.
2. தொல். பொ. பொரு. சூத். 52.

முள்ளி நீடியமுது நீரடை கரைப்புள்ளிக் கள்வனாம் பலறுக்கு மூரனென்றது, தனக்குரித்தாகிய இல்லின் கணிருந்து கொண்டு பரத்தையரோடுள்ள தன் தொடர்ச்சியை நீக்கு வானென்பதாம். மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஆற்று வித்தல். (1)

22. அள்ள லாடிய புள்ளிக் கள்வன்
முள்ளி வேரளைச் செல்லு மூர
னல்ல சொல்லி மணந்தினி
நீயே னென்ற தெவன்கொ லன்னாய்.

எ-து: (இதற்கு 16ஆ-ம் செய்யுளிற் கூறிய விதி) களவி னிற் புணர்ந்து பின்பு வரைந்து கொண்டொழுகா நின்ற தலை மகற்குப் புறத்தொழுக்கம் உளதாயிற்றாக ஆற்றாளகிய தலை மகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: சேற்றில் மூழ்கிய வரிகளையுடைய நண்டானது முள்ளி வேர் செறிந்த அளையிடத்தே சென்றடைகின்ற ஊரை யுடையவன் எமக்கின்பம் பயக்கும் சூளுரைத்து வரைந்து கொண்டு இப்பொழுது முற்கூறிய நீயேன் என்றது யாது கொல்லோ? எ-று.

இங்கே தலைவி தோழியை அன்னாய் என்றாள், "அன் னையென்னை" என்றாலும் என்னுஞ் சூத்திரவிதி பற்றி யென்க. அள்ளலாடிய புள்ளிக் கள்வன் முள்ளிவேர ளைச் செல்லு மூரன் என்றது, பிறர் கூறும் அலரையஞ்சாது பின்பும் பரத்தையர் மனைக்கட் செல்கின்றான் என்பதாம். இது காய்தல். மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல் (2)

23. முள்ளி வேரளைக் கள்வ னாட்டிப்
பூக்குற் றெய்திய புனலணி யூரன்
றேற்றஞ் செய்துநப் புணர்ந்தினித்
தாக்கணங் காவ தெவன்கொ லன்னாய்.

இதுவுமது.

இ-ள்: தன்னூரின்கண் வாழும் விளையாட்டு மகளிர் முள்ளி வேர் நெருங்கிய வளைக்கண் வாழும் நண்டையலைத்துப் பூக்குற்று விளையாடும் புனலணிந்தவூரின் நம்மனந் தெளியும்படி செய்து நம்மைக் கலந்து இப்பொழுது வருத்துவது யாது கொல்லோ? தோழியே, எ-று.

நம்-நப் என்பதை, தொல் - எழுத்- 157ஆ-ம் சூத்திரத்து நச்சினார்க்கினியார் உரையானுணர்க. இனி-இப்பொழுது, என்பதைக் கலித்தொகைக் காப்புச் செய்யுளில் "எண்கையாய்" என்றதனுரையானுணர்க. தேற்றமாவது இயற்கைப் புணர்ச்சியினும் இடந்தலைப்பாட்டினுங் கூறும் தெளிவகப் படுத்தலும் தீராத் தேற்றமுமாம். தாக்கணங்கு தீண்டி வருத்துந் தெய்வம். அது, "நோக்கெதிர் நோக்குதற்றாக் கணங்கு - தானைக்கொண் டன்ன துடைத்து",[1] என்பதன் உரையானுணர்க.

அளைக் கள்வனாட்டிப் பூக்குற்றெய்திய புனலணியூரனென்றது, விளையாட்டினால் தன் மனைக்கண் வாழு நம்மை வருத்திப் புறத்திற்போய் இன்ப நுகர்வான் என்பதாம். மெய்ப்பாடும் பயனும் அவை. (3)

24. தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு
பிள்ளை தின்னு முதலைத் தவனூ
ரெய்தின னாகின்று கொல்லோ மகிழ்நன்
பொலந்தொடி தெளிர்ப்ப முயங்கியவர்
நலங்கொண்டு துறப்ப தெவன்கொ லன்னாய்.

எ-து: "அவ்வயி - னுறுதகையில்லாப் புலவியுண் மூழ்கிய - கிழவோள் பானின்று கெடுத்தற் கண்ணும்"[2] என்பதால், பரத்தையருள்ளூ மொருத்தியை விட்டொருத்தியைப் பற்றி ஒழுகுகின்றானென்பது கேட்ட தோழி வாயிலாய் வந்தார் கேட்பத் தலைவிக்குக் கூறியது.

---

1. திருக்குறள், அதி. 109, செய். 2.
2. தொல். பொ. கற், சூத். 9, வரி 17-19.

இ-ள்: தாய் சாதற்கேதுவாகத் தோன்றும் நண்டோடு பிள்ளையைத் தின்னு முதலையையுடைத்து அவனூர்; அவற்றைத் தானடைந்தானாகின்றது கொல்லோ! மகிழ் நன் பொன்னினாய வளையல்கள் ஒலிப்பக்கூடி, அக்கூடிய வர்களது அழகைக் கவர்ந்து நீங்குவது என்னை கொல்லோ! தலைவியே, அதனையறியேமே, எ-று.

நண்டு தாய் சாகப் பிறத்தல், "நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்துக் - கொண்ட கருவழிக்கும்"[1] என்பதா னுணர்க. முதலையினிளமைப் பருவத்திற்குப் பிள்ளை யென் பது, "அவற்றுட், பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்றிளமை"[2] எனக் கூறிப் பின் "தவழ்பவை தாமு மவற்றோரன்ன"[3] என்ப தாற் கொள்வது.

தாய்சாப்பிறக்கும் புள்ளிக்கள்வனொடு பிள்ளை தின்னு முதலைத்தவனூர் என்பது, நம்முடைய பழைய அழகு கெடும் படியாகிய பொய்யோடு தன்னுடைய பெருமை கெடும்படி யாகிய அருளின்மையையுமுடையவன் என்பதாம். (4)

25. அயல் புறந்தந்த புனிற்றுவளர் பைங்காய்
வயலைச் செங்கொடி கள்வ னறுக்குங்
கழனி யூரன் மார்புபலர்க்
கிழைநெகிழ் செல்ல லாகு மன்னாய்.

இதுவுமது.

இ-ள்: புறத்தே பாதுகாத்த இளமையாகிய வளரும் பசிய காய்களையுடைய வயலையாகிய செவ்விய கொடியை நண்டு அறுக்குங் கழனியூரனது மார்பு பரத்தையர் பலர்க் கும் இழை நெகிழும்படியாகிய துன்பத்தையுடையதாகும், தலைவியே, எ-று.

அயல்புறந்தந்த புனிற்றுவளர் பைங்காய் கள்வனறுக் குங் கழனியூரன் என்பது, எம்முடைய அரிய புதல்வன்

---

1. நல்வழி, செய். 36.
2. தொல். பொ. மர. சூத். 4.
3. மேற்படி. சூத். 5.

வருந்துவதும் உணராது நம்மையும் வருத்துந் தன்மையுமுடை யான் என்பது.

இவையிரண்டற்கும் மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஊடறணிவித்தல். (5)

26. கரந்தையஞ் செறுவிற் றுணைதுறந்து கள்வன்
வள்ளை மென்கா லறுக்கு மூர
னெம்மும் பிறரு மறியா
னின்ன னாவ தெவன்கொ லன்னாய்.

எ-து: (21ஆ-ம் செய்யுள் விதியால்) தலைமகற்கு வாயிலாய்ப் புகுந்தார் 'நின் முனிவிற்கு அவன் பொருந்தா நின்றான்' என்றவழித் தலைமகட்குத் தோழி 'அவன்பாடு அஃதில்லை' என்பதுபடச் சொல்லியது.

இ-ள்: கரந்தை செறிந்த வயலிலேயுள்ள தனது பெண்ணைப் பிரிந்து நண்டானது வள்ளையினது மெல்லிய தண்டையறுக்கின்ற ஊரன் எம்மையும் பிறரையும் வருத்துகின்றதையறியான், அவ்வாறாயினான் துன்பத்தைச் செய்பவனாதல் எங்ஙனங் கொல்லோ? தலைவியே, எ-று.

கரந்தையஞ் செறுவிற்றுணைதுறந்து கள்வன் வள்ளை மென்காலறுக்கும் என்பது, தன்மனைக்கண் வாழுமுன்னைத் துறந்துபோய்ப் பரத்தையர் தொடர்ச்சியை நீக்குவான் என்பதாம். மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஊடறணிவித்தல். (6)

27. செந்நெலஞ் செறுவிற் கதிர்கொண்டு கள்வன்
றண்ணக மண்ணளைச் செல்லுமூரற்
கெல்வளை நெகிழச் சாஅ
யல்ல லுழப்ப தெவன்கொ லன்னாய்.

எ-து: தலைமகன் மனைக்கண் வருங்காலத்து வாராது தாழ்த்துழிப் புறத்தொழுக்கம் உளதாயிற்றென்று வருந்துந் தலைமகட்குத் தோழி சொல்லியது.

இ-ள்: செந்நெல்லையுடைய அழகு பொருந்திய வயலின் கண்ணுள்ள கதிரைக் கவர்ந்துகொண்டு நண்டானது தண்

ணிய உள்ளிடத்தையுடைய அளையின் கண்ணே செல்லு கின்ற ஊரற்குப் புறத்தொழுக்கமுண்டென நினைந்து ஒளி யையுடைய வளை கழலும்படி மெலிந்து வருத்தமடைவதி யாது கொல்லோ? எ-று.

சாஅய் = மெலிந்து, என்பது கலித்தொகை 36ஆம் செய்யுளுரையாலறிக.

செறுவிற் கதிர்கொண்டு கள்வன் .அளைச் செல்லு மூரன் என்பது, நம்மைப் பிரிந்தும் இல்லறத்துக்கு வேண்டு வன தேடிக்கொண்டு வருவானென்பதாம். மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஆற்றாமை நீக்குதல்.

**28.** உண்டுறை யணங்கிவ ளுறைநோ யாயிற்
றண்சேறு கள்வன் வரிக்கு மூரற்
கொண்டோடி நெகிழச் சாஅய்
மென்றோள் பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ-து : "களம்பெறக் காட்டினும்"[2] என்பதால், தோழி செவிலிக்கு அறத்தோடு நின்றது. இற்செறித்த விடத்துத் தலைமகள் தலைமகனை எய்தப்பெறாததினாலுண்டாய வேறுபாடு கண்டு 'இது தெய்வத்தினானாயிற்று' என்று தமர் வெறியெடுப்புழி அதனை விலக்கக் கருதிக் கூறியது.

இ-ள்: உண்ணப்படும் நீர்த்துறைக் கண்ணேயுறையுந் தெய்வத்தினாலுண்டாகிய நோயிவட்காயின் குளிர்ந்த சேற்றின்கண் நண்டு கோலஞ் செய்யுமூரன் பொருட்டு ஒள் ளிய தொடிகழலும்படி மெலிந்து மெல்லிய தோள்கள் பசப்பது யாதுகொல்லோ அன்னையே, எ-று.

கூறுதல் உசாதல் என்னும் அறத்தொடுநிலை. தண் சேறுகள்வன் வரிக்கு மூரன் என்றது, இவளினிடத்து இல் வாழ்க்கைக்கு வேண்டுஞ் சிறப்புக்களெல்லாம் செய்வான் என்பது. கு - மூன்றாவதன்கண் வந்தது. அறத்தொடுநிலை மேல்விரியக் காட்டுதும். (8)

---

2. தொல். பொ. கள. சூத். 23. வரி 39.

29. மாரி கடிகொளக் காவலர் கடுக
வித்திய வெண்முளை கள்வ னறுக்குங்
கழனி யூரன் மார்புற மரீஇத்
திதலை யல்கு னின்மகள்
பசலை கொள்வ தெவன்கொ லன்னாய்.

*எ-து: "அவன் வரைவு மறுப்பினும்"[1] என்பதால் வரைவெதிர் கொள்ளார் தமர் அவண் மறுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.*

*இ-ள்: மழை மிகுதியாகப் பெய்யவும், காவலர் விரைந்து செல்லவும், விதைத்த வெண்மையையுடைய நெல் முளைகளை நண்டானது சென்று அறுக்குங் கழனியையுடைய ஊரனது மார்பைப் பொருந்தித் தேமலையுடைய அல்குலையுடைய நினது மகள் பசத்தலைக் கொள்வதியாது கொல்லோ? அன்னையே, எ-று.*

*மாரிகடிகொளக் காவலர்கடுக வித்தியவெண்முளை கள்வனறுக்குங் கழனியூரன் என்றது, மழையிடையறாது நின்ற யாமத்துங் காவலரைத் தப்பித் தலைவியை எதிர்ப்படுந்தன்மையையுடையான் என்பதாம். இஃது உண்மை செப்பல் என்னும் அறத்தொடுநிலை. பசலை-அழகையுடைய பண்டை நிறம் வேறுபடுதல். (9)*

30. வேப்புநனை யன்ன நெடுங்கட் கள்வன்
றண்ணக மண்ணளை நிறைய நெல்லி
னிரும்பூ வுறைக்கு மூரற்கிவள்
பெருங்கவி னிழப்ப தெவன்கொ லன்னாய்.

*இதுவுமது.*

*இ-ள்: வேம்பினரும்புபோலு நீண்ட கண்ணையுடைய நண்டினது தண்ணிய மண்ணளைக்கண் நிறைய நெல்லினது பெருமையுடைய பூவுதிரும் ஊரற்கு இவள் பெரிய அழகிழப்பது யாதுகொல்லோ? அன்னையே, எ-று.*

---

1. தொல். பொ. கள. சூத். 23, வரி 40.

*கள்வன்றண்ணக மண்ணளை நிறைய நெல்லினிரும்பூ வுறைக்கு மூரன் என்பது, தலைவனது மனையிடத்துள்ள வருவாயின் சிறப்புக் கூறியது. இது ஏத்தல் என்னும் அறத் தொடு நிலை. மெய்ப்பாடு - தோழிக்கு வரைதல், செவிலிக் குச் சூழ்ச்சி.* *(10)*

கள்வன் பத்து முற்றிற்று

---

## 4. தோழிக்குரைத்த பத்து

31. அம்மவாழி தோழி மகிழ்நன்
கடனன் றென்னுங் கொல்லோ நம்மூர்
முடமுதிர் மருதத்துப் பெருந்துறை
யுடனா டாயமோ டுற்ற சூளே.

*எ-து: "பல்வேறு நிலையினும்"[1] என்பதால், முன்னொரு நாள். தன்னோடு புதுப்புனலாடுழி, 'இனிப் புறத்தொழுக் கம் விரும்பேன்' என ஆயத்தாரோடு சூளுற்ற தலைமகன் பின்பும் பரத்தையரோடு புனலாடத் தொடங்குகின்றா னென்பது கேட்ட தலைமகள் அவனுழையர் கேட்பத் தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: தோழி கேட்பாயாக, மகிழ்நன் நம்மூரின் மிக்க முடத்தையுடைய திருமருதந்துறையிடத்து நம்மோடுடனா டிய வாயத்தாரோடு நமக்குரைத்த சூளுரை இப்போது செய் தற்குரியதன் றென்னுங் கொல்லோ? எ-று.*

*அம்ம வாழி முன்னிலையசை. "அம்மகேட்பிக்கும்"[2] என்பதானுமறிக. திருமருதந்துறை[3] என்பது "திசை திசை தேனார்க்குந்திருமருத முன்றுறை"[4] என்பதனுரையானுணர்க. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.* *(1)*

---

1. தொல். பொ. கற். சூத். 6, வரி 41.
2. தொல். சொல். இடை. சூத். 28.
3. சிலப். ஊர்காண்காதை வரி 72, அரும்பதவுரை.
4. கலித். பாலைக்கலி, செய். 25 வரி 13.

32. அம்ம வாழி தோழி மகிழ்ந
னொருநா ணம்மில் வந்ததற் கெழுநா
ளழுப வென்பவவன் பெண்டிர்
தீயுறு மெழுகின் ஞெகிழ்வனர் விரைந்தே.

*எ-து: வாயில் வேண்டிப் புகுந்தார் கேட்பத் தலைமகள் தோழிக்குக் கூறியது.*

*இ-ள்: தோழி! ஊரன் ஒரு ஞான்று நம்மில்லின்கண் வந்ததற்கு அவன் பெண்டிர் எழுநாள் தீயின் கணிட்ட மெழுகைப்போல விரைந்து மெலிந்து அழுபவென்று கூறுவர், ஆதலினவர் வருதல் கூடாது, எ-று. மெய்ப்பாடு வெகுளி. பயன் வரயின் மறுத்தல்.* *(2)*

33. அம்ம வாழி தோழி மகிழ்நன்
மருதுயர்ந் தோங்கிய விரிபூம் பெருந்துறைப்
பெண்டிரொ டாடு மென்பதன்
றண்டா ரகலந் தலைத்தலைக் கொளவே.

*இதுவுமது.*

*இ-ள்: தோழி! மருது மிகவுமுயர்ந்த விரிந்த பூவையுடைய பெரிய துறைக்கண் ஊரன் தனது பெண்டிர் குளிர்ந்த மாலையையுடைய மார்பைத் தாந்தாம் பெற்றுக் கொள்ள அவர்களோடும் விளையாடுவா னென்று கூறுவார், ஆதலின் வாரான். எ-று.*

*"கிழவோன் விளையாட்டாங்குமற்றே"[1] என்பதாற் கூறப்பட்டது. மெய்ப்பாடும் பயனும் அவை.*

34. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கைப் பூத்த புழைக்கா லாம்பற்
றாதேர் வண்ணங் கொண்டன
வேதிலா ளற்குப் பசந்தவென் கண்ணே.

---

1. தொல். பொ. கற். சூத். 23.

இதுவுமது.

இ-ள்: தோழி! நம்மூரிற் பொய்கைக்கண் பூத்த துளை யையுடைய காலையுடைய வாம்பலினது தாது போன்ற அழகையடைந்தன அயலாராகிய ஊரற்குப் பசப்பு அடைந்த வெனது கண்கள். எ-று. மெய்ப்பாடும் பயனும் அவை; ஏர் - உவமவுருபு. (4)

35. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கை யாம்ப னாருரி மென்கா
ணிறத்தினு நிழற்றுதன் மன்னே
யினிப்பசந் தன்றென் மாமைக் கவினே.

எ-து: "வாயிலின் வரூஉம் வகை"[1] என்பதால் வாயிலாய்ப் புகுந்தார் தலைமகன் குணங் கூறியவழி, அவனுக்கு இல்லா தனவே கூறுதலாற் காண் இப்பொழுது என் மேனி பசந்தது' எனத் தலைமகள் தோழிக்குக் கூறியது.

இ-ள்: தோழி! நமதூரின் பொய்கைக்கணுள்ள ஆம் பலினது நாருரித்த மெல்லிய தண்டினது அழகினுமழகைச் செய்தல் இனிமேல் இன்றாய் இப்பொழுது எனது மாமைக் கவின் பசந்தது, வந்ததிற் பயனின்று. எ-று. மன் - கழிவின் கண் ணது. மெய்ப்பாடு - அவலம்; பயன் - வாயின் மறுத்தல். (5)

36. அம்ம வாழி தோழி யூர
னம்மறந் தமைகுவ னாயி னாமறந்
துள்ளா தமைதலு மமைகுவ மன்னே
கயலெனக் கருதிய வுண்கண்
பசலைக் கொல்கா வாகுதல் பெறினே.

எ-து: தான் வாயினேருங் குறிப்பினளானமை யறியாது தோழிவாயின் மறுத்துழி அவள் நேரும் வகையால் அவட் குத் தலைமகள் சொல்லியது.

இ-ள்: தோழி! ஊரன் நம்மை மறந்திருத்தலைப் பொருந் துவனாயின் நாமும் மறந்து நினையாதிருத்தலும் பெறு

---

1. தொல். பொ. கற். சூத். 6, வரி 42.

வோம்; அஃதெற்றானெனின், கயன்மீனென்று பிறராற் கருதப்படும் மை தீட்டிய கண் பசலையைக் கொண்டு தளராத தன்மை பெற்றால். எ-று.

மன் ஒழியிசை, நான்காவது மூன்றாவதன் பொருட்கண் வந்தது. மெய்ப்பாடு - உவகை; பயன் - வாயினேர்தல். (6)

37. அம்ம வாழி தோழி மகிழ்ந
னந்தோ ருண்கண் பசந்துபனி மல்க
வல்லன் வல்லன் பொய்த்த
றேற்றா னுற்ற சூழ்வாய்த் தல்லே.

எ-து: "இல்லோர் செய்வினை யிகழ்ச்சிக் கண்ணும்"[1] என்பதால், காதற்பரத்தை தலைமகன் தலைமகளைச் சூனினாற் றெளித்தானென்பது கேட்டு அவட்குப் பாங்காயினார் கேட்பத் தன் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழி! ஊரன் தன்மீது அன்பினையுடைய மகளிரது மைதீட்டிய கண்கள் பசப்படைந்து நீர் நிறையப், பொய்த்தலைச் செய்ய வல்லமையிலனாகான்; தேறுதல் காரணமாத் தன்னாற் சூளுற்ற சூள் உண்மையாதலைச் செய்யவல்ல னல்லன். எ-று.

ஆதலினவன் செய்த சூளிற் பயனின்று என்றபடி. மெய்ப்பாடு நகை. பயன் தலைமகளை யிகழ்தல். (7)

38. அம்ம வாழி தோழி மகிழ்நன்
றன்சொல் லுணர்ந்தோ ரறியல னென்றுந்
தண்டளிர் வெளவு மேனி
யொண்டொடி முன்கை யாமழப் பிரிந்தே.

எ-து: "புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும்"[2] என்னுஞ் சூத்திரத்து "பிற" என்றதாற் கொள்வது. தலை

1. தொல். பொ. கற். சூத். 10, வரி 2.

2. தொல். பொ. கற். சூத். 10.

மகன் மனைவயிற்போகக் கருதினானென்பது சொல்லிய தன் றோழிக்குப் பரத்தை கூறியது.

இ-ள்: தோழி! ஊரன் தண்ணிய மாந்தளிரினது அழகைக் கெடுக்கும் மேனியையுடைய ஒள்ளிய தொடியையணிந்த முன்கையையுடைய யாமழும்படி பிரிந்து தனது வார்த்தையைத் தெளிந்தோரிடத்துச் செல்லுதலை எக்காலத்துமறியான். எ-று. ஆதலின் நீ கூறுகின்றது இல்லை. மெய்ப்பாடு - வியப்பு; பயன் - தலைமகனைத் தன்கட்டாழ்வித்தல். (8)

39. அம்ம வாழி தோழி யூரன்
வெம்முலை யடைய முயங்கி நம்வயிற்
றிருந்திழைப் பணைத்தோண் ஞெகிழப்
பிரிந்தன னாயினும் பிரியலன் மன்னே.

எ-து: (இதற்கு 37ஆ-ம் செய்யுள் விதி). ஒரு ஞான்று தலைவன் தன்மனைக்கட் சென்றது கொண்டு அவன் பெண்மை நலமெல்லாந் துய்த்துக் காதல் நீங்கிப் பிரிந்தானென்பது தலைவி கூறினாளெனக் கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயினார் கேட்பத் தன் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழி! ஊரன் தன் மார்போடு வெய்யவாய தனங்கள் அழுந்தத் தழுவிப் பின் பிறருடைய திருத்தமுற்ற இழையணியப்பட்ட பருத்த தோள் மெலியப் பிரிந்தானாயினும் நம்மிடத்து அவ்விதம் பிரிதலைச் செய்யான். எ-று. மெய்ப்பாடு - நகை; பயன் - தலைமகளையிகழ்தல். (9)

40. அம்ம வாழி தோழி மகிழ்ந
னொண்டொடி முன்கை யாமழப் பிரிந்துதன்
பெண்டி ரூரிறை கொண்டன னென்ப
கெண்டை பாய்தர வவிழ்ந்த
வண்டுபிணி யாம்ப னாடுகிழ வோனே.

எ-து: "புல்லுதன் மயக்கும் புலவிக்கண்ணும்" என்னுஞ் சூத்திரத்துப் 'பிற' வினாற் கொள்வது; அது அயற்பரத்தைய ரோடு புலந்து கூறுவது.

*தலைவன் உலகியல் பற்றித்தன் மனைக்கண் ஒரு ஞான்று போனதே கொண்டு அவ்வழிப் பிரியாது உறைகின்றா னென்று அயற்பரத்தையர் பலருங் கூறினார் என்பது கேட்ட காதற் பரத்தை அவர் பாங்காயினார் கேட்பத் தன் தோழிக் குச் சொல்லியது.*

*இ-ள்: தோழி! மகிழ்நன் ஒள்ளிய தொடியணிந்த முன் கையையுடைய யாமமும் வண்ணம் பிரிந்து தனது பெண் டிரது ஊரின் கண்ணே உறைகின்றனனென்று கூறுகின்றார் கள்; அவனோ கெண்டைமீன் பாய்தலின் முறுக்கு அவிழ்ந்து வண்டைப் பிணிக்கும் தேன் நிறைந்த ஆம்பல் பொருந்திய நாட்டையுடையன். எ-று.*

*கெண்டை பாய்தர வவிழ்ந்த வண்டுபிணி யாம்ப னாடு கிழவோன் என்றது, அயற்பரத்தையர் கூற்றால் நெகிழ்தலி னால் தன்னை அவரிடத்துச் செல்லவிடாது தடுக்கும் இயல்பையுடைய காதற் பரத்தையரையுடையான் என்ப தாம். பிறர் கூறுகின்ற கூற்றால் வருந்துகின்ற நம்மாற்றடுக் கப் படுமியல்பினை யுடையான் என்பதாம். மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - இகழ்தல்.* *(10)*

தோழிக்குரைத்த பத்து முற்றிற்று

---

## 5. புலவிப் பத்து

41. தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு
வெண்பூம் பொய்கைத் தவனூரென்ப வதனால்
தன்சொ லுணர்ந்தோர் மேனி
பொன்போற் செய்யு மூர்கிழ வோனே.

*எ-து: (இதற்கு 11ஆம் செய்யுள் விதி) கழறித் தெருட் டற் பாலராகிய அகம்புகன் மரபின் வாயில்கள் புகுந்துழித் தலைவனையும் பாணன் முதலிய பக்கத்தாரையும் இகழ்ந்து தலைவி கூறியது.*

இ-ள்: தனது பார்ப்பைத் தின்னுகின்ற அன்பில்லாத முதலையோடு வெள்ளிய பூவையுடைய பொய்கையை யுடைத்து அவனது ஊரென்று கூறுவர்; அதனாலே தனது சொல்லை யுண்மையென்று நம்பியவரது மேனியைப் பொன் போலச் செய்யுமூரன். எ-று.

தன் பார்ப்புத் தின்னுமன்பின் முதலையொடு வெண் பூம் பொய்கைத் தவனூர் என்றது, தன்னாற் செய்யப்படும் அருளைக் கெடுத்தலோடு சற்றுமறிவில்லாத துணையாள ரையுமுடையான் என்பதாம்.

இதனை நச்சினார்க்கினியர் தோழி கூற்றாக்குவர். அவ் வாறாயின், 'வெண்பூம் பொய்கைத்தவனூர்' என்பது தலை மகளது பசப்பு நிறங் கூறியது; தன்பார்ப்புத் தின்னுமன்பின் முதலை என்பது, தலைமகன் கொடுமை கூறியது. தலைவி கூற்றல்லாமைக்கு நியாயம் முதலை பார்ப்பை யுண்ணல் தலைவிக்குத் தெரியாமை. மெய்ப்பாடு - வியப்பு; பயன் - வாயில் மறுத்தல்.

அவனூரே என்றும் பாடம். இப்பாடந் தோழி கூற்றிற்குப் போலும். பார்ப்பென்னு மிளமைப் பெயர் முதலைக்குக் கொள்வது "தவழ்பவைதாமு மவற்றோரன்ன" என்பதால். (1)

**42.** **மகிழ்மிகச் சிறக்க மயங்கினள் கொல்லோ**
**யாண ரூரநின் மாணிழை யரிவை**
**காவிரி மலிர்நிறை யன்னநின்**
**மார்புநனி விலக்க றொடங்கி யோளே.**

எ-து: "புகன்ற வுள்ளமொடு புதுவோர் சாயற்
ககன்ற கிழவனைப் புலம்பு நனி காட்டி
யியன்ற நெஞ்சந் தலைப் பெயத் தருக்கி
யெதிர்பெய்து மறுத்த வீரத்து மருங்கினும்"[1]

---

1. தொல். பொ. கற். சூத். 6, வரி 11-14.

என்பதால், தலைநின்றொழுகப்படாநின்ற பரத்தை தலைவன் பிற பரத்தையருடன் ஒழுகினானென்று புலந்தாளாக அதனை அறிந்த தலைவி அவன் தன்னில்லத்துப் புகுந்துழித் தானறிந்தமை தோன்றச் சொல்லியது.

இ-ள்: யாணரூரனே! நினது மாட்சிமைப்பட்டவாபரணத்தையுடைய அரிவையானவள் மகிழ்மிகவுஞ் சிறத்தலினால் மயக்கமடைந்தாள் கொல்லோ! காவிரியாற்றினீரை ஒத்த நினது மார்பை மிகவுந் தடுத்தற்குத் தொடங்கினாள். எ-று.

காவிரி மலிர் நிறையன்ன நின்மார்பு என்பது, பலர்க்கும் பொதுவாகிய காவிரி நீரை யொத்த மார்பு எனவும், தான் சென்றடைய வேண்டுமிடத்து விரும்பிச் செல்லு நீரை யொத்த மார்பு எனவும், செல்லுமியல்பையுடைய நீரை யொத்த மார்பு எனவும், பலவிடத்துஞ் சென்று பயன்படும் நீரையொத்த மார்பு எனவும், அழுக்குப் பொருந்திய நீரை யொத்த மார்பு எனவும், நீரையொத்த தண்ணிய மார்பு எனவும் நால்வகை யுவமமுங் கொள்ளக் கிடப்பது காண்க.

இதனை நச்சினார்க்கினியார் தோழி கூற்றென்பர்; அது "உயர்மொழிக் கிளவியு முரியவா லவட்கே"[1] என்பதால், காவிரிப் பெருக்குப் போலத் தலைவியை நோக்கி வருகின்ற நினது மார்பைத் தான் விலக்குமாறு என்னை எனத் தலைவியையுயர்த்திக் கூறியவாறு காண்க. மெய்ப்பாடு - நகை; பயன் - ஊடல். (2)

**43.** **அம்பணத் தன்ன யாமை யேறிச்**
**செம்பி னன்ன பார்ப்புப்பல துஞ்சும்**
**யாண ரூர நின்னினும்**
**பாணன் பொய்யன் பலசூ ளினனே.**

எ-து: "இன்னாத் தொல்சூ ளெடுத்தற் கண்ணும்"[2] என்பதால், பாணன் வாயிலாகப் புகுந்து தெளிப்ப மறுத்த

1. தொல். பொ. பொரு. சூத். 46.
2. தொல். பொ. கற். சூத். 6, வரி 35.

*தலைமகள் பாணனோடு தலைமகன் புகுந்து தெளித்துழிச் சொல்லியது.*

*இ-ள்: மரக்காலையொத்த யாமையது முதுகின்கண் செம்பையொத்த பல பார்ப்புக்கள் ஏறித் துயில்கின்ற அழ கிய ஊரனே! நின்னினும் பாணனோ பொய்யனல்லன். அவன் பல சூளினையுடையன், எ-று.*

*"தவழ்பவை தாமுமவற்றோரன்ன" என்பதால் யாமை யது இளமைக்குப் பார்ப்பென்பது கொள்வது.*

*யாமையேறிப் பார்ப்புப் பலதுஞ்சுமூரன் என்றது, நின் மார்பின்கண் துயில்கின்ற பல புதல்வரையுடையாய் என் பது, மகப்பெற்று வாழ்வார் பொய்கூறலாகா தென்பதாம். மெய்ப்பாடு - அச்சம்; பயன் - புலத்தல்.* *(3)*

44. தீம்பெரும் பொய்கை யாமை யிளம்பார்ப்புத்
தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்
கதுவே யையநின் மார்பே
யறிந்தனை யொழுகுமதி யறனுமா ரதுவே.

*எ-து "சீருடைப் பெரும் பொருள் வைத்தவழி மறப்பி னும்"[1] என்பதால், பரத்தையர் மனைக்கட் பன்னாட்டங்கித் தன் மனைக்கண் வந்த தலைமகற்குத் தோழி கூறியது.*

*இ-ள்: இனிய நீரையுடைய பெரிய பொய்கைக்கண் ணுள்ள யாமையின் பார்ப்பானது தாயது முகத்தை நோக்கி வளருந்தன்மைபோல, ஐயனே! நின்மார்பு அத்தன்மைத்தே, அதனை யறிந்தனையாய் ஒழுகுமதி, நிறைந்த தருமமும் அதுவேயாம். எ-று.*

*இளம் பார்ப்பு தலைமகள், தாய்முகம் தலைமகன் மார்பு. நின் மார்பாற் பெறும் பயனுமின்றிக் காட்சியும் பெறுகின்றிலள் என்பது.*

---

1. தொல். பொ. கற். சூத். 9, வரி 5.

*மதி - முன்னிலையசை; "மியாயிக மொமதியிகுஞ் சின்னென்னு - மாவயினாறு முன்னிலை யசைச்சொல்"*[1]

*இசின்-படர்க்கையசை; "அவற்றுள், இகுமுஞ் சின்னு மேனையிடத்தொடுந் - தகுநிலையுடைய வென்மனார் புலவர்"*[2]

*ஆர் - இன்னிசை நிறைத்தற் பொருட்டு வந்த இடைச்சொல். மெய்ப்பாடு - இழிவு; பயன் - பரத்தைமை நீக்குதல்.*

*(4)*

**45. கூதி ராயிற் றண்கலிழ் தந்து**
**வேனி லாயின் மணிநிறங் கொள்ளும்**
**யாறணிந் தன்றுநின் னூரே**
**பசப்பணிந் தனவான் மகிழ்நவென் கண்ணே.**

*இதுவுமது.*

*எ-து: பரத்தையரிடத்தனாய் நெடுநாள் ஒழுகிய தலைமகன் மனைவயிற் சென்றுழித் தோழி அவற்குக் கூறியது.*

*இ-ள்: கூதிர் காலமாயிற் கலங்கி வேனிற் காலமாயிற் றெளிதலைக் கொள்ளும் யாற்றை யணிந்தது நின்னூர், மகிழ்ந! என்னுடைய கண்கள் எக்காலத்தும் பசப்படைந்தன வாயிருக்கின்றன, எ-று.*

*கலங்குதலும் தெளிதுதலு முடைத்தாகும் யாற்றினியல்பும் பெறாது என்றும் பசந்தே ஒழுகுகின்றாளிவளென்பதாம். "தாயத்தினடையா"*[3] *என்னுஞ் சூத்திர விதிபற்றித் தலைவி கண்ணைத் தோழி தன் கண்ணாகக் கூறினாள். மெய்ப்பாடும் - பயனும் அவை.* *(5)*

**46. நினக்கே யன்றஃ தெமக்குமா ரினிதே**
**நின்மார்பு நயந்த நன்னுத லரிவை**
**வேண்டிய குறிப்பினை யாகி**
**யீண்டுநீ யருளா தாண்டுறை தல்லே.**

---

1. தொல். சொல். இடை. சூத். 26, 27.

2. தொல். சொல். இடை. சூத். 26, 27.

3. தொல். பொ. பொருளியல், சூத். 27.

*எ-து: "பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி*
*யிழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்"[1]*

*என்பதால், மனைக்கண் வருதல் பரத்தை விலக்க விலங்கிப் பின்பு உலகியல்பற்றி அவள் குறிப்பினோடும் வந்தமை யறிந்த தோழி தலைமகனைப் புலந்து சொல்லியது.*

*இ-ள்: மகிழ்ந! நின்னுடைய மார்பு விரும்பிய அழகிய நுதலையுடைய பெண்ணானவள், விரும்பிய குறிப்பினை யுடையையாகி ஈண்டு வருதலாகிய அருளைச் செய்யுந் தன்மையல்லையாய் ஆண்டு உறைதலாகியவருளைச் செய் யாத தன்மையல்லையா யிருத்தல் நினக்கேயல்லாமல் அது எமக்கும் இனிதாதலையுடையது, எ-று.*

*இவ்வாறு வருதலின் வாராமையே நன்று என்பதாம். இதனை நச்சினார்க்கினியார் தலைவி கூற்றெனக் காட்டு வார்;*

கொடுமை ஒழுக்கங் கோடல் வேண்டி
யடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்
காதலெங் கையர் காணி னன்றென
மாதர்சான்ற வகையின் கண்ணும் [2]

*என்பதால், மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஊடறீர்த்தல்; தலைவியாயின் ஊடல். (6)*

47. முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த
வகன்பெரு வட்டி நிறைய மனையோ
ளரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர
மாணிழை யாய மறியுநின்
பாணன் போலப் பலபொய்த் தல்லே.

*எ-து: பாணற்கு வாயில் மறுத்த தலைமகள் பின் பாண னோடு தலைமகன் புகுந்து தன் காதன்மை கூறியவழிச் சொல்லியது.*

---

1. தொல். பொ. கற். சூத். 9, வரி 8-9.
2. தொல். பொ. கற். சூத். 6, வரி 28-31

இ-ள்: கூரிய பற்களையுடைய வலைப்பாண்மகள் இனிமையுடைத்தென்று கொள்ளப்படும் கெடிற்று மீனைச் சொரிந்த வகன்ற பெட்டி நிறையப் பண்டமாற்றாக மனையோள் இருவியஞ்செய்யின் விளைந்த பெரும்பயற்றை நிறைக்கும் ஊர! அழகியவாபரணத்தையுடைய ஆயத்தார் நின் பாணன் போல நீயும் பலவாகப் பொய்த்தலையறிவர். எ-று. ஆதலின் யானிதனை மெய்யென்று கொள்ளினுமவர் பொறார் என்பதாம்.

கெடிறு சொரிந்த வட்டி நிறைய மனையோள் பயறு நிறைக்கு மூர வென்றது, நீ நின் காதல் சொல்லி விடுத்து அவர் சிறந்த காதல் சொல்லி வரவிடப் பெறுவை என்பது. அன்றியும், நீ அவர்களிடத்துளவாகிய எளியவின்பத்தைப் பெற்று நின்னிடத்துளவாகிய நல்லின்பத்தை அவர்க்குக் கொடுக்குந் தன்மையையுடையாய் என்பதுமாம். வட்டி - பெட்டி என்பதை, முல்லைக்கலியுள் "வரிக்கூழை வட்டி தழீஇ"[1] என்பதனுரையானுணர்க. கெழுறு என்றும் வழங்கும். மெய்ப்பாடு - வெகுளி; பயன் - புலத்தல். (6)

48. வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்
யாண்டுகழி வெண்ணெ னிறைக்கு மூர
வேண்டேம் பெருமநின் பரத்தை
யாண்டுச்செய் குறியோ டீண்டுநீ வரலே.

எ-து: "செல்லாக்காலைச் செல்கென விடுத்தலும்"[2] என்பதால் பரத்தையர் மாட்டு ஒழுகா நின்று தன் மனைக்கட் சென்ற தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

இ-ள்: வலையையுடைய வலிய பாண்மகனது மடமகளானவள் வரான் மீன் சொரிந்த பெட்டியுள் மனையோளானவள் ஓர் யாண்டு கழிந்த வெண்ணெல்லைச் சொரிந்து நிறைக்

1. முல்லைக்கலி, செய்யுள் 9, வரி 14.

2. தொல். பொ. கற். சூத். 6, வரி 17.

கின்ற ஊரனே! பெரும! நினது பரத்தையானவாள் அவ் விடத்திற் செய்குறியோடு நீ ஈண்டு வருதலை விரும்பேம், எ-று.

மடமகள் வரால் சொரிந்த வட்டியுண் மனையோள் யாண்டு கழி வெண்ணெல் நிறைக்கு மூர என்றது, தாழ்ந்த பொருளுக்கு மாறாக உயர்ந்த பொருளைக் கொடுப்பான் என்பது. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடல். (8)

**49.** **அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்**
**சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்**
**யாண ரூரநின் பாண்மகன்**
**யார்நலஞ் சிதையப் பொய்க்குமோ வினியே.**

எ-து: "கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது - நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப் - பகுதியி னீங்கிப் தகுதிக் கண்ணும்"[1] என்பதால், பாணன் வாயிலா கப் பரத்தையோடு கூடினானென்பது கேட்ட தலைமகள் தனக்கும் பாணனாற் காதன்மை கூறுவிப்பான் புக்க தலை மகற்குச் சொல்லியது.

இ-ள்: அழகிய சிலவாய ஒதியையுடைய அசைந்த நடை யையுடைய பாண்மகள் சில மீனைக் கொடுத்துப் பல நெல் லைப் பெறும் அழகிய ஊரனே! நினது பாணன் இனி எவரி னது அழகு கெடும் வண்ணம் பொய்த்து விடுவானோ, எ-று. இவ்வாறு கூறற்க என்பதாம்.

சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம் ஊரவென்றது சிலவாய பொய் வார்த்தைகளைக் கூறிப் பலவின்பத்தைப் பெறுவான் என்பதாம். மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடல்.

**50.** **துணையோர் செல்வமும் யாமும் வருந்துதும்**
**வஞ்சியோங்கிய யாண ரூர**
**தஞ்ச மருளாய் நீயேநின்**
**னெஞ்சம் பெற்ற விவளுமா ரழுமே.**

---

1. தொல். பொ. கற். சூத். 6, வரி 25-27

*எ-து: (இதற்கு 44ஆம் செய்யுள் விதி) மனையினீங்கிப் பரத்தையிடத்துப் பன்னாட்டங்கி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: வஞ்சி மரம் பெருமை பெற்ற அழகிய ஊரனே! துணையோர் செல்வமும் யாங்களும் வருந்துகின்றோம்; நின்னுடைய மார்பைத் தனக்குப் பற்றுக்கோடாகப் பெற்ற இவளும் பெறாமையின் அழுகின்றாள், ஆதலின் நீயே அவற்றுக்கெல்லாங் காரணனாகையான் அவற்றைப் பெற அருளுவாய், எ-று.*

*வஞ்சியோங்கிய யாணரூரவென்றது, பெண் பெயரையுடைய மரஞ் செறிந்தவூரனாதலின் இவள் வருந்தா்வண்ணங் காப்பாயாகவென்பது. மெய்ப்பாடு - அவலம்; பயன் - பரத்தைமை நீக்குதல். (10)*

புலவிப் பத்து முற்றிற்று

---

## *6. தோழி கூற்றுப் பத்து*

51. நீருறை கோழி நீலச்சேவல்
கூருகிர்ப் பேடை வயாஅ மூர
புளிங்காய் வேட்கைத் தன்றுநின்
மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே.

எ–து: "பிழைத்து வந்திருந்த கிழவனை நெருங்கி
**யிழைத்தாங்காக்கிக் கொடுத்தற் கண்ணும்"**

*(46ஆம் செய்யுள் விதி) என்பதால், வாயில் பெற்றுப் புகுந்து போய்ப் புறத்தொழுக்கமொழுகிப் பின்பும் வாயில் வேண்டுந் தலைமகனுக்குத் தோழி கூறியது.*

*இ-ள்: நீரினிடத்துத் தங்கும் நீல நிறத்தையுடைய கோழிச் சேவலைக் கூரிய நகத்தையுடைய பேடானது நினைந்து தனது வயா நோய் தீரும் ஊரனே! நினது விரிந்த மார்பானது இவளது வேட்கை நோய்க்குப் புளியங்காயின் தன்மையாயிருக்கும். எ-று.*

*ஊரனே! சேவலைப் பெடையானது நினைத்துத் தனது வயாநோய் தீரும்; அதுபோல, நின் மார்பு இவளை நயவா தாயினும் இவள்தானே நினைந்து தன் வேட்கை நோய் தீர் வாள் என்பது. புளிங்காய் வேட்கையாவது புளியங்காயை நினைய வாய் நீருறுவது போல என்பது. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - பரத்தைமை நீக்குதல். (1)*

**52. வயலைச் செங்கொடிப் பிணைய றைஇச்**
**செவ்விரல் சிவந்த சேயரி மழைக்கட்**
**செவ்வாய்க் குறுமக ளினைய**
**வெவ்வாய் முன்னின்று மகிழ்நநின் றேரே.**

*எ-து: "பெறற்கரும் பெரும்பொருள் முடித்தபின்"[1] என்னுஞ் சூத்திரத்துப் பிறவாற் கொள்வது. பரத்தையர் மனைக் கட் பல நாட்டங்கிப் பின் வாயில் பெற்றுக் கூடியிருந்த தலைமகனோடு தோழி நகையாடிச் சொல்லியது.*

*இ-ள்: பசலையது சிவந்த் கொடியாலாய மாலையைத் தொடுத்தலின் சிவந்த விரல்கள் மிகவுஞ் சிவப்படைந்த வரி களையுடைய மழைக்கண்ணையும் சிவந்த வாயையுமுடைய சிறியவிப் பெண் வருந்த எந்த வாயின் முன்னர் நின்றது மகிழ்ந! நினது தேரானது? எ-று. மெய்ப்பாடு - நகை; பயன் - பரத்தைமை நீக்குதல். (2)*

**53. துறையெவ னணங்கும் யாமுற்ற நோயே**
**சிறையழி புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கிக்**
**கழனித் தாமரை மலரும்**
**பழன வூர நீயுற்ற சூளே**

*எ-து: (இதற்கு 43ஆம் செய்யுள் விதி) தலைவி தன்னுடன் போய்ப் புனலாடியவழி இது பரத்தையுடனாடிய துறையென நினைந்து பிறந்த மெலிவை மறைத்தமை யுணர்ந்த தலை மகன் மனைவயிற் புகுந்துழி, 'தெய்வங்க ளுறையுந் துறைக்*

1. தொல். பொ. கற். சூத். 9.

*கண்ணே நாமாடியவதனாற் பிறந்தது கொல் நினக்கு இவ் வேறுபாடு' என்று வினாயினாற்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: சிறையை யழித்துச் செல்லும் புதுப்புனல் பாய்ந்த அளவிற் கலங்கிக் கழனிக் கட்டாமரை மலருகின்ற பழனத் தையுடைய ஊரனே! துறைதா னெவ்வாற்றானும் வருத்துவ தில்லை, பின்னை யாமுற்ற நோய் யாதானெனின் நீ பிறரோடு ஆடேனெனக் கூறிய வார்த்தையாலுண்டாயது, எ-று.*

*சிறையழி புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கிக் கழனித் தாமரைமலரும் என்றது, நின் செய்கையாலிவள் வாடி மகிழும் தன்மையள் என்பது. பழனவூர என்றது பலர்க்கும் பொதுவாந்தன்மை யுடையானென்பது. மெய்ப்பாடு - பெரு மிதம்; பயன் - ஊடலுணர்த்தல்.*

*இச்செய்யுள் தலைவி கூற்றாக வெழுதப்பட்டிருக்கின் றது; அது அதிகாரத்தாலும் யாம் என்பதாலும் பொருத்த மின்று. (3)*

54. திண்டேர்த் தென்னவ னன்னாட் டுள்ளதை
வேனி லாயினுந் தண்புன லொழுகுந்
தேனூ ரன்னவிவ டெரிவளை நெகிழ
வூரி னூரனை நீதர வந்த
பஞ்சாய்க் கோதை மகளிர்க்
கஞ்சுவ லம்ம வம்முறை வரினே.

*எ-து: "பேணாவொழுக்க நாணிய பொருளினும்"[1] என்ப தால் வாயில் வேண்டி வந்த தலைமகற்குத் தலைமகள் குறிப் பறிந்த தோழி அவன் கொடுமை கூறி வாயின் மறுத்தது.*

*இ-ள்: வலிய தேரையுடைய பாண்டியனது நல்ல நாட்டின் கணுள்ளதாகிய வேனிற்காலமாயினுங் குளிர்ந்த நீரைச் சொரி யாநிற்குந் தேனூரை யொத்த இவளினுடைய ஆராய்ந் தணிந்த வளையல் கழலச் சென்றால் ஊரனாகவுள்ளாய்*

1. தொல். பொ. கற். சூத். 9, வரி 14.

நின்னாற் கொடுக்கப் பெற்ற தண்டான் கோரையாலாகிய மாலையையுடைய மகளிருக்குப் பயப்படுவேன் அவர்க்குச் செய்த முறையோடு மிவ்விடத்தின் வரின், எ-று.

தர என்பது "செலவினும் வரவினும்"[1] என்னுஞ் சூத்திரத்தால் படர்க்கைகண் வந்தது. பஞ்சாய் - தண்டான் கோரை என்பது கலித்தொகை 76ஆம் செய்யுளுரையிற் காண்க. உள்ளதாகிய தேனூரென்க. ஐ - சாரியை. (4)

55. கரும்பி னெந்திரங் களிற்றெதிர் பிளிற்றுந்
தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவ
ணல்லணி நயந்துநீ துறத்தலிற்
பல்லோ ரறியப் பசந்தன்று நுதலே.

எ-து: (இதற்கு 44ஆம் செய்யுள் விதி) வரைந்த அணிமைக் கண்ணே புறத்தொழுக்கம் ஒழுகி வாயில் வேண்டி வந்து தன் மெலிவு கூறிய தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லியது.

இ-ள்: கரும்பை நெரிக்கும் ஆலையானது யானைக்கு எதிராகப் பிளிற்றுகின்ற தேர் வளத்தையுடைய பாண்டியனது தேனூரையொத்த இவளது நல்ல அழகை நீ விரும்பிப் பின் துறத்தலால் பலருமறியப் பசந்தது இவள் நுதல், எ-று.

கரும்பினெந்திரங்களிற்றெதிர் பிளிற்றும் என்றது நீ கூறுகின்ற மெலிவுக்குமேல் மெலிவு கூறுகின்றது இவள் நுதல் என்பதாம். மெய்ப்பாடு - அவலம்; பயன் - பரத்தைமை நீக்கல்.

களிறு ஆகுபெயர், பிளிற்றும் என்னுமெச்சம் தேனூரென்னும் பெயர் கொண்டது. (5)

1. தொல். சொ. கிள. சூத். 28.

56. பகல்கொள் விளக்கோ டிராநா ளறியா
வெல்போர்ச் சோழ னாமூ ரன்னவிவ
ணலம்பெறு சுடர்நுத றேம்ப
வெவன்பயஞ் செய்யுநீ தேற்றிய மொழியே.

*எ-து: (இதற்கு 43ஆம் செய்யுள் விதி). புறத்தொழுக்கம் உளதாகியதறிந்து தலைமகள் மெலிந்துழி, 'அஃதில்லை' யென்று தேற்றுந் தலைமகற்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: ஒளி பொருந்திய விளக்கோடு இராநாளையறியாத பகைவரை வெல்லுகின்ற போரையுடைய சோழனது ஆமூரையொத்த இவளது இன்பம் பெறுதற்கேதுவாகிய ஒளியையுடைய நுதலானது வாட, நீ தெளித்த சொல்லானது யாதோர் பயனையுஞ் செய்யமாட்டாது, எ-று. 'வென்வேற் சோழர்' என்றும் பாடம்.*

*ஒருநாளும் மெலிவறியாத இவள் மெலிவடையும்படி ஒழுகினாயென்பது. மெய்ப்பாடு - அவலம்; பயன் - இகழ்தல்.* (6)

57. பகலிற் றோன்றும் பல்கதிர்த் தீயி
னாம்பலஞ் செறுவிற் றேனூ ரன்ன
விவணலம் புலம்பப் பிரிய
வனைநல முடையளோ மகிழ்நநின் பெண்டே.

*எ-து: வணங்கியன் மொழியான் வணங்கற் கண்ணும்' என்பதால், தலைமகற்குப் புறத்தொழுக்க முளதாயிற்று என்பது கேட்ட தோழி அவனை வினாவியது.*

*இ-ள்: பகல்போல விளங்கும் பல ஒளியையுடைய தீயினையும் ஆம்பல் பொருந்திய வயலையுமுடைய தேனூரையொத்த இவளினுடைய அழகு கெடும்படியாக நீ பிரிய அத்தன்மையதாகிய அழகையுடையாளோ மகிழ்நனே! நினது பெண்ணானவள், எ-று.*

---

1. தொல். பொ. கற். சூத். 9, வரி 10.

*பகலிற் றோன்றும் பல்கதிர்த்தீ என்பது வேள்வித்தீ; என்பது மனத்தூய்மையு மின்பச்சிறப்புங் கூறியவாறு. மெய்ப் பாடு - இளிவால்; பயன் - பரத்தைமை நீக்கல்.* (7)

58. விண்டு வன்ன வெண்ணெற் போர்விற்
கைவண் விராஅ னிருப்பை யன்ன
விவளணங் குற்றனை போறி
பிறர்க்கு மனையையால் வாழி நீயே.

*எ-து: "புலத்தலு மூடலுமாகிய விடத்துஞ் சொலத்தகு கிளவி தோழிக்குரிய"*[1] *என்பதால், உணர்ப்புவயின் வாரா வூடற்கட் புலந்த தலை மகற்குத் தோழி கூறியது.*

*இ-ள்: மலையையொத்த வெண்ணெற்போரையுடைய கொடைத் தொழிலாற் சிறப்புற்ற விரான் என்பவனது இருப்பை என்னும் ஊரையொத்த இவளைத் துயரமடை யச் செய்தவனைப் போல்கின்றாய்; நீ பிறருக்குமவ்வாறாந் தன்மையையாதலின் வாழ்வாயாக, எ-று.*

*கைவண்விரா அனிருப்பையன்ன என்பது நினது இல் வாழ்க்கைக்குரிய குணங்களாலுயர்ந்த இவளை என்பது. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - சிவப்பாற்றுதல்.* (8)

59. கேட்டிசின் வாழியோ மகிழ்ந வாற்றுற
மைய னெஞ்சிற் கெவ்வந் தீர
நினக்குமருந் தாகிய யானினி
யிவட்கு மருந்தன்மை நோமென் னெஞ்சே.

*எ-து: (இதற்கு 51ஆம் செய்யுளின் விதி) தலைமகள் ஆற்றாளாம் வண்ணம் மனைக்கண் வரவு சுருங்கிய தலை மகற்குப் புறத்தொழுக்க முளதாயவழி ஆற்றாளகிய தோழி சொல்லியது.*

---

1. தொல். பொ. கற். சூத். 16.

*இ-ள்: கேட்டிசின் வாழியோ மகிழ்நனே! நினது மயக்கம் பொருந்திய மனத்திற்கு வருத்தந்தீர மருந்தாயிருந்த யான் இப்பொழுது இவளது மனத்தின் நோயை யாற்றுதற்கு மருந்தல்லாமையினால் என் மனம் வருந்துகின்றது. எ-று.*

*கேட்டிசின் வாழியோ என்பதில் சின்வாழியோ - முன்னிலையசை. மெய்ப்பாடு - அவலம்; பயன் - பரத்தைமை நீக்குதல்.* *(9)*

**60.** **பழனக் கம்புள் பயிர்ப்பெடை யகவுங்**
**கழனி யூரநின் மொழிவ லென்றும்**
**துஞ்சுமனை நெடுநகர் வருதி**
**யஞ்சா யோவிவ டந்தைகை வேலே.**

*எ-து: "அஞ்சியச் சுறுத்தலும்"[1] என்பதால், வரையாது வந்தொழுகுந் தலைமகன் இரவுக்குறி வந்துழித் தோழி சொல்லியது.*

*இ-ள்: வயலின் கண்ணுள்ள சம்பங்கோழிச் சேவலானது ஒருவித ஒலியால் தனது பெடையை யழைக்குங் கழனியூரனே! நினக்கு ஒன்றனைக் கூறுவேன். எந்நாளும் மனைக் கண்ணுள்ளார் நித்திரை செய்யுமிராக் காலத்தின் வருகின்றாய், இவளது தந்தை கையின் வேலுக்கு அஞ்சாயோ! யாமஞ்சுகின்றோம். எ-று.*

*கம்புள் பயிர்ப் பெடையகவும் கழனியூரன் என்றது, தன் செயல் பிறர்க்குத் தோன்றா தொழுகுவான் என்பது.*

*பயிர்-ஒலிக்குறிப்பு (சைகை). மெய்ப்பாடு - அச்சம்; பயன் - வரைவுகடாதல்.* *(10)*

தோழி கூற்றுப் பத்து முற்றிற்று

---

1. தொல். பொ. கள, சூத். 23, வரி 12.

## 7. கிழத்தி கூற்றுப் பத்து

61. நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழ
நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉங்
கைவண் மத்தி கழாஅ ரன்ன
நல்லோர் நல்லோர் நாடி
வதுவை யயர விரும்புதி நீயே.

*எ-து: (இதற்கு 48ஆம் செய்யுள் விதி). வதுவை யயர்ந் தாளொரு பரத்தையைச் சின்னாளில் விட்டு மற்றொரு பரத்தையை வதுவையயர்ந்தா னென்பதறிந்த தலைமகள் அவன் மனைவயிற் புக்குழிப் புலந்தாளாக. இது மறைத்தற் கரிது என உடன்பட்டு 'இனி என்னிடத்து இவ்வாறு நிகழாது' என்றாற்கு அவள் சொல்லியது.*

*இ-ள்: நறிய பிஞ்சையுடைய மாவினது முற்றி மூக் கூழ்த்து விழும் இனியபழம் நிறைந்த நீரையுடைய பொய் கையிடத்துத் துடுமென்னு மோசையோடு விழுகின்ற கை வண்மையையுடைய மத்தியினுடைய கழாரென்னும் ஊரை யொத்த நல்ல பெண்களைத் தேடி வதுவை முடித்தற்கு நீ விரும்புவாய், எ-று.*

*மாமரம் - தலைவன்; பிஞ்சு - இளம்பரத்தையர்; பழம் -. முதிய பரத்தையர்; பொய்கை - பரத்தையர் சேரி; விழுதல் - தலைவனை நீங்குதல்; துடுமெனல் - அலர் உண்டாதல் எனக் கொள்க. வடி - வடு என்பது திருச்சிற்றம்பலக் கோவை "வடிக்கணிவை"[1] என்பதானுணர்க. "நறுவடிமாவின் பைந் துணருழக்கி"[2] என்பதனுரையானுமுணர்க. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடல் (1)*

62. இந்திர விழவிற் பூவி னன்ன
புன்றலைப் பேடை வரிநிழ லகவு
மிவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி
யெவ்வூர் நின்றன்று மகிழ்ந நின்றேரே.

இதுவுமது

---

1. திருச்சிற். செய். 32.

2. கலித். குறிஞ்சி, செய். 5, வரி 14.

*இ-ள்: இந்திரனது விழாக் காலத்திலுள்ள பூப்போலும் புல்லிய தலையையுடைய பறவைப்பேடு அழகிய மரநிழலிடத் திருந்து ஒலிக்குமிவ் வூரின்கணுள்ள பெண்களைக் கூட்டி விட்டு இனி எவ்வூரிடத்து நின்றது மகிழ்நனே! நினது தேர் தான். எ-று.*

*சிறப்புப் பொருந்திய நினது வீட்டிலுள்ள பெண்கள் பல ரும் வருந்தத் தொகுத்து என்க. மெய்ப்பாடும் பயனும் அவை.*

*(2)*

**63.** **பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்**
**வாளை நாளிரை பெறூஉ மூர**
**வெந்நலந் தொலைவ தாயினுந்**
**துன்னலம் பெருமபிறர்த் தோய்ந்த மார்பே.**

*எ-து: (இதற்கு 42ஆம் செய்யுள் விதி). பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனோடு தலைமகள் புலந்து கூறியது.*

*இ-ள்: பொய்கையைத் தனக்குப் படுக்கையிடமாகப் பொருந்திய புலால் மணங்கமழும் நீர் நாயானது, வாளை மீன் நாள்தோறுமிரையாகப் பெறுகின்றவூரனே! எம்மிடத் துள்ள எவ்வகையாகிய அழகு கெடினும் பரத்தையருடன் சேர்ந்த மார்பை யாமொருபோதுஞ் சேரமாட்டேம், எ-று.*

*பொய்கைப்பள்ளி..................மூர வென்றது, உயர்ந்த தன் மையை யுடையையாயிருந்துந் தகாதவற்றை விரும்பி நாடோ றுஞ் செல்லுமூரனே என்பது. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஊடல்.* *(3)*

**64.** **அலமர லாயமோ டமர்துணை தழீஇ**
**நலமிகு புதுப்புன லாடக் கண்டோ**
**ரொருவரு மிருவரு மல்லர்**
**பலரே தெய்யவெம் மறையா தீமே.**

*எ-து: "பெறற் கரும் பெரும் பொருள் முடித்தபின்"[1] என்னுஞ் சூத்திரத்து 'பிற'வாற் கொள்வது. தலைமகன் பரத்தையோடு புனலாடினா னென்பதறிந்த தலைமகள் அவன் மறைத்துழிச் சொல்லியது.*

---

1. சொல். பொ. கற். சூத். 9.

*இ-ள்: சுழன்று திரியுமாயத்தோடு பொருந்திய பெண்ணோடு கூடி நன்மை மிகுந்த புதிய புனலை நீயாடக் கண்டவர் சிலரன்று பலரே, ஆதலின் எமக்கு மறையாதி. எ-று. தெய்ய அசைநிலையிசைச் சொல். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஊடல். (4)*

65. கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல்
சுரும்புபசி களையும் பெரும்புன லூர
புதல்வனை யீன்றவென் மேனி
முயங்கன்மோ தெய்யநின் மார்புசிதைப் பதுவே.

எ–து: கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ
நளி யினிக்கிய விளிவரு நிலையும்[1]

*என்பதனால், ஆற்றாமையே வாயிலாகப் புகுந்த தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.*

*இ-ள்: கரும்பு நட்ட பாத்தியில் தானே தோன்றி வளர்ந்த ஆம்பலானது, வண்டினது பசியை நீக்குகின்ற பெரிய நீரையுடைய ஊரனே! புதல்வனைப் பெற்ற எனது மேனியை முயங்காதே; அம்முயக்கம் நினது மார்பினது அழகைச் சிதைப்பதாயிருக்கின்றது, எ-று.*

*கரும்புநடு பாத்தியிற் கலித்தவாம்பல் சுரும்பு பசிகளையும் பெரும் புனலூரவென்றது, தலைவியர்க்கென்று வரையறுக்கப்பட்ட நினது மார்பைத் தாமே வந்தடைந்து தலைவியராற் செய்யப்படும் விருந்தாற்றுதலைத் தாஞ் செய்யும் பரத்தையரையுடைய வூரனே என்பது. 'கலித்ததாமரை' யெனப்பாடங் கொண்டு இற்பரத்தையர்க் கென்று சமைக்கப்பட்ட வில்லின் கண்ணிருந்து யாமும் விருந்தோம்பு கின்றோ மென்றவாறாம்.*

*தெய்ய - அசை; மார்பு சிதைத்தலாவது தீம்பால் படுதல் முதலியன. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - ஊடல் (5)*

---

1. தொல். பொ. கற். சூத். 6, வரி. 8-10.

66. உடலினே னல்லேன் பொய்யா துரைமோ
யாரவண் மகிழ்ந தானே தேரொடு
தளர்நடைப் புதல்வனை யுள்ளிநின்
வளமனை வருதலும் வெளவி யோளே.

*எ-து: "அவனறிவாற்ற வறியுமாகலின்" என்னுஞ் (தொல். கற்பி. 6ஆம்) சூத்திரத்துப் "பல்வேறு நிலையினும்" என்ப தால், புதல்வனைப் பிரியாத தலைமகன் பிரிந்து புறத்துத் தங்கி வந்தானாக அவனோடு புலந்து தலைமகள் சொல்லி யது.*

*இ-ள்: நின் செயல் காரணமாகப் பகைத்தேனல்லேன்; பொய் சொல்லாது உண்மையை யுரை; மகிழ்ந! தளர்ந்த நடையையுடைய புதல்வனை நினைத்து நினது வளத்தையு டைய மனைக்குத் தேரொடும் வருதலைத் தடுத்தவள் யார் தான், எ-று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடல். (6)*

67. மடவ ளம்மநீ யினிக்கொண் டோளே
தன்னொடு நிகரா வென்னொடு நிகரிப்
பெருநலந் தருக்கு மென்ப விரிமலர்த்
தாதுண் வண்டினும் பலரே
யோதி யொண்ணுதல் பசப்பித் தோரே.

*எ-து: "காமக்கிழத்தியர் நலம் பாராட்டிய - தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும்" (கற்பியல் சூத். 6) என்ப தால், தலைநின்று ஒழுகப்படா நின்ற பரத்தை புறனுரைத் தாளெனக்கேட்ட தலைவி தலைமகன் வந்துழி அவடிறத் தாராய் நின்று ஒழுகும் வாயில்கள் கேட்பச் சொல்லியது.*

*இ-ள்: தலைவனே! நீ இப்பொழுது வரைந்து கொண் டவள் மிக மடவள், யாதனாலெனின், தன்னோடு ஒப்பா காத என்னையும் தன்னோடொப்பித்துத் தன் பெரிய நலத்தாலே மாறுபடுமென்று கூறுவர்; நீ தெளித்துப் பின் ஒளியையுடைய நுதலைப் பசப்பித்தவர்கள் வண்டு தாதை யுண்ட மலர்களினும் பார்க்க மிகப்பலர், இதனையறியாள் போலும், எ-று. மெய்ப்பாடு - நகை; பயன் - இகழ்தல். (7)*

68. கன்னி விடியற் கணைக்கா லாம்ப
றாமரை போல மலரு மூர
பேணா ளோநின் பெண்டே
யாந்தன் னடங்கவுந் தானடங் கலளே.

*எ-து: இதுவுமது. பரத்தை தான் தலைமகளைப் புறங் கூறிவைத்துத் தலைமகள் புறங்கூறினாளாகப் பிறர்க்குக் கூறினமை கேட்ட தலைவி தலை மகற்குச் சொல்லியது.*

*இ-ள்: இருள் முழுதுங் கெடாத விடியற்காலத்தே திரண்ட தண்டையுடைய ஆம்பல் தாமரையைப் போல மலர்ந்திருக்கின்ற ஊரனே! நினது பெண்ணானவள் இதனை விரும்பி யுட்கொள்ளாளோ, அது யாதெனின், நாம் அடங்க வேண்டுந் தன்னைப்போன்று அடங்குவுந் தான் அடங்கு கின்றாளில்லை, எ - று.*

*ஆம்பல் தாமரைபோல மலரு மூர என்றது, சிறிது காலம் நின்னுடன் கூடியதுகொண்டு நெடிது காலம் நின் னுடன் இல்லறத்தோடு கூடி வாழும் அவர்போன்று மதித் திருக்குமூரன் என்பது. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - இகழ் தல் (8)*

69. கண்டனெ மல்லமோ மகிழ்நநின் பெண்டே
பலராடு பெருந்துறை மலரொடு வந்த
தண்புனல் வண்ட லுய்த்தென
வுண்கண் சிவப்ப வழுதுநின் றோளே.

*எ-து: (இதற்கு 66ஆவது செய்யுளிற் கூறிய விதியாற் கொள்வது) தலைமகன், பெதும்பைப் பருவத்தாள் ஒரு பரத்தையைக் களவின் மணந்து ஒழுகுகின்றதனை அறிந்த தலைமகள் தனக்கில்லையென்று அவன் மறைத்துழிச் சொல்லியது.*

*இ-ள்: மகிழ்நனே! நின் பெண்டைக் காணாதிருந்தே மல்லேம்; அவள் யார் என்றால், பலரும் வந்து நீராடுகின்ற பெருந்துறைக்கண் மலரோடு பெருகி வந்த தண்ணிய நீர் வண்டல்மனையைச் சிதைத்ததாக மையூட்டிய கண்கள் சிவப்படைய அழுது நின்றாள். எ-று.*

*உய்த்தென அழுது நின்றோள் என்றாள் அவன் பெண்டு பேதைப் பருவத்தாள் என்பது குறிப்பித்தற்கு. இக் கருத்துப் பற்றி மேல்வரும் 125ஆம் செய்யுளையும் நோக்குக.*

*மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடல்.* *(9)*

70. பழனப் பன்மீ னருந்த நாரை
கழனி மருதின் சென்னிச் சேக்கு
மாநீர்ப் பொய்கை யாண ரூர
தூயர் நறியர்நின் பெண்டிர்
பேஎ யனையமியாம் செய்பயந் தனமே.

*எ-து: (இதற்கு 48ஆம் செய்யுள் விதி). பரத்தையரோடு பொழுதுபோக்கி நெடிது துய்த்து வந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது.*

*இ-ள்: வயலிடத்துள்ள பலவாய மீன்களையுண்ணு தற்கு நாரையானது கழனியிடத்துள்ள மருத மரத்தின் கண்ணே தங்குகின்ற நீர் பொருந்திய பெரிய பொய்கையை யுடைய புது வருவாயையுடைய ஊரனே! நினது பெண்டி ரோவெனின் அழுக்கற்றவரும் நல்ல வாசனையையுடைய ருமாவர்; யாமோ பேயையொத்தேம், அன்றிக் குழந்தை யையும் பெற்றுக் கொண்டேம்; ஆனதால் நின்றலையளி யெம் மாட்டு இவ்வளவிலமையும், எ-று.*

*பழனப்பன்மீன்.......... யாணரூரவென்றது, சேரிக்கண் ணுள்ள பரத்தையரைச் சேர வேண்டுங் கருத்தோடும் இல் லின்கண் நம்மோடு தங்கும் அதற்கு வேண்டுந் துணையாள ரையுமுடைய வூரன் என்பது. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடல்.* *(10)*

கிழத்தி கூற்றுப் பத்து முற்றிற்று

---

## 8. புனலாட்டுப் பத்து

71. சூதார் குறுந்தொடிச் சூரமை நுடக்கத்து
நின்வெங் காதலி தழீஇ நெருநை
யாடினை யென்ப புனலே யலரே
மறைத்த லொல்லுமோ மகிழ்ந
புதைத்த லொல்லுமோ ஞாயிற்ற தொளியே.

*எ-து:* "வாயிற்கிளவி வெளிப்படக்கிளத்த - றாவின் றுரிய தத்தங்கூற்றே"[1] - என்பதால், பரத்தையரோடு புனலாடி னானெனக் கேட்டுப் புலந்த தலைமகள் தலைமகன் அத னையில்லையென்று மறைத்துழிச் சொல்லியது.

*இ-ள்:* சூதார்ந்த குறிய தொடியணிந்த கையையும் கண் டோரஞ்சும் அசைந்த நடையையுமுடைய நினது விருப்பத் தையுடைய பரத்தையுடனே கூடி முன்னை நாளிற் புனலை யாடினாயென்று கூறுவர், அவ்வலர் நின்னால் மறைத்தல் கூடுமோ மகிழ்நனே! சூரியனதொளியை மறைத்தல் கூடா தது போல, எ-று.

மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடறீர்தல் (1)

72. வயன்மல ராம்பற் கயிலமை நுடங்குதழைத்
திதலை யல்குற் றுயல்வருங் கூந்தற்
குவளை யுண்க ணேஎர் மெல்லியன்
மலரார் மலிர்நிறை வந்தெனப்
புனலாடு புணர்துணை யாயின ளெமக்கே.

*எ-து:* "உறலருங் குண்மையி னூடன் மிகுத்தோளைப் பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற் கண்ணும்"[2]

என்பதால், தலைமகள் புலவி நீக்கித் தன்னோடு புதுப் புனல் ஆட வேண்டிய தலைமகன் களவுக் காலத்துப் புன லாட்டு நிகழ்ந்ததனை அவள் கேட்பத் தோழிக்குச் சொல் லியது.

---

1. தொல். பொ. பொருளி. சூத். 47.
2. தொல். பொ. கற். சூத் 5, 35-36.

இ-ள்: வயலிடத்தலருகின்ற ஆம்பற்பூப் போன்ற மூட்டு வாயுடைய ஆபரணத்தையும் அசைகின்ற தழையையணிந்த வல்குலையும் அசைகின்ற கூந்தலையுங் குவளைப் பூப்போலு மையுண்ட கண்ணையு மழகையுமுடைய இம்மெல்லியல், அக்காலத்தில் பெருக்கினையுடைய பெரு வெள்ளம் வர, அதனிடத்து ஆடுகின்றவர்களோடு கூடிய நாயகிகளைப் போன்று எமக்கு மிருந்தாள், எ-று.

மெய்ப்பாடு - அவலம்; பயன் - ஊடறீர்த்தல். (2)

73. வண்ண வொண்டழை நுடங்க வாலிழை
யொண்ணுத லரிவை பண்ணை பாய்ந்தெனக்
கண்ணறுங் குவளை நாறித்
தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே.

இதுவுமது

இ-ள்: அழகையுடைய ஒள்ளிய தழையசைய ஒளியு டைய ஆபரணமணிந்த ஒள்ளிய நெற்றியையுடைய பெண் ணானவள் அக்காலத்தொருகால் விளையாட்டாகப் பாய, தேன் பொருந்திய நல்ல குவளை மணத்தையுடைத்தாகக் குளிர்ச்சியை யுடைத்தாயிருந்தது நமக்கும் பெருந் துறைக்க ண்ணுள்ள நீரானது, எ-று.

மெய்ப்பாடும் பயனும் அவை. (3)

74. விசும்பிழி தோகைச் சீர்போன் றிசினே
பசும்பொ னவிரிழை பைய நிழற்றக்
கரைசேர் மருத மேறிப்
பண்ணை பாய்வோ டண்ணறுங் கதுப்பே.

இதுவுமது

இ-ள்: விசும்பினின் வீழ்கின்ற மயிலினது சிறப்புப் போலாய் இருந்தது, பசிய பொன்னாலாய விளங்குகின்ற ஆபரணமானது மெல்லவாய நிழலைச் செய்யக் கரைக் கணுள்ள மருத மரத்திலேறி விளையாட்டாகப் பாய்கின்ற வளது குளிர்ச்சியைத் தரும் வாசனையையுடைய கூந்தலா னது, எ-று.

மெய்ப்பாடும் பயனும் அவை. (4)

75. பலரிவ ணொவ்வாய் மகிழ்ந வதனா
லலர்தொடங் கின்றா லூரே மலர
தொன்னிலை மருதத்துப் பெருந்துறை
நின்னோ டாடின டண்புன லதுவே.

*எ-து: "புறம்படுவிளையாட்டுப் புல்லிய புகற்சியும்"[1] என்பதால், பரத்தையரோடு புனலாடி வந்த தலைமகன் அதனை மறைத்துக் கூறியவழித் தோழி கூறியது.*

*இ-ள்: மகிழ்ந! நின்னோடு, பழைய நிலையுடைய மலர் பொருந்திய மருதத் துறைக்கண்ணேயுள்ள தண்ணிய புனலிடத்து நீராடினவள் பலர்; ஊராரும் அலர் கூறத் தொடங்காநின்றார். அதனால் நீ நமக்குப் பொருந்துதலுடையையல்லை, எ-று.*

*மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல்.* *(5)*

76. பைஞ்சாய்க் கூந்தற் பசுமலர்ச் சுணங்கிற்
றண்புன லாடித்தன் னலமேம் பட்டன
ளொண்டொடி மடவர னின்னோ
டந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே.

*இதுவுமது*

*இ-ள்: பஞ்சாய்ப் போலுங் கூந்தலையும் பசிய மலர் போலுஞ் சுணங்கையுமுடைய ஒள்ளிய தொடியணிந்த பெண்ணானவள், நின்னோடு தண்ணிய புனலாடி அமர மாதர்க்குத் தெய்வமும்போலாய் அழகு பெருமையடையப் பெற்றாள், எ-று.*

*மெய்ப்பாடும் பயனும் அவை.* *(6)*

77. அம்ம வாழியோ மகிழ்நநின் மொழிவல்
பேரூ ரலரெழ நீரலைக் கலங்கி
நின்னொடு தண்புன லாடுது
மெம்மொடு சென்மோ செல்லனின் மனையே.

---

1. தொல். பொ. கற். சூத் 9, 11.

*எ-து: இதற்கு விதி "எண்ணிய பண்ணை"[1] என்பதாற் கொள்வது.*

*முன்னொரு ஞான்று தலைவியோடு புனலாடினானெனக் கேட்டு இவனுடனினியாடேனென வுட்கொண்ட பரத்தை, 'புதுப்புனலாடப் போது' என்ற தலை மகற்குச் சொல்லியது.*

*இ-ள்: மகிழ்நனே, நினக்கு ஒன்று கூறுவேன். பெரிய வூரிடத்தே யலருண்டாக நீரிடத்து அலைபோலக் கலக்க முற்று நின்னோடு தண்ணிய புனலாடுவேம், நின் மனையிடத்துச் செல்லாயாய் எம்மோடு செல்வாயாக, எ-று.*

*அம்ம வாழியோ - முன்னிலையசை மெய்ப்பாடு பெருமிதம்; பயன் - ஊடல்.* *(7)*

78. கதிரிலை நெடுவேற் கடுமான் கிள்ளி
மதில்கொல் யானையிற் கதழ்புநெறி வந்த
சிறையழி புதுப்புன லாடுக
மெம்மொடு கொண்மோவெந் தோள்புரை புணையே.

*இதுவுமது*

*இ-ள்: ஒளியையுடைய தகட்டு வடிவுடைய நீண்ட வேலையுடைய கடுமான் கிள்ளியது மதிலைக் கெடுக்கும் யானையைப் போல வழிக்கொண்டு விரைந்து வந்த கரையை யழிக்கும் புதுப்புனலிடத்து ஆடுதற்கு எமது தோற் போலுந் தெப்பத்தை யெம்மோடு பொருந்துவாயாக, எ-று.*

*மெய்ப்பாடும் பயனும் அவை.* *(8)*

79. புதுப்புன லாடி யமர்த்த கண்ணள்
யார்மக ளிவளெனப் பற்றிய மகிழ்ந
யார்மக ளாயினு மறியாய்
நீயார் மகளையெம் பற்றி யோயே.

*எ-து: 'புல்லுதல் மயக்கும்' என்னுஞ் (கற்பியல் 10ஆம்) சூத்திரத்துப் 'பிற'வாற் கொள்வது.*

---

1. தொல். பொ. கற். சூத் 10, 13.

தன்னொடு கூடாது தனித்துப் புனலாடுகின்றானெனக் கேட்டுத் தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை தானுந் தனியே போய்ப் புனலாடினாளாக. அவளை ஊடறீர்த்தற் பொருட்டாகத் தலைமகன் சென்று தான் அறியான்போல நகையாடிக் கூறிக் கையைப் பற்றியவழி அவள் தோழி கூறியது.

இ-ள்: புதுப்புனலாடிப் போர் செய்தலையுடை கண்களையுடைய இவள் யார் மகளென்று வினாவிக் கையைப் பிடித்த மகிழ்நனே! நீ யாரது மகளானாலும் அறியமாட்டாய், எம்மைப் பற்றிய நீ யார் மகனோ? சொல்லுவாயாக, எ-று.

அமர்த்த கண்ணள் என்பதை 'அமருண்கண்'[1] என்னுங் கலித்தொகைச் செய்யுளுரையானுமறிக. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடறீர்தல் (9)

80. புலக்குவ மல்லேம் பொய்யா துரைமோ
நலத்தகு மகளிர்க்குத் தோட்டுணை யாகித்
தலைப்பெயற் செம்புன லாடித்
தவநனி சிவந்தன மகிழ்நநின் கண்ணே.

எ-து: தன்னையொழியப் புதுப்புனலாடித் தாழ்த்து வந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது.

"அவளறி வாற்ற வறியும்" என்னும் (கற்பியல் 6ஆம்) சூத்திரத்துப் "பல்வேறு நிலை"யாற் கொள்வது.

இ-ள்: யாம் நின்னோடு புலக்கின்றோமல்லேம், பொய்த் தலின்றிச் சொல்லுவாயாக; அழகு தகும் பெண்கள் இன்ப முறுதற்கு அவர் தோள்களுக்குத் துணையாய் முதற் பெய லால் வருகின்ற சிவந்த புனலின்கண் ஆடி, மகிழ்நனே! நினது கண்கள் மிகுதியுஞ் சிவப்படைந்தன, எ-று.

தவநனி என்பது "ஒரு பொரு ளிருசொற் பிரிவில வரையார்"[2] என்னும் விதி. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடல் (10)

புனலாட்டுப் பத்து முற்றிற்று

---

1. முல்லைக்கலி செய்யு. 13, 2.
2. தொல். சொல். எச்சவியல், சூத் 64.

## 9. புலவி விராய பத்து

81. குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை
யரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டு
மலரணி வாயிற் பொய்கை யூரநீ
யென்னை நயந்தனெ னென்றிநின்
மனையோள் கேட்கின் வருந்துவள் பெரிதே.

*எ-து: "புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும்" (கற்பி. 10 ஆம் சூத்) என்பதால், தன்னைக் கொடுமை கூறினாள் தலைமகள் என்பது கேட்ட பரத்தை தலைமகன் வந்து தன்மேலன் புடைமை கூறினானாக, அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.*

*இ-ள்: நாரையா லுடைத்துண்ணப்பட்டு எஞ்சிய வெள்ளிய வயிற்றையுடைய யாமையது தசையை அரித்தெழு மோசையைப் பொருந்திய பறையையுடைய வினையாளர் தினந்தோறும் உணவிற்குச் சேர்க்கும் மலரானழகுபெறும் வழியமைந்த பொய்கையூரனே! நின்போலப் பிறர் யாரையும் விரும்பேனென்கின்றாய்; ஆயின் இதனை நினது மனைவியானவள் கேட்பாளாயின் மிகவும் வருந்துவாளன்றே, எ-று.*

*குருகுடைத்துண்ட யாமை மிச்சிலை வினைஞர் உணவிற்குச் சேர்க்குமூரன் என்றது, நம்மால் நுகர்ந்து கழித்த நினது மார்பையே அவள் நுகருந்தன்மையையுடைய ளெனத் தலைவியைப் பழித்தவாறு.*

*மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஊடல்.* *(1)*

82. வெகுண்டன ளென்ப பாணநின் றலைமகண்
மகிழ்நன் மார்பி னவிழிணர் நறுந்தார்த்
தாதுண் பறவை வந்தெம்
போதார் கூந்த லிருந்தன வெனவே.

*எ-து: 11ஆம் செய்யுள் விதி. மனைவயிற் புகுந்த பாணற்குத் தலைமகன் கேட்குமாற்றால் தலைமகள் சொல்லியது.*

இ-ள்: பாணனே! நினது தலைவியானவள் ஊரனது மார்பிற் பொருந்திய விரிந்த இணர்போலும் மணந்தங்கிய மாலையின் கண்ணுள்ள தாதையுண்கின்ற வண்டானது வந்து எமது பூக்கள் நிறைந்த கூந்தலில் தங்கினவென்று கூறும்போது கோபமடைந்தாளென்று கூறுவர். அதுவும் பொறாதாள் நீ ஈண்டு வருதல் பொறாள், ஆயிற் கடிது செல்வாய். எ-று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல். (2)

83. மணந்தனை யருளா யாயினும் பைபயத்
தணந்தனை யாகி யுய்ம்மோ நும்மூ
ரொண்டொடி முன்கை யாயமுந்
தண்டுறை யூரன் பெண்டெனப் படற்கே.

எ-து: (இதற்கு 48ஆம் செய்யுள் விதி) வரைந்த அணுமைக்கண்ணே தலைமகற்குப் புறத்தொழுக்க முண்டாகிய வழி அதனையறிந்த தலைவி அவனோடு புலந்து சொல்லியது.

இ-ள்: எம்மை வரைந்தும் எமக்கு அருளைச் செய்யாயினும் மெல்ல மெல்லப் பிரிந்தனையாகியுய்வாய்; எதற்கெனின் நுமது ஊரிலுள்ள வொள்ளிய தொடியணிந்த முன் கையையுடைய மகளிர் கூட்டமெல்லாங் குளிர்ந்த துறையையுடைய ஊரனது பெண்டென்று பிறரால் கூறப் படுதற்கு, எ-று. மெய்ப்பாடு - அவலம்; பயன் - புலத்தல். (3)

84. செவியிற் கேட்பினுஞ் சொல்லிறந்து வெகுள்வோள்
கண்ணிற் காணி னென்னா குவள்கொ
னறுவீ யைம்பான் மகளி ராடுந்
தைஇத் தண்கயம் போலப்
பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே.

எ-து: "நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக்-காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும்"[1] என்பதனால்,

1. தொல். பொ. கற். சூத் 9, வரி 27-28.

*பரத்தையர் மனைக்கட்டங்கிப் புணர்ச்சிக்குறியோடு வாயில் வேண்டி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: நறுமலரை யணிந்த ஐந்து வகையாக முடிக்கப் படும் கூந்தலினையுடைய மகளிர் தைத்திங்களில் விரும்பி யாடுகின்ற குளிர்ந்த தடாகத்தைப் போல, பலர் தோய்ந்து அனுபவிக்கின்ற பரத்தைமையையுடைய நின்னுடைய மார்பை இத்தன்மைத்தென்று பிறர் சொல்லக் கேட்பினும் அளவைக் கடந்து வெகுள்பவள் தான் நேரே காண்பாளா யின் எவ்வாறாவாளோ! ஆதலின் இதனைத் தவிர்வாயாக, எ-று.*

*தைநீராடுதல் "நீ-தையினீராடிய தவந்தலைப்படுவா யோ"[1] என்னுங் கலித்தொகைச் செய்யுளுரையானுணர்க. பரத்தை-பரத்தைமை என்பதை "தன்வயினுரிமையு மவன் வயிற் பரத்தையும்"[2] என்னும் களவியற் சூத்திரத்தானுணர்க. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - பரத்தைமை நீக்குதல். (4)*

85. வெண்ணுதற் கம்பு ளரிக்குரற் பேடை
தண்ணறும் பழனத்துக் கிளையோ டாலு
மறுவில் யாணர் மலிகே ழூரநீ
சிறுவரி னினைய செய்தி
நகாரோ பெருமநிற் கண்டிசி னோரே.

*எ-து: "தாய்போற் கழறித் தழீஇக் கோட லாய்மனைக் கிழத்திக்குமுரித்தென மொழிப"[3] என்பதால், தலைமகன் பரத்தையர்மேற் காதல்கூர்ந்து நெடித்துச் செல்வுழி மனை யகம் புகுந்தானாகத் தலைவி கூறியது.*

*இ-ள்: வெண்ணிறம் பொருந்திய நெற்றியையுடைய சம்பங்கோழியது இனிய குரலையுடைய பேடு, குளிர்ந்த நறிய வயலிடத்துத் தனது கூட்டத்தோடு மொலிக்கின்ற குறை வின்றி நிறைந்த புது வருவாய் பொருந்துதலுடைய வூரனே!*

---

1. குறிஞ்சிக்கலி, செய் 23, வரி 12-13.
2. தொல். களவிய சூத் 20, வரி 35.
3. தொல். பொ. கற். சூத் 32.

*நீ சிறுவரைப் போன்று தகாத செயலைச் செய்கின்றாய், பெருமா! நின்னைக் கண்டோர் நகுவாரன்றே, இவ்வாறு செய்யற்க, எ-று.*

*கம்புட் பேடை சேவலொழியக் கிளையோடாலும் என்றது கிளையுடனே வாழ்கின்ற வெமக்கு நின்னின் நீங்கிய மெலிவு உளதாகக் கூறுகின்றேமல்லோம். நின் குலத் தொழுக்கத்திற்குத் தகாதெனக் கூறுகின்றோம். மெய்ப்பாடு - வெகுளி; பயன் - பரத்தைமை நீக்குதல். (5)*

**86. வெண்டலைக் குருகின் மென்பறை விளிக்குர**
**னீள்வய னண்ணி யிமிழு மூர**
**வெம்மிவ ணல்குத லரிது**
**நும்மனை மடந்தையொடு தலைப்பெய் தீமே.**

*எ-து: "புல்லுதல் மயக்கும் புலவிக்கண்ணும்" (கற்பி. 10 ஆம் சூத்.) என்பதனால், புதல்வன் கூறிய மாற்றம் தலைமகட்குப் பாங்கராயினார் கூறக் கேட்டா னென்பதறிந்த பரத்தை அதற்குப் புலந்து தலைமகற்குச் சொல்லியது.*

*இ-ள்: வெண்மை பொருந்திய தலையையுடைய குருகினது பார்ப்பின் அழைக்குங்குரல் நீண்ட வயலிடத்துப் பொருந்தி ஒலிக்கின்ற ஊரனே! இவ்விடத்தே எம்மைப் பாதுகாத்தலரிது. நும்மனையாகிய மடந்தையோடு சேர்வாயாக, எ-று.*

*குருகின் மென்பறை விளிக்குரல் வயல் நண்ணியிமிழு மூர என்றது, நும் புதல்வன் கூறி விடுத்தல் நீ கேட்டமை சேரியெல்லாமறிந்தது. நின்னால் மறைத்தலரிது என்பதாம். மென்பறையென்பது 'ஆகுபெயர்; மெல்லிதாகப் பறத்தலை உடையது. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - புலத்தல். (6)*

**87. பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவலர்**
**கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்**
**யாண ரூரநின் மனையோள்**
**யாரையும் புலக்கு மெம்மைமற் றெவனோ.**

எ-து: இதுவுமது. தலைமகள் தன்னைப் புறங்கூறினா ளெனக் கேட்ட காதற்பரத்தை அவட்குப் பாங்காயினார் கேட்பத் தலைமகனோடு புலந்து சொல்லியது.

இ-ள்: கிலுகிலுப்பைப் பூமாலையையுடைய பல பசுக் களையுடைய இடையர் கரும்பைக் குறுந்தடியாகக் கொண்டு எறிந்து மாங்கனியை வீழ்த்துகின்ற புது வருவாயையுடைய ஊரனே! நினது மனைவியானவள் எவர்களையும் புலப் பாள். எம்மை வேறியாது செய்வாள், எ-று.

கோவலர் கரும்பு குணிலாமாங்கனியுதிர்க்கும் என்றது, யாங்கள் பழித்தேமென்று அவட்கு இனிய சொற்கூறி அவள் எங்களைப் பழித்துக்கூறுஞ் சொற்களை நினக்கு இனியவாகப் பெறுவாய் என்பது. மெய்ப்பாடும் பயனும் அவை. (7)

88. வண்டுறை நயவரும் வளமலர்ப் பொய்கைத்
தண்டுறை யூரனை யெவ்வை யெம்வயின்
வருதல் வேண்டுது மென்ப
தொல்லேம் போல்யா மதுவேண் டுதுமே.

எ-து: இதுவுமது. தலைமகனை நயப்பித்துக் கொள்கை யில் விருப்பில்லாதாள்போல அவ்வாறு கோடலையே விரும்புவாள். அது தனக்கு முடியாதெனத் தலைமகள் புற னுரைத்தாளெனக் கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயி னார்க்குச் சொல்லியது.

இ-ள்: வள்ளிய துறைகளின்கண்ணே எல்லாரும் கொள் ளும் வண்ணம் நயந்து பூக்கின்ற மலர்களையுடைய பொய் கைத் தண்டுறை யூரனை எவ்வையாயினாள் எம்மிடத்து அவன் வருதலை யாம் விரும்புகின்றோம் என்று கூறுகின் றாளென்பர். இவ்வாறு எம்மைக் கூறுதல் தவிராளாயின், அத்தன்மையையுடையேம் போலாய் அதனை முடியச் செய்து விடுகின்றோம், எ-று

வண்டுறை நயவரும் வளமலர்ப் பொய்கைத் தண்டுறை யூரனென்றது, மகளிரெல்லார்க்கும் பொதுப்பட்டிருக்கு மூரனென்பது. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - இகழ்தல் (8)

89. அம்ம வாழி பாண வெவ்வைக்
கெவன்பெரி தளிக்கு மென்ப பழனத்து
வண்டுதா தூது மூரன்
பெண்டென விரும்பின் றவடன் பண்பே.

எ-து: தலைமகன் தலைமகளைப் போற்றி யொழுகா நின்றானென்பது கேட்ட காதற்பரத்தை அவன் பாணனுக்குச் சொல்லுவாளாய் அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

இ-ள்: பாணனே வாழ்வாயாக; சோலைக் கண்ணுள்ள பூந்தாதுகளை வண்டுகளுண்ணும் ஊரன் எம் தங்கைக்கு மிக அன்பு செய்தொழுகுவானென்பர்; அவளை விரும்பத் தக்காளென்று விரும்பியது யாதானெனின் அவள் குண மல்லது பிறிதில்லை, எ-று.

வண்டு தாதையுண்ணல் கலித்தொகை "கதுப்பினுள ரும் பவிழ் நறுமுல்லை பாய்ந்தூதி" என்பதனுரையானுணர்க. (கலித்தொகை, செய்யுள் 66.) அம்ம - முன்னிலையசை.

பழனத்து வண்டு தாதூது மூரன் என்றது, மகளிரெல்லார்க்கும் பொதுப்பட்டிருக்குந் தன்மை யுடையானென்பது. வேண்டென விரும்பின்று என்றும் பாடம். மெய்ப்பாடும் பயனும் அவை. (9)

90. மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண் டனகொல்
வண்டின் மாண்குண மகிழ்நன்கொண் டான்கொ
லன்ன தாகலு மறியா
ளெம்மொடு புலக்குமவன் புதல்வன் றாயே.

எ-து: (இதற்கு 37 ஆம் செய்யுள் விதி). தலைமகன் தன் மனைக்கட் செல்லாமல் தான் விலக்குகின்றாளாகத் தலைமகள் கூறினாளென்பது கேட்ட காதற் பரத்தை தலைமகன் கேட்குமாற்றால் அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

இ-ள்: மகிழ்நனது மாட்சிமையுடைய குணத்தை வண்டு வாங்கிக் கொண்டன கொல்லோ! அன்றி வண்டினது மாட்சிமை பொருந்திய குணத்தை மகிழ்நன் வாங்கிக் கொண்டான் கொல்லோ! அது ஆகலையுமறியாளாய ஊரனுடைய மனைவி எம்மோடு புலப்பாள். எ-று

வண்டேயனையராடவர் பூவேயனையர் மகளிர் என்பதுவுமிது நோக்கி யெழுந்தபோலும். புதல்வன் தாயென்பது ஒரு தலைவனுடைய மனைவியர் பலருள் ஒருவரை யொருவர் கூறும் வழக்கு. மெய்ப்பாடு - நகை; பயன் - இகழ்தல். (10)

புலவி விராய பத்து முற்றிற்று

---

## 10. எருமைப் பத்து

91. நெறிமருப் பெருமை நீல விரும்போத்து
வெறிமலர்ப் பொய்கை யாம்பன் மயக்குங்
கழனி யூரன் மகளிவள்
பழன வெதிரின் கொடிப்பிணை யலளே.

எ-து: "பேதமை யூட்டலும்"[1] என்பதால், குறை வேண்டிப் பின்னின்று வந்த தலைமகற்குத் தோழி, 'இவள் இளையள் விளைவிலள்' எனச் சேட்படுத்தது.

இ-ள்: திருகிய கொம்பையுடைய நீலம் போலுங் கரிதாய எருமைக் கடா பொய்கைக் கண்ணுள்ள நறு நாற்றமமைந்த மலரையுடைய வாம்பலைக் கெடுக்கும் கழனியூரன் அவனுடைய மகளாய இவளுமோ கரும்பின் பூவாற் செய்யப்பட்ட நெடிய மாலையையுடையாள், எ-று.

எருமைப்போத்து ஆம்பல் மயக்குமூரன் என்றது, நல்ல தன்மையுடையவற்றையும் அதனை ஆராயாது கெடுப்போர் வாழுமூரென்றும்; பழன வெதிரின் கொடிப்பிணையவள்

1. தொ. பொ.கள., சூத். 23, வரி.10.

என்றதால், அழகும் மணமுமுடைய பூக்கள் பலவுளவாகவும் அவையில்லாத கருப்பம் பூவாலளவின்றிக் கட்டிய மாலையை யணிந்தவள் என்றுங் கூறியவாறு. இவ்வாறாகலின் நினக்கு ஈண்டு வருதல் பொருந்தாதெனச் சேட்படுத்தது. "பெற்றமெருமை புலிமரை புல்வாய் - மற்றிவையெல்லாம் போத்தெனப் படுமே"[1] என்பதால் எருமை யாணிற்குப் போத்துக் கொள்ளப்பட்டது. பழனை வெதிர்-கரும்பு; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைதல். (1)

**92.** **கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றாக்**
**காதற் குழவிக் கூறுமுலை மடுக்கு**
**நுந்தை நும்மூர் வருது**
**மொண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே.**

எ-து: "அவட்பெற்று மலியினும்"[2] என்பதால், நினக்கு வரைந்து தருதற்குக் குறை நின் தமர் அங்கு வந்து குறை கூறாமையே யெனத் தோழி கூறினாளாக, தலைமகன் முக நோக்கி இவள் குறிப்பினாற் கூறினாள் என்பதறிந்த தலைமகன் 'வரைவுமாட்சிமைப் படின் நானே வருவல், எனத் தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: கரிதாய கோட்டைப் பொருந்திய செங்கண்ணையுடைய வீன்றணிய வெருமையாவானது தனது விருப்பம் பொருந்திய கன்றுக்குப் பாலூறிச் சொரியும் முலையையுண்பிக்கும் உன் பிதாவினுடைய நுமதூரினிடத்து ஒள்ளிய தொடியை யணிந்த பெண்ணே! வரைவு மாட்சிமைப் படுமாயின் நான் விரைய வருவேன்', எ-று.

எருமைப்புனிற்றாக் குழவிக் கூறுமுலை மடுக்குமென்றது, நுமக்கோர் குறைவின்றித் தலையளிப்பல் எனத் தலைமகன் தலைமை தோற்றக் கூறியவாறு. "கிழவோற்காயி னுரனொடு கிளக்கு" மென்பது சூத்திரமாகலின் (தொல். உவம. சூத். 27).

1. தொ. பொ.மரபி., சூத். 41.
2. தொ. பொ.கள., சூத். 12.

"ஆவுமெருமையுமவை சொலப்படுமே"[1] என்பதனால் எருமைக்குக் குழவியென்னும் பெயர் கொள்ளப்பட்டது. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - மகிழ் வித்தல் (2)

93. எருமை நல்லேற்றின மேய லருந்தெனப்
பகுமோ ரோடமோ டாம்ப லொல்லா
செய்த வினைய மன்ற பல்பொழிற்
றாதுண வெறுக்கைய வாகியிவள்
போதவிழ் முச்சி யூதும் வண்டே.

*எ-து: "ஐயச்செய்கை தாய்கெதிர் மறுத்துப் பொய்யெனமாற்றி மெய்வழிக் கொடுப்பினும்"*[2] *என்பதால், முயக்கம் பெற்றவழிப் பிறந்த வெறி நாற்றத்தாற் பண்டையள வன்றி வண்டுகள் மொய்த்தனவாக, இதற்குக் காரணமென்? என்று வினாவிய செவிலிக்குக் கூறுவாள் போன்று தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறியது.*

*இ-ள்: எருமை நல்லேற்றினமானவை மேயலாகிய உணவென்று பசுமோரோடமோடு ஆம்பலை அலர் முதலிய இல்லாவாய்க் கெடுத்த நெருங்கிய பல சோலையிலுள்ள தாதையுண்ணும் விருப்பத்தை விட்டனவாய், இவளுடைய விரிந்த போதினையுடைய உச்சியில் வந்து படிந்து உண்ணா நிற்கும் வண்டுகள். எ-று. "எருமையு மரையும் பெற்றமுமன்ன" என்பது சூத்திரமாகலின், எருமைக்கு ஏறு கொள்ளப்பட்டது (மரபியல், சூத். 39.) மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவு கடாவல்.* *(3)*

94. மள்ள ரன்ன தடங்கோட் டெருமை
மகளிரன்ன துணையொடு வதியு
நிழன்முதி ரிலஞ்சிப் பழனத் ததுவே
கழனித் தாமரை மலரும்
கவின்பெறு சுடர்நுத றந்தை யூரே.

---

1. தொ. பொ.மர., சூத். 20.
2. தொ. பொ.களவி., சூத். 23, வரி 37-38.

*எ-து: "ஆற்றிடையுறுதலும்"[1] என்பதை இரட்டுற மொழிதலென்னுமுத்தியால் வரைவிடை வைத்துப் பிரிந்தான் கூறுவனவும் கொள்க. அது போகின்றான் கூறுவனவும் மீண்டவன் பாங்கற்குக் கூறுவனவுமாம். இது மீழ்கின்றான் சொல்லியது.*

*இ-ள்: மள்ளரையொத்த வளைந்த கொம்பையுடைய எருமையானது, அவர் மகளிரையொத்த நாகெருமையோடு தங்குகின்ற நிழல் நிறைந்த பொய்கையையுடைய வயல் களையுடையது. கழனியிடத்தே தாமரைகளலருகின்ற அழகு பெற்ற ஒளி பொருந்திய நுதலையுடையாளது தந்தையினதூர், எ-று.*

*எருமை துணையொடு வதியுமென்றது, வரைந் தெய்தியபின் தலைமகளோடு தானொழுகும் இன்ப ஒழுக்கத்தினை நினைந்து கூறியது. கழனித் தாமரை மலரும் என்றது, அவ்விடத்துத் தன்னைக் கண்டு மகிழ்வார் முகமலர்ச்சி கூறியவாறு. ஏகாரம் - பிரிநிலை. அவரென்னும் சுட்டு வருவித்துரைக்கப்பட்டது. தடங்கோடு வளைந்த கோடு. "தடவுவளைவாகும்" என்பது சூத்திரம். வினையுவமை.[2] மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல். (4)*

**95.** கருங்கோட் டெருமை கயிறுபரிந் தசைஇ
நெடுங்கதிர் நெல்லி ணான்மேய லாரும்
புனன்முற் றூரன் பகலும்
படர்மலி யருநோய் செய்தன னெமக்கே.

*எ-து: (11ஆம் செய்யுள் விதியால்) உண்டிக் காலத்து மனைக்கண் வருதலுஞ் சுருங்கிப் பரத்தையிடத்தனாய்த் தலைமகன் ஒழுகியவழி அவற்கு வாயிலாய் வந்தார்க்குத் தலைமகள் சொல்லியது.*

*இ-ள்: கருங்கோட்டெருமையானது, கட்டிய கயிற்றை யறுத்துச் சென்று நீண்ட கதிரையுடைய நெல்லாகிய நாண் மேயலை உண்ணுகின்ற நீர்நிறைந்தவூரன், எமக்கு*

1. தொல். களவி., சூத் .12.
2. தொ. உவம., சூத். 1, 12.

இராக் காலத்திலன்றிப் பகற்காலத்திலும் துன்பம் நிறைந்த பிறரால் நீக்குதற்கரிய நோயைச் செய்தான், எ-று.

எருமை கயிற்றைப் பரிந்து போய் நாண் மேயலாருமென்றது, தன்னைக் கழறிக் கூறுவார்க்கும் அடங்காது புறத்தொழுக்கம் விரும்புவான் என்பதாம். பகலும் என்னும் உம்மை எச்சம்; ஏகாரம் பிரிநிலை; மெய்யப்பாடு - அழுகை; பயன் - வாயினேர்தல். (5)

96. அணிநடை யெருமை யாடிய வள்ளன்
மணிநிற நெய்த லாம்பலொடு கலிக்குந்'
கழனி யூரன் மகளிவள்
பழன வூரன் பாயலின் றுணையே.

எ-து: "வாயிலுசாவே தம்முளுமுரிய"[1] என்பதால் பரத்தையரோடும் ஒழுகுதல் கண்டு பொறாதிருந்த தலைமகள் தலைமகன் மனைக்கட் புகுந்துழி உடன்படுதல் கண்ட வாயில்கள் தம்முள்ளே கூறியது.

இ-ள்: அழகிய நடையையுடைய எருமைகள் உழக்கிய சேற்றிடத்தே நீலமணிபோலும் நிறம் விளங்கும் பூக்களையுடைய நெய்தல் ஆம்பலோடு வளருகின்ற கழனிகளையுடைய ஊரன் மகளாகிய இவள் பழன ஊரனுக்கு இனிய பாயற்றுணையாகும், எ-று.

எருமை உழுதுளக்கிய அள்ளற்கண்ணே நெய்தலுமாம்பலும் கலிக்குமென்றது, தலைமகற்கு வேண்டுவன புரிகின்ற இல்வாழ்க்கைக்கண்ணே தாம் பெறுகின்ற சிறப்புக் கூறியவாறு. தலைமகற்கு வேண்டுவன புரிந்தொழுகுகின்ற இல்வாழ்க்கைக் கண்ணே பரத்தையர்க்குத் தலைகமகன் செய்யுஞ் சிறப்பைப் பொறாதவள் என்றுமாம். "ஏனோர்க் காயினிடம் வரைவின்றே" (தொல். உவம. சூத். 27) என்பதனால் வாயில்கள் இவ்வாறு கூறினார். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - மகிழ்தல். (6)

---

1. தொல். பொ.செய்யுளி., சூத். 200.

97. பகன்றை வான்மலர் மிடைந்த கோட்டைக்
கருந்தா ளெருமைக் கன்று வெரூஉம்
பொய்கை யூரன் மகளிவள்
பொய்கைப் பூவினு நறுந்தண் ணியளே.

*எ-து: ("பண்ணருமை பகுதி"[1]யாற் கொள்வது.) புறத் தொழுக்கமின்றியே யிருக்கவும் உளதென்று புலந்த தலை மகளைப் புலவி நீக்கிய தலைமகன் புணர்ச்சியதிறுதிக் கண் தன்னுள்ளே சொல்லியது.*

*இ-ள்: சிறந்த பகன்றை மலர் பொருந்திய தாயினது கொம்பைக் கண்டு வலிய கால்களையுடைய எருமைக் கன்று அஞ்சுகின்ற பொய்கையையுடைய ஊரன் மகளா கிய இவள் பொய்கைக்கண் மலரும் பூவினுங் காட்டி நல்ல சாயலையுடையவள், எ-று.*

*பகன்றை கிலுகிலுப்பை; "பகன்றைக் கண்ணிப் பல் லான் கோவலர்"[2] என்பதனலாறிக. கருந்தாள் வலிய கால்; "கருங்கைக் கொல்லன்"[3] என்புழிப்போல. தாயினுடைய பகன்றை மலர் மிடைந்த கோட்டைக் கன்று பெரூஉமென் றது, இயல்பாகவே தானணிந்த மாலையைக் கண்டு பிறி தொன்றைக் கருதிச் சூடியதாகக் கருதினாள் என்பதாம். மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்வித்தல். (7)*

98. தண்புன லாடுந் தடங்கோட் டெருமை
திண்பிணி யம்பியிற் றோன்று மூர
வொண்டொடி மடமக ளிவளினு
நுந்தையும் யாயுங் கடியரோ நின்னே.

*எ-து: "வணங்கியன் மொழியான் வணங்கற் கண் ணும்"[4] என்பதால், புறத்தொழுக்கமுளதாகிய துணையானே*

1. தொல். கற்பியல், சூத். 5, வரி.58.
2. இந்நூல் 87ம் செய்யுள்.
3. புறநானூறு, செய்யு.21, வரி.7.
4. தொ.பொ.கற்., சூத். 9, வரி.10.

புலந்து வாயினேராத் தலைமகள் கொடுமை தலைமகன் கூறக் கேட்ட தோழியவற்குச் சொல்லியது.

இ-ள்: குளிர்ந்த புனலாடும் வளைந்த கோட்டையு டைய எருமை, வலிய கட்டினையுடைய தோணி போலத் தோன்றுகின்ற வூரனே ஒள்ளிய தொடியையுடைய மடக் குணத்தினளாய இவளினும் நும் பிதாவும் மாதாவும் நின் னிடத்துக் குற்றங் கண்டவழிக் கழறிக் கூறுமியல்பினரே? அன்றே, எ-று.

அவரினுங் கடுமையாற் கூறுதற்கு உரியாள் இவளென் பதாம். நீராடுமெருமை அம்பியிற்றோன்று மூரனென்றது, பரத்தையர் பலருக்கும் அவர் கொண்ட காமக் கடலைக் கடத்தற்குப் பொருந்திய மார்பாகிய தெப்பத்தையுடைய வூரனென்றபடி. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - பரத்தைமை நீக்குதல். (8)

99. பழனப் பாகன் முயிறுமூசு குடம்பை
கழனி யெருமை கதிரொடு மயக்கும்
பூக்கஞு லூரன் மகளிவ
ணோய்க்குமருந் தாகிய பணைத்தோ ளோளே.

எ-து: (இதற்கு 97ஆம் செய்யுள் விதி) தோழி முதலா யினார் தலைமகன் கொடுமை கூறி விலக்கவும் தலைமகள் வாயினேர்ந்துழி அவன் உவந்து சொல்லியது.

இ-ள்: பழனப்பாகலின் கண்ணுள்ள முசுற்றெறும்பு மொய்த்த கூட்டைக் கழனியிடத் தெருமை நெற்கதிரோடு கெடுக்கும் அழகு செறியுமூரனுடைய மகளாகிய இவள் தானடைந்த மருந்தில் நோய்க்கும் மருந்தாந் தன்மையவாய பணைபோலும் தோளையுடையாள், எ-று.

பழனப்பாகல் - பலா; மூசுதல் - மொய்த்தலை; "சுரும்பு மூசாச்சுடர்ப் பூங்காந்தள்"[1] என்பதனாலுணர்க. ஏகாரம் - ஈற்றசை; முயிறுமூசுகுடம்பையை நெற்கதிரோடு எருமை மயக்கு மென்றது, யான் செய்த கொடுமையையும் அவர்கள்

1. பத்துப். திருமுரு.43.

*தன்மேற் காதலித்துக் கூறியவற்றையுஞ் சிதைத்து என் பக்கலே நின்றாளென்பதாம். மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல்.*

*(9)*

100. புனலாடு மகளி ரிட்ட வொள்ளிழை
மணலாடு சிமயத் தெருமை கிளைக்கும்
யாண ரூரன் மகளிவள்
பாணர் நரம்பினு மின்கிள வியளே.

*எ-து: வாயினேர்தற் பொருட்டு முகம் புகுவான் வேண்டி இயற்பழித்துழி அவன் சோர்வு காத்தல் கடனெனப் படுவதாகலின் தலைமகளியற்பட மொழிந்த திறம் தோழி தலைமகற்குச் சொல்லியது. (இதற்கு 1ஆவது செய்யுளின் விதி.)*

*இ-ள்: புனலாடுகின்ற பெண்கள் மணற்றிட்டின் மேல் வைக்கப்பட்ட ஒள்ளியவாபரண மறைந்திருப்பதனை எருமைகள் கொம்பாற் கிழித்துத் தோன்றச் செய்யும் புதுமையையுடைய வூரனது மகளாய இவள், இசைப் பாணரது கைக்கண்ணுள்ள யாழ் நரம்பினுங் காட்டி இனிமையமைந்த சொல்லையுடையள், எ-று.*

*மகளிரது மறைந்த இழையை எருமை கிளைக்குமூரன் மகளென்றது, இப்போது வாயினேர்தலேயன்றிக் களவுக் காலத்து நீ செய்த நன்மை மறைந்தனவும் எடுத்துக் கூறினாளென்றபடி. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ் தல். (10)*

எருமைப் பத்து முற்றிற்று

---

**மருதம் முற்றிற்று**

***ஓரம்போகியார்***

○○○

## 2. நெய்தல்

### 11. தாய்க்குரைத்த பத்து

நெய்தலாவது கடலும் கடல் சார்ந்த விடமும், இது நிலம்; கருப்பொருளில் தெய்வம் வருணன்; உணவு மீன் விலையும் உப்பு விலையும்; மிருகம் உமண், பகடு போல்வன; மரம் புன்னை, ஞாழல் போல்வன; புள் அன்னம், அன்றில் முதலியன; பறை மீன்கோட்பறை; தொழில் மீன்படுத்தல், உப்பு விளைவித்தல், அவை விற்றல்; யாழ் நெய்தல் யாழ்; பூ கைதை, நெய்தல்; நீர் மணற் கிணறு உவர்க்கேணி; ஊர் பட்டினமும் பாக்கமும்; பொழுதில் கார், வேனில், எற்பாடு மாலை, ஏற்பாட்டைக் காலையெனக் கூறுவார் சிலர்; மாலைக்கு முன்னராகிய காலமாகக் காண்பதேயன்றிக் காலையாகக் காணப்படாமையின் அவர் கூற்றுப் போலியென மறுக்க. உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும். கடலும் கானலும் கழியுங் காண்டொறு மிரங்கலும் தலைவனெதிர்ப்பட்டு நீங்கியவழி இரங்கலும் பொழுதும் புணர் துணைப் புள்ளுங்கண்டு இரங்கலும் போல்வன. இரங்கல், அக்கடல் முதலியனவுந் தலைவனீங்குவனவு மெல்லாம் இரங்கல் நிமித்தம்.

"திணைமயக்குறுதலுங் கடிநிலையிலவே"[1]=ஒரு நிலத்து ஒரொழுக்க நிகழுமென நிரனிறுத்துக் கூறிய வொழுக்கம் அவ்வந்நிலத்திற்கே யுரித்தாய் ஒழுகாது தம்முன் மயங்கி வருதலுங் கடியப்படா என்பது. நக்கீரனாரும் இக்கருத்தானே ஐந்நிலத்துள்ளும் களவு நிகழுமெனக் கொண்டவாறுணர்க.

---

1. தொல். அகத்திணை, சூத்.12.

101. அன்னை வாழிவேண் டன்னை யுதுக்கா
ணோர்கொடிப் பாசடும்பு பரியவூர் பிழிபு
நெய்தன் மயக்கி வந்தன்று நின்மகள்
பூப்போ லுண்கண் மரீஇய
நோய்க்குமருந் தாகிய கொண்கன் றேரே.

*எ-து: (தொல். கள. 23ஆம் சூத்திரத்து வகை என்பதாற் கொள்வது) அறத்தொடு நின்ற பின்னர் வரைதற் பொருட்டுப் பிரிந்த தலைமகன் வரைவோடு புகுந்தவழித் தோழி செவிலிக்குக் காட்டிச் சொல்லியது.*

*இ-ள்: அன்னையே வாழ்வாயாக. அன்னையே நான் சொல்வதைக் கேள். உவ்விடத்தே பார். நின் மகளது பூவை யொத்த மையுண்ட கண்களடைந்த நோய்க்கு மருந்தாகிய கொண்கனது தேரானது எழுச்சியையுடைய கொடியாகிய பசிய அடும்பு கெட ஏறி இறங்கி நெய்தலழியும்படி வந்தது, எ-று.*

*தேர் அடும்பு பரிய அதனை ஊர்ந்திழிந்து நெய்தலை மயக்கி வந்ததென்றது, களவிற் கூட்டம் வெளிப்பட்ட பின்பும் வரையாது பிரிந்தானென்று அலர் கூறுவார் வருந்த வந்தானென்பது. வாழி என்பதனை முன்னிலை அசையாக்கினுமமையும். வேண்டு முன்னிலையேவல். "ஆய் பூவடம் பினலர் கொண்டுதுக்காணங், கோதை புனைந்தவழி"[1] என்னுங் கலித்தொகையில் உதுக்காணென்பதற்கு இப்பொருளாதலறிக. அடும்பு என்பதும் இதனுரையாணுணர்க. ஏர் - எழுச்சி என்பதை "ஒப்புமுருவு"[2] மென்னுஞ் சூத்திரத்து ஏர் என்பதற்குரைத்த வுரையானுணர்க. (1)*

102. அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்
நீனிறப் பெருங்கடற் புள்ளி னானாது
துன்புறு துயர நீங்க
வின்புற இசைக்குமவர் தேர்மணிக் குரலே.

---

1. கலித்தொகை, செய்யுள் 144, வரி 30 - 31.
2. தொல். பொருளியல், சூத்.53.

*இதுவுமது.*

*இ-ள்: அன்னையே வாழ்வாயாக. யான் சொல்வதைக் கேள். நமது சேர்ப்பனது தேரிற்கட்டிய மணியினது ஓசை நம தூரினிடத்தாகிய கரிய நிறத்தையுடைய பெரிய கடற்கரைக் கண்ணுள்ள பறவைகளினுமமையாததாய் நாமடைந்த துன் பத்தையுடைய துயரமானது நீங்க ஒலியா நின்று வாரா நிற்கும், எ-று.*

*ஆனாது - அமையாமல் என்பது "மானோக்கி நீயழ நீத் தவனானாது"[1] என்பதனுரையானுணர்க. இவையிரண்டிற் கும் மெய்ப்பாடு - உவகை; பயன் - ஐயமறுத்தல்.* *(2)*

**103.** **அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு**
**ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவ**
**னிவட்கமைந் தனனாற் றானே**
**தனக்கமைந் தன்றிவண் மாமைக் கவினே.**

*எ-து: அறத்தொடு நின்ற தோழி வதுவை நிகழா நின்று ழித் தாய்க்குக் காட்டி உவந்து சொல்லியது.*

*இ-ள்: அன்னையே யான் கூறுவதனைக் கேட்க. புன்னை யுடன் ஞாழல் அலருகின்ற குளிர்ந்த துறைவன்றானே நின் மகட்குப் பொருந்துதலையுடையன், நின் மகளுடைய மாமை அழகு பிறிதொருவர்க்குமின்றித் துறைவனுக்குப் பொருந்தி யது, எ-று.*

*புன்னையொடு ஞாழல் பூக்குமென்றது இருவர்க்கும் குடிப்பிறப்பும் உருவும் நலனும் ஒத்தல் கூறியவாறு. தான் - அசை; தனக்கு சுட்டு; மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ் தல்.* *(3)*

**104.** **அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்ப்**
**பலர்மடி பொழுதி னலமிகச் சாஅய்**
**நள்ளென வந்த வியறேர்ச்**
**செல்வக் கொண்கன் செல்வனஃ தூரே.**

---

1. மருதக்கலி, செய்யு.22, வரி.11.

எ-து: (இதற்கு "பெறற்கரும் பெரும் பொருள்" என்னும் (தொல்.கற்.9ஆம்) சூத்திரத்துப் 'பிற'வாற் கொள்வது). புதல்வற் பெற்றுழித் தலைமகன் மனைக்கட் சென்ற செவி லிக்கு முன்பு அறத்தொடு நின்று வதுவை கூட்டிய தோழி அவனூர் நன்மை காட்டிச் சொல்லியது.

இ-ள்: அன்னையே! யான் கூறுவதனைக் கேட்க. நம் மூரிற் பலரும் நித்திரை செய்கின்ற இராக்காலத்தில் அழகு மிகவும் மெலிய விரைவில் வந்த அகன்ற தேரையுடைய தலைவனாகிய கொண்கனுடைய செல்வனுடையவூர் அது, எ-று.

முன் செல்வன் தலைவனையும் பின் செல்வன் மகனையு முணர்த்தின. தலைமகனைச் செல்வனென்றல் "மகன்றாயு யர்புந் தன்னுயர் பாகுஞ் - செல்வன் பணிமொழியியல்பாக லான"[1] என்பதனானுணரப்படும். செல்வனூரே என்னும் எழு வாயின் முற்றுச்சொல் அஃதென்னும் பெயர் கொண்டது. செல்வனூரே என்றும் பாடம். (4)

105. அன்னை வாழிவேண் டன்னை முழங்குகடற்
றிரைதரு முத்தம் வெண்மண லிமைக்குந்
தண்ணந் துறைவன் வந்தெனப்
பொன்னினுஞ் சிறந்தன்று கண்டிசி னுதலே.

எ-து: (இதற்கு 101ஆம் செய்யுள் விதி) அறத்தொடு நின்றபின் வேண்டுவன தருதற்குப் பிரிந்த தலைமகன் வரை வொடு வந்துழி முன்பு தலைமகள் நுதல்கட் பசப்பு நீங்கும் வண்ணந் தோன்றிய கதிர்ப்புக் காட்டிச் செவிலிக்குத் தோழி சொல்லியது.

இ-ள்: அன்னையே! யான் சொல்லுவதனைக் கேட்க, ஒலிக்கின்ற கடற்றிரையாற் கரைக்கண் வீசிய முத்து அக்கரை யிலுள்ள வெண்மணன் மீது கிடந்து ஒளியைச் செய்யும் தண்ணந்துறையையுடைய தலைவன் வர, நின் மகளுடைய நுதலொளியுடைத்தாய்ச் சிவந்தது காண்பாயாக, எ-று.

1. தொல். கற்பியற், சூத்.33.

*கடற்றிரை தருமுத்தம் வெண்மணலிமைக்குந் துறைவன் என்றது, தன் வருத்த நோக்காது நமக்கு நிலைநின்றவின்பம் தருவான் என்றவாறு. மெய்ப்பாடு - மருட்கை; பயன் மகிழ்வித்தல்.* *(5)*

106. அன்னை வாழிவேண் டன்னை யவர்நாட்டுத்
துதிக்கா லன்னந் துணைசெத்து மிதிக்குந்
தண்கடல் வளையினு மிலங்குமிவ
ளங்கலி ழாகங் கண்டிசி னினைந்தே.

*எ-து: அறத்தொடு நின்ற தோழி அது வற்புறுப்பான் வேண்டிச் செவிலிக்குச் சொல்லியது.*

*இ-ள்: அன்னையே! தலைவனது நாட்டிலுள்ள நுதி பொருந்திய காலையுடைய அன்னமானது தன் துணையென்று கருதி மிதிக்கின்ற குளிர்ந்த கடலின் கண்ணுள்ள சங்கைக் காட்டினும் இவளுடைய அழகு வேறுபடுகின்ற தேகமானது விளங்கும். இதனை நீ நினைத்துக் காண்பாயாக, எ-று.*

*சங்கினுங்காட்டி விளங்குமென்றது பசலையை; மிதித்தல் இடக்கரடக்கல். மறவைகட்குரியதோர் மரபு; மெய்ப்பாடு - மருட்கை; பயன் - வரைவுடன்படுத்தல்.* *(6)*

107. அன்னை வாழிவேண் டன்னையென் றோழி
சுடர்நுதல் பசப்பச் சாஅய்ப் படர்மெலிந்து
தண்கடற் படுதிரை கேட்டொறுந்
துஞ்சா ளாகுத னோகோ யானே.

*எ-து: "முன்னிலை யறனெனப் படுதலென் றிருவகைப் - புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்"*[1] *என்பதால், தோழி செவிலிக்கு அறத்தொடு நிலை குறித்துக் கூறியது.*

*இ-ள்: அன்னையே! எனது தோழி ஒளி பொருந்திய நுதல் பசப்ப வருந்தித் துன்பத்தான் மெலிந்து, குளிர்ந்த கடலிடத்துண்டாகின்ற கடலொலியைக் கேட்குந்தோறும் நித்திரை செய்யாளாதற்கு யான் வருந்துகின்றனே், எ-று.*

---

1. தொல். கள. சூத்.28, வரி.41-42.

இது உசாதலென்னுமறத் தொடுநிலை.

அறத்தொடு நிற்றலாவது விதித்த வழியே நிற்றல்; களவொழுக்கத்தில் கற்புக்கடம் பூண்டொழுகுகின்ற தலைவி, தானொரு தலைவனைக் கூடியொழுகு கின்றமையைத் தோழியறியுமாற்றானுரைத்தலும், தலைவற்குரைத்தலும், தோழி தலைவனுக்குரைத்தலும், செவிலிக்குரைத்தலும், செவி நற்றாய்க்கும் நற்றாய் தந்தை தன்னையர்க்குரைத்தலுமாம். அறத்தொடு நிற்குங் காலம் நொதுமலர் வரைவும் வெறியாட்டெடுத்தலும் முதலியன. இது செய்தல் தங்குடிக்கு ஏதம் வராமற் காத்தற் பொருட்டேயாம். இவ்வறத் தொடுநிலை "எளித்தல்"[1] முதலாக ஏழு வகைப்படும். மெய்ப்பாடு - அச்சம்; பயன் - மறைவெளிப்படுத்தல். (7)

108. அன்னை வாழிவேண் டன்னை கழிய
முண்டக மலரும் தண்கடற் சேர்ப்ப
னெந்தோ டுறந்தன னாயி
னெவன்கொன் மற்றவ னயந்த தோளே.

எ-து: (இதற்கு 101ஆம் செய்யுள் விதி). அறத்தொடு நிலை நிகழ்ந்த பின்னும் வரைவு நீடிற்றாக மற்றொரு குலமகளை வரையுங்கொலென்று ஐயுற்ற செவிலி குறிப்பறிந்த தோழி அவட்குச் சொல்லியது.

இ-ள்: அன்னையே! கழியிடத்துள்ளவாய முள்ளி யானது மலர்கின்ற குளிர்ந்த கடற் சேர்ப்பன் எமது தோள்களை விரும்பாது துறந்தானாயின், அவன் விரும்பிய தோள் வேறு யாது கொல்லோ? எ-று. வேறில்லையென்பதாம்.

கழனிய முண்டகமென்றும் பாடம். மெய்ப்பாடு வியப்பு; பயன் ஐய நீக்குதல்; முண்டகம் - கழிமுள்ளி என்பது "மாமலர் முண்டகந்தில்லையோ டொருங்குடன்"[2] என்னுஞ் செய்யுளுரையானுணர்க. (8)

---

1. தொல். பொருளியல், சூத்.13.

2. நெய்தற்கலி, செய்யுள்.16.

109. அன்னை வாழிவேண் டன்னை நெய்த
னீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவ
னெந்தோ டுறந்த காலை யெவன்கொல்
பன்னாள் வருமவ னளித்த பொழுதே.

*எ-து: அறத்தொடு நின்ற பின்பு வரைவான் பிரிந்த தலைமகன் கடிதின் வராதவழி ஐயுற்ற செவிலி 'அவன் நும் மைத் துறந்தான்போலும், நுங்கட்கு அவர் கூறிய திறம் யாது?' என்றாட்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: அன்னையே! நீர் செல்லுகின்ற மதகின்கண் நெய்தற்பூப் பொருந்திய துறைவன் நின்னிற் பிரியேனென முன்னாளில் நமக்கருள் செய்தபோது பிரியின் அறனல்லன செய்யேனெனக் கூறியிருக்க, அவன் நுங்களைத் துறந்தா னென்று சொல்லுவையாயின், எந்தோளைத் துறந்த நாள் பல நாள் வருகின்றன. அஃதியாது கொல்லோ? எ-று. மெய்ப் பாடு - வியப்பு; பயன் - ஐயநீக்குதல்.* *(9)*

110. அன்னை வாழிவேண் டன்னை புன்னை
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
யென்னை யென்றும் யாமே யிவ்வூர்
பிறிதொன் றாகக் கூறு
மாங்கு மாக்குமோ வாழிய பாலே.

*எ-து: "அவன் வரைவு மறுப்பினும்"[1] என்பதால், நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. நச்சினார்க்கினியர் இதைத் தலைவி கூற்றாகக் காட்டுவர், "உயிர்செல, வேற்றுவரைவு வரினது மாற்றுதற் கண்ணும்"[2] என்றவிடத்தில்.*

*இ-ள்: அன்னையே! பொன்னிறம் விரியும் புன்னைப் பூக்கெழுமிய துறைவனை நாம் என்னையென்கின்றோம்;*

1. தொல். களவியல், சூத்.23, வரி.40.

2. தொல். களவியல், சூத்.20, வரி.14-15.

*அயலோர் பிறர்க்கு வரையப் போகின்றார் என்பர்; அப்படியும் ஆக்கிவிடுமோ வாழ்வினையுடைய ஊழ்வினையானது! எ-று.*

*இவ்வூரென்றது, நொது மலரையும் தந்தை தன்னையர் முதலியோரையும்; ஆங்குமாக்குமோ வென்றது, நொது மலர்வரைவை யாக்குமோ என்றபடி. எல்லோரையும் வாழச் செய்யும் பழவினை எம்மையு மவ்விதஞ்செய்யும் என்பாள் வாழிப்பால் என்றாள். மெய்ப்பாடு - அச்சம்; பயன் - பிறன்வரைவு மறுத்தல்.* *(10)*

தாய்க்குரைத்த பத்து முற்றிற்று

---

## *12. தோழிக்குரைத்த பத்து*

**111.** அம்ம வாழி தோழி பாணன்
சூழ்கழி மருங்கி னாணிரை கொளீஇச்
சினைக்கயன் மாய்க்கும் துறைவன் கேண்மை
பிரிந்தும் வாழ்துமோ நாமே
யருந்தவ முயற லாற்றா தேமே.

*எ-து: "தமர்தற் காத்தகாரண மருங்கினும்"1 என்பதால், இற்செறிப்பார் எனக் கேட்ட தலைமகள் வரையாது வந்து ஒழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: தோழியே! பாணனானவன் சூழ்ந்த கழியின் பக்கத்திலே புதிய இரைகளைக் கொளுவிச் சினைக்கயலைக் கெடுக்கின்ற துறைவனது உறவைப் பிரியாதிருத்தற்குமுன் அரிய தவத்தைச் செய்து வையாதேமாகிய நாம் இப்போது பிரிவுண்டோமாயினேம்; அவ்வாறு பிரிந்தும் வாழ்வையடைவோமோ! எ-று.*

---

1. தொல். களவியல். சூத்.20, வரி.26.

பாணனைத் தலைவனாகவும், கழியைக் குறியிடமாக வும், நாளிரையைத் தன் வஞ்சனையை மறைத்துச் சொல் லும் இனிய வார்த்தையாகவும், கயலைத் தலைமகளாகவும், மாய்த்தலைத் தலைவியை வருத்துதலாகவும் உள்ளுறையு வமங் கொள்ளுமாறு கிடந்தது. உள்ளுறையினாலே அவன் வயிற் பரத்தமையையும் பிரிந்து வாழ்துமோ என்பதனாலே தன்வயின் உரிமையும் கொள்ளப்படும். "கிழவோட்குவம மீரிடத்துரித்தே"[1] என்பதனால் தலைவி நெய்தலில் உள் ளுறை கூறினாள். அம்ம, வாழி என்பனவற்றிற்கு முன்னரு ரைத்தாங்குரைக்க. மெய்ப்பாடு - அவலம்; பயன் - வரைவு கடாதல். (1)

112. அம்ம வாழி தோழி பாசிலைச்
செருந்தி தாய விருங்கழிச் சேர்ப்பன்
றான்வரக் காண்குவ நாமே
மறந்தோ மன்ற நாணுடை நெஞ்சே.

எ-து: "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" என்னும் (தொல். கள. 22ஆம்) சூத்திரத்துப் 'பிற'வாற் கொள்வது. களவு நீடுவழி வரையலன் கொல் என்று அஞ்சிய தோழிக்குத் தலைமகன் வரைவுத் திறம் தெளிக்கத் தெளிந்த தலைமகள் சொல்லியது.

இ-ள்: தோழியே! பசிய இலையையுடைய செருந்தி யானது பரந்த பெரிய கழியையுடைய சேர்ப்பன் தான் வரை வொடு வருதலைக் காண்போம்; நாம் நாணையுடைய நெஞ்சினேமாகலின் அவன் முன்னாளிற் கூறியவற்றை மிக மறந்தேமாயினேம்; இனி அஞ்சாதிருப்பேமாக, எ-று.

தான்வரக் காண்குவம் என்பதால் கற்புச் சிறந்தவாறும், மறந்தேம் மன்ற என்பதால் நாண் துறந்தவாறுங் காண்க மெய்ப்பாடு - உவகை; பயன் - தெளிவித்தல். (2)

---

1. தொல். உவம. சூத்.29.

113. அம்ம வாழி தோழி நென்ன
லோங்குதிரை வெண்மண லுடைக்குந் துறைவற்
கூரார் பெண்டென மொழிய வென்னை
யதுகேட் டன்னா யென்றன ளன்னை
பையய வெம்மை யென்றனென் யானே.

*எ-து: "களவறிவுறினும்"[1] என்பதால், வரையாது வந்தொழுகுந்தலைமகன் சிறைப்புறத்து நின்று கேட்ப நெருநல் இல்லத்து நிகழ்ந்தது இதுவெனத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. அது "களவலராயினும்"[2] என்றவிடத்துச் செவிலி கூறியவற்றையே தலைவி கொண்டு கூறினாள்.*

*இ-ள்: தோழியே! முன்னாளில் கடலின் கண்ணுள்ள உயர்ந்துதோன்றுந் திரையானது வெண்மணல் பொருந்திய வடைகரையை யழிக்கின்ற துறைவனுக்கு அயலார் என்னைப் பெண்டென்று கூறினாராக; அவ்வார்த்தையைக் கேட்டுச் செவிலித் தாயானவள் அத்தன்மையுடையையோ வென வினாவினாள்; அதற்கு யான் மெல்ல மெல்ல வெம்மை யென்று கூறினேன், எ-று.*

*அன்னாய் என்பதற்கு "அன்னையோ, மண்ட மரட்ட களிறன்னான்" என்னுங் கலித்தொகைக் குறிஞ்சிப்பாட்டினுரையானறிக (குறி. செய்யு. 25, வரி. 18).*

*வெம்மை என்பதற்கு வெய்ய என்பதன் பொருள்போற் கொள்க. மெய்ப்பாடு அவலம்; பயன் வரைவுகடாதல்; பையய வெம்மை என்பதால் தன்வயினுரிமை கூறினாள்.*

*(3)*

114. அம்ம வாழி தோழி கொண்க
னேரே மாயினுஞ் செல்குவங் கொல்லோ
கடலி னாரை யிரற்று
மடலம் பெண்ணை யவனுடைய நாட்டே.

---

1. தொ. களவியல், சூத்.20, வரி.25.

2. தொ. களவியல், சூத்.24.

*எ-து: "தாவினன்மொழி கிழவி கிளப்பினு" மென்ப தால் (தொல்.கள.சூத்.2), இடைவிட்டொழுகுந் தலைமகள் வந்து சிறைப்புறத்தானமையறிந்த தலைமகள், அவன் கேட்குமாற்றால் தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: தோழியே! கொண்கன் வந்து நம்மை யெதிர்ப் படப் பெற்றிலமாயினும், கடலினிடத்து நாரையானது ஒலிக்கின்ற மடலையுடைய அழகிய பனைகள் பொருந்திய வனுடைய நாட்டிற்கு யாம் போவேங் கொல்லோ? எ-று.*

*கடலின் நாரையிரற்றுமென்றது, கடலிலுள்ள விரை யைத் தின்று பசி நீங்கிய மகிழ்ச்சியால் நாரை ஒலிக்குமென் றது பிறர் துன்பத்தை நோக்காது நான் கொண்ட மகிழ்ச்சி யால் ஏமாப்பானென்பது. மெய்ப்பாடு அவலம். பயன் அவன் வரவுவிரும்பியது.* *(4)*

115. அம்ம வாழி தோழி பன்மா
ணுண்மண லடைகரை நம்மோ டாடிய
தண்ணந் துறைவன் மறைஇ
யன்னை யருங்கடி வந்துநின்றோனே.

*எ-து: "பெற்ற வழிமலியினு" மென்பதால் (தொ. கள. சூத். 20, வரி. 9), இற்செறிப்புண்டபின்னும் வரைந்து கொள்ள நினையாது தலைமகன் வந்தானாக அதனையறிந்த தலை மகள் அவன் கேட்குமாற்றால் தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: தோழியே பலவாகிய மாட்சிமைப்பட்ட நுண் ணிய மணலடைந்த கடற்கரைக் கண்ணே நம்மோடு அலவ னாட்டான் முதலிய விளையாட்டையாடிய குளிர்ந்த துறைவன் மறைந்த ஒழுக்கத்தையுடையனாய் அன்னையா லரிய காவலையுடைய இவ்விடத்து வந்து நின்றான், எ-று. மெய்ப்பாடு உவகை; பயன் தோழியை வேண்டுவன செய் யென்பது. புணர்ச்சி விரும்பல்.* *(5)*

116. அம்ம வாழி தோழி நாமழ
நீல விருங்கழி நீலங் கூம்பு
மாலைவந் தன்று மன்ற
காலை யன்ன காலைமுந் துறுத்தே.

எ-து: "வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்"[1] என்பதைத் "தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்" (தொல். மரபியல், சூத். 110) என்பதால், ஏற்பாட்டின்கண் தலைமகள் சிறைப்புறத்து நின்று கேட்பத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழியே! யாம் காம நோயினாலுண்டாகிய வருத்தந் தாங்கலாற்றாதேமாயழ, பார்க்க முடியாதன வாய்த் தங்கண்ணை மூடினாற்போலக் கரிதாகிய பெரிய கழியிடத்துள்ள நீலங்களினலரிற் பொருந்திய இதழ் குவியா நிற்கும் மாலைக் காலமானது யாமிறந்துபடுங் காலத்தை யொத்த காலத்தை முன்னிட்டு வந்தது, எ-று.

"நாற்றிசையு நடுக்கூறுஉமடங்கற் காலைக் - கூற்றுநக் கதுபோலு முட்குவரு கடுமாலை"[2] எனவும், "வாலிழை மக ளிருயிர் பொதியவிழ்க்குங் - காலை யாவ தறியார் - மாலை யென்மனார் மயங்கியோரே"[3] என்று நெய்தற் கலியுட் கூறப் படுதலினிவ்வாறு கொள்ளப்பட்டது.

'நீலவிருங்கழி நீலங்கூம்பும்' என்றது, ஓரறிவுயிர் தானும் வருத்தமுறுகின்ற விம்மாலையிற் றன்னோடு கூடியின்ப மனுபவியாது வருந்த நம்மைக் கைவிட்டானெனத் தலை மகள் கொடுமை கூறியவாறு. மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைவொடு வருதல். (6)

---

1. தொல். களவியல், சூத்.21.
2. நெய்தற்கலி செய்யுள் 3.
3. நெய்தற்கலி செய்.2.

117. அம்ம வாழி தோழி நலனே
மின்ன தாகுதல் கொடிதே புன்னை
யணிமலர் துறைதொறும் வரிக்கு
மணிநீர்ச் சேர்ப்பனை மறவா தீமே.

*எ-து: (இதற்கு 114ஆம் செய்யுள் விதி) வரையாது வந் தொழுகுந் தலைமகள் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: தோழியே! தலைவன் மாட்டு மிக்க அவன் பினையுடையமாகியாம் அவன்மீது கொடுமை கூறுதல் தகாதே; புனையின் அழகிய மலர்கள் துறையினெவ்வி டத்து மழகைச் செய்யும் நீலமணி போலும் நீரையுடைய சேர்ப்பன் நமக்குச் செய்தவின்பத்தை நினைந்து அவன்மீது அன்புடையையாய் மறவாதிருப்பாய், எ-று.*

*'மணிநீரு மண்ணுமலையும்'[1] என்பதற்குப் பரிமேலழகரு ரைத்தது காண்க. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - வரைவு கடாவல்.* *(7)*

118. அம்ம வாழி தோழி யானின்
றறனி லாளற் கண்ட பொழுதிற்
சினவுவென் றகைக்குவென் சென்றனென்
பின்னினைந் திரங்கிப் பெயர்தந் தேனே.

*எ-து: "அருண்முந்துறுத்த அன்பு பொதி கிளவி - பொருள்பட மொழிதல் கிழவோட்குமுரித்தே"[2] என்பதால், தோழி வாயின்மறுத்த தலைமகள் பின்பு தலைமகன் வந்துழி நிகழ்ந்ததனை அவட்குக் கூறியது.*

*இ-ள்: தோழியே! யான் இன்று அறச்செயல் சிறிது மில்லாத தலைவனைக் கண்ட நேரத்திலே நம்மை மறந்து பரத்தையிடத்துச் சென்றமை பற்றிக் கோபிப்பேனாயும் தடுப்பே னாயுஞ் சென்றேன்; பின்பு முன் அவன் செய்த தலையளியை*

---

1. திருக்குறள், 742ஆம் செய்யுள்.
2. தொல். கற்பியல், சூத்.20.

நினைந்து இரக்கங்கொண்டு பெயர்ந்தேன், எ-று. மெய்ப் பாடு - மருட்கை; பயன் - வரைதல். (8)

119. அம்ம வாழி தோழி நன்று
மெய்யா மையி னேதில பற்றி
யன்பிலன் மன்ற பெரிதே
மென்புலக் கொண்கன் வாரா தோனே.

எ-து: "வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்"[1] என்பதால், வரைதற்கு வேண்டுவன முயல்வேம் எனச் சொல்லி வரையாது செலுத்துகின்ற தலைவன் சிறைப்புறத் தானான மையறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழியே! மெல்லிய கடற்கரையையுடைய கொண்கன்தான் நமக்குக் கூறிய உறுதி வாசகம் மெய்யாந் தன்மை யின்மையின் பிறிதொன்றையுட்கொண்டு வாரா தோனாய் நம்மீது மிக்க அன்பிலானாயினான், எ-று.

மென்புலம் - "மெல்லங்கழி சூழ்"[2] என்ற திருக்கோவைச் செய்யுளுரையானுணர்க. மென்புலம் பண்புத் தொகை. "நன்று பெரிதாகும்" என்பது சூத்திரம். (தொல். உரி. சூத். 47) மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைதல். (9)

120. அம்ம வாழி தோழி நலமிக
நல்ல வாயின வளிய மென் றோளே
மல்ல லிருங்கழி நீரறல் விரியு
மெல்லம் புலம்பன் வந்த மாறே.

எ-து: "வரைவு தலைவரினும்"[3] என்பதால், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் வந்து சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழியே! வளப்பத்தையுடைய கரிய கழி நீரானது கருமணலை விரியச் செய்யும் மெல்லம் புலம்பன் வரை

---

1. தொல். களா. சூத்.21.
2. திருக்கோவையார், செய்யுள் 177.
3. தொல். களவியல். சூத்.20, வரி.25.

வோடு வந்த காரணத்தால் அன்பையுடைய, மென்மையாகிய எனது தோள்களானவை இன்பம் மிக அதனால் அழகையுடைய வாயின. எ-று.

நலமென்பது - "நலத்தை மத்தாக நாட்டி நல்வலியிளமை வாராக் - குலப் பிறப்பெனுங் கையாற் கோலப் பாசங் கொளுத்தி"[1] என்பதினு மிக்கருத்தாதல் காண்க. மெய்ப் பாடு - உவகை; பயன் - வரைதல். (10)

## தோழிக் குரைத்த பத்து முற்றிற்று

---

## 13. கிழவற் குரைத்த பத்து

121. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
முண்டகக் கோதை நனையத்
தெண்டிரைப் பௌவம் பாய்ந்துநின் றோளே.

எ-து: "புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும்" என்னும் (தொல். கற்பியல் 10ஆம்) சூத்திரத்துப் "பிற"வினால் பரத்தை கூற்றாகவும், "பெறற்கரும் பெரும் பொருள்" என்னும் (மேற் படி 9ஆம்) சூத்திரத்துப் 'பிற'வினால் தோழி கூற்றாகவும் இவ்வுரையாசிரியர் கூறுவர். "அவனறிவாற்ற வறியுமாகலின்" என்னும் (மேற்படி 6ஆம்) சூத்திரத்துப் 'பல் வேறு நிலை' யாற் றலைவி கூற்றாகக் கொள்வர் நச்சினார்க்கினியர். அது காமஞ்சாலா விளமையோளைக் களவின் கண் மணந்தமை யறிந்தேனெனக் கூறித் தலைவன் குறிப்பறிதல்.

பரத்தை தலைமகற்குச் சொல்லியது. பெதும்பைப் பருவத் தாளொரு பரத்தையோடு கூடி மறைந்து ஒழுகா நின்றானென்பது அறிந்து தலைவி புலந்துழி, 'இத்தவறு என் மாட்டில்லை, நீயே இப்புலவியை நீக்க வேண்டும்' என்று தோழிக்

1. சீவகசிந். காந்த. செய்.219.

குத் தலைமகன் கூறப் புலவியை நீக்கக் கருதிய தோழி அவ ளிளமை கூறி நகையாடிச் சொல்லியதூஉமாம்.

இனி வருகின்ற பாட்டு ஒன்பது மித்துறையாம்.

இ-ள்: துறைவனே! நினது உரிமையுடையாளை யாங் கண்டேமல்லவா; அவள் எத்தன்மையளெனின், கழிமுள்ளி மலரணிந்த கூந்தல் நனையும்படி தெள்ளிய திரையை யுடைய கடற்கண் நீர்விளையாட்டி பாய்ந்து விளையாடி னாள், எ-று.

கண்டிரும் - தன்மைக்கண் வந்தது; முண்டகம் கழி முள்ளி யென்பதை "மாமலர் முண்டகந்தில்லையோடொ ருங்குடன்" என்பதனானுணர்க. (108ஆம் செய்யுளுரை பார்க்க) ஏகாரம் முன்னையது தேற்றம், பின்னையது அசை; மெய்ப்பாடு - தலைவன் மாட்டு நிகழாதன நிகழ்ந் தனவாகக் கூறலின் இல்லது காய்தல்; பயன் - தலைவன் குறிப்புணர்தல். (1)

122. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே.

இ-ள்: கொண்கனே! நினது உரிமையுடையாளை யாங் கண்டே மல்லவா; அவளெத் தன்மையாளெனின், தான ணிந்த வொளியையுடைய வாபரணம் உயர்ந்த மணன் மேல் வீழ்ந்தனவாகத் தான் கொண்ட மயக்க மிகுதியால் அவ்விடத்திலுள்ள வெள்ளாங் குருகை எடுத்துத் தாரா யென வினவி நிற்கின்றாள், எ-று.

என வென்னுமெச்சம் நின்றோளென்னும் பெயர்ப் பய னிலை கொண்டு முடிந்தது. வெள்ளாங் குருகை வினவுவோ ளென்றது, "கதிர்பகாஞாயிறே கல்சேர்தியாயின் - அவரை நினைத்து நிறுத்தென் கைநீட்டித் - தருகுவையாயிற் றவிரு

மென்னெஞ்சத் - துயிர்திரியா மாட்டிய தீ"[1] என்றாற் போல. "சொல்லாமரபின் அவற்றொடு கெழீஇச் - செய்யாமரபிற் றொழிற் படுத்தடக்கியும்"[2] எனவும், "ஞாயிறு திங்கள்"[3] என்னுஞ் சூத்திர விதியானும் இவ்வாறு கூறப் பட்டது. (2)

123. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொண்ணுத லாய மார்ப்பத்
தண்ணென் பெருங்கடற் றிரைபாய் வோளே.

இ-ள்: சேர்ப்பனே! நினது உரிமையுடையாளை யாங் கண்டேமல்லவா; அவள் எத்தன்மையாளெனின்; ஒள்ளிய நுதலினையுடையராகிய ஆயத்தாராரவாரிக்கக் குளிர்ச்சி பொருந்திய பெரிய கடலின் நிரையிடத்துப் பாய்ந்து விளையாடுவாள், எ-று.

திரைமீது பாய்ந்து விளையாடல் மகளிரியல்பாதலின் திரைபாய் வோளெனக் கூறப்பட்டது. (3)

124. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
வண்டற் பாவை வௌவலி
னுண்பொடி யளைஇக் கடறூர்ப் போளே.

இ-ள்: கொண்கனே! நினது உரிமையுடையாளை யாங் கண்டேமல்லவா; அவளெத்தன்மையளெனின், தான் விளையாடுதற்கு வண்டலாகிய விளையாட்டிற்குரிய பாவையைக் கடற்றிரை வந்து கவர்ந்தழித்தலின் நுண்ணிய புழுதியை யள்ளி அக்கடலைத் தூர்த்து நிற்கு நிலைமை யாள், எ-று.

வண்டற்பாவை என்பதனை "ஆளரிக்கும் மரிதாய்"[4] என்னுஞ் சிற்றம்பலக்கோவையின் 'வாளரிக்கண்ணியேம் வாணுதல் வண்டலாயத்துத் தன்பாவைக்கு மேவிக் கொண்

1. நெய் கற் கலி, செய்யுள் 25.
2. தொல். பொருளியல், சூத். 2, வரி 6-7
3. தொல். செய்யுளியல் சூத். 201.
4. திருச்சிற். செய்யுள் 225.

*டாள்' என்பதனுரையானும், 'வண்டலுற்றோ மெங்கண் வந்தொரு தோன்றல்'[1] என்பதனானுமுணர்க.* *(4)*

125. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
தெண்டிரை பாவை வௌவ
வுண்கண் சிவப்ப வழுதுநின் றோளே.

*இ-ள்: கொண்கனே! நினது மிக்கவன்பு பொருந்திய உரிமையுடையாளை யாங் கண்டேமல்லவா; அவளெத் தன்மையளெனின், தெள்ளிய கடற்றிரை தனது விளையாட்டுக்குரிய சாய்ப்பாவையைக் கவர்ந்து கொண்டு செல்ல மைதீட்டிய கரிய கண்கள் சிவக்கும்படி அழுது நிற்கின்றாள், எ-று.*

*உண்கண் என்பதனை "வேலுண்கண் வேய்த்தோளவட்கு"[2] எனவும், "இருநோக்கிவளுண் கணுள்ளது"[3] எனவும் வரும் திருக்குறட் செய்யுளுரையானுமுணர்க.*

*"சாய்தாட் பாவை தந்து கொடுத்தும்" எனக் கல்லாடத்தினும் (கல்லா. செய்யுள் 11, வரி 24), "சாய்க் கொளுத்திய பாவை தந்தனைத்தற்கோ" எனக் கலியினும் காண்க.*

*(5)*

126. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யுண்கண் வண்டின மொய்ப்பத்
தெண்கடற் பெருந்திரை மூழ்கு வோளே.

*இ-ள்: கொண்கனே! நினது மிக்க வன்பு பொருந்திய வுரிமையுடையாளை யாங் கண்டேமல்லவா; அவளெத் தன்மையளோவெனின் , உண் கண்ணில் வண்டுக் கூட்ட மொய்ப்பத் தெள்ளிய கடலிடத்துப் பெரிய திரைக்கண் பாய்ந்து விளையாடுந் தன்மையாள், எ-று.* *(6)*

---

1. திருச்சிற். செய்யுள் 299.
2. திருக்குறள், செய். 1113.
3. திருக்குறள், செய். 1091.

127. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
துய்மபை மாலை யிளமுலை
நுண்பூ ணாகம் விலங்கு வோளே.

*இ-ள்: கொண்கனே! நினது மிக்க வுரிமையுடையாளை யாங் கண்டேமல்லவா; அவளெத் தன்மையளெனின், தும்பை மலர் மாலையணிந்த இளமைத் தன்மையமைந்த முலைகள் நுண்ணிய தொழிலமைந்த ஆபரணமணிந்த மார்பின்கண் கச்சு விலகத் தோன்றுந் தன்மையாள், எ-று.*

*தும்பை - நெய்தனில மாக்கள் சூடும் பூ "தும்பை தானே நெய்தலது புறனே" என்னும் (புறத்திணை 14ஆம்) சூத்திர வுரையானுணர்க. விலங்குதல் விலகுதலென்பது, 'நுண் வினைக் கொல்லர் நூற்றுவர் பின்வர-மெய்ப்பை புக்கு விலங்கு நடைச் செலவிற் - கைக்கோற் கொல்லனைக் கண்டனனாகி' என்னுஞ் சிலப்பதிகார வுரையானுணர்க (கொலைக் களக் காதை, 106-108). (7)*

128 கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யுறாஅ வறுமுலை மடாஅ
வுண்ணாப் பாவையை யூட்டு வோளே.

*இ-ள்: கொண்கனே! நினது மிக்க வுரிமையுடையாளை யாங் கண்டேமல்லவா; அவளெத் தன்மையாளெனின் பால் பொருந்தப்பெறாத வெறுமுலையை யுண்ணாவியல் பையுடைய விளையாட்டிற்குரிய பாவையதுவாயிற் சேர்த் திப் பாலை யுண்பித்தலாய தொழிலைச் செய்யா நிற்கும் அவள், எ-று.*

*பாவைக்கு இவ்விதச் செயலைச் செய்வாரென்பது "பஞ்சாய்ப் பாவைக்குந் தனக்கு-மஞ்சாய் கூந்தலாய்வது கண்டே" என முன்னர் (இந்நூல்-செய்யுள் 383)க் கூறப்படு தலானுமுணர்க. வறுமுலை என்பனை 'இல்விதூர்ந்த பொல்லா வறுமுலை சுவைத்தொறழூஉ மகத்துமுக நோக்கி' எனக் புறத்திற் கூறப்படுதல் காண்க. (செய்யுள்-164). மடாஅ என்பது மடுத்து (-சேர்த்து). "மடுக்கோ கடலின்*

*விடுதிமில்" (திருக்கோவை-செய்யுள் 63) என்பதுங் காண்க. மடாஅ வினைத் திரிசொல். மெய்ப்பாடும் பயனும் அவை. ஊறா வறு என்றும் பாடம். (8)*

*இதன் பின்னிரண்டு செய்யுளும் பிரதிகளிற் காணப் படவில்லை.*

**129. .... .... .... ..... .... ...... ..... ..... .... ...... ..... (9)**

**130. .... .... .... .... ..... .... ........ ..... .... ...... ..... (10)**

**கிழவற்குரைத்த பத்து முற்றிற்று**

---

## *14. பாணற் குரைத்த பத்து*

131. நன்றே பாண கொண்கனது நட்பே
தில்லை வேலி யிவ்வூர்க்
கல்லென் கௌவை யெழாஅக் காலே.

*எ-து: (11ஆம் செய்யுள் விதி. இப்பத்திற்குமிது.) வாயில் வேண்டி வந்த பாணன் தலைமகன் காதன்மை கூறினானா கத் தலைமகள் வாயின் மறுப்பாள் அவற்குக் கூறியது.*

*இ-ள்: பாணனே! சேர்ப்பன் நம்மிடத்து வைத்திருக்கு முறவு தில்லை மரங்களாய வேலி பொருந்திய இவ்வூரிடத் துக் கல்லென்னு மொலியோடு பழிமொழி எழாதவிடத்து இனிமையுடைத்து, எ-று.*

*நன்றே என்னு மேகாரம் தேற்றம்; நட்பே என்பதிற் பிரி நிலை; காலே என்னும் ஏகாரம் அசை; மெய்ப்பாடு - இளி வரல்; பயன் - வாயின் மறுத்தல். (1)*

**132.** அம்ம வாழி பாண புன்னை
யரும்புமலி கான லிவ்வூ
ரலரா கின்றவ ரருளு மாறே.

எ-து: வாயில் வேண்டி வந்த பாணன் நீர் கொடுமை கூற வேண்டா, நும்மேல் அருளுடையர், என்றாற்குத் தலை மகள் சொல்லியது.

இ-ள்: பாணனே! கொண்கன் நம்மேல் அருளுடைய னாயிருக்குங் காரணமே புன்னை அரும்புகள் நிறையப் பெற்ற சோலையையுடைய இவ்வூரின்கண் அலராகுந் தன்மைய வாயிரா நிற்கின்றன, எ-று.

கொண்கன் என்னுஞ்சொல் வருவித்துரைக்கப்பட்டது. கானல் கடற்கரைச் சோலை. 'கானல் வரி' யென்பதானுண ரப்படும். அலர்-பிறர் கூறும் பழிமொழி. மெய்ப்பாடும் பயனும் அவை. அம்ம வாழி முன்னிலையசை. (2)

133. யானெவன் செய்கோ பாண வானாது
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
புல்லென் றனவென் புரிவளைத் தோளே.

எ-து: வாயிலாய்ப் புகுந்த பாணன் தலைமகள் தோண் மெலிவு கண்டு 'மலைப்புறத்துப் போய்வந்த துணையானே இவ்வாறு வேறுபடுதல் தகாது' என்றாற்கு அவள் சொல் லியது. புறத்துப்போன அத்துணையானே என்றும் பாடம்.

இ-ள்: பாணனே! யான்யாது தான் செய்வேன், மெல் லிய அழகிய கடற்கரையையுடைய சேர்ப்பன் பிரிந்த வவ் வளவில் அமையாதனவாய வென்னுடைய வளைந்த வளை யலணிந்த தோள்கள் வாட்டமடைந்தன, எ-று

ஓ இரக்கக் குறிப்பு; ஏகாரம் ஈற்றசை; "விண்டலை யாவர்க்கும் வேந்தர் வண்டில்லை மெல்லங் கழிசூழ்" (திருக்கோ. செ. 177), என்பதால் மெல்லிய புலம்பு இவ்வா றாதல் காண்க. புரிவளை, "இருட்டிற் புரிகுழலாட் செங் ஙனே சொல்லி யேகுவனே" (திருக்கோ. செ. 270) என்பதா னுணரப்படும். மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - ஆற்றியி ருத்தல். (3)

134. காண்மதி பாண விருங்கழிப் பாய்பரி
நெடுந்தேர்க் கொண்க னோடு
தான்வந் தன்றென் மாமைக் கவினே.

*எ-து: பிரிவின்கண் தலைமகள் கவின் தொலைவுகண்டு வெறுத்து ஒழுகுகின்ற பாணற்குத் தலைமகன் வந்துழிக் கவினெய்திய தலைமகள் சொல்லியது.*

*இ-ள்: பாணனே! கரியவாய கழியிடத்துப் பாய்ந்து செல்லுங் குதிரை பூணப்பட்ட நெடிய தேரையுடைய நங் கொண்கனோடு முன்சென்ற எனது மாமைக்கவின் தானே வந்தது, எ-று.*

*காண்மதி - முன்னிலையசை. இருங்கழி கரியகழியென் பது, "அகலோங் கிருங்கழிவாய் கொழுமீனுண்ட வன்னங் களே" (திருக்கோ. செ. 188) என்பதானுணரப்படும். முன் சென்றவென வொருசொல் வருவிக்கப்பட்டது மாமைக் கவின் 'நிவந்தோங்கு பெருமலை' போலக் கொள்க. மெய்ப் பாடு - மருட்கை; பயன் - மகிழ்தல். (4)*

135 பைதல மல்லேம் பாண பணைத்தோ
ளைதமைந் தகன்ற வல்கு
னெய்தலங் கண்ணியை நேர்தனாம் பெறினே.

*எ-து: பரத்தை யொருத்தியைத் தலைப்பெய்வான் வேண்டி அதனைத் தலைமகன் மறைத்தொழுகுகின்ற தறிந்த தலைமகள் அவன் கேட்குமாற்றாற் பாணற்குச் சொல்லியது.*

*இ-ள்: பாணனே! பணைபோலுந் தோள்களையும் மென்மையையுடையவாய் அகன்ற வல்குலையுமுடைய நெய்தற் பூவாலாய கண்ணியையுமுடையாளைத் தலைப் படுதலை யாமறியப் பெறுவோமாயின் துன்பத்தையுடைய மல்லேமாதலின் நமக்கு மறைக்க வேண்டா, எ-று.*

*கண்ணி-சூடும் பூ 'கொய்ம்மலர்க் கொன்றை மாலைக் குளிர்மதிக் கண்ணியாற்கு' (சீவகசிந். நாமக. செய். 179) என்பதனுரையானுணர்க. அன்றி முடிமாலை என்றுமாம்.*

*நேர்தனாம் பெறினே என்பதற்கு, அவனை யொத்திருத் தலை நாம் பெற்றுக் கொள்ளுவோமாயின் என்று கூறினும் பொருந்தும். மெய்ப்பாடு - அழுகை; பயன் - பரத்தைமை நீக்கல்.* *(5)*

**136.** **நாணிலை மன்ற பாண நீயே**
**கோணே ரிலங்குவளை நெகிழ்த்த**
**கானலந் துறைவற்குச் சொல்லுகுப் போயே**

*எ-து: வாயிலாய்ப் புகுந்து தலைமகன் குணங்கூறிய பாணற்கு வாயின் மறுக்குந் தலைமகள் சொல்லியது.*

*இ-ள்: பாணனே! நீ யொரு சிறிதும் நாணமுடையை யல்லைன் தம்மிலொத்த வளைந்த பிரகாசிக்கின்ற வளை யல்களை நெகிழச் செய்த கானலையுடைய துறைவனுக்கு நன்மை பயக்குஞ் சொற்களை அதிகமாய்ச் சொல்லுகின்ற வனே, எ-று.*

*சொல்லுகுப் போயாகிய பாண நீ நாணிலை என முடிக் குக. நீயே என்பதன்கண் ஏகாரம் பிரிநிலை. தனக்குத் தகா தனவற்றைச் செய்தொழுகுந் துறைவனிலும் அவன் குற்றங் களை மறைத்துக் குணங்களைக் கூறும் நீயே நாணிலை யெனப் பொருள் கொள்க. நெகிழ்த்தல் - நிலை குலையச் செய்தல்; "நாளினுநெகிழ்போடு நலனுடனிலையுமோ"[1] என்னும் கலித்தொகை யுரையானுணர்க. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல்.* *(6)*

**137** **நின்னொன்று வினவுவல் பாண நும்மூர்த்**
**திண்டேர்க் கொண்கனை நயந்தோர்**
**பண்டைத் தந்நலம் பெறுபவோ மற்றே.**

*எ-து: தலைமகன் வாயில்பெற்றுப் புகுந்து நீங்கின விடத்தும், அவன் முன்பு செய்த தீங்கு நினைந்து தலைமகள் வேறுபட்டிருந்தாளாக. 'இனி இந்த வேறுபாடு என்?' என்று வினவிய பாணற்கு அவள் சொல்லியது.*

---

1. பாலைக்கலி 16, வரி 8.

இ-ள்: பாணனே! நின்னை ஒன்று கேட்பேன், நும்மூர்க் கண்ணே வலிய தேரையுடைய கொண்கனை விரும்பியவர் பெயர்த்தும் பழைய தங்களழகைப் பெற்றிருப்பார்களோ? சொல்வாயாக, எ-று.

மற்று வினைமாற்று. ஏகாரம், ஈற்றசை. கொண்கனை நயந்தோர் நும்மூரில் பண்டைய தந்நலம் பெறுவாரு முளரோ என முடிக்க. நலம் - இயற்கையழகு; மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல். (7)

**138.** பண்பிலை மன்ற பாண விவ்வூ
ரன்பில கடிய கழறி
மென்புலக் கொண்கனைத் தாரா தோயே.

எ-து: தலைமகன் வாயில் பெற்றுப் புகுந்தது அறியாது வந்த பாணற்குத் தலைமகள் நகையாடிச் சொல்லியது.

இ-ள்: மென்மையாகிய கடற்கரையையுடைய கொண் கனை அன்பிலவாகிய கடு மொழிகளைக் கழறி இவ்வூரி டத்துத் தாராதவனாகிய பாணனே! நீ நற்குணமுடையை யல்லை, எ-று.

இவ்வூரிலுள்ளார் (நம்மைப் பிரிந்ததனாலே அவர் மாட்டுக்) கூறுகின்ற அன்பிலவாகிய கடிய மொழிகளை நீயவர்மாட்டுக் கழறி அவரை எனக்குத் தாராதோய் எனப் பொருள் கூறலுமொன்று; கழறுதால் - இடித்துக் - கூறுதல். பண்பு இப்பொருளாதலை "பயிறொறும் பண்புடையாளர் தொடர்பு" என்னுந் திருக்குறளானுமறிக (செய். 783). மெய்ப் பாடு - நகை; பயன் - மகிழ்தல். (8)

**139.** அம்ம வாழி கொண்க வெம்வயின்
மாணல மருட்டு நின்னினும்
பாண னல்லோர் நலஞ்சிதைக் கும்மே.

எ-து: ஆற்றாமை வாயிலாகப் புகுந்திருந்த தலைமகற் குப் பாணன் வந்துழித் தலைமகள் சொல்லியது.

*இ-ள்: கொண்கனே! எம்மிடத்துள்ள மாட்சிமையுடைய அழகை வேறுபடச் செய்யும் நின்னைக் காட்டினு நின் பாணன் பல பெண்களது அழகைக் கெடா நிற்கும், எ-று.*

*நின்னினும் சிதைக்கும் எனவே நீ சிதைத்தது மிக வென்பது பெறப்படும். அம்ம வாழி-முன்னிலையசை; ஏகாரம் - ஈற்றசை; மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஆற்றாமை நீக்குதல்.*

*(9)*

**140.** **காண்மதி பாணநீ யுரைத்தற் குரியை**
**துறைகெழு கொண்கன் பிரிந்தென**
**விறைகே ழெல்வளை நீங்கிய நிலையே.**

*எ-து: பாணன் தூதாகிச் செல்ல வேண்டுங் குறிப்பினளாகிய தலைமகள் அவற்குத் தன் மெலிவு காட்டிச் சொல்லியது.*

*இ-ள்: பாணனே! துறையையுடைய சேர்ப்பன் பிரிந்தானாக. முன்கையிலணியப்பட்ட நிறம் விளங்கும் ஒளியுடைய வளையல்கள் தம் நிலையில் நில்லாவாகியிருக்கு நிலைமையை நீ அவற்குக் கூறுதற்குரிமையுடையை, எ-று. ஆதலின் சென்று கூறுவாயென்பது குறிப்பெச்சம்.*

*இறை ஆகுபெயர்; காண்மதி - முன்னிலையசை; ஏகாரம் - ஈற்றசை; மெய்ப்பாடு - அழுகை; பயன் - தூது போக்கல்.*

*(10)*

பாணற் குரைத்த பத்து முற்றிற்று

---

## 15. ஞாழற் பத்து

**141.** **எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்**
**துவலைத் தண்டுளி வீசிப்**
**பசலை செய்தன பனிபடு துறையே.**

*எ-து: ("வரைவிடை வைத்த கலாத்து வருந்தினும்" என் பதை "தொகுத்த மொழியின் வகுத்தனர் கோடல்" என்னும் தந்திரவுத்தியாற் கொள்வது.)[1] வரைவிடை வைத்துப் பிரிந் துழி ஆற்றாளகின்றாதலைமகள் 'அவன் வரைதற்குப் பிரிய வும் நீ ஆற்றாயாகின்ற தென்னை' என்ற தோழிக்குச் சொல் லியது.*

*இ-ள்: மணற்றிட்டின்கண் ஞாழல் செருந்தியோடு மணம் வீசா நிற்கத் துவலையாகிய தண்ணிய துளிகளை வீசிக் குளிர்ச்சியுண்டாகா நிற்குந் துறையானது என்னை இவ்வண்ணஞ் செய்தன; யானிவ்வாறு செய்யவில்லை, எ-று.*

*எக்கர் தலைவி மனையாகவும், ஞாழல் தலைவியாக வும்; செருந்தி ஆயமாகவும், கமழ்தல் மகிழ்தலாகவும், துறைத் தலைவனாகவும் துளி வீசுதல் தனக்குத் தலைவன் கூறியன பிழைத்ததாகவும், பனிபடுதல் எக்காலத்தும் நன் மையைப் பயத்தலாகவுங் கொள்க. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுதல்.* *(1)*

**142.** **எக்கர் ஞாழ லிறங்கிணர்ப் படுசினைப்**
**புள்ளிறை கூருந் துறைவனை**
**யுள்ளேன் றோழி படீஇயரென் கண்ணே.**

*எ-து: "வந்த வழியெள்ளினும்"[2] என்பதால், வரையாது வந்தொழுகுந் தலைமகன் இரவுக்குறிக்கட் சிறைப்புறத்தா னாக, 'நின்கண் துயிறற்பொருட்டு 'நீயவனை மறக்க வேண்டு' மென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.*

---

1. 116ஆம் செய்யுளுரை பார்க்க.
2. தொல். களவியல், சூத். 20, வரி.7.

இ-ள்: எக்கர்க்கண்ணுள்ள ஞாழலினது தாழ்ந்த பூங் கொத்துக்கள் வருந்தப் புட்கள் தங்குதலையுடைய நமது சேர்ப்பனை நினையாதேனாயிருக்கின்றேன், அப்படியாக இனித்தோழியே! என் கண்கள் படுக, எ-று.

ஞாழலில் தாழ்ந்த பூச்சினை வருந்தப் புள் வதியுமென்றது, தான் வரையாது நமக்கு வருநோயறியாது தான் வேண்டுமின்பமே முடிக்கக் கருதுவான் என்பது. ஞாழல்-புலி நகக் கொன்றை. உள்ளல் - பலகாலொன்றனைச் சிந்தித்தல். படீஇயர் "செய்யோளிளமுலைப்படீஇயரென் கண்ணே" என மேலே (450ஆம் செய்யுளில்) கூறப்படுதலினாலும், புறத்தில் 202ஆம் செய்யுளினுமிவ்வாறாதல் காண்க. ஏகாரம்-அசை; மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வரைதல். (2)

143. எக்கர் ஞாழற் புள்ளிமி ழகன்றுறை
யினிய செய்த நின்றுபின்
முனிவு செய்தவிவ டடமென் றோளே.

எ-து: "அருமைக் காலத்துப் பெருமை காட்டிய வெண்மைக் காலத் திரக்கத் தானும்"[1] என்பதால், புறத்திற் றங்கி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

இ-ள்: எக்கரின் கண்ணுள்ள ஞாழல் மேலிருக்கும் புள்ளினம் ஒலிக்கும் அகன்ற துறைக்கணின்று இவளது பெரிய மெல்லிய தோள்களானவை, களவொழுக்க நிகழ்கின்ற காலத்தினிமையுடையவாயிருந்து கற்பொழுக்க நிகழ்கின்ற காலத்து வெறுப்பையுடையவாயிரா நின்றன, எ-று.

'இனிய செய்த நின்று பின்........மென்றோள்' என்றது, அக்காலத்து நினக்கு இனிமை செய்து பின் முனிவைச் செய்தனவாதலால், இஃது இத்தோள்களின் தவறல்லது நின் தவறன்றென்பதாம்; ஞாழற்கண்ணே புள்ளிமிழ் அகன்றுறை யென்றது, இவ்வூரகன்றுறையார் அலர் தூற்றுவ

1. தொல். கற்பி. சூத்.9, வரி 23-24.

ரென்பதாம். மெய்ப்பாடு - அழுகை, மருட்கை; பயன் - பரத்தைமை விலக்கல். (3)

**144.** **எக்கர் ஞாழ லிணர்படு பொதும்பர்த்**
**தனிக்குரு குறங்குந் துறைவற்**
**கினிப்பசந் தன்றென் மாமைக் கவினே.**

*எ-து: "நொந்து தெளிவொழிப்பினு"[1] மென்பதால், தலைமகன் வரைந்து கோடல் நினையாது களவொழுக்கமே விரும்பி ஒழுகாநின்றா னென்பதறிந்து வேறுபட்ட தலைமகள், 'அவன் கூறியவாற்றால் இனிக்கடிதின் வரைவன், ஆற்றாயாகா தொழிய வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: எக்கரின் கண்ணேயுள்ள பூங்கொத்துக்கள் பொருந்திய ஞாழற் சோலையில் தனித்த நாரை நித்திரை செய்கின்ற துறைவனுக்கு எனது மாமையாகிய கவின் இப்பொழுது பசந்தது, எ-று.*

*'எக்கர் ஞாழல்.........உறங்கும்' என்றது, இனிக் காலம் வந்த விடத்தும் வரைந்து கொண்டு ஒன்றுபட்டொழுக நினையாது தனித்துறைதலே விரும்புவானென்பதாம். இப்போது பசந்தது என்றது, அவன் வரைவேனென்று கூறிய வார்த்தையை மெய்யென்று கொண்டு கூறுதலால், இப்போதுகாண் என் மாமைக்கவின் பசந்தது என்றவாறு.*

*துறைவற்குப் பசந்தன்றென்பது, "அதற்கு வினையுடைமையில்" என்னும் (தொல். சொல். வேற்றுமையியல் 15ஆம்) சூத்திரத்துள் "அப்பொருட்கிளவியு மதன்பால்" என்பதனால் வந்தது. மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைதல். (4)*

**145.** **எக்கர் ஞாழற் சிறியிலைப் பெருஞ்சினை**
**யோதம் வாங்குந் துறைவன்**
**மாயோள் பசலை நீக்கின னினியே.**

---

1. தொல். கள. சூத். 20, 8.

எ-து: "ஆங்கதன் றன்மையின் வன்புறையுளப்பட"[1] என் பதால், வரைவு மறுத்தமர் உடம்படுமாற்றாற் சான்றோ ரைத் தலைமகன் விடுத்த தறிந்ததோழி தலைமகள் கேட்கு மாற்றாற் சொல்லியது.

இ-ள்: எக்கரின் கண்ணுள்ள ஞாழலது சிறிய விலை யையுடைய பெரிய சினையைத் திரை வளைக்கின்ற துறை வன் இப்பொழுது மாயோளது பசலையை நீக்கினான், எ-று.

ஞாழற்சினையை ஓதம் வாங்குந்துறைவனென்றது, தன் வழிவாராத சுற்றத்தாரைத் தன் வழியாக்குகின்றானென்ப தாம். மாயோள் பசலை நீக்கினனினியே என்றலால், முன் மறுத்தமையும் இப்போதுடன்பட்டமையும் பெறப்படும். நீக்கினனென இறந்தகாலத்தால் கூறினாள் சான்றோர் தங் கருமம் ஒருதலை முடித்தலும், அவர் மாறாமையு நோக்கி. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்ச்சி. (5)

146. எக்கர் ஞாழ லரும்புமுதி ரவிழிணர்
நறிய கமழுந் துறைவற்
கினிய மன்றவென் மாமைக் கவினே.

எ-து: வரைவு கடாவவும் வரையாதொழுகுகின்றுழி, 'நம்மை எவ்வகை நினைத்தார் கொல்லோ' என்று ஐயுற்றி ருந்த தலைமகள் வரைவுதலை வந்துழித் தோழிக்குச் சொல் லியது. இதற்கு 120ஆம் செய்யுள் விதி.

இ-ள்: எக்கரின் கண்ணுள்ள ஞாழலது அரும்பு முற் றிய அரும்பூங்கொத்து நறியவாகக் கமழா நிற்குஞ் சேர்ப்ப னுக்கு எனது மாமைக் கவினானது மிகவுமினிமையுடைய, எ-று.

அரும்பு முதிரவிழிணர் நறிய கமழுந்துறைவன் என் றது, தலைமகனன்பு முறையால் நிரம்பி வெளிப்பட்ட திறங் கூறியவாறு. அன்றி நம்மால் வரைவுகடாவவும் வரையாது

1. தொல். களவி. சூத். 23 வரி 44.

தானே வரைவொடு வருதல் பெறப்படும். மெய்ப்பாடும் பயனும் அவை. (6)

147. எக்கர் ஞாழன் மலரின் மகளி
ரொண்டழை யயருந் துறைவன்
றண்டழை விலையென நல்கின னாடே.

எ-து: (இதற்கு 145ஆம் செய்யுளிற் காண்க). சுற்றத்தார் வேண்டிய கொடுத்துத் தலைமகன் வரைவு மாட்சிமைப் படுத்தமையறிந்த தோழி உவந்த வுள்ளத்தளாய்த் தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: எக்கரின் கண்ணுள்ள ஞாழலது மலரணிதற்கில்லாத மகளிர்கள் அதனது ஒள்ளிய தழையை விரும்பியணிந்து கொள்ளுகின்ற துறைவன் நினக்கன்றி நீயணியுந் தழைக்கு விலையாக நஞ்சுற்றத்தாரேற்றுக்கொள்ளத் தன்னாட்டைக் கொடுத்தான், எ-று. ஆதலினினி வரைவு கடிதின் முடியுமென்பது குறிப்பெச்சம்.

ஞாழல் மலரில்லாத மகளிர் அதன் தழையை விரும்புந் துறைவனென்றது, உலகை வழங்க வேண்டுமுள்ளத்தன் அஃதின்மையால் நாட்டை வழங்கினானென்பதாம். மெய்ப்பாடு - உவகை; பயன் - ஆற்றுவித்தல். (7)

148. எக்கர் ஞாழ லிகந்துபடு பெருஞ்சினை
வீயினிது கமழுந் துறைவனை
நீயினிது முயங்குமதி காத லோயே.

எ-து: "அற்ற மழிவுரைப்பினும்"[1] என்பதால், களவொழுக்கத்தின் விளைவதறியாது அஞ்சிய வருத்த நீங்கக் காண வகையான், வதுவை முடித்த பின்பு தலைமகளைப் பள்ளியிடத்து உய்க்குந் தோழி சொல்லியது.

இ-ள்: எக்கரின் கண்ணுள்ள ஞாழலது உயர்ந்து வளரும் பெரிய சினைக்கண்ணுள்ள அலர் இனிதாக மணக்கின்ற

1. தொல். கற்பியல். சூத். 9, வரி 3.

துறைவனைக் காதலையுடையாளே! நீ இனிமேல் இனிதாக முயங்குவாயாக. எ-று.

மதி - முன்னிலையசை; எக்கர்...........துறைவன் என்றது, அவன் அன்பு இதன்மேலில்லையென வளர்ந்து பயன்பட்ட திறங் கூறியவாறு. (இ)னிது முயங்குமதி என்றலின், முன்னெல்லாமினிதாக முயங்கவில்லையெனவும், இனியவ் வருத்த நீங்கி முயங்குவாயென அழிவு கூறியவாறு. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல். (8)

149. எக்கர் ஞாழ பூவி னன்ன
சுணங்குவள ரிளமுலை மடந்தைக்
கணங்குவளர்த் தகறல் வல்லா தீமோ.

எ-து: "பெறற்கரும் பெரும் பொருள் முடித்தபின் வந்த தெறற்கருமரபிற் சிறப்பின் கண்ணும்"[1] என்பதால், வரைந் தெய்திய தலைமகன் தலைவியோடு பள்ளியிடத்திருந்துழித் தோழி வாழ்த்தியது.

இ-ள்: எக்கரின் கண்ணுள்ள ஞாழலது பூவைப்போல் சுணங்கு வளரும் இளமுலையை யுடைய இம்மடந்தைக்குத் துன்பத்தை வளரச் செய்து அகலுதலை மாட்டாயாயி ருக்க; எ-று.

இன் - சாரியை; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வாழ்த்துதல். (9)

150. எக்கர் ஞாழ னறுமலர்ப் பெருஞ்சினைப்
புணரி திளைக்குந் துறைவன்
புணர்வி னின்னா னரும்புணர் வினனே.

எ-து: (11ஆம் செய்யுளிற் காண்க). முன்னொருகாற் பிரிந்து வந்த தலைமகன் பின்னும் பிரிந்து வந்துழி அவனை முயங்காளாக, தோழி, நீ இவ்வாறு செய்தற்குக் காரணம் என்? என்று வினாவியவழித் தலைமகள் தோழிக்குத் தலை மகன் கேட்கச் சொல்லியது.

1. தொல். கற்பியல். சூத். 9.

இ-ள்: எக்கரின் கண்ணுள்ள ஞாழலது நறிய மலரையுடைய பெரிய சினையை கடற்றிரையலைவுபடுத்துந் துறைவன் புணர்ச்சிக்கட்டுன்பஞ் செய்வானாய் கூட்டம் அரியனாயு மிருக்கின்றான், எ-று.

நறுமலர்ப் பெருஞ்சினை வருந்தத்திரை திளைக்குமென்பது, ஓரிடத்தனாயொழுகாது வந்தும் போந்தும் தம்மை வருத்துவானென்பது மெய்ப்பாடு - அழுகை; பயன் - பரத்தைமை நீக்குதல். (10)

ஞாழற் பத்து முற்றிற்று

---

## 16. வெள்ளாங் குருகுப் பத்து

151. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காண்ணிய சென்ற மடநடை நாரை
மிதிப்ப நக்க கண்போ னெய்தல்
கட்கமழ்ந் தானாத் துறைவற்கு
நெக்க னெஞ்ச நேர்கல் லேனே.

எ-து: "வாயிலின்வருஉம்வகை" (தொல். கற். சூத். 6.) என்பதனால், வாயில் வேண்டிய தோழிக்குத் தலைமகள் வாயின் மறுப்பாள் சொல்லியது.

இ-ள்: கொக்கின் பார்ப்பு இறக்க அதனைக் காணச் சென்ற அழகிய நடையையுடைய நாரை மிதிக்க மலர்ந்த கண்ணையொத்த நெய்தல், தேன் மணத்தை வீசி அமையாத துறைவனுக்கு என் மனம் நெகிழ்ந்தது; ஆதலின் யான் உடன்படேன், எ-று.

வெள்ளாங்குருகின்..... துறைவற்கு என்றது, பரத்தையொருத்தியோடு ஒழுகுகின்ற ஒழுக்கமிடையற்றதாகச் சென்ற வாயில்கள் நெருங்க, அவள் நெஞ்சு நெகிழ்ந்து கூறிய காதன் மாற்றம் பரந்து செல்கின்ற துறைவனென்பதாம். வெள்ளாங்குருகு பரத்தையாகவும், பிள்ளை பரத்தையோடு

தலைமகளிடையுள்ள ஒழுக்கமாகவும், காணச் சென்ற நாரை வாயில்களாகவுங் கொள்க. வருகின்ற பாட்டு ஒன்பதுக்கும் இவை ஒக்கும். மிதித்தது அவளை நெருங்குதலாகவும், நக்க நெய்தல் அவள் நெஞ்சாகவும், கட்கமழ்ந்து ஆனாமை அவள் அவற்குக் கூறிய மாற்றம் எல்லார்க்கும் புலப்படுதலாகவும் இப்பாட்டிற்குக் கொள்க. ஆனாது - அமையாது. வெள்ளாங் குருகு கொக்கென்பதனை "மதிய முடல் குறைத்த வெள்ளாங் குருகினம்"[1] என்னுங் கல்லாடச் செய்யுளானு முணர்க. "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை"[2] யாகலின் பிள்ளையென்றார். மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின்மறுத்தல். (1)

152. வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கையறு பிரற்று கானலம் புலம்பந்
துறைவன் வரையு மென்ப
வறவன் போலு மருளுமா ரதுவே.

எ-து: "ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்" (தொல். கற். சூத். 6) என்பதால், தலைமகள் வாயின்மறுத்துழி 'இவன் நின்மேல் தொடர்ச்சியிற் குறைவிலன், அருளுமுடையன்; ஆதலால், நீ இவனோடு புலத்தல் தகாது' என நெருங்கி வாயில் நேர்விக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

இ-ள்: வெள்ளாங்குருகின் பிள்ளை இறக்க அதனைக் காணச் சென்ற நாரையானது செயலற்று ஒலிக்கின்ற கானல் பொருந்திய கடற்கரையையுடைய துறைவன் அப் பரத்தையை இற்பரத்தையாக வரைவனென்று கூறாகின்றாராதலின், நீ கூறியபடியே அறமுடையான்போலும், நிறைந்த அருளும் அதுவே, எ-று.

சென்ற நாரைகை யறுபிரற்றுந் துறைவனென்றது, பரத்தையிடத்துச் சென்ற வாயில்கள் கூற்றேயாய்ப் பிறிது மாற்றமின்றிச் செல்கின்ற துறைவன் என்பதாம்.

---

1. கல்லாடம், செய். 79.
2. தொல்.பொ.மரபியல், சூத். 4.

புலம்பந்துறைவன் என்பதில், அம் சாரியை; அறவன் போலும் அருளுமாரதுவே என்றது, இகழ்ச்சிக் குறிப்பு. மெய்ப்பாடு - நகை; பயன் - வாயின் மறுத்தல், பிரித்தல்.

(2)

153. வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
யுளர வொழிந்த தூவி குலவுமணற்
போர்விற் பெறூஉந் துறைவன் கேண்மை
நன்னெடுங் கூந்த னாடுமோ மற்றே.

எ-து: "பாணர் கூத்தர் விறலியரென்றிவர் - பேணிச் சொல்லிய குறைவினையெதிரும்" என்பதால், (தொல். கற். சூத். 9) பரத்தையிற் பிரிந்து வாயில் வேண்டிய தலைமகன் கேட் குமாற்றால் வாயிலாய்ப் புகுந்தார்க்குத் தோழி கூறியது.

இ-ள்: நாரைகோத உதிர்ந்த இறகை விளங்குகின்ற மணற் குன்றில் வேண்டுவார் பெறுகின்ற துறைவனது உறவை நல்ல நீண்ட கூந்தலையுடையாள் விரும்புவாளோ? விரும்பாள், எ-று.

ஓகாரம் எதிர்மறை. மற்று, எ - அசை. உளர வொழிந்த.... துறைவன் என்றது, இவன் கூறிவிட்ட வாயில்கள் மாற்றம் பரத்தை பெறுந் துறைவன் எ-று. கூந்தல் - ஆகுபெயர்; மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல். (3)

154. வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கானற் சேக்குந் துறைவனோ
டியானெவன் செய்கோ பொய்க்கு மிவ்வூரே.

எ-து (இதற்கு 153ஆம் செய்யுளிற் காண்க.) தோழி வாயில் வேண்டி நெருங்கியவழி வாயில் மறுக்குந் தலை மகள் சொல்லியது.

இ-ள்: நாரை கானலின்கண்ணே தங்குந்துறைவனோடு யான் ஒழுகுமொழுக்கமியாதாயிருக்கின்றன. இவ்வூர்பொய் யாயினவற்றைக் கூறா நிற்கும், யான் யாதுதான் செய்வேன்! எ-று.

நாரை கானற்சேக்கும் என்றது தலைமகற்கு வாயிலாகச் சென்றார் அவண் மாட்டுத் தங்குகின்றாரென்பது. இங்கே ஊர் என்றது, தோழியை. பொய்த்தல் அவன் குணங் கூறல். முதலடியிரண்டிற்கும் முன்னுரைத் தாங்குணர்க.

ஓகாரம் இரக்கம். யாதுஞ் செய்யமாட்டேன் என்பது கருத்து. செய்கு தன்வினையுரைக்குந் தன்மைச் சொல். "தகைபாடவலாய் தளர்கோ தளர்கோ"[1] என்றாற் போல மெய்ப்பாடு - அழுகை; பயன் - வாயின் மறுத்தல். (4)

155. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பதைப்பத் ததைந்த நெய்தல் கழிய
வோதமொடு பெயருந் துறைவற்குப்
பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே.

எ-து: (152ஆம் செய்யுளிற் காண்க). பலவழியானும் வாயில் நேராளாகிய தலைமகள் 'மகப்பேற்றிற்குரித்தாகிய காலங் கழிய ஒழுகுகின்றாய் என நெருங்கிய தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: நாரையினது அசைவாலே நெருங்கிய நெய்தல் மிகவும் திரையாற் போகின்ற சேர்ப்பனால் முன்னமே பஞ்சாய்ப் பாவையை யான் பெற்றேன், எ-று.

இனி வேண்டுவதில்லை யென்பது குறிப்பு; கழிய பெயரெச்சமாகக் கொள்வதுமுண்டு. ஒடுவை; உடனிகழ்ச்சியாக்கினுமமையும். துறைவற்கு என நான்காவது மூன்றாவதன்கண் வந்தது.

"பௌவநீர் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத் தற்கோ"[2] எனவும், "சாய்தாட்பாவை தந்து கொடுத்தும்"[3] எனவும்

1. சீவகசி. பதுமையார்,செய்யுள் 214.
2. கலித்தொ. மருதம், 11.
3. கல்லாடம், செய். 11.

கூறப்படுதலறிக. தண்டான் கோரையை கிழித்துச் செய்யப் பட்ட பாவை. பதைப்ப.........துறைவனென்றது, வாயில்கள் கூறப் பரத்தை யெய்திய இரக்கத்தைத் தன் தண்ணளியாற் றீர்ப்பான் என்றவாறு. இது காய்தல்; மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல். (5)

156. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி
தெண்கழிப் பரக்குந் துறைவ
னெனக்கோ காதல னனைக்கோ வேறே.

எ-து: (153ஆம் செய்யுளிற் காண்க.) பரத்தையிடத்து வாயில்விட்டு ஒழுகுகின்ற தலைமகனது வாயிலாய் வந் தார்க்குத் தோழி சொல்லியது.

இ-ள்: நாரை யசைய உதிர்ந்த செம்மறுவையுடைய தூவியாயின தெள்ளிய கழிக்கண்ணே, பரக்கின்ற துறை வன் இவண்மேல் அன்புடையனென்று நீர் கூறுகின்ற மாற் றம் எனக்கு மொக்கும்; அவமனதுக்கு ஒவ்வாது, எ-று

அன்னை என்றது, தலைவியை; செம்மறுத்தூவி தெண் கழிப் பாக்குந்துறைவன் என்பது, அப்பரத்தையருக்குக் கூறி விட்ட மாற்றம் எவ்விடத்தும் பரந்து செல்கின்ற துறைவன் என்பதாம்; மெய்ப்பாடு - நகை; பயன் - வாயின் மறுத்தல். (6)

157. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
காலை யிருந்து மாலைச் சேக்குந்
தெண்கடற் சேர்ப்பனொடு வாரான்
றான்வந் தனனெங் காத லோனே.

எ-து: "வாயிலின் வரூஉம்வகை" (கற்பியல். சூத். 6) என் பதால், பரத்தையிற் பிரிந்து வாயில் வேண்டி ஒழுகுகின்ற தலைமகன், புதல்வன் வாயிலாக வருமெனக் கேட்டு அஞ் சிய தலைமகள் புதல்வன் விளையாடித் தனித்து வந்துழிச் சொல்லியது.

இ-ள்: நாரை காலையிற் சென்று பகலெலாமிருந்து இரவிலு மவ்விடத்திற்றங்குந் தெளிந்த கடலையுடைய துறைவனோடு வாரானாய்த் தான் வந்தானெனது காதலன். ஆதலால் என் புதல்வன் என்மேற் காதலனென்பதறிந் தேன், எ-று.

ஒடு-உடனிகழ்ச்சிக் கண்ணது; எம் - படர்க்கைக்கண்ணது; அது, தலைவன்; காதலோனென, ஆகாரமோகாரமாயிற்று, "வில்லோன் காலனகழலே"[1] என்றாற்போல; ஏகாரம் - தெளிவு.

நாரை காலையிருந்து மாலைச் சேக்குமென்றது, பரத்தையிடத்து விட்டவாயில்கள் செவ்வி பெறாது பகலெலாமிருந்து இரவின்கண்ணும் அங்கே துயில்கின்றார் என்பதாம். புதல்வனை வாயிலாகக்கொண்டு செல்வதென்பது, "பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி - நீங்காயிகவாய் நெடுங்கடை நில்லாதி - யாங்கேயவர்வயிற் சென்றியணி சிதைப்பா - னீங் கெம்புதல்வனைத் தந்து" என்பதனானுமறிக (மருதக்கலி, செய்யுள் 14.) மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த உவகை; பயன் - வாயின் மறுத்தல். (7)

158. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கானலம் பெருந்துறைத் துணையொடு கொட்குந்
தண்ணந் துறைவன் கண்டிகு
மம்மர் மேனியெந் தோழியது துயரே.

எ-து: (48ஆம் செய்யுளிற் காண்க) பரத்தை புலந்துழிப் புலவி நீக்குவானாய் அஃது இடமாக வந்தமையறிந்த தோழி தலைமகற்கு வாயில் மறுத்துக் கூறியது.

இ-ள். நாரையானது கானலையுடைய பெரிய துறைக்கண்ணே துணையுடனே தோன்றித் திரியும் குளிர்ந்த அழகிய துறைவனே! நீ செய்த வருத்தத்தாலுண்டாய பசலையையுடைய என் தோழியாகிய பரத்தை கொண்ட துயரங் காண்பாயாக, எ-று.

1. குறுந்தொகை 7.

எனவே எம்மிடத்துத் துயரமில்லை, அவளது துயர மறிவேம்; அதனைத் தீர்ப்பாயாக என்பது குறிப்பு. நாரை........ கொட்கும் என்றது, நினக்கு வாயிலாய்ச் சென்றார் அவள் கருத்தறிந்து மகிழ்ந்து ஒழுகுகின்றாரென்பது. மம்மர் - "வள ருங் கறியறியாவிளமந்தி தின்று மம்மர்க்கிட னாய்"[1] என்பத னுரையானுணர்க. கொட்கும் என்பது, "கடைக்கொட்கச் செய்தக்க தாண்மையிடைக் கொட்கி - னெற்றா விழுமந் தரும்"[2] என்பதால் இப்பொருளாதலறிக - துறைவன்; அண்மை விளி; மெய்ப்பாடு - வெகுளி; பயன் வாயின் மறுத்தல். (8)

159. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பசிதின வல்கும் பனிநீர்ச் சேர்ப்ப
நின்னொன் றிரக்குவெ னல்லேன்
றந்தனை சென்மோ கொண்டவிவ ணலனே.

எ-து: "மாணலந்தாவென வகுத்தற் கண்ணும்"[3] என்ப தால், மறாமற்பொருட்டு உண்டிக்காலத்து வாயில் வேண்டி வந்த தலைமகற்குத் தோழி கூறியது.

இ-ள்: நாரை பசியானது வருத்த வருந்துகின்ற குளிர்ந்த நீரையுடைய சேர்ப்பனே! நின்னிடத்து யான் பிறிதொன் றையும் இரக்கின்றேனல்லேன், நீயிவளிடத்துக் கவர்ந்த அழகைத் தந்து செல்வாய், எ-று.

பசிதின என்பது, "கண்ணுள் கொளச்சேறி நெஞ்சே யிவை யென்னைத் தின்னுமவர்க் காண லுற்று" என்றாற் போலக் கொள்க. இலக்கணக்குறிப்பு. நீயந்த நலிவைத் தீர்க்க வேண்டு மென்பது, செய்யா மரபிற்றொழிற்படுத் தடக்கியது. அல்கும் என்பது, "நீர்மலிகரகம்போல் பழந்தூங்கு முடத்தாழை பூமலர்ந்தவைபோலப் புள்ளல்கும்"[4] என்பதனாலுணர்க. நீ கொண்ட இவள் நலந்தந்து செல்லெனக் கூட்டுக. நாரை ...........சேர்ப்ப என்றது, வாயிலாய் நின் பரத்தை மனைக் கட் சென்றார் நின்னைப் பார்த்திருந்து பசிப்பார்கள்;

1. திருக்கோ, செய். 193.
2. திருக்குறள், செய். 663.
3. தொல் கற்பி. சூத். 9 வரி 13.
4. கலித்தொகை, செய்தல், செய்.16.

*அவருடனருந்தக் கடிதின் அவள் மனைக்கட் செல்வாயென் பதாம். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - வாயினேர்தல்; மோ - முன்னிலையசை.* *(9)*

160. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
நொந்ததன் றலையு நோய்மிகுந் துறைவ
பண்டையின் மிகப்பெரி தினைஇ
முயங்குமதி பெரும மயங்கினள் பெரிதே.

*எ-து: (42ஆம் செய்யுட் குரைத்தாங் குரைக்க). புலந்த காதற்பரத்தை புலவி தீராது தலைமகன் வாயில் வேண்டி வந்தானென்றதறிந்த தலைமகள் வாயின் மறுத்துக் கூறியது.*

*இ-ள்: நாரையானது பிள்ளைக்கு வருந்திக் குருகுக்கு அதனினும் மிக வருந்துகின்ற துறைவ! பெரும! நின் பரத்தை மிகப் பெரிது வருந்தி மிகவும் மயக்கமுற்றாள்; ஆதலின் பண்டு நீ புலவி தீர்த்து முயங்குமாறுபோல முயங்குவா யாக, எ-று.*

*நாரை.......துறைவ என்றது, நின்னாற்றாமைக்குப் பரிந்து வாயிலாகச் சென்றவர்கள் அவள் வருத்தங்கண்டு மிக வருந் துகிறார்களென்பதாம். மதி - முன்னிலை இடத்து வந்த அசை; துறைவ - பெரும; மிகப் பெரிதினைஇ பெரிது மயங் கினள் பண்டையின் முயங்குமதி என முடிக்க; பண்டையின் முயங்குமதி என்றதனால் எதிர் பெய்து மறுத்த ஈரங் காண்க; துறைவ, பெரும; என்று இரண்டு விளிகள் அடுத்து வருதல், "பெரும, விருந்தொடு கைதூவா வெம்மையுமுள்ளாய்-பெருந்தெருவிற் கொண்டோடி ஞாயர் பயிற்றத் - திருந்துபு நீகற்ற சொற்கள்யாங் கேட்ப-மருந் தோவா நெஞ்சிற் கமிழ் தமயின்றற்றாற் - பெருந்தகாய் கூறு சில" என்னுங் கலித் தொகையினுங் காண்க. (மருதம், 16) மெய்ப்பாடு - உவகை; பயன் - வாயினேர்தல்.* *(10)*

வெள்ளாங் குருகுப் பத்து முற்றிற்று.

---

## 17. சிறுவெண் காக்கைப் பத்து

161. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்குப்
பயந்துநுத லழியச் சாஅய்
நயந்த நெஞ்ச நோய்ப்பா லஃதே.

*எ-து: "இட்டுப் பிரிவிரங்கினும்"[1] என்பதால், ஒரு வழித் தணந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் ஆற்றா ளாய்ச் சொல்லியது.*

*இ-ள்: பெருங் கடற்கரையிலுள்ள தாகிய சிறு வெண் காக்கையானது கரிய கொம்புகளையுடைய புன்னையினி டத்துத் தங்குகின்ற துறைவனிடத்துப் பசப்புற்று நுதலா னது அழகு கெடும்படி மெலிய, அவனை விரும்பிய மன மானது நோயின் பகுதியையுடையது, எ-று.*

*காக்கை......... துறைவன் என்றது, வரைதற்கு வேண்டுவன முயலாது தன்மனைக்கண்ணே தங்குவான் என்பது. குவ்வு ருபு கண்ணுருபாகத் திரிக்கப்பட்டது. சாஅய் என்னுஞ் செய்தெனெச்சமும் செயவென்னெச்சமாகத் திரிக்கப் பட் டது. மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைதல். (1)*

162. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்குந்
துறைவன் சொல்லோ பிறவா யினவே.

*இதுவுமது*

*இ-ள்: பெரிய கடற்கரையிலே யுள்ளவாகிய சிறு வெண் காக்கையானது செல்லு நீரையுடைய கரிய கழியிலுள்ள விரையைத் தேடியுண்டு பூக்கள் மணம் வீசும் சோலையிடத் துத் தங்குந் துறைவனுடைய இன்ன நாளுள் வரைவோ மென்னும் வார்த்தை இப்பொழுது வேறாயின, எ-று.*

---

1. தொல். களவி. சூத்.20.

*காக்கை...............சேக்கும் என்றது, வரைதற்கு வேண்டுவன முயலாது தன் கருமஞ்செய்து மனைக்கண்ணே தங்குவானென்பது. இருகரிய என்பது "நாறிருங்கூந்தலு நாடுமோ மற்றே" என்பதுபோல. நீத்துநீர் "யானைக்கு நீத்து முயற்கு நிலை" என்பதில் நீத்து நிலையில்லாத தென்பதறிக. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - வரைவு.* *(2)*

163. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யிருங்கழித் துவலை யொலியிற் றுஞ்சுந்
துறைவன் றுறந்தெனத் துறந்தெ
னிறையோர் முன்கை நீங்கிய வளையே.

*இதுவுமது*

*இ-ள்: பெரிய கடற்கரையிலுள்ளதாகிய சிறுவெண் காக்கையானது கரிய கழிநீர் துவலையாகத் தெறித்தலாலுண் டாகிய ஒலியைக் கேட்டுத் தங்குகின்ற துறைவன் நம்மைத் துறக்க, எனது வரைவையுடைய அழகிய முன்கையிலணிந்த வளை கையைவிட்டு நீங்கியன; யான் யாது செய்வேன். எ-று.*

*காக்கை.......துஞ்சுமென்றது, ஆண்டுத் தனக்கு இனியவாகக் கூறுவார் மாற்றங்கேட்டு வரைதற்கு முயலாது தங்குவான் என்றவாறு. மெய்ப்பாடு - அவலம்; பயன் - வரைதல்.*
*(3)*

164. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யிருங்கழி மருங்கி னயிரை யாருந்
தண்ணந் துறைவன் றகுதி
நம்மோ டமையா தலர்பயந் தன்றே.

*எ-து: " கொடுமையொழுக்கந் தோழிக்குரியவை - வடுவது சிறப்பிற் கற்பிற் றிரியாமைக் - காய்தலு முவத்தலும் பிரிதலும் பெட்டலும்"[1] என்பதால், தலைமகனுக்குப் புறத்தொழுக்கமுளதாயவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

---

1. தொல். கற்பியல், சூத்.6.

*இ-ள்: பெரிய கடற்கரையிலுளதாகிய சிறு வெண் காக்கையானது கரிய கழியிடத்துள்ள வயிரையை யுண்ணுந் தண்ணிய துறைவனது ஒழுக்கம் நம்மோடு மடங்காது தனக்கும் அலரையுண்டாக்கியது, எ-று: காய்ந்து - கூறியவாறு.*

*காக்கை...........ஆரும் என்றது, சேரியிடத்துறையும் புல்லியருள்ளும் புல்லியரை விரும்பித் தங்குவானென்பது. துறைவன்றகுதி.........பயந்தன்றே என்றது, அவனது ஒழுக்கம் நமக்குத் தீங்கு செய்தலேயன்றித் தனக்கும் அலர் பயந்த தென்பதாம். மெய்ப்பாடு வெகுளி. பயன் ஆற்றுதல். (4)*

**165.** பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யறுகழிச் சிறுமீ னார மாந்துந்
துறைவன் சொல்லிய சொல்லெ
னிறையே ரெல்வளை கொண்டுநின் றதுவே.

*இதுவுமது*

*இ-ள்: பெரிய கடற்கரையிலுள்ளதாகிய சிறு வெண் காக்கையானது நீரறுங்கழியிடத்துள்ள சிறுமீனை நிறைய வுண்ணுந் துறைவன் என்னைத் தெளிவிக்கும் பொருட்டு முற்காலத்துச் சூழுற்ற சொல்லன்றி இப்புறத் தொழுக்கமன்று எனது கையிடத்து அழகிய ஒளியையுடைய வளையைக் கொண்டு நின்றது, எ-று.*

*காக்கை........மாந்தும் என்றது சேரிக்கண்ணுள்ள பல புல்லிய பரத்தையரையே விரும்பித் திரிவானென்பதாம். மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுதல். (5)*

**166.** பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
வரிவெண் டாலி வலைசெத்து வெரூஉ
மெல்லம் புலம்பற் றேறி
நல்ல வாயின நல்லோள் கண்ணே.

*எ-து: "என்பு நெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ யன்புதலையடுத்த வன்புறைக் கண்ணும்"[1] என்பதால், வரையாது வந்தொழுகுந் தலைவன் சிறைப்புறத் தானாகத்*

1. தொல். களவியல், சூத்.23.

தலைமகள் பசப்பிற்கு வருந்திய தோழி அவனை இயற் பழித்துக் கூறியது.

இ-ள்: பெரிய கடற்கரையின் கண்ணுளதாகிய சிறு வெண் காக்கையானது வரிவெண்டாலி திரையாற் கரையிற் றள் ளுண்டவற்றை வலைச்சுற்றிற் கோக்கப்பட்டனவென்று அதற்குப் பயப்படுகின்ற மெல்லம் புலம்பன் கூறிய வார்த் தையை மெய்யென்று தெளிந்து நந்தலைவியது கண் இப் போது பசப்பூரப் பெற்றன, எ-று.

காக்கை...... வெரூஉம் என்றது நாம் வரைதல் வேண்டிக் கூறிய சொற்களைத் தனக்கு வருத்தஞ் செய்வனவாகக் கொண்டு வெருவுகின்றான் என்பதாம். வரி - பல நிறம். வெண்டாலி - பலகறை. மெல்லம் புலம்பன் என்பதற்கு முன் னுரைத்தாங்குரைக்க. நல்லவாயின - குறிப்பு; மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைதல். (6)

167. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யிருங்கழி யினக்கெடி றாருந் துறைவ
னல்குவன் போலக் கூறி
நல்கா னாயினுந் தொல்கே ளன்னே.

எ-து: "பல்வேறு நிலையாற்" கொள்ளும் தலைவன் தவறிலன் எனக் கூறியது. பரத்தையிற் பிரிந்த தலைமகன் விட வாயிலாக வந்தார்க்கு அவன் கொடுமை கூறித் தோழி யியற் பழித்தவழித் தலைமகள் சொல்லியது.

இ-ள்: பெரிய கடற்கரையின் கண்ணுள்ளவாகிய சிறு வெண்காக்கை கரிய கழியிலுள்ள கூட்டமாகிய கெடிற்று மீனை நிறைய வுண்ணுந்துறைவன் நமக்கு அருள் செய்வே னென முற்கூறியிப்போது அவ்வண்ணமருள் செய்யாது விடு வானாயினும் பழைய உறவாந்தன்மையையுடையான், எ-று.

எனவே பண்டு பேருதவி புரிந்த உரிமையுடையாரைக் குறை கூறலாகா தென்பது குறிப்பு. போலவென்பது ஒப்பில் போலி.

காக்கை......... ஆருந் துறைவவென்றது, சேரியிடத்துள்ள பரத்தையர் பலரையும் தனக்கு வரும் வருத்தமறியாது

நுகர்வானென்பதாம். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - இயற் படமொழிதல். (7)

168. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
துறைபடி யம்பி யகமனை யீனுந்
தண்ணந் துறைவ னல்கி
னொண்ணுத லரிவை பாலா ரும்மே.

எ-து: "முன்னிலை யறனெனப் படுத லென்றிரு வகைப் - புரைதீர் கிளவிதாயிடைப் புகுப்பினும்" (தொல். கள. சூத். 23.) என்பதால், நொதுமலர் வரைவு வேண்டி விடுத்ததறிந்த தலைமகள் ஆற்றாளாய்ப் பசியட நிற்புழி, 'இதற்குக் காரணமென்' என்று செவிலி வினவத் தோழியறத்தொடு நின்றது.

இ-ள்: பெரிய கடற்கரையின்கண்ணுள்ளதாகிய சிறு வெண்காக்கை துறைக்கண் தங்குந் தெப்பத்தினுட் கட்டையைப் பெறுந் தண்ணந்துறைவனருளப் பெறுமாயின்,ஒள்ளிய நுதலையுடைய அரிவையானவள் பாலுணவையுண்ணுவாள், எ-று. இன்றேலுயிர் வாழளென்பதாம்.

துறைபடி யம்பியகமனை யீனும் என்றது, தன்னை வந்தடைந்த யாவர்க்கும் எவ்வித தீங்குமின்றிக் காக்குந் துறைவனென அவன் சிறப்புக் கூறியவாறு.

உண்மை செப்பல் என்னும் அறத்தொடுநிலை. மெய்ப்பாடு தலைவிக்குப் பசியட நிற்றல், தோழிக்கு அச்சம். பயன் நொதுமலர் வரைவுமறுத்தல். காக்கை தலைவியும் அம்பி தலைமகனுமாகக் கொள்ளப்பட்டது. (8)

169. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
பொன்னிணர் ஞாழன் முனையிற் பொதியவிழ்
புன்னையம் பூஞ்சினைச் சேக்குந் துறைவ
னெஞ்சத் துண்மை யறிந்து
மென்செயப் பசக்குந் தோழியென் கண்ணே.

எ-து: "வாயிலின் வரூஉம் வகை" என்பதால், காதற் பரத்தையை விட்டு மற்றொரு பரத்தையுடன் ஒழுகா

நின்ற தலைமகன் வாயில் வேண்டி விடுத்துழி வாயினேர் தல் வேண்டி நின்கண் பசந்தனகாணென்று முகம் புகுகின்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

இ-ள்: பெரிய கடற்கரைக் கண்ணுள்ளதாகிய சிறு வெண்காக்கை அழகிய விணர்களையுடைய ஞாழலை வெறுப்பிற் புன்னையது பொதிதல் நீங்கிப் பூவையுடைய சினைக்கண்ணே தங்குந் துறைவனது நெஞ்சிலுள்ள உண்மை யையறிந்து யாது செய்யப் பசவா நிற்கின்றன தோழியே என் கண்களானவை? எ-று.

உண்மையறிதல் முன்னமே வாயாற் கூறியதற்கு மாறாக ஒழுகுமொழுக்கத்தையறிதல். அதுதான் விரும்பிய வண் ணம் நடத்தல். பிறர் அறிதற் கருமையதான அவன் மனக் கருத்தைத் தான் அறிந்தும் பசத்தல் அதன் அறியாமை யென்பது. உம்மை - இழிவு சிறப்பு; பொன்னிணர் - பொன் போலு மிணருமாம்.

காக்கை...............ஞாழல் வெறுப்பிற் புன்னைச் சினையுட் சேக்குமென்பது, பரத்தையர் மனையில் ஒன்று வெறுப் பின், ஒன்றின்கட் தங்குதலையுடையனென்பதாம். மெய்ப் பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல். (9)

170. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
யிருங்கழி நெய்தல் சிதைக்குந் துறைவ
னல்ல னென்றி யாயிற்
பல்லித ழுண்கண் பசத்தன்மற் றெவனோ.

எ-து: (164ஆம் செய்யுள் விதி) தலைமகற்குப் புறந் தொழுக்க முளதாயவழி வேறுபட்ட தலைமகள், 'அவற்கு அவ்வாறு நிகழ்ச்சியில்லை; நம்மேலன்புடையன்' என்று தெளிக்கும் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: பெரிய கடற்கரைக் கண்ணுள்ளதாகிய சிறு வெண்காக்கை கரிய கழியிடத்துள்ள நெய்தலைக் கெடுக் கின்ற துறைவன் நம்மிடத் தன்புடைய னென்று கூறுவையா யின், பல இதழ்களையுடைய மலர்போலும் மையுண்ட கண் கள் பசப்படைதல் வேறு யாதனானோ? கூறுவாயாக. எ-று.

*பிரித்தல். காக்கை சிதைக்குமென்றது, தான் பற்றிய பரத்தையருடைய நலஞ்சிதைப்பானென்பதாம். ஓகாரம் - எதிர்மறை; மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின்மறுத் தல். (10)*

**சிறுவெண் காக்கைப் பத்து முற்றிற்று**

---

## *18. தொண்டிப் பத்து*

171. திரையிமி ழின்னிசை யளைஇ யயலது
முழவிமி ழின்னிசை மறுகுதொ றிசைக்குந்
தொண்டி யன்ன பணைத்தோ
ளொண்டொடி யரிவையென் னெஞ்சுகொண்டோளே.

*எ-து: "பரிவுற்று மெலியினும்" (தொல். கள. சூத். 12) என்பதால், இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் ஆயத்தோடு செல்லுந் தலைமகளைக் கண்டு சொல்லியது.*

*இ-ள்: திரையிலுண்டான ஒலியின் இனிய இசையோடு முழவிலுண்டாகும் இனிய ஒலியிசை கலந்து பக்கத்தே யுள்ள வீதிகள் தோறும் ஒலியா நிற்கும் தொண்டியன்ன பணைத்தோளையுடைய வெள்ளிய தொடியை யணிந்த அரிவையானவள் என் நெஞ்சைக் கவர்ந்து கொண்டாள், எ-று.*

*திரையொலியோடு முழவொலி கலந்திசைக்குமென்றது, உடன் செல்கின்ற ஆயத்தார் மகிழ்ச்சியரவமும் உழையராய் எதிர்வருகின்றார் மகிழ்ச்சியரவமும் கூறியவாறு. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல். (1)*

172. ஒண்டொடி யரிவை கொண்டன ணெஞ்சே
வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்க
ணுரவுக் கடலொலித் திரையென
விரவி னானுந் துயிலறி யேனே.

*எ-து: "நிகழ்பவை நினைஇ உரைப்பினும்" (தொல். களவி. சூத். 11) என்பதால், 'கண்டுயில்கின்றிலை, இதற்குக்*

*காரணம் ஏன்?' என்று வினவிய பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.*

*இ-ள்: பரந்த கடலிடத்து ஒலிக்கின்ற திரையைப்போல இரவின்கண்ணாயினும் துயிலறியேனாயிருத்தல், வண்டு சத்தியா நிற்கும் குளிர்ந்த துறையையுடைய தொண்டியென்னும் அவ்விடத்தில் ஒள்ளிய தொடியை அணிந்த அரிவையானவள் என் நெஞ்சைக் கவர்ந்து கொண்டாள், எ-று.*

*ஆயினும் விகாரம், அதனருமையுணர நின்றது: மெய்ப்பாடு - அழுகை; பயன் - உற்றது உரைத்தல். (2)*

173. இரவி னானு மின்றுயி லறியா
தரவுறு துயர மெய்துப தொண்டித்
தன்னறு நெய்த னாறும்
பின்னிருங் கூந்த லணங்குற் றோரே.

*எ-து: "குற்றங்காட்டிய வாயில் பெட்பினும்" (தொல். களவி. சூத். 11) என்பதால், தலைமகன் குறிவழிச் சென்று தலைமகளைக் கண்ட பாங்கன் தன்னுள்ளே சொல்லியது.*

*இ-ள்: தொண்டியிடத்துள்ள குளிர்ந்த நறிய நெய்தற் பூவின் மணநாறுகின்ற பின்னிய கரிய கூந்தலையுடையாளால் துன்பமடைந்தோர் இரவின் கண்ணாயினும் துயிலென்பதறியாராய் மணியிழந்த அரவுபடுந்துயரத்தையடைவர், எ-று.*

*சேய்மைக்கண் நாறுதலின் நெய்தனாறு மென்றான். தலைவியை விதந்தவாறு. "பின்னிருங் கூந்தல்" - இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - தலைமகளை வியத்தல். (3)*

174. அணங்குடைப் பனித்துறைத் தொண்டியன்ன
மணங்கமழ் பொழிற்குறி நல்கின ளுணங்கிழைப்
பொங்கரி பரந்த வுண்க
ணங்கலிழ் மேனி யசைஇய வெமக்கே.

எ-து: (இதுவுமது) குறிவழிச் சென்று தலைமகளைக் கண்டுவந்த பாங்கன், அவள் நின்றுழி நின்றாளென்று கூறிய வழி ஆண்டுச் செல்லக் கருதிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது. "சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினும்" (தொல். கள. சூத். 11) விதியாகக் கூறுவர் நச்சினார்க்கினியர்.

இ-ள்: தெய்வங்களுறைகின்ற குளிர்ந்த துறையையுடைய தொண்டியைப் போலும் நறுமணங் கமழும் பொழிலின் கண்ணுள்ள குறியிடத்து மெலிந்த எனக்கு மெலிவடையா வண்ணம் பொலிவையுடைய இரேகைகளமைந்த மையுண்டகண்ணி முன்னம் அருள் செய்தாள்; இப்போதும் விளங்குகின்ற இழையணிந்த கலங்கிய அழகிய மேனியை அவ்விடத்துக் காட்டி நின்றாள். எ-று.

ஆயன் நானவளை எய்துதல் தப்பாதென்றவாறு. நல்கினள் என்பது கண் நல்கினள், மேனி நல்கினள் என இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. அணங்கிடைத் தொண்டியன்ன பொழில் என்றது, அடைந்தார் துயரை அழித்தலும் அடையார் துயரை ஆக்கலும் உடைய பொழில் என்றவாறு. தன்னியல்பு பிறரால் அறியப்படாத பொழில் எனினுமாம். மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல். (4)

175. எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோ
ணன்னுத லரிவையொடு மென்மெல வியலி
வந்திசின் வாழியோ மடந்தை
தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே.

எ-து: (இதுவுமது) பாங்கற் கூட்டங் கூடி நீங்குந் தலைமகன் இனி வருமிடத்து நின் தோழியோடும் வரல் வேண்டுமெனத் தலைமகட்குக் கூறியது.

இ-ள்: மடந்தையே! வாழ்வாயாக, தொண்டியன்ன நற்குணங்கள் பலவற்றையும் கொண்டு எமக்கு விரும்பியருள் செய்தனையாயிற் பணைத்தோளையும், அழகிய நுதலையுமுடைய தோழியுடன் மெல்ல மெல்ல நடந்து இனி வருவாயாக. எ-று.

ஒகாரம் - அசை; மெய்ப்பாடு - மருட்கை; பயன் - குறை நயப்புக்கூறல். (5)

176. பண்பும் பாயலுங் கொண்டன டொண்டித்
தண்கமழ் புதுமலர் நாறு மொண்டொடி
யைதமைந் தகன்ற வல்குற்
கொய்தளிர் மேனி கூறுமதி தவறே.

*எ-து: "தோழி - குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்" (தொல். கள. சூத். 11) என்பதால், தலைமகளும் தோழியும் ஒருங்கு நின்றுழிச் சென்ற தலைமகன் 'இவள் என்னை இவை கோடற்குக் காரணம் என்' என்று தோழியை வினாவ நிற்றல்.*

*இ-ள்: நுண்ணியதாயகன்ற வல்குலையுடைய கொய் யுந் தளிர்போலும் மேனியையுடையாள், தொண்டியிடத் துள்ள குளிர்ந்த மணம் வீசுகின்ற புதிய மலர் தோன்றும் ஒண்டொடியையுடையாள் எனது குணங்களையும் நித்திரை யையும் கவர்ந்து கொண்டனள். அவளவ்வாறு செய்தற்கு என்னிடத்துள்ள குற்றத்தைக் கூறுவாய். எ-று.*

*ஒண்டொடி, மேனி என்பன அன்மொழித்தொகை. மதி - முன்னிலையசை; பாயல் இடத்து நிகழ்தொழில் இடத் தின்மேல் நின்றது; மெய்ப்பாடு - மருட்கை; பயன் - குறை நயப்பித்தல். (6)*

177. தவறில ராயினும் பனிப்ப மன்ற
விவறுதிரை திளைக்கு மிடுமண ணெடுங்கோட்டு
முண்டக நறுமலர் கமழும்
தொண்டி யன்னோ டோளுற் றோரே.

*எ-து: "எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்" (தொல். கள. சூத். 23) என்பதால், படைத்து மொழிந்தது. தலைமகளுந் தோழியும் ஒருங்கு நின்றுழி 'இவள் என்னை வருத்துதற்குச் செய்த தவறு என்?' என்று வினாவிய தலை மகற்குத் தோழி நகையாடிக் கூறியது.*

*இ-ள்: தாம் ஒரு தவறு இல்லாராயினும் நடுங்குவார் கள் மிகவும், உலாவுகின்ற திரை பல்முறை நெருங்குகின்ற திரையாலிடப்பட்ட நீண்ட கரைக்கண்ணுள்ள கழி முள்ளி யது, நறிய மலர் மணம் வீசும் தொண்டிபோல்வாளது தோளை யெதிர்ப்பட்டோர், எ-று.*

இவறுதிரை தொண்டி என்றது, ஒருவாற்றானுங் குறைவின்றிப் பிறர் பொருள் கவராது குறையுடையார் சிலர் குறை செய்ய அதனைக் கொள்ளாது, அவர்க்கு இன்பஞ் செய்யுந் தொண்டி போல்வாள் என்பதாம். நீயே குறை கூறி வருந்துவதன்றி அவள் குறை செய்திலள் என்பது குறிப்பு. மெய்ப்பாடு - நகை; பயன் - செவ்வி பெறுதல்.

இதன் இறைச்சி: நீரறா நிலத்து முண்டக நறுமலர் கமழுந் தொண்டி யன்னோளென்றது இவள் நாம் அணுகி நுகர்தற்கு அரியளென்பதென்ப. (7)

**178. தோளுங் கூந்தலும் பலபா ராட்டி**
**வாழ்த லொல்லுமோ மற்றே செங்கோற்**
**குட்டுவன் றொண்டி யன்ன**
**வெற்கண்டு நயந்துநீ நல்காக் காலே.**

எ-து: "அறிந்தோ ளயர்ப்பி னவ்வழி மருங்கிற்கேடும் பீடுங் கூறலும்" (தொல். கள. சூத். 11) என்பதால், தலைமகன் தோழியை யிரந்து குறையுறுவான் சொல்லியது.

இ-ள்: செங்கோலனாகிய சேரனது தொண்டி போல்வேனாகிய என்னைக் கண்டு, தோழி! நீ விரும்பி அருள் செய்யாத காலத்து யானவளது தோளையுங் கூந்தலையும் புனைந்து வாழ்தல் பொருந்துவதோ? கூறுவாயாக, எ-று.

மற்று - அசை; ஓகாரம் வினா; இடங் காலமாயிற்று. 'செங்கோற்குட்டுவன் றொண்டியன்ன என்' என்றது, தன்னை அவள் தேறுதற் பொருட்டுத் தன் செப்பங் கூறியவாறு. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை யுணர்த்தல்.

(8)

**179. நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப**
**வலவன் றாக்கத் துறையிறாப் பிறழு**
**மின்னொலித் தொண்டி யற்றே**
**நின்னல தில்லா விவள்சிறு நுதலே.**

எ-து: "களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக் காதன் மிகுதி யுளப்பட" (தொல். கள. சூத். 23) என்பதனால்,

குறியிடத்து வந்து புணர்ந்து நீங்குந் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு வரைவு கடாவியது. இது காதன் மிகுதி கூறியது.

இ-ள்: குளிர்ந்த நீர் பொருந்திய சேர்ப்பனே! வாழ்வாயாக. நண்டு விளையாட்டாக மோதத் துறைக்கண்ணே யுள்ள இறவு மீன் புரளும் இன்னொலியையுடைய தொண்டி போலுமிவளது சிறு நுதலினழகு நின்னாலல்லது இல்லையாய்விடும், ஆதலின் காப்பாயாக, எ-று.

அலவன் றாக்கத் துறையிறாப் பிறழும் என்றது, இவ் வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாய ஞான்று இவளுயிர் வாழாள் என்பதாம். மெய்ப்பாடு - அச்சம்; பயன் - வரைவு கடாதல்; ஓகாரம் அசை. (9)

180. சிறுநணி வரைந்தனை கொண்மோ பெருநீர்
வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்
பறைதபு முதுகுரு கிருக்குந்
துறைகெழு தொண்டி யன்னகூ ணலனே.

எ-து: "வரைவுடன் பட்டோற் கடாவல் வேண்டினும்" (மேற்படி. சூத்.) என்பதால், தாழ்த்து வரையக் கருதிய தலைமகனைத் தோழி நெருங்கிக் கடிதின் வரைய வேண்டுமெனக் கூறியது.

இ-ள்: கடலின்கண் பரதவராலே பிடித்துக்கொண்டு வரப்பட்ட கொழு மீனாகிய உணவைக் கருதிப் பறத்தலில்லாத முதிய நாரைகள் இருக்கின்ற துறை பொருந்திய தொண்டி போல்வாளது அழகை மிக விரைவில் காத்துக் கொள்வாயாக, எ-று.

வரைந்தனை கொண்மோ ஒரு சொல்விழுக்காடு; மோ - முன்னிலையசை; கொழுவிய மீன் என்றுமாம். வல்சி - பலவுணவு; வலவர்தந்த... குருகிருக்கும் என்றது, நொது மலர்க்கு மகட் பேச வந்திருக்கின்ற சான்றோர் உளரென்பது; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவுகடாதல்.

இவை பத்தும் சொல் வகையானன்றிக் கிளவி வகையானும் தொடர்ச்சியுடையவாறு காண்க. (10)

தொண்டிப் பத்து முற்றிற்று.

---

## 19. நெய்தற் பத்து

181. நெய்த லுண்க ணேரிறைப் பணைத்தோட்
பொய்த லாடிய பொய்யா மகளிர்
குப்பை வெண்மணற் குரவை நிறூஉந்
துறை கெழு கொண்க னல்கி
னுறைவினி தம்மவிவ் வழுங்க லூரே.

எ-து: "வரைவுதலை வரினும்" (தொல். கள. சூத். 20, வரி 25) என்பதால், இக்களவொழுக்கம் நெடிது செல்லின், இவ் வூர்க்கண் அலர் பிறக்குமென்று அஞ்சியிருந்த தலைவி, 'தலை மகன் வரைந்து கொள்ளத் துணிந்தான்' என்று கூறிய தோழிக் குச் சொல்லியது.

இ-ள்: நெய்தல் மலர்போலும் மையுண்ட கண்ணும் நுண்ணிய சந்தையுடைய பருத்த தோள்களையுமுடைய, பொய்தலென்னும் விளையாட்டையாடிய பொய்யா மக ளிர், வெண்மணற் குவியற்கண்ணே குரவைக் கூத்தை நிறுத் துந் துறையையுடைய சேர்ப்பன் அருள் செய்யின் இவ் வழுங்கலூர்க் கண்ணுறைதலினிதாகும், எ-று.

பொய்யா - பொய் - குற்றம், ஆகாரம் - எதிர்மறை; "பொய்படு மொன்றோ புனைபூணும்"[1] என்றாற்போல, குப்பை - குவியல், "கோடிபல வடுக்கிய கொழுநிதிக் குப்பை" என்றதுபோல. குரவை என்பது வரிக்கூத்துறுப்பினுள் ஒன்று. அது எழுவரேனு மெண்மரேனு மொன்பதின்மரேனும் சம நிலையில் மண்டிலமாக நின்று கடகக்கை கோத்துக் குறிக் கப்பட்டவரது அழகு புகழ் வீரம் முதலிய பாடி, குரல் முத லாகிய நரம்பின்கண் அவ் வெழுவரை நிறுத்திக் குரலிடத் துக் குறிக்கப்பட்ட தலைவரை நிறுத்தி, மற்றுள்ள நரம்பின் கண் தலைவியையும் மற்றுள்ளோரையும் நிறுத்தி, அவரவ ரடையாளப் பூக்களையும் அணிந்து நின்றாடுவது. கடகக் கையாவது, நடுவிரலும் அணிவிரலும் முன்னே நின்று மடிந்து

1. திருகுறள், செய். 836.

மற்றையிரண்டு விரல்களுங் கோத்தல், இரு விரல்களையும் தம்முள்ளே கோத்துப் பெருவிரல்கள் நீக்க நண்டாம் என்பது. இராசி மண்டலமாக ஒரு சக்கரங் கீறிக் கிழக்கே இடப முதலாகப் பன்னிரண்டிராசியையுமமைத்து, "குரறுலை விற்றுத்தங் கைக்கிளையே கும்பம் - பரியவுழை மீனம் பாவா - யரிதாரம் - கொல்லே றுளிவிளரி கற்கடகங் கோப்ப மைந்த - தொல்லே ழிசை நரம்பிற் காம்" என்பதும், எழு வரிளங் கோதையரை நிறுத்துவதும் இவற்றின் விரிவை யெல்லாம் நாடக நூலிற் காண்க. இன்ப துன்பங்களாகிய காரணங்களைக் குறித்தே யாடப்படுமென வுணர்க. மகளிர் கொண்கனென்றது, மகளிர் தங்காதலரோடாடும் இவ்வூ ரில் தனித்துறைதல் அரிதென்பதாம். மெய்ப்பாடு - உவகை; பயன் - வரைதல். (1)

182. நெய்த னறுமலர் செருந்தியொடு விரைஇக்
கைபுனை நறுந்தார் கமழு மார்ப
னருந்திறற் கடவு ளல்லன்
பெருந்துறைக் கண்டிவ ளணங்கி யோனே.

எ-து: "களம் பெறக்காட்டினும்" (தொல். - கள - சூத். 23) என்பதால், தலைமகள் மெலிவு கண்டு செவிலி தெய்வத் தாலாயிற்றெென அறிவரைக்கூஉய்க் களத்தைப் பெறா நிற் கத் தோழி தமர்க்கு அறத்தொடு நின்றது. நச்சினார்க்கினி யார் வேலற்குக் கூறியதென்பர். களம் - கட்டும் களங்கும் இட்டுரைக்கு மிடமும் வெறியாட்டிடமுமாம்.

இ-ள்: நெய்தலின் நறுவிதாகிய மலர் செருந்திப் பூ வோடு கலந்து, தொழில் பெறப் புனையப்பட்ட நறுமாலை மணம் வீசுகின்ற மார்பன் பெரிய துறைக்கண்ணே இவ ளைக் கண்டு வருத்தியவன் அரிய திறலையுடைய கடவுளல் லன், எ-று.

நெய்தல்....மார்பன் என்பது, இரண்டொழுக்கத்தும் ஒரே தன்மையாகியும் ஈருடற் கோருயிராயுமுள்ள துறைவ னென்றபடி. ஏகாரம் - பிரிநிலை; மெய்ப்பாடு - பெருமிதத் தைச் சேர்ந்தநகை; பயன் - குறிப்பால் வெறிவிலக்கி அறத் தொடுநிற்றல்; (2)

183. கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்
குறும்பொறை நாட னல்வய லூரன்
தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்பக்
காலை வரினுங் களைஞரோ விலரே.

*எ-து: "வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்" (தொல். - கள; - சூத். 21) என்பதைத் 'தொகுத்த மொழியின் வகுத்தனர் கோடல்' என்னுந் தந்திரவுத்தியாகக் கொள்வதால், தலைமகன் வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றாளாகிய தலைமகள் மாலைக்குச் சொல்லியது.*

*இ-ள்: கூட்டமாகிய கான்யாறு பொருந்திய கானக நாடன் குன்ற நாடன் வயலூரன் குளிர்ந்த கடற்கரையையுடையனுமாகிய சேர்ப்பன் பிரியமுன் வருங்காலத்தில் வருவதுபோல யாருங் காணக் கடும்பகற்கண்ணே வாரா நின்றாய்; இதுவன்றிக் காலையில் வரினும் உன்னை நீக்குகின்றாரில்லை, கொழுங்கழியிடத்தவாய நெய்தன்மலருங் குவியும் பொருட்டு. எ-று. கெழு - அசை; ஓகாரம் - இரக்கக் குறிப்பு.*

*இதனை நச்சினார்க்கினியர் "முதல் கருவுரிப் பொருளென்ற மூன்றே" (தொல். - அகத்திணையியல் - சூத். 3) என்னுஞ் சூத்திரத்து இடம் நியமித்துக் கூறியதெனவும்; "திணைமயக்குறுதலும் கடி நிலையிலவே - நிலனொருங்கு மயங்குதலின்றென மொழிப - புலனன்குணர்ந்த புலமையோரே" என்னுஞ் சூத்திரத்து (மேற்படி இயல், சூத்.12.) முதலிரண்டடியுமின்றியும்; "கடும்பகல் வருந்திக் கையறு - மாலை நெய்தலுங் கூம்ப" எனக் காட்டி, வரைவிடையாத தலைவி மாலைப்பொழுது கண்டு தோழிக்குக் கூறியதாகவுங் காட்டுவர். மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.*

*(3)*

184. நெய்த லிருங்கழி நெய்த னீக்கி
மீனுண் குருகிளங் கான லல்குங்

கடலணிந் தன்றவ ரூரே
கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே.

*எ-து: (11ஆம் செய்யுள் விதி கொள்க.) வாயில் வேண்டி வந்தார் தலைமகன் அன்புடைமை கூறியவழி வாயின் மறுக்குந் தலைமகள் சொல்லியது.*

*இ-ள்: நெய்தலாகிய கரிய கழியிடத்துள்ள நெய்தலை நீக்கிவிட்டு மீன்களை யுண்ணுகின்ற பறவைகள் இளைய சோலைக்கண் தங்குகின்ற கடல் சூழப்பட்டிருக்கின்றது; அவருடைய ஊரானது, அவரோடு நம்மிடையுள்ள நட்புக் கடலினும் பெரியதாயிருக்கின்றது, எ-று.*

*ஏகாரம் - அசை; நெய்தலிருங்கழி - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. நெய்தல் நீக்கி மீனுண் குருகிளங்கானல்குமென்றது, சேரிக்கண்ணுள்ள பரத்தையரது ஊடலை நீக்கி யின்ப நுகர்ந்து ஆண்டுத் தங்குவானென்பது. எமக் கவரிடை நட்புப் பெரிதேயென உடன்படுவாபோல் மறுத்தது. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல். (4)*

185. அலங்கிதழ் நெய்தற் கொற்கை முன்றுறை
யிலங்குமுத் துறைக்கு மெயிறுகெழு துவர்வா
யாம்போ ழவ்வளைக் குறுமக
ணரம்பார்த் தன்ன தீங்கிள வியளே.

*எ-து: "தண்டாதிரப்பினும்" - இடந்தலைப்பாடு முதலிய கூட்டங்களான் அமையாது பின்னும் பகற்குறியையும் இரவுக்குறியையும் வேண்டினும்; இன்னும், "இரட்டுறமொழிதல்" என்னு முத்தியாற்கொள்ளும் தோழி நின்னாற் கருதப் படுவாளை யறியேனென்றுழி அவன் அறியக் கூறியது (தொல். கள. சூத். 11). 'ஆயமகளிருள் நின்னால் நயக்கப்பட்டாள் யாவள்' என வினவிய தோழிக்குத் தலைமகன் சொல்லியது.*

*இ-ள்: அசைகின்ற இதழமைந்த நெய்தல் பொருந்திய கொற்கைத் துறையிடத்துள்ள விளங்குகின்ற முத்தை நிகர்க்கும் பற்களமைந்த பவளம் போன்ற வாயையுடைய,*

அரத்தாலூடறுக்கப்பட்ட வளையையணிந்த சிறுமகள் நெய்தலியாழ் போலும் இனிய சொல்லைச் சொல்லுதலுடையாள், எ-று.

முன் - கருதப்படும் என்றுமாம்; முத்துறைக்கும் - முத்தைச் சிந்தும் என்றுமாம்; "சரத முடையர் மணிவாய் திறக்கிற் சலக்கெனவே"[1] என்றாற்போல. இதனால் அவள் நின்ற இடமும் நிலையும் பெருமையும் தோற்றமும் இன்பமும் கூறியறிவித்தவாறு. மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - ஐயமறுத்தல். (5)

186. நாரை நல்லினங் கடுப்ப மகளிர்
நீர்வார் கூந்த லுளருந் துறைவ
பொங்குகழி நெய்த லுறைப்ப வித்துறைப்
பல்கால் வரூஉந் தேரெனச்
செல்லா தீமோ வென்றனள் யாயே.

எ-து: "காப்பின் கடுமை கையறவரினும்" (தொல். கள. சூத். 23) என்பதால், பகற்குறிக்கண் வந்து திரும்புந் தலைமகனைத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

இ-ள்: நல்ல நாரையினங்கள் இறகைக் கோதியிருத்தலைப் போல மகளிர் தமது நீரமைந்த கூந்தலைக் கோதுகின்ற துறைவனே! பொலிவையுடைய கழியிலுள்ள மலர் உதிர இத்துறைக்கண்ணே பலமுறை நின்தேர் வருகின்றதென அறிந்து யாய் இனிப் போகாதே என்று கூறினாள், எ-று.

நாரை......துறைவ என்றது, தம்மிடத்து வருங் குற்றம் நீக்கும் மகளிரையுடைய துறைவ என்றபடி. களவின்கண் மறுதலையாயினும் வழுவாயமைந்தது "தேரும் யானையும்" என்னுஞ் சூத்திர விதியின் (தொல். பொருளியல். சூத். 18). மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது. (6)

---

1. திருக்கோவையார், செய். 57.

187. நொதும லாளர் கொள்ளா ரிவையே
யெம்மொடு வந்து கடலாடு மகளிரு
நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையா
ருடலகங் கொள்வோ ரின்மையிற்
றொடலைக் குற்ற சிலபூ வினரே.

*எ-து: "பாங்குறவந்த நாலெட்டுவகையுந் - தாங்கருஞ் சிறப்பிற்றோழிமேன" (தொல். கள. சூத்.23) என்பதன் வகை யாற் கொள்வது. தோழி தலைவன் கொண்டு வந்த கையுறை மறுத்தது.*

*இ-ள்: நீயல்லாதாரில் இப்பூப்பறிப்பாரில்லை; எம் மோடு வந்து கடலின்கண் நீர்விளையாடுகிற மகளிரும் ஒன் றற் கொன்று மாறாகிய நெய்தற் றழையால் பாவைதானும் புனையமாட்டார்; மாலை தொடுப்பாரும் இதனிற் சில பூக்கொள்வதல்லது இப்பூத்தன்னையே கொண்டு தொடலை தொடுப்பாரில்லை, எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - அருமை செய்தல். (7)*

188. இருங்கழிச் சேயிறா வினப்புள் ளாருங்
கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை
வைகறை மலரு நெய்தல்போலத்
தகைபெரி துடைய காதலி கண்ணே.

*எ-து: "நன்னெறிப் படருந் தொன்னலப் பொருளி னும்" (தொல். கற்பி. சூத். 5) என்பதால், விருந்துவாயிலா கச் சென்ற தலைமகன் தலைவி இல்வாழ்க்கைச் சிறப்புக் கண்டு மகிழ்ந்து கூறியது.*

*இ-ள்: பெரிய கழியிடத்துள்ள சிவந்த இறவு மீனை இனமாகிய புட்களுண்ணும் பாண்டியனது கொற்கையம் பெருந்துறைக்கண் வைகறையில் மலருகின்ற நெய்தல் மலர் போல நங்காதலி கண்ணானவை தகுதிப்பாடு மிகவுடை யன, எ-று.*

*சிறுபொழுதும் மயங்கிற்று. இருங்கழிச் சேயிறாவினப் புள்ளாரும் என்றது, விருந்தினர் நுகர்ச்சி கூறியவாறு.*

வைகறை மலரும் நெய்தலைக் கண்ணிற்குவமித்தது வந்த பொழுதே மலர்ந்த சிறப்பு நோக்கியென்க. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல். (8)

**189.** **புன்னை நுண்டா துறைத்தரு நெய்தல்**
**பொன்படு மணியிற் பொற்பத் தோன்று**
**மெல்லம் புலம்பன் வந்தென**
**நல்லவாயின தோழியென் கண்ணே.**

*எ-து: (177ஆம் செய்யுள் விதி) வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் வரைவான் வந்துழிக்கண்டு உவகையோடு வந்த தோழி, "நின் கண மலர்ச்சிக்குக் காரணமென்" என்று வினாவிய தலைவிக்குச் சொல்லியது.*

*இ-ள்: புன்னையது நுண்ணிய மகரந்த முதிர்ந்து கிடக்கின்ற நெய்தற் பூவானது, பொன்னை யிடையிடையே பொருந்தப்பெற்ற மணியைப்போல அழகுபெறத் தோன்றுகின்ற மெல்லம் புலம்பன் வந்தானாகத் தோழியே! என் கண்கள் அழகையுடையவாயின, எ-று.*

*புன்னை......தோன்றுமென்றது, நின் குடிப் பிறப்பும் அழகும் பண்டையிலும் சிறத்தற்குக் காரணமாயிற்றென்று வரைபொருளோடு வந்தமை கூறியவாறு. மணி - நீலமணி. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைவியை யாற்றுவித்தல். (9)*

190. தண்ணறு நெய்தற் றளையவிழ் வான்பூ
வெண்ணெ லரிநர் மாற்றின ஏறுக்கு
மெல்லம் புலம்பன் மன்றவெம்
பல்லித முண்கண் பனிசெய் தோனே.

*எ-து: (107ஆம் செய்யுளிற் காண்க). தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.*

*இ-ள்: குளிர்ந்த நறிய நெய்தலது முறுக்குவிட்டு விரிந்த வெள்ளிய பூவை வெண்ணெல் அரிகின்ற களமர் விட்டு நெல்லையறுக்கும் மெல்லம்புலம்பன் எமது பல விதழ்களையுடைய மலர்போலும் மையுண்ட கண்கள் மிக நீரைச் சிந்தச் செய்தோன், எ-று.*

*வெண்ணெல்லரிநர் நெய்தற்பூ மாற்றினர் அறுக்கும் புலம்பன் என்றது, தனக்கு அடுத்தது செய்வதன்றிப் பிறர்க்கு வருத்தஞ் செய்யானெனத் தலைமகன் குணங் கூறியவா றாம். இது ஏத்தல். மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - அறத் தொடுநிற்றல்.* *(10)*

நெய்தற் பத்து முற்றிற்று

---

## *20. வளைப் பத்து*

**191.** **கடற்கோடு செறிந்த வளைவார் முன்கைக்**
**கழிப்பூத் தொடர்ந்த விரும்பல் கூந்தற்**
**கானன் ஞாழற் கவின்பெறு தழையள்**
**வரையர மகளிரி னரியளென்**
**னிறையரு நெஞ்சங் கொண்டொளிந் தோளே.**

*எ-து: (173ஆம் செய்யுள் விதியாற் கொள்க). நின்னாற் காணப்பட்டவள் எவ்விடத்து எத்தன்மையள் என்று வினா விய பாங்கற்குத் தலைமகன் இவ்விடத்து இத்தன்மையள் எனக் கூறியது.*

*இ-ள்: கடற்கண்ணுள்ள சங்கினா லாக்கப்பட்ட நெருங் கிய வளையல்களணிந்த நீண்ட முன் கையும், கழிக்கண் ணுள்ள பூத்தொடர்ந்த கரிய பலவாகிய கூந்தலையும், கானற் கண்ணுள்ள ஞாழல்களது அழகமைந்த தழையையு முடையள்; வரையமகளிரினும் இனிமையள்; அவள் என்னு டைய நிறையையுடைய வரிய நெஞ்சைக் கவர்ந்துகொண்டு ஒளித்தவள், எ-று.*

*கோடு கரையுமாம். கையள் கடந்தவள் தழையள் என் பதால் தன்மையும், அரியள் என்பதால் இடமும் பெருமை யுங் கூறினான். மெய்ப்பாடு - உவகை; பயன் - பாங்கற் குரைத்தல்.* *(1)*

192. கோடுபுலங் கொட்பக் கடலெழுந்து முழங்கப்
பாடிமிழ் பனித்துறை யோடுகல முகைக்குந்
துறைவன் பிரிந்தென நெகிழ்ந்தன
வீங்கின மாதோ தோழியென் வளையே.

*எ-து: "பெற்றவழி மலியினும்" (தொல். கள. சூத். 20) என் பதால், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் வந்துழித் தலைவி முனிந்து கூறுவாள் போலத் தன் மெலிவு நீங்கி னமை தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: சங்குகள் கரைக்கண்ணே திரியக் கடலெழுந் தாரவாரிக்க ஒலியையுடைய குளிர்ந்த துறைக்கண் ஓடு கலத்தைச் செலுத்துந் துறைவன் பிரிய, எனது வளை கழன் றன; இக்காலத்து இறுகின, தோழியே! எ-று. மாதோ அசை.*

*"கோடு புலங்கொட்பக்......கலமுகைக்கும்" என்றது, நொதுமலர் நீங்க, நஞ்சுற்றத்தார் மகிழ, அலர் கூறும் அய லார் சிதைய அவர் தேர் வந்ததென்பது. மெய்ப்பாடு - உவகை; பயன் - தோழிக்குக் குறிப்பானுணர்த்தல். (2)*

193. வலம்புரி யுழுத வார்மண லடைகரை
யிலங்குகதிர் முத்த மிருள்கெட விமைக்குந்
துறைகெழு கொண்கநீ தந்த
வறைபுனல் வால்வளை நல்லவோதாமே.

*எ-து: "களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக் - காதன் மிகுதி யுளப்படப் பிறவும்" (தொல். கள. சூத். 23) என்ற பிறவினாற் கொள்வது. வரையாது வந்தொழுகுந் தலைமகன் தலைமகட்கு வளை கொண்டு வந்து கொடுத் துழிப், 'பண்டைவளை போலாவாய் மெலிந்துழி நீங்கா நலனுடையவோ இவை' எனத் தலைமகள் மெலிவு கூறித் தோழி வரைவு கடாயது.*

*இ-ள்: வலம்புரிச் சங்குகளுழுத நீண்ட மணல் பொருந் திய அடைகரைக்கண்ணே விளங்குகின்ற ஒளியையுடைய முத்துக்கள் அவ்விடத்து இருள் நீங்கப் பிரகாசிக்கின்ற துறையையுடைய கொண்கனே! நின்னாற்பட்ட ஒலிக்*

*கின்ற நீரிலுள்ள வெள்ளிய சங்க வளையல்கள் துன்ப மின்றி நன்மை செய்வனவோ? கூறுவாய், எ-று.*

*முத்தமிருள் கெட விமைக்குந் துறைகெழு கொண்க என்றது, இவட்கு வருகின்ற தீங்கைக் கடிதினீக்கி வரைந்து கொள்ள வேண்டுமென்பதாம். மெய்ப்பாடு - அழுகைச் சுவை சார்ந்த பெருமிதம்; பயன் - வரைவு கடாதல். (3)*

**194.** **கடற்கோ டறுத்த வரம்போ ழுவ்வளை**
**யொண்டொடி மடவரற் கண்டிகுங் கொண்க**
**நன்னுத லின்றுமால் செய்தெனக்**
**கொன்னொன்று கடுத்தன ளன்னையது நிலையே.**

*எ-து: (இதற்கு 189ஆம் செய்யுளிற் கூறியவாறு கூறுக). பகற்குறிக்கண் வந்து நீங்குந் தலைமகனைத் தோழி எதிர்ப் பட்டு மனைக் கண்ணிகழ்ந்தது கூறிச் செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது.*

*இ-ள்: கடற்கண்ணுள்ள சங்கையறுத்து அரத்தாலூ டறுக்கப்பட்ட வளையையும் ஒள்ளிய தொடியையுமு டைய மடவரலைக்காண், கொண்கனே! நன்னுதலாளின் றைக்கு மயங்கினாளாக. அதனைக் கண்டு தாய் அவளது நிலை இவ்விதம் இக்காலத்து ஒன்றாயிருக்கிறதென்று ஐய முற்றாள், எ-று.*

*தொடி - வளை கழலாதிருத்தற்கு முன்கையிலணிவது; கொன் - காலத்தின் வந்தது; மடவரல் நன்னுதல் மால் செய் தெனக் கடுத்தனளென்க. இனியிவ் வொழுக்க மின்று போலு மென்பது கருத்து; மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - வரைவு கடாதல். (4)*

**195.** **வளைபடு முத்தம் பரதவர் பகரும்**
**கடல்கெழு கொண்கன் காதன் மடமகள்**
**கெடலருந் துயர நல்கிப்**
**படலின் பாயல் வவ்வியோளே.**

*எ-து: (இதற்கு 94ஆம் செய்யுளினுரைத்தாங்கு). வரை விடைவைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் தனித் துறைய ஆற்றானாய்ச் சொல்லியது.*

இ-ள்: சங்கினிடத் துண்டாகு முத்தைப் பரதவர் விற்கின்ற கடல்கெழு கொண்கனது விருப்பத்தையுடைய மடமகள், எனக்கு எக்காலத்துங் கெடுதற்கரிய துயரத்தைத் தந்து படுக்கையிடத்துள்ள துயிலைக் கவர்ந்தாள், எ-று.

பகர்தல் - "வீங்குநீர் நீலம் பகர்பவர்" என்பதிற் போல, வளைபடு முத்தம் பரதவர் பகரும் கடல்கெழு கொண்கன் என்றது, அவர்கள் தாராதாரல்லர்; யாம் அவர்களுக்கு வேண்டுவன கொடுத்துக் கொள்ளமாட்டாது வருந்துகின்றேமென்றவாறு. கொண்கன் மகள் தந்து கவர்ந்தாளென்றது, முகம் பாராராய்க் கருமங் கண்ணாயினார் ஒன்றைக் கொடுத்து ஒன்றை வாங்குதல் இயல்பென அவளியற்கை கூறியது. கடல் - கடற்கரை; பாயல் - ஆகுபெயர்; மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுதல். (5)

196. கோடீ ரெல்வளைக் கொழும்பல் கூந்த
லாய்தொடி மடவரல் வேண்டுதி யாயிற்
றெண்கழிச் சேயிறாப் படூஉந்
தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ.

எ-து: "உலகொழித் துரைப்பினும்" (தொல். கள. சூத். 23) என்பதால், குறை மறுக்கப்பட்ட தலைமகன் பின்னுங் குறை வேண்டியவழித் தோழி சொல்லியது.

இ-ள்: சங்கையரிந்து எடுக்கப்பட்டு விளங்குகின்ற வளையும் கொழுகிய பலவாகிய கூந்தலும் ஆராய்ந்தணியப்பட்ட தொடியுமுடைய தலைவியை விரும்புதியாயின்,தெள்ளிய கழியிடத்துச் செவ்விய இறவு மீன் படுக்கின்ற குளிர்ந்த கடற் சேர்ப்பனே! அவளை வரைந்து கொள் வாயாக, எ-று.

கழிச்சேயிறாப்படூஉஞ் சேர்ப்பவென்றது, நினைத்தவை தடையின்றி அகப்படுத்திக் கொள்ளுந்துறைவ என்றவாறு. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவு. (6)

197. இலங்குவளை தெளிர்ப்ப வலவ னாட்டி
முகம்புதை கதுப்பின ளிறைஞ்சிநின் றோளே

புலம்புகொள் மாலை மறைய
நலங்கே ழாக நல்குவ ளெனக்கே.

எ-து: "கூடுதலு᷊றுதல்" (தொல். கள. சூத்.11) என்பதனால், தலைமகன் இடந்தலைப்பாட்டின்கண் தலைவியது நிலைமைகண்டு கூறாநிற்றல்.

இ-ள்: விளங்குகின்ற வளையல்கள் ஒலிக்க நண்ணடையலைத்து முக மறைகின்ற கூந்தலையுடையளாய்த் தாழ்ந்து நிற்கின்றவள் துயரத்தைத் தருகின்ற அந்திப் பொழுதுபட இன்பத்தையுடைய மார்பை எனக்குத் தருவாள், எ-று.

ஏகாரம் - முன்னையது தேற்றம், பின்னையது ஈற்றசை. 'கதுப்பின ளாயத்து நின்றோளே' என்றும் பாடம். (7)

198. வளையணி முன்கை வாலெயிற் றமர்நகை
யிளைய ராடுந் தளையவிழ் கானற்
குறுந்துறை வினவி நின்ற
நெடுந்தோ ளண்ணற் கண்டிகும் யாமே.

எ-து: "குறைந்தவட் படரினும்" (தொல். கள. சூத். 23) என்பதால், தலைவன் இரந்து பின்னின்றமை தோழி தலைவிக்குக் கூறியது.

இ-ள்: வளையை யணிந்த முன் கையையும் வெள்ளிய பற்களையும் மாண்ட சிரிப்பையுமுடைய இளம் பெண்கள் விளையாடுகின்ற, முறுக்கவிழ்ந்த மலர்களையுடைய கானலையுடைய குறுந்துறைக்கண்ணே வண்டல் செய்து விளையாடா நின்றோமாக. அந்நேரத்து வந்து நும் வண்டல் மனைக்கு யாம் விருந்தென்று சொல்லி நின்ற நெடிய தோளையுடைய தலைவனை யான் கண்டேன், எ-று.

விருந்தென வினவியென்றும் பாடம். குறுந்துறையை வினவி நின்ற என்றுரைப்பினும் அமையும். துறையை வினாவுதலாவது அவள் சென்றவிடத்தைச் சொல்லுக, என் வருத்தத்தை அவட்குச் சொல்லுக, என்பது போல்வன. "ஞாயிறு திங்கள்" என்னுஞ் (செய்யுளியல், 201ஆம்) சூத்திர விதிப்படி இவ்வாறு கூறப்பட்டது. யாம் என்பது ஒரு

மையையுணர்த்தும் பன்மைச்சொல். துறைக்கண் வினவி நிற்றல் "வண்டலுற்றோ மெங்கண் வந்தொரு தோன்றல் வரிவளை யீருண்டலுற்றே மென்று நின்றதொர் போழ்து"[1] என்பதனானுமறிக. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - குறை நயப்பித்தல். இதனைப் பரத்தையர் மனைக்கட் பன்னாட்டங்கிப் பின்பு ஆற்றாமையே வாயிலாக வந்த தலைமகனை எதிர்ப்பட்ட தோழி தலைமகட்குச் சொல்லியது என்பர் இந்நூலுரையாசிரியர். (8)

**199.** கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்
வானுயர் நெடுமண லேறி யானாது
காண்கம் வம்மோ தோழி
செறிவளை நெகிழ்த்தோ னெறிகட னாடே.

எ-து: "நாற்றமும் தோற்றமும்" என்ற (தொ. களவியல். 23ஆம்) சூத்திரத்து வகையென்றதனால், தலைமகன் ஒரு வழித்தணந்துழி ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவிக்குந் தோழி சொல்லியது.

இ-ள்: கானல் பொருந்திய பெரிய துறையிடத்து ஒலிக்கின்ற திரை, இடைவிடாது அடிக்கின்ற ஆகாயமளவுக்கு உயர்ந்து நீண்ட மணற்குன்றிலேறி, தோழியே! நினது இறுகச் செறிந்த வளையலை நெகிழச் செய்தவனது திரையை எறிகின்ற கடல் பொருந்திய நாட்டை அமையாது காண்போம், வருவாயாக. எ-று. மெய்ப்பாடு - இளி வரலைச் சார்ந்த பெருமிதம்; பயன் - ஆற்றுவித்தல். (9)

**200.** இலங்குவீங் கெல்வளை யாய்நுதல் கவினப்
பொலந்தேர்க் கொண்கன் வந்தன னினியே
விலங்கரி நெடுங்கண் ஞெகிழ்மதி
நலங்கவர் பசலையை நகுக நாமே.

எ-து: "போக்கற் கண்ணும்" என்பதால், உடன் போக்குத் துணிந்தவழி அதற்கு இரவின்கண் தலைமகன்

---

1. திருக்கோவை. செய். 290.

*வந்த தறிந்த தோழி தலைமகளைப் பாயலுணர்த்திச் சொல்லியது.*

*இ-ள்: விளங்குகின்ற இறுகிய ஒளியையுடைய வளையையுடையாய்! அழகு அழிந்த நுதல் அழகு பெறப் பொன்னாலாகிய தேரையுடைய கொண்கன் வந்தான்; இப்பொழுதே குறுக்கிட்ட ரேகையையுடைய கண் விழிப்பாயாக, அழகைக் கவர்ந்த பசலையை யாமிகழ்ந்து சிரிப்போமாக, எ-று.*

*பொலந்தேர்க் கொண்கன் என்றமையால் உடன் போக்குக் கூறியவாறு. கொண்கனும் என்றும் பாடம்; அதில் உம்மை சிறப்பு; 'நெடுங்கண் ணனந்தறிர் மதி' என்றும் பாடம்; மெய்ப்பாடு - உவகை; பயன் - உடன்போக்குணர்த்தல்.* *(10)*

வளைப் பத்து முற்றிற்று

---

**நெய்தல் முற்றிற்று**

***அம்மூவனார்***

ooo

# 3. குறிஞ்சி

## 21. அன்னாய் வாழிப் பத்து

**201. அன்னாய் வாழிவேண் டன்னை யென்னை**
**தானு மலைந்தா னெமக்குந் தழையாயின**
**பொன்வீ மணியரும் பினவே**
**யென்ன மரங்கொ லவர்சார லவ்வே.**

குறிஞ்சியாவது குறிஞ்சித்திணை; உரிப்பொருளாற் பெற்ற பெயர்; அது முதல் கருவுரியாகிய மூன்று பொருளி னாலும் அறிய வேண்டும். முதற்பொருளாவது நிலமும் பொழுதுமென இருவகை. நிலம் மலையும் மலைசார்ந்த விடமும்; பொழுது பெரும்பொழுது சிறுபொழுதென இருவகை; பெரும் பொழுது கூதிர்; சிறுபொழுது யாமமும் முன்பனியும். கருப்பொருள்: உணவு - ஐவன நெல்லும் தினை யும் மூங்கிலரிசியும்; மா - புலியும், யானையும், பன்றியும், கரடி யும். மரம் - அகிலும் ஆரமும் தேக்கும் திமிசும் வேங்கை யும்; புள் - கிளியும் மயிலும்; பறை - முருகியம் தொண்ட கம்; தொழில் - தேன் அழித்தலும் கிழங் ககழ்தலும்; தினை விளைத்தலும் கிளிகடிதலும்; யாழ் - குறிஞ்சி யாழ்; பூ - காந்தளும் வேங்கையும் சுனைக்குவளையும்; நீர் - அருவியும் சுனையும். ஊர் - சிறுகுடியும் குறிச்சியும்; வாழ்வார் - குறவர், எயினர் குறத்தி எயிற்றி வெற்பன் சிலம்பன் கொடிச்சி; உரிப்பொருளாவது புணர்தலும் புணர்தல் நிமித்தமும்; புணர்தலாவது ஒத்த தன்மையையுடைய தலைவனும் தலை வியும் கொடுப்பாரு மடுப்பாரு மின்றித் தனித்தோரிடத்தில் தாமே கூடுங்கூட்டம்; அது களவு; ஒத்தலாவது பிறப்பும் ஒழுக்கமும் ஆண்மையும் பிராயமும் உருவும் அன்பும் அருளும் நிறையும் அறிவும் செல்வமும் என்பன. பெண்மிகிற் குற்ற மாமென்பது. "ஒன்றே வேறே யென்றிரு பால்வயின் - ஒன்றி யுயர்ந்த பால தாணையி - னொத்த கிழவனுங் கிழத்தியுங்

காண்ப - மிக் கோனாயினுங் கடிவரை வின்றே"[1] என்ப தோத்தாகலின், யாண்டொத்தலாவது பன்னிரண்டும் பதினாறும் பெண்மையும் ஆண்மையும் பிறக்கும் பருவமெனக் கூறலின்.

களவென்பது,

களவெனப்படுவது யாதென வினவின்
வளைகெழு முன்கை வளங்கெழு கூந்தன்
முளையெயிற் றமர்நகை மடநல் லோளொடு
தளையவிழ் தண்டார்க் காம னன்னோன்
விளையாட்டிடமென வேறு மலைச் சாரன்
மானினங் குருவியொடு கடிந்து விளையாடு
மாயமும் தோழியு மருவிநன் கறியா
மாயப் புணர்ச்சி என்மனார் புலவர்.

"களவெனப்படுவ - தந்தணர் அருமறை மன்றலெட்டினுள் கந்தருவ வழக்கமென்மனார் புலவர்."[2]

கந்தருவ வழக்கமாவது கந்தருவ குமரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைவதுபோல, தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது.

அதிர்ப்பில்லைபம் பூணாரு மாடவருந் தம்முள்
எதிர்ப்பட்டுக் கண்டியைத லென்ப – கதிர்ப்பொன்யாழ்
முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக்
கந்திருவர் கண்ட கலப்பு.

என இவற்றானுணர்க. அது இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கற்கூட்டமும் பாங்கியிற் கூட்டமுமாம். தோழியிற் கூட்டத்தின் பகற்குறி இரவுக்குறி நிகழா நிற்க, வரைவு முடுக்கப்பட்டும் உடன்போக்கியும் வரையப்படும். வரைவு முடுக்கப்படுங்காலத்து நொதுமலர் வரையக் கருதிய வழியும் தலைவி வேறுபாடு கண்டு செவிலி அறிவரைக் கூய் அவர்களம்புக்கவிடத்தும் அவள் வினாவியவிடத்தும் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பாள். செவிலி நற்றாய்க்கும் அவள் தந்தை தன்னையர்க்கும் அறத்தொடு நிற்பாள். அறத்தொடு நிற்றலாவது களவு வெளிப்படுத்தல். வெளிப்படுக்குங்கால்

1. தொல். கள. சூத். 2. 2. இறையனாரக. சூத். 1.

இருவர் தன்மையுங் குற்றமின்றி இவ்வாறிருந்ததென வெளிப் படையினாயினும் குறிப்பினாயினும் கூறுதல்.

இத்தலைச் செய்யுள், "உயிர்செல, வேற்றுவரைவு வரி னது மாற்றுதற் கண்ணும்" (தொல். கள. சூத். 2) என்பதால், இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கற் கூட் டமும் நிகழ்ந்து வருங்காலத்து நொதுமலர் வரையக் கருதிய வழி, பிறந்த குடிக்குஞ் சிறந்த ஒழுக்கத்திற்குந் தீங்கு வரு மென்றஞ்சித் தலைவி தோழிக்குச் செவிலி கேட்குமாற்றால் அறத்தொடு நின்றது.

இ-ள்: வேண்டுகின்றேன், அன்னையே! என் தலைவன் தானுமலைந்தான், தருதற்கு எமக்குந் தழையாயின; அது பொன்னாகிய மலரும் மணியாகிய அரும்புமுடையன, தலை வரது சாரலிடத்தன, அஃதென்ன மரமோ? எ-று.

முன்னொரு ஞான்று தலைவன் தழை தந்தானெனவும் அவன் அக்காலந்தொடங்கி எனக்கு உரிமையுடையனாத லின் அதற்கடுத்தது செய்வாய் எனக் குறிப்பினாற் கூறிய வாறு. ஐயீறு ஆவீறாயிற்று. அன்னாய்வாழி - முன்னிலை யசை; மெய்ப்பாடு - அச்சம்; பயன் - மறைபுலப்படுத்தல். (1)

**202.** **அன்னாய் வாழிவேண் டன்னை நம்மூர்ப்**
**பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங்**
**குடுமித் தலைய மன்ற**
**நெடுமலை நாட னூர்ந்த மாவே.**

எ-து: "ஆங்கதன் றன்மையின் வன்புறை யுளப்பட" (தொல். கள. சூத். 23) என்பதால், தலைமகன் வரைதல் வேண் டித் தானே வருகின்றமை கண்ட தோழி உவந்தவுள்ளத்தா ளாய்த் தலைமகட்குக் காட்டிச் சொல்லியது.

இ-ள்: பிரார்த்திக்கின்றேன், அன்னையே! நம்மூரின் கண் வாழும் பார்ப்பனச் சிறாரைப் போல நீண்ட மலை நாடனூரப்படும் மா தாமும் குடுமியையுடைய தலையன; நீயுங் காண்பாயாக, எ-று.

*உம்மை இறந்தது தழீஇயது. நிகழ்காலத்தை இறந்த காலமாகக் கூறினார் வரவு தவறின்மையின். நெடுமலை நாடனூர்ந்தமாதாமும் குடுமித் தலையவென்றது, சேணிடைத் தோன்றித் தன்னை விளக்குமாறு தானும் புகழுடையன் அவனூர்ந்தமாவும் கலியாணக் கோலத்தையுடைத்து என்றபடி. குடுமி - சாமரை. "பரியுடைநன்மான் பொங்குளையன்ன" எனவும், "சாமரை வெம்பரிமான்" எனவுங் கூறலின்; சாமரை குடுமிபோறலின். மெய்ப்பாடு - உவகை; பயன் - ஆற்றுவித்தல். (2)*

203. அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயங்கு பாலினு மினிய வவர்நாட்
டுவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே.

*எ-து: "எஞ்சியோர்க்கு மெஞ்சுதலிலவே" (தொ. அகத்தி. சூத். 42) என்பதால், உடன்போய் மீண்ட தலை மகள், "நீ சென்ற நாட்டு நீர் இனியவல்ல, நீ யெங்ஙனம் நுகர்ந்தாய்?" எனக் கேட்ட தோழிக்குக் கூறியது.*

*இ-ள்: அன்னை! யான் சொல்வதை விரும்புவாயாக; நம் தலைவரது நாட்டிலுள்ள தழை மூடிய கிணற்றிலுள்ள மான் குடித்து எஞ்சிய கலங்கல் நீர் நம் படப்பைக் கண்ணுள்ள தேன் கலக்கப்பட்ட பாலினுங்காட்டியினிமையை யுடையன. எ-று.*

*படப்பை - தோட்டம்; கலிழி - கான்யாறு; கிணற்று நீரு மாற்றுநீரு மென்றுமாம்; மெய்ப்பாடு - அது; பயன் - தெரிவித்தல். (3)*

204. அன்னாய் வாழிவேண்டன்னை யஃதெவன்கொல்
வரையார மகளிரி னிரையுடன் குழீ இப்
பெயர்வுழிப் பெயர்வுழித் தவிராது நோக்கி
நல்ல ணல்ல ளென்ப
தீயேன் றில்ல மலைகிழ வோர்க்கே.

*எ-து: "மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழித் தோழிக்கு - நினைத்தல் சான்றவருமறை யுயிர்த்தலும்" (தொல். களவு. சூத். 20) என்பதால், வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: தோழியே! யான் சொல்லுவதைக் கேட்பாயாக; அஃது யாதுகொல்லோ? வரையா மகளிர் நிரையாகக் கூடிப் போகும்போதெல்லாந் தவிர்தலின்றி நோக்கி நல்லள் நல்லள் என்று சொல்வார்கள்; கொடியேனாயினேன் இப்போது மலைநாடற்கு, எ-று.*

*சுனையாடிச் செல்லும் வரையர மகளிர் பொழிலிடத்துக் குறிக்கணின்று தலைவன் வரவைப் பார்த்திருந்த என்னைப் பார்த்துத் தலைவற்கு நல்லள் என்றார்; இன்று அவ்வாறின்றியிருக்கின்றேனென மனைப்பட்டுக் கலங்கிக் கூறியவாறு; அடுக்கு கலக்கத்தின்கண் வந்தது; தில்ல - காலத்தின் கண்ணது; இன் - அசை; மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைதல்.* (4)

205. அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
நனிநா ணுடைய ணின்னு மஞ்சு
மொலிவெள் ளருவி யோங்கு மலைநாடன்
மலர்ந்த மார்பிற் பாயற்
றுஞ்சிய வெய்ய ளோகோ யானே.

*எ-து: (இதற்கு 107ஆம் செய்யுளுக் குரைத்ததுரைக்க.) நொதுமலர் வரைவு வேண்டி விடுத்துழித் தலைமகட்கு உளதாகிய வருத்த நோக்கி இவள் இவ்வாறாதற்குக் காரணமென்னை என்று வினாவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.*

*இ-ள்: பிரார்த்திக்கிறேன், அன்னையே! எனது தோழி மிக நாணமுடையள்; நினக்கு மஞ்சுவாள்; ஒலியா நிற்கும் வெள்ளிய அருவிபொருந்திய உயர்ச்சியுடைய மலைநாடனது மார்பாகிய பாயற்கண் துஞ்சுகின்ற விருப்பினையுடையள், ஆனதுபற்றி வருந்துகின்றேன் எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - அறத்தொடு நிற்றல்.* (5)

206. அன்னாய் வாழிவேண் டன்னை யுவக்காண்
மாரிக் குன்றத்துக் காப்பா ளன்னன்
றூவலி னனைந்த தொடலை யொள்வாட்
பாசி சூழ்ந்த பசுங்கழற்
றண்பனி வைகிய வரிக்கச் சினனே.

*எ-து: "புணர்ச்சி வேண்டினும்" (தொல். கள. சூத். 23) என்பதால், தலைமகன் வந்து இரவுக் குறிக்கண்ணின்றமை அறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.*

*இ-ள்: வேண்டு, அன்னையே! உவ்விடத்தில் காண்பா யாக; மாரிக் காலத்து மலையிடத்தைக் காப்பாளைப் போல மழையின் நனையப்பட்ட தூங்கவிட்ட வாளும் பாசி சூழப் பெற்ற பரிய கழலும் மிகக் குளிர் தங்கும் பல புள்ளிகளை யுடைய கச்சையு மணிந்தவனாய் நிற்கின்றான், எ-று.*

*கச்சு உடை விசேடம். காப்பாள் காவற்றொழிலை யுடைய ஆள். தலைவன் குறியிடத்து நிற்கின்றமை கூறியவாறு. கண்டார் அயிராவண்ணம் இவ்விதம் வந்தான். செவிலி முதலியோர் துயில் உணரவும் இவ்விதங் கூறினாள்; மெய்ப் பாடு - பெருமிதம்; பயன் - வரவுணர்த்தல். (6)*

207. அன்னாய் வாழிவேண் டன்னை நன்று
முணங்கல கொல்லோநின் றினையே யுவக்கா
ணிணம்பொதி வழுக்கிற் றோன்று
மழைதலை வைத்தவர் மணிநெடுங் குன்றே.

*எ-து: "என்புநெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடை இ-யன்பு தலையடுத்த வன்புறைக் கண்ணும்" (கள. சூத்.23) என்பதால், மழையின்மையால் தினை உணங்கும், விளைய மாட்டா, புனங்காப்பச் சென்று அவரை எதிர்ப்படலாம் என்று எண்ணியிருந்த இது கூடாதாயிற்று என வெறுத் திருந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: வேண்டுகின்றேன், அன்னையே! உவ்விடத்தே காண்பாயாக; பெரிதும் உணங்கலகொல்லோ நினது தினை; நிணத்தைப் பொதிந்த வழுக்குப்போலத் தோன்றா*

நிற்கும் மேகங்களைத் தன்றலைக்கண் வைத்திருக்கின்ற கரிய நெடிய அவரது மலை எ-று. ஒகாரம் எதிர்மறை; ஏகாரம் தேற்றம்; மெய்ப்பாடு - இளி வரல்; பயன் தலை மகளை ஆற்றுவித்தல்; உணங்க - உலர்தல். (7)

**208.** அன்னாய் வாழிவேண் டன்னை கானவர்
கிழங்ககழ் நெடுங்குழி மல்க வேங்கைப்
பொன்மலி புதுவீத் தாஅ மவர்நாட்டு
மணிநிற மால்வரை மறைதொறிவ
ளறைமலர் நெடுங்க ணார்ந்தன பனியே.

எ-து: "நாற்றமுந் தோற்றமு" மென்னும் (தொல். களவி. 23ஆம்) சூத்திரத்து பிற என்றதனால் கொள்வது. செவிலிக்கு அறத்தொடு நின்றதோழி அவளால் வரவு மாட்சிமைப் பட்டபின்பு, 'இவளிவ்வாறுபட்ட வருத்தமெல்லாம் நின்னிற்றீர்ந்தது' என்பது குறிப்பினாற்றோன்ற அவட்குச் சொல்லியது.

இ-ள்: விரும்பிக் கேட்க, அன்னையே! வேட்டுவர் வள்ளிக்கிழங்கு கிண்டி யெடுக்கப்பட்ட நீண்ட குழி நிறைய வேங்கையது பொன்னிறம் போன்ற நிறத்தையுடைய மலிந்த புதுப் பூக்கள் பரக்கும் தலைவரது நாட்டிலுள்ள, நீலமணி போன்ற நிறத்தையுடைய பெரிய மலை தன் கண்களுக்குத் தோற்றாது மறையுந்தோறும் சுனைக்கண்ணுள்ள நீலமலர் போலும் நெடிய கண்கள் நீர் நிறையப் பெற்றன, எ-று.

கிழங்கு அகழ் குழி நிறைய வேங்கை மலர் பரக்குமென்றது, கொள்வார்க்குப் பயன்பட்டுத் தமக்கு வந்த குறையைத் தம் புகழ் நிறைக்கும் பெருமையையுடையார் என்பது. அறை - ஆகுபெயர்; மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்வித்தல். (8)

**209.** அன்னாய் வாழிவேண் டன்னை நீமற்
றியானவர் மறுத்தல் வேண்டுதி யாயிற்
கொண்ட லவரைப் பூவி னன்ன

வெண்டலை மாமழை சூடித்
தோன்றலா னாதவர் மணிநெடுங் குன்றே.

*எ-து: "வரைவிடை வைத்த காலத்து வருந்தினு"[1] மென்பதால், வரைவிடை வைத்துப் பிரிவின்கண் அவனை நினைவு விடாது ஆற்றளாகிய வழி, 'சிறிது மறந்து ஆற்றுதல் வேண்டும்' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.*

*இ-ள்: கேட்பாயாக, தோழியே! நீயென்னை அவரை நினையாது மறக்க வேண்டுவையேல், கீழ் காற்றோடு கூடிய கரிய மேகத்தைத் தரித்துத் தோன்றுதல் அமையாது, அவரைப் பூப்போலும் வெண்ணிறம் பொருந்திய முடி பொருந்திய மணிபோலும் நீண்ட மலை, எ-று.*

*வெண்டலை மாமழை சூடித்தோன்றாலானாது என்றது, மழை பெய்தற்குக் கால் வீழ்ந்த இருட்சியால் மறையப் பெறாது விளங்குதலை நோக்கி எனக்கொள்க. மற்று, "மற்றறிவா நல்வினையா மிளையம்"[2] என்றாற் போல. மணி - நீலமணி; பின்பனிக்காலம் வந்தமை காண்க. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - ஆற்றுதல். (9)*

**210.** அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைப்
புலவுச்சேர் துறுக லேறி யவர்நாட்டுப்
பூக்கெழு குன்ற நோக்கி நின்று
மணிபுரை வயங்கிழை நிலைபெறத்
தணிதற்கு முரித்தவ ளுற்ற நோயே.

*எ-து: (208ஆம் செய்யுளிற் காண்க) காப்பு மிகுதிக்கண் தலை மகள் மெலிவு கண்டு தெய்வத்தானாயிற்றென்று வெறியெடுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.*

*இ-ள்: இதனைக் கேட்க, அன்னையே! நமது கொல்லைக் கண்ணுள்ள புலால் நாற்றம் பொருந்திய கற்கள் நெருங்கிய மலைமேல் ஏறி நின்றுதலைவரது நாட்டின் கண்ணதாய*

---

1. தொல். கள. சூத். 21.
2. நாலடியார், செய். 19.

பொலிவையுடைய மலையைப் பார்த்து நின்று, நீலமணி போலும் விளங்குகின்ற ஆபரணத்தையுடையவளாய நின் மகள் பழைய நிலையடைய அவள் அடைந்த நோய் தணி தற்குரித்தாகும், எ-று.

வயங்கிழை - அன்மொழித் தொகை; அவள் - சுட்டு; புலவுச் சேர்துறுகல் என்றது, யாவும் தெய்வத்தினானாயின வென்று மறிமுதலாயின கொன்று புலவு நாறும் நம் குன்றென்பதாம். மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - வெறிவிலக்கி அறத்தொடு நிற்றல். (10)

அன்னாய் வாழிப் பத்து முற்றிற்று

---

## 22. அன்னாய்ப் பத்து

211. நெய்யொடு மயக்கிய வுழுந்துநூற் றன்ன
வயலையஞ் சிலம்பின் றலையது
செயலையம் பகைத்தழை வாடு மன்னாய்.

எ-து: "மறைந்தவ ளருகத் - தன்னொடு மவளொடு முதன்மூன் றளைஇப் - பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்" (தொல். கள. சூத். 23) என்பதால், தலைமகன் ஆற்றாமை கண்டு கையுறையேற்ற தோழி தலைமகள் தழையேற்க வேண்டிக் கூறியது.

இ-ள்: நெய்யொடு கலக்கப்பட்ட வுழுந்தைத் திரித் தாற் போன்ற வசலைக் கொடிகள் பொருந்திய அம்மலை மேலுள்ளது ஆன அசோகினது மாறுபட்ட தழையானது வாடும், அன்னையே! எ-று.

உழுந்து நூற்றன்ன என்பதற்கு இப்பொருளாதல் "மணி நூற்றனைய வைம்பால்" என்பதாலுணரப்படும். செழுமை வாய்ந்த மலைக்கண்ணுள்ள இலை வாடும் என்றது, தலைவனாற் றரப்பட்ட வித்தழை வாடத் தகாதெனக் கூறி ஏற்பித்தது. பகைத்தழை - பகையைத் தருந்தழை. "ஏறும்

பழிதழை யேற்பின்மற் றேலா விடின் மடன்மா - வேறும வன்"[1] என்பதானுணரப்படும். பகைத்தழை - காரணத்தைக் காரியமாகக் கூறியது. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் தழையேற்பித்தல். (1)

**212.** **சாந்த மரத்த பூழி லெழுபுகை**
**கூட்டுவிரை கமழு நாட**
**னறவற் கெவனோ நாமகல் வன்னாய்.**

எ-து: "அவன் வரைவுமறுப்பினும்" (தொ. கள. சூத். 23) என்பதால், வரை வெதிர்கொள்ளார்தமர் அவண் மறுத்த வழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

இ-ள்: சந்தன மரத்தின் இடைநிலத்து உளவாகிய அகில் சுடுகின்ற புகை, சந்தன நாற்றத்தோடுங் கலந்து நன் மணம் வீசுகின்ற நாடனாகிய வறத்தையுடையார்க்கு அன் னையே! நாமகல்கின்றது எவ்வகையானோ? எ-று.

நான்காவது 'அதற்குடம்படுதற்' கண்ணது, ஓகாரம் - வினா.

சந்தன மரத்தின் இடைநிலத்துளவாகிய அகில் சுடு புகை அச்சந்தனப் புகை நாற்றத்தோடு கமழு நாடனென் றது தனக்கு வந்த வருத்தம் பாராது தனக்குத் துணையாயி னார் நலத்தொடுங்கூடி, எல்லார்க்கும் பயன்படவொழு கும் ஒழுக்கத்தையுடையா னென்பதாம். விரையாவது "கோட் டந் துருக்கந்தகரம் அகிலார - மோட்டியவைந்தும் விரை"

சாந்த மரத்த பூழிலெழு புகை கூட்டுவிரை கமழு நாட னென்றது, அயலார் கூறுகின்ற அலரும் அவன் வரைவொடு வந்தமையும் பொருத்தமுடைத்து என்பதுமாம். நாடனற வன் என்றது, முன்னாளின் நமக்கு வந்த ஏதத்தை நீக்கினா னென்பது. அவற்கு அகல்வு எவனோவென்பது, ஒரு நன்றி செய்தாரை எழு பிறப்பினும் மறவார்; மறக்கின் நன்மை யோடுமுய்வில்லை யென்பதனை யுட்கொண்டு எதிர்மறை

1. திருக்கோவை, செய். 113.

*முகத்தால் கூறினாள் என்பது. மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - அறத்தொடு நிற் றல்.* *(2)*

**213.** **நறுவடி மாஅத்து மூக்கிறு புதிர்ந்த**
**வீர்ந்தண் பெருவடுப் பாலையிற் குறவ**
**ருறைவீ ழாலியிற் றொகுக்குஞ் சாரன்**
**மீமிசை நன்னாட் டவர்வரின்**
**யானுயிர் வாழ்தல் கூடு மன்னாய்.**

*எ-து: "வரைவு தலைவரினும்" (தொ. கள. சூத். 20) என்பதால், வரைவொடு வருதலைத் துணிந்தானென்பது தோழி கூறக் கேட்ட தலைமகள் சொல்லியது.*

*இ-ள்: நறிய வடுக்கள் பொருந்திய மாவினது மூக்கிற்கு வீழ்ந்த ஈர்தலைச் செய்யும் தண்ணிய பெரிய வடுக்களை, பாலை நிலத்தில் வாழும் குறவர்கள் மிகுத்த விழுகின்ற ஆலங்கட்டியைப் போலக் குவிக்கும் பக்க மலையின் மேலுள்ள நல்ல நாட்டையுடையார் வரப்பெற்றால், யானுயிர் வாழப்பெற்று இருத்தல் கூடும், தோழியே!" எ-று.*

*வடுத் தொகுக்கும் எனவியையும். மாவினது மூக்கிற்று வீழ்ந்த வடுக்களை ஆலிபோலத் தொகுக்கும் நாட்டையுடையார் என்றது, விரும்புவனவற்றிற்குத் தாமாக முயலாது பெற்றுழிப் பேணுமியல்புடையார் என்றவாறு. மெய்ப்பாடு - உவகை; பயன் - ஆற்றுதல்.* *(3)*

**214.** **சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழ**
**மிருங்கல் விடரளை வீழ்ந்தென வெற்பிற்**
**பெருந்தே னிறாஅல் கீறு நாடன்**
**பேரமர் மழைக்கண் கலிழத்தன்**
**சீருடை நன்னாட்டுச் செல்லு மன்னாய்.**

*எ-து: "வேண்டாப் பிரிவினும்" (தொல். கள. சூத். 23) என்பதால், தலைமகன் 'ஒருவழித் தணப்பல்' என்று கூறியவதனை அவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி கூறியது.*

இ-ள்: சாரலின்கண்ணுள்ள பலாவினது கொழுவிய கொத்தாகிய நறிய பழம் கரிய பாறையது விடரளைக் கண்ணே வீழ்ந்து மலையினுள் பெரிய தேனடையைக் கிளிக்கின்ற வெற்பன், அன்னையே! பெரிய பொருந்திய ஈரிய கண் நீர் சிந்தச் சீர்மை பொருந்திய தனது நல்ல நாட்டிற்குச் செல்லுவான், எ-று.

சாரற்பலவின்........கீறுநாடன் என்றது, தன்னாற் பெற்ற நலம் எங்கள் இயற்கை நலத்தையுஞ் சிதைக்கின்ற தென்பதாம். இரும் - கரிய என்பது "விரிகாஞ்சித் தாதாடி இருங் குயில் விளிப்பவும்"[1] என்னுங் கலிச் செய்யுளுரையானுணர்க. கீறுநாடன் - நிலம் பூத்த மரம் என்பதுபோல நின்றது; கிளித்தற்குக் காரணமான நாடன் என்றபடி. மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - தலைமகட்குப் பிரிவுணர்த்தல்; தலைமகன் வரைவானாவது. (4)

215. கட்டளை யன்ன மணிநிறத் தும்பி
யிட்டிய குயின்ற துறைவயிற் செலீஇயர்
தட்டைத் தண்ணுமைப் பின்ன ரியவர்
தீங்குழ லாம்பலி னினிய விமிரும்
புதன்மலர் மாலையும் பிரிவோ
ரதனினுங் கொடிய செய்குவ ரன்னாய்.

எ-து: "மறைந்தவற் காண்டல்"[2] என்னுஞ் சூத்திரத்து "அன்னவுமுளவே" என்பதால், இரவுக் குறி நயந்த தலைமகள் பகற்குறிக்கண் வந்து நீங்குந்தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: பொன்னுரைக்குங் கல்லுப்போலுங் கரிய நிறத்தையுடைய வண்டு, சிறிய அழகு செய்யப்பட்ட துறைக்கண்ணே சென்று தட்டையாகிய வாச்சியத்தின் பின்பு வாச்சியாரரது இனிய வேய்ங்குழலிடத்து எழும் ஆம்பற் பண்ணினுமினியவாய் ஒலிக்கும் புதல்கள் மலர்கின்ற மாலைக் காலத்

1. பாலைக்கலி, செய்.23. 2. தொல். கள. சூத்.20.

தினும் பிரிகின்றவர் மாலைக் காலத்தினுங் கொடியவற் றைச் செய்குவர், தோழியே! எ-று.

கட்டளை "பெருமைக்கு மேனைச்சிறுமைக்குந் தத்தங் - கருமமே கட்டளைக்கல்"[1] என்றாற்போல. இட்டிய - சிறிய; "ஆகாறளவிட்டிதாயினும்"[2] என்புழிப்போல; தீக்குழல் - வேய்ங்குழல் அதன் திறமெல்லாம் சிலப்பதிகாரத்து அரங் கேற்றுகாதை 26ஆம் அடி "யாழுங்குழலு" மென்பதில் குழலு மென்பதற்குக் கூறிய உரையிற் காண்க; செலீஇயர் - சென்று.

ஆம்பல் என்பது கருவியெனவுங் கூறுப, "ஆம்பலந்தீங் குழல் கேளாமோதோழி"[3] என்பது கொண்டு. அது பண்ணா தல் "கன்றின் குரலுங்கறவை மணிகறங்கக் - கொன்றைப் பழக்குழற்கோவலராம்பலு - மொன்றல சுரும்பு நரம்பென வார்ப்பவும்" என்பது வளையாபதி; உம்மை - சிறப்பு; தும்பி இமிரும் மலர் எனவியையும்; மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - குறிநயத்தல்.

கருத்துரைக்கண், வந்து நீங்குந்தலைமகன் சிறைப்புறத் தானாக என்றவிடத்து, வந்து நீங்குந்தலைமகன் சிறைப்புறத் தானாகவெனின் தொடர்புடையாரைக் காணும்பொழுதி னும் காணாப்பொழுது பெரிதாகலின், அக்காலத்து அவர் குறைகூறல் அன்பின்கண்ணதாம். அவர் எதிர்ப்பட்டு நீங் குங் காலத்துக் குறை கூறின் அது அன்பாகாது புறங்கூற லாய்க் காமக் குறிப்பாகாது. "நிம்பிரிக்கொடுமை"[4] என்னுஞ் சூத்திர விதியின்மையுமென்பது, அன்றி வழக்கினும் உணரப் படும். ஆகலின் பகற்குறிக்கண் வந்து சிறைப்புறத்தானாக வென்பது. *(5)*

**216.** குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை
நெடும்புதற் கானத்து மடப்பிடி யீன்ற
நடுங்குநடைக் குழவி கொளீஇய பலவின்

---

1. திருக்கு, செய்.505. 2. திருக்குறள், செய்.478.
2. சிலப்பதி. ஆய்ச்சியர் குரவை, பாட்டு 2.
3. தொல். மெய்ப்பா, சூத். 26.

பழந்தூங்கு கொழுநிழ லொளிக்குநாடர்க்குக்
கொய்திடு தளிரின் வாடிநின்
மெய்பிறி தா த லெவன்கொ லன்னாய்.

*எ-து: "நாற்றமு் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்து அனைநிலைவகை என்பதால் வரைவுநீட ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.*

*இ-ள்: குறுமையாகிய கையையுடைய கொள்ளுந் தொழிலிற் சிறந்த வலிய புலியேற்றையானது நெடிய புதல் கள் பொருந்திய காட்டின் மடப்பம் பெருந்திய பிடியானை யீன்ற நடுங்கு நடையுடைய கன்றைக் கொள்ளுதற்குப் பலா வினது பழம் செறிந்த நிழற்கண்ணே காலம் பார்த்து ஒளித் திருக்கின்ற நாடனுக்குக் கொய்யப்பட்ட தளிரைப்போல வாடியுடம்பு வேறாதல் எவன்? அன்னையே! எ-று.*

*"ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லா மேற்றைக் கிளவியுரித்தென மொழிப"[1] ஆதலின் புலி ஏற்றையென்னப் பட்டது. "குஞ்சரம் பெறுமே குழவிப்பெயர்க் கொடை"[2] என்றபடி யானைக் கன்றுக்குக் குழவி கொள்ளப்பட்டது. தூங்கும் "ஏர் திகழப் - பொருந்தின மேகம் புதைந்திருள் தூங்கும் புனையிரும்பின்"[3] என்றாற் போல. நான்காவது "அதற்குப்படு பொருட்"கண் வந்தது. கொல் - அசை. புலி யேற்றை பிடியீன்ற குழவியைக் கொள்ள வேண்டிக் காலம் பார்த்து மறைந்திருக்கு நாடன் என்றது, தன் வஞ்சனையாலே நின் பெண்மை நலத்ததை வௌவுகின்றான் என்பது. மெய்ப் பாடு - பெருமிதம்; பயன் - வரைதல்; ஏற்றை கொளீஇய ஒளிக்கு நாடற்கென இயையும்.* (6)

217. பெருவரை வேங்கைப் பொன்மரு ணறுவ்
மானினப் பெருங்கிளை மேய லாருங்

1. தொல். மரபியல், சூத். 49. 2. மேற்படி சூத்.19.
3. திருக்கோவை, செய்.148.

கானக நாடன் வரவுமிவண்
மேனி பசப்ப தெவன்கொ லன்னாய்.

*எ-து: இதற்கு 202ஆம் செய்யுளுக் குரைத்தாங் குரைக்க. வரைவிடை வைத்துப் -பிரிந்த தலைமகன் மீட்சி யுணர்ந்த தோழி ஆற்றளாய தலைமகட்குக் கூறியது.*

*இ-ள்: பெரிய மலைக்கண்ணுள்ள வேங்கை மரத்தின் பொன்போலு நறிய மலரை மானினத்தின் பெரிய கிளை தமக்கு நாளுணவாக வுண்ணும் கானக நாடன் வரைவான் வர வும் இவ்விடத்து நினது மேனி பசப்பூர்தல் எவன் கொல்லோ? அன்னையே! எ-று.*

*மருள் - உவம உருபு; உம்மை இழிவு சிறப்பு; கொல் - ஐயம்; வேங்கை...ஆரும் என்றது, அவன் மனைப்பெருஞ் செல்வம் நின் கிளையாகிய நாங்களும் நின்னோடு நுகர் வோம் என்பதாம். மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்த பெரு மிதம்; பயன் - ஆற்றுவித்தல். (7)*

218. நுண்ணேர் புருவத்த கண்ணு மாடு
மயிர்வார் முன்கை வளையுஞ் செறுஉங்
களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி
யெழுதரு மழையிற் குழுமும்
பெருங் கனாடன் வருங்கொ லன்னாய்.

*எ-து: "அவன் வரைவு மறுப்பினும்" (தொல். கள. சூத்.23) என்பதால், தலைமகன் வரைவு வேண்டி விடத்தமர் வரைவு மறுத்துழி அதுகேட்டு, இஃது என்னாங்கொல்! என்று ஆற் றளாய தலைமகட்குத் தோழி தனக்கு நற்குறி செய்யக் கண்டு கடிதின் வந்து வரைவான் எனச் சொல்லியது.*

*இ-ள்: நுண்ணிய அழகையுடைய புருவத்திடத்தினவாய கண்ணும் இடமாடும், மயிர் வளரும் முன்கையிலணிந்த வளை கள் தாமு நெருங்கும்; களிற்றைக் கொள்ளத் தப்பின கோப மிகுந் தெழுகின்ற புலியானது கருக்கொண் டெழா நிற்கும்*

மேகம்போல வொலிக்கும் பெரிய மலை நாடன் கடிதின் வரைவான் போலும் அன்னையே! எ-று.

களிறு....................குழுமும் என்றது, தானினைத்தனவற்றிற் குக் குறைவரின் அதற்கு வெகுண்டு முடிப்பான் என்பது. "மனைவயிற்-பல்லியும் பாங்கொத்திசைத்தன-நல்லெழிலுண் கணு மாடுமாலிடனே"[1] என்றாற் போல இவை சகுனம். கண்ணு மாடுமென்பது, சினைமுதன்மேலேறி நின்றது, வளையுஞ் செறும் என முதல் வினை சினைமேனின்றது, மெய்ப்பாடும் பயனும் அவை. (8)

219. கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ
யிருங்கல் வியலறை வரிப் பத்தாஅ
நன்மலை நாடன் பிரிந்தென
வொண்ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ-து: இதற்கும் 202ஆம் செய்யுளிற் காண்க. வரைவிடை வைத்துப் பிரிந்தமைக்கண்ணே ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி கூறியது.

இ-ள்: பெரிய அடியையுடைய வேங்கை மரத்தின் பெருமையமைந்த தகட்டு வடிவையுடைய வொள்ளிய மலர் கரிய கல்லாகிய வகன்ற பாறை யழகுபொருந்தப் பரக்கும் நல்ல சிலம்பன் அண்ணிய பிரிவினனாக வொள்ளிய நுதல் பசத்தல் யாதுகொல்? அன்னையே! எ-று.

கருங்கால்-கருவரை குடையப்பட்ட கடலென்றாற் போல; வேங்கை...............நாடன் என்றது, நம் பொல்லாவொழுக்கம் மறைய நல்லொழுக்கம் நமக்குதவும் நன்மையையுடையான் என்பது; மெய்ப்பாடு - அது; பயன் - ஆற்றுவித்தல். (9)

220. அலங்குமழை பொழிந்த வகன்க ணருவி
யாடுகழை யடுக்கத் திழிதரு நாடன்

1. பாலக்கலி, செய், 10, வரி 20-23.

பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவண்
மயங்கிதழ் மழைக்கண் கலிழு மன்னாய்.

*எ-து: "பிறன் வரைவாயினும்" (தொல். கள. சூத். 23) என்பதால், நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.*

*இ-ள்: அசைகின்ற மேகங்களாற் பெய்யப்பட்ட இடமகன்ற அருவியானது, ஆடுகின்ற மூங்கிலையுடைய பக்க மலையிடத்து இழிகின்ற மலைநாட்டையுடையானது பெரிய மலையையொத்த, யாவராலும் விரும்பப்படும் வெற்றியையுடைய அகன்ற மார்பை முயங்காமல், கழியு நாளில் இவளது வாடுகின்ற பூவிதழ்போலும் ஈரிய கண் அழா நிற்கும், அன்னையே! எ-று.*

*அருவி............நாடனென்பது, இவண்மேல் வைத்ததண்ணளி நம்மிடத்தும் வந்து இடையறாதொழுகுந் தன்மையான் என்பது; மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - அறத்தொடுநிற்றல். (10)*

அன்னாய்ப் பத்து முற்றிற்று

---

## *23. அம்ம வாழிப் பத்து*

221. அம்ம வாழி தோழி காதலர்
பாவை யன்னவென் னாய்கவின் றொலைய
நன்மா மேனி பசப்பச்
செல்வ லென்பதம் மலைகெழு நாடே.

*எ-து: "இட்டுப் பிரிவிரங்கினும்" (தொல். கள. சூத். 20) என்பதால், ஒருவழித் தணந்து வரைதற்கு வேண்டுவன முடித்து வருவல் என்று தலைமகன் கூறக் கேட்ட தலைமகள், அவன் சிறைப்புறத்தானாகக் கேட்பத் தோழிக்குச்*

சொல்லியது. "பொருள் வயிற்பிரியாது ஒருவழித் தணத் தலும்" என்றுங் கூறுதலானும் இரவுக் குறிப்புணர்ச்சியால் எழுந்தவலரடங்கச் சிலநாள் தலைமகன் தன்னூர்க்கண்தங்கு தல்.

இ-ள்: தோழியே! நம் வெற்பர் பாவையைப் போலு மெனது பலராலுமாராயப்படும் அழகு நீங்க நல்ல வழகிய மேனி பசப்படைய, அவர் தமது மலைநாட்டிற்குச் செல்ல வேண்டுமென்று கூறுவார். எ-று.

செழு - பொருந்துதல், "முரசு செழுதானை" என்புழிப் போல. தொலைய, பசப்ப என்பன காரியப் பொருளில் நின் றன. அம்ம வாழி - முன்னிலையசை. பின்வருவனவு மன்ன.

கைவல்லோனாற் சித்திரிக்கப்பட்ட பாவை அவன் குறிப்பின்வழி நிற்றல்போலவும், ஆட்டுவானையன்றி யியங் காப் பாவைபோலவுமுள்ளேன். மெய்ப்பாடு அழுகை. பயன் தணவாது வரைதல். (1)

222. அம்ம வாழி தோழி நம்மூர்
நளிந்துவந் துறையு நறுந்தண் மார்வ
னின்னினி வாரா மாறுகொல்
சின்னிரை யோதியென் நுதல்பசப் பதுவே.

எ-து: "இருவகைக் குறிபிழைப் பாகிய விடத்து" மென் பதால் (தொல். கள. சூத். 16), குறி இரண்டன்கண்ணும் வந் தொழுகுந் தலைமகன் இடையிட்டுவந்து சிறைப் புறத்தா னாக, நின்னுதல் பசத்தற்குக் காரணமென்ன என்ற தோழிக் குத் தலைமகள் சொல்லியது.

இ-ள்: தோழியே! நம்மூர்க்கண்வந்து செறிதலுடையனா யுறையும் நறிய தண்ணிய மார்பையுடைய தலை மக இவ் விடத்து இப்பொழுது வாராத காரணம்கொல், சிலவாகிய நிரைத்த கூந்தலையுடைய எனது நுதல் பசக்கின்றது. எ-று.

நளி - செறிவு. "நளியென் கிளவி செறிவுமாகும்" (தொல், உரியியல், சூத். 27).

*நளி "சிலைப்பு வல்லேற்றுத் தலைக்கை தந்து நீ - நளிந் தனை வருதலுடன்றனளாகி"[1] என்றாற்போல, மாறு "பகுத் தூண்டொகுத்தவாண்மைப் - பிறர்க்கென வாழ்தி நீயாகன் மாறே"[2] என்பதுபோல. சின்னிரையோதித் தோழி என இயைப் பினுமாம். மெய்ப்பாடு - அது; பயன் - குறி நயத்தல். (2)*

**223.** அம்ம வாழி தோழி நம்மலை
வரையா மிழியக் கோட னீடக்
காதலர்ப் பிரிந்தோர் கையற நலியுந்
தண்பனி வடந்தை யச்சிர
முந்துவந் தனர்நங் காத லோரே.

*எ-து: "நாற்றமும் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்து வகையாற் கொள்வது. வரைவிடை வைத்துப் பிரிந்த தலை மகன் குறித்த பருவத்துக்கு முன்னே வருகின்றமை யறிந்த தோழி தலைமகட்கு மகிழ்ந்து சொல்லியது.*

*இ-ள்: தோழி! நமது மலையின் எல்லையை யாம் இறங்க, காந்தள் வளர, தலைவரைப் பிரிந்தவர்கள் செயலற வருத் தும் தண்ணிய குளிர்ச்சி பொருந்திய வாடைக் காற்றோடு கூடிய முன்பனிக்காலத்திற்கு முன் வந்தனர் நமது காதலர், எ-று.*

*'அச்சிரம் "விரிகதிர் மண்டிலந் தெற்கேர்பு வெண் மழை - யரிதிற்றோன்றும் அச்சிரக்காலையும்"[3] என்பது போல, மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்வித்தல். (3)*

**224.** அம்ம வாழி தோழி நம்மலை
மணிநிறங் கொண்ட மாமலை வெற்பிற்
றுணிநீ ரருவி நம்மோ டாட
லெளிய மன்னா லவர்க்கினி
யரிய வாகுதன் மருண்டனென் யானே.

*எ-து: "மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழித் தோழிக்கு நினைத்தல் சான்ற வருமறை யுயிர்த்தலும்" (தொல்.*

---

1. பதிற்று. 52. 2. பதிற்று. செய். 38.

3. சிலப். 14, ஊர்காண். 104-5 அடிகள்.

*களவு. சூத். 20.) என்பதால், இற்செறிப்புணர்ந்த தலைமகள் ஆற்றாளாய்த் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.*

*"காப்புச்சிறைமிக்க கையறுகிளவியும்" என்பது. அஃதாவது காப்பு இரண்டு வகை. நிறைகாவல் சிறைகாவலென; அவற்றுள், நிறைகாவல் காப்பன காத்துக் கடிவன கடிதல், "சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர் - நிறை காக்குங் காப்பே தலை"[1] என்பதாகலின், சிறைகாவலென்பது தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகல், நிலவு வெளிப்படுதல், கூகை குழறல், கோழி குரற்காட்டலென இவை. அவற்றுள் சிறைகாவல் கொள்ளப் படும். இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் முதலிய நடந்த வழி, தாய் இற்செறிப்ப அதனாலற்றாளாய்த் தலைவன் கேட்பின் வரைவொடு வருவான், தோழி கேட்பின் வரைவு கடவுவாள், கேட்பாரிலராகில் ஆற்றாமை நீங்குவளாம் என்பதாம்.*

*இ-ள்: தோழி! நிலமணியினது நிறத்தையுடைய நமது மலையின் பெருமையுடைய பக்கத்துள்ள மலையாகிய வெற்பினுள் தெளிந்த நீரையுடைய அருவியிடத்துத் தலைவர் நம்முடன் விளையாடச் சென்ற நாள் எல்லாம் மிகவு மருமையுடையல்லமா யிருந்தனம்; இப்பொழுது அருமை யுடையேமாகலின் கலங்கினேன், எ-று.*

*மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைவு கடாவல் வழுவமைதி. (4)*

**225.** **அம்ம வாழி தோழி பைஞ்சுனைப்**
**பாசடை நிவந்த பனிமலர்க் குவளை**
**யுள்ளகங் கமழுங் கூந்தன் மெல்லிய**
**லேர்திக ழொண்ணுதல் பசத்த**
**லோரார் கொன்னங் காதலோரே.**

*எ-து: 223ஆம் செய்யுளிற் கூறிய வகையாற் கொள்வது. மெலிவுகூறி வரைவு கடாவக் கேட்ட தலைமகன் தான்*

---

1. திருக்குறள், செய். 57.

வரைதற்பொருட்டால் ஒருவழித் தணந்து நீட்டித்தானாக, ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி கூறியது.

இ-ள்: தோழியே! பசிய சுனையிடத்துப் பசிய இலைக ளுயர்ந்திருக்கும் குளிர்ந்த குவளை மலர்நாற்றம் உள்ளக மெல்லாங் கமழுங் கூந்தலையுடைய மெல்லியலாகிய நினது அழகு விளங்குகின்ற ஒள்ளிய நெற்றி`பசத்தலை அறியார் கொல்? நமது காதலர், எ-று.

பைஞ்சுனைப் பாசடை நிவந்த பனிமலர்க்குவளை உள் ளகங் கமழும் என்றது, இலையிடை மறைந்த மலர் மணம் வீசிக் கொய்வார்க்குத் தன்னைப் புலப்படுத்தியவாறு போல, நுதல் வேறுபாட்டால் நமக்கு வருந்தீங்கைக் களவொழுக்கத் தினால் அயலார்க்குப் புலப்படுத்தலை அறியான் என்பதாம். மெய்ப்பாடு - அச்சம்; பயன் ஆற்றுவித்தல். (5)

226. அம்ம வாழி தோழி நம்மலை
நறுந்தண் சிலம்பி னாறுகுலைக் காந்தட்
கொங்குண் வண்டிற் பெயர்ந்துபுற மாறிநின்
வன்புடை விறற்கவின் கொண்ட
வன்பி லாளன் வந்தன னினியே.

எ-து: 202ஆம் செய்யுளுக்குரைத்த துரைக்க. வரை விடை வைத்துப் பிரிந்த தலைமகன் நீட்டித்து வந்துழித் தோழி தலைமகட்குக் கூறியது.

இ-ள்: தோழி! நம் மலையின் நறிய தண்ணிய பக்க மலையினுள்ள மணம் வீசும் கொத்தமைந்த காந்தட்பூவி னது தேனையுண்ணும் வண்டைப்போலப் பெயர்ந்து மனம் வேறுபட்டுச் சென்று நினது வலியுடைய பிறரழகைக் கெடுக் குங் கவினைக் கவர்ந்து கொண்ட அன்பில்லாதவன் இப் பொழுது வந்தனன், எ-று.

குலைக்காந்தள் - முதற்கேற்ற அடை; ஏகாரம் - ஈற்றசை; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஆற்றுவித்தல். (6)

227. அம்ம வாழி தோழி நாளும்
நன்னுதல் பசப்பவும் நறுந்தோண் ஞெகிழவு

மாற்றலம் யாமென மதிப்பக் கூறி
நப்பிரிந் துறைந்தோர் மன்றநீ
விட்டனை யோவவ ருற்ற சூளே.

*எ-து: "அனைநிலைவகை"யாற் கொள்ளப்படும் (தொ. கள. சூத். 23, வரி 36). ஒருவழித் தணந்து வந்த தலைமகன் சிறைப்புறத்தானாக, தலைமகட்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: தோழி! நாள்தோறும் நல்ல நுதல் பசப்படவும், நறிய தோள்கள் நெகிழவும் யாமாற்றோமென்று நாம் நம்பும் பொருட்டுச் சொல்லி நம்மைப் பிரிந்திருந்தவர் நீட்டிக்க, அவரான் முன்னமே குறிப்பிட்ட சூளை நீ இப்போது விட்டு விட்டனையோ. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவு கடாதல். (7)*

228. அம்ம வாழி தோழி நம்மூர்
நிரந்திலங் கருவிய நெடுமலை நாட
னிரந்துகுறை யுறாஅன் பெயரி
னென்னா வதுகொனம் மின்னுயிர் நிலையே.

*எ-து: "அவன் வரைவு மறுப்பினும்" (தொல். கள. சூத். 23) என்பதால், தலைமகன் வரைவு வேண்டிவிடத் தமர் மறுத்துழி அவர் கேட்குமாற்றால் தலைமகளுக்குச் சொல்லுவாளாய்த் தோழி அறத்தொடு நின்றது.*

*இ-ள்: தோழி! ஒழுங்குபட்டு விளங்கிச் செல்லு மருவி பொருந்திய நெடுமலைநாடன் நம்மூரில் வந்து இரந்து குறையுறாதவனாய்ச் செல்லின், யாதாய் முடியுங் கொல்லோ நமது உயிர் நிலைதான், எ-று.*

*ஏகாரம் - பிரிநிலை, மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - அறத்தொடு நிற்றல்; ஏத்தல் - தலைமகன் பார்ப்பார் சான்றோரை முன்னிட்டு அருங்கலங்களோடும் வரைதற்குப் புகுவர். புகுந்துவிடத்து ஒருகாலைக்கு மறுப்பர், பிற்போகாக் குமரியையுடையார்போலக் கதுமென நேராது பரியஞ் சிறிதென்றானும், இளையளாலோ என்றானும், நாளும் புள்ளுந்திருத்தி வாரீரோ வென்றானும்; அங்ஙனம்*

*தமர்மறுத்தார் என்பதனைத் தலைமகள் கேட்டஞான்று ஆற்றாளாம் என்னை, எம்பெருமானொருவர்க்கு ஒருகுறை முடிப்பினல்லது ஒருவரையொரு குறைவேண்டுந் தன்மைய னல்லன். அல்லாதானிக்குறை வேண்டியது என்கட்கிடந்த அருளன்றே. இவர்க்கிவ்விளிவரலாக்கினேன் பாவியேன் என்று தலைமகள் வேறுபடும்-அது தோழிக்குப் புலனாயவழி மேற்சொல்லியவாறே அறத்தொடு நிற்பாள்.*

*நிரந்து இலங்கு அருவிய நெடுமலைநாடன் என்றது, சேர்ந்தாரோடு இடையறாத நட்பையுடைய பெருந்தகை யன் என்றபடி.* *(8)*

**229.** **அம்ம வாழி தோழி நாமழப்**
**பன்னாள் பிரிந்த வறனி லாளன்**
**வந்தன னோமற் றிரவிற்**
**பொன்போல் விறற்கவின் கொள்ளுநின் நுதலே.**

*எ-து: "நாற்றமும் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்து 'வகை' யாற் கொள்வது. வரைவிடை வைத்துப் பிரிந்த தலை மகன் மீண்டான் என்பது கேட்ட தலைமகட்கு எய்திய கவி னைத் தோழி தான் அறியாதாள்போன்று அவளை வினா வியது.*

*இ-ள்: தோழி! நாமழும்படி நம்மை விட்டுப் பலநாள் பிரிந்திருந்த அறமாந் தன்மையில்லாதான் வந்தனனோ இந்த விரவில், யாதினானோவெனின், நின்னுதல் பொற் றுகள் போல நல்ல அழகைப் பொருந்தா நிற்கும், எ-று.*

*ஓகாரம் வினா, மற்று வினைமாற்றின்கண் வந்தது. மெய்ப் பாடு - உவகை; பயன் - மகிழ்வித்தல்.* *(9)*

**230.** **அம்ம வாழி தோழி நம்மொடு**
**சிறுதினைக் காவல னாகிப் பெரிதுநின்**
**மென்றோண் ஞெகிழவுந் திருநுதல் பசப்பவும்**
**பொன்போல் விறற்கவின் றொலைத்த**
**குன்ற நாடற் கயவர்நன் மணனே.**

எ-று: 228ஆம் செய்யுள் விதி. தலைமகன் வரைவு வேண்டித் தமரை விடுத்துழி மறுப்பர்கொல்லோ வென்று அச்சமுறுகின்ற தலைவிக்குத் தோழி சொல்லியது.

இ-ள்: தோழி! நம்மோடு சிறிய தினையைக் காக்குந் தொழிலையுடையனாய் மிக நினது மெல்லிய தோள்கள் வாடவும் அழகிய நெற்றியானது பசப்பூரவும் பொன் போன்ற வலிய அழகைத் தொலைவு செய்த மலைநாடற்கு நல்ல மணத்தைச் செய்வார்கள். எ-று. ஒடு - உடனிகழ்ச்சி; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஆற்றுவித்தல். (10)

அம்ம வாழிப் பத்து முற்றிற்று

---

## 24. தெய்யோப் பத்து

231. யாங்குவல் லுநையோ வோங்கல் வெற்ப
விரும்பல் கூந்தற் றிருந்திழை யரிவை
திதலை மாமை தேயப்
பசலை பாயப் பிரிவு தெய்யோ.

எ-து: "நாற்றமுந் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்துப் 'பிற' வாற் கொள்வது. ஒருவழித் தணந்துவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

இ-ள்: உயர்ந்த மலையை யுடையாய்! பலவாகிய கூந்தலையுந்திருந்திய ஆபரணத்தையுமுடைய அரிவையது திதலையையுடைய அழகு கெடப் பசலையானது பரக்கப் பிரிதல் எவ்விதம் வல்லாயோ? எ-று.

ஒகாரம் - வினா; தெய்யோ - அசை; நன்மை கெடவும் தீமை பெருகவும் எப்படிக் கற்றுவல்லாயென நகையாடிக் கூறுவாள் போன்று தலைமகள் வருத்தமிகுதி கூறினாள்.

மெய்ப்பாடு நகையைச் சார்ந்த அழுகை; பயன் வரைவு கடாதல். (1)

232. போதார் கூந்த லியலணி யழுங்க
வேதி லாட்டியை நீபிரிந் ததற்கே
யழலவிர் மணிப்பூ ணனையப்
பெயலா னாவென் கண்ணே தெய்யோ.

*எ-து: இதுவுமது. ஒருவழிப் பிரிந்து வந்த தலைமகன் 'நான் பிரிந்த நாட்கண் என் செய்தீர் எனக் கேட்கத் தோழி அவற்குச் சொல்லியது.*

*இ-ள்: பேரரும்பு நிறையுங் கூந்தல் இயற்கையழகு குறைய நினக்கு அயலாம் தன்மையிலாளாய இவளை நீ பிரிந்ததற்கு அழல்போல விளங்கும் மணியணிந்த பூண்கள் நனைய நீரைச் சொரித லமையாதனவா யிருந்தன எனது கண்கள், எ-று.*

*ஏதிலாட்டி - காரணமில்லாதவள் என்றுமாம். ஏதிலாள னையென்று பாடமாயின் கூந்தல் - எழுவாய், இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழி. காரண மின்றிப் பிரிதற்கு. நான்காவது அதனாற் செயப்படற்கொத்த கிளவி; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவு கடாவல்.*

*(2)*

233. வருவை யல்லை வாடைநனி கொடிதே
யருவரை மருங்கின் னாய்மணி வரன்றி
யொல்லென விழிதரு மருவிநின்
கல்லுடை நாட்டுச் செல்ல றெய்யோ.

*எ-து: "நாற்றமுந் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்துப் 'பிற' வாற் கொள்வது. ஒருவழித் தணந்து வந்து வரைய வேண்டுமென்ற தலைமகற்குத் தோழி கூறியது.*

*இ-ள்: அரிய வரையின் பக்கத்தேயுள்ள ஆராயப்படும் மணிகளை வாரிக்கொண்டு ஒல்லென இழி தருகின்ற அருவி யையுடைய நினது மலையையுடைய நாட்டின் செல்லல்; சென்றால் வருந்தன்மையல்லை; வாடையோ மிகவுங் கொடிது, எ-று. ஏகாரம் - தேற்றம்; மெய்ப்பாடு - அழுகை; பயன் - அது.* *(3)*

234. மின்னவிர் வயங்கிழை ஞெகிழச் சாஅய்
நன்னுதல் பசத்தலாவது துன்னிக்
கனவிற் காணு மிவளே
நனவிற் காணாணின் மார்பே தெய்யோ.

*எ-து: இதுவுமது, "கனவு முரித்தா லவ்விடத்தான" (தொ. பொருளியல் சூத். 3) என்பதுங் கொண்டு, இடை விடாது வந்து ஒழுகா நின்றே களவு நீடாமல் வரைதற்கு முயல்கின்ற தலைமகன் தலைமகள் வேறுபாடு கண்டு 'இதற்குக் காரண மென்'னென வினாவியவழி 'நின்னைக் கனவிற் கண்டு விழித்து நனவிற் காணாளாய் வந்தது' எனத் தோழி சொல்லி வரைவு முடுக்கியது.*

*இ-ள்: மின்போல ஒளிவிட்டு விளங்கும் இழை கழலும் படிக்கு மெலிந்து அழகிய நெற்றி பசக்கின்றது யாதனை நினைந்தோ கூறுவாயெனக் கனவின்கண் கண்டவிவள் விழித்தபோது நினது மார்பைக் காணாமையே, எ-று.*

*ஏகாரம் - தேற்றம்; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் வரைவுகடாவல். (4)*

235. கையுற வீழ்ந்த மையில் வானமொ
டரிது காதலர்ப் பொழுதே யதனாற்
றெரியிழை தெளிர்ப்ப முயங்கிப்
பிரியல மென்கமோ வெழுகமோ தெய்யோ.

*எ-து: "போக்கற்கண்ணும்" (தொல். அகத்திணையியல், சூத். 39) என்பதால், உடன்போக்கு நேர்வித்தபின்பு, தலைமகன் உடன் கொண்டு போவான் இடையாமத்து வந்துழித் தலைமகட்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: தொழில் பொருந்திய விரும்பிய குற்றமற்றமழையுடன் அருமையை யுடைத்து நமது காதலருடைய வரவுக் காலம்; ஆதலின் விளங்குகின்ற ஆபரண மொலிக்க முயங்கிப் பிரியேமென்றுமோ? அன்றிப் போதற்கு எழுவோமோ? எ-று.*

*நஞ்செயல் மாட்சிமையடையும் படியாகிய காலம் என்பாள் வானமொடு பொழுதென்றும், குற்றேவன் மகளாகலின் அவளை ஏவாதும் வினாவினாள். அரிது என்பது முயங்கியிருத்தற்குத் தகாத காலமென்றும் எழுதற்குத் தகுந்த காலமென்றும் பொருள்பட நின்றது. தெளிர்ப்ப என்பது "வருநர்க்கு வரையாது பொலங்கலந் தெளிர்ப்ப"[1] என்றாற் போல; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - உடன் போக்குணர்த்தல்.*

*(5)*

**236.** **அன்னையு மறிந்தன ளலரு மாயின்று**
**நன்மனை நெடுநகர் புலம்புகொள வுறுதரு**
**மின்னா வாடையு மலையு**
**நும்மூர்ச் செல்க மெழுகமோ தெய்யோ.**

*எ-து: 233ஆம் செய்யுளிற் கூறிய 'பிற'வினாற் கொள்வது. களவொழுக்கம் வெளிப்பட்டமையும் தம் மெலிவு முணர்த்தித் தோழி உடன்போக்கு நயந்தாள் போன்று வரைவு கடாயது.*

*இ-ள்: இவ்வொழுக்கத்தை யன்னையு மறிந்தனள். அதுவுமன்றி இவ்வூரிடத்து அலருமாயிற்று; நல்ல மனையையுடைய நீண்ட நகர் தனிமை கொள்ள, மிகும் இன்னாமையையுடைய வாடைதானும் வருத்தும்; ஆயின், நும்மூர்க்கண் செல்ல வெழுவேமோ? எ-று.*

*உம்மை - எண்ணும்மை; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவுகடாதல்.* *(6)*

**237.** **காமங் கடவ வுள்ள மினைப்ப**
**யாம்வந்து காண்பதோர் பருவ மாயி**
**னோங்கித் தோன்று முயர் வரைக்**
**கியாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ.**

*எ-து: இதுவுமது. அல்லகுறிப்பட்டு நீங்கிய தலைமகனை வந்திலனாகக் கொண்டு அவன் பின்பு வந்துழி அவற்குந் தோழி சொல்லியது.*

*இ-ள்: காமமானது செலுத்த மனம் வருத்த யாம் வந்து காண்கின்றதோர் பருவமானால், மேற்பட்டுத் தோன்று*

1. பதிற்றுப்ப. செய். 18.

முயர்ந்த மலைக்கு எவ்விடத்தது என்று சொல்லப்படுவது நும்மூர்? எ-று. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - அது. (7)

238. வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினுங்
குருமயிர்ப் புருவை யாசையி னல்கு
மாஅ லருவித் தண்பெருஞ் சிலம்ப
நீயிவண் வரூஉங் காலை
மேவரு மாதோ விவணலனே தெய்யோ.

எ-து: இதுவுமது. வரையாது வந்தொழுகுந் தலைமகற்கு 'இவள் கவின்நீ வந்தகாலத்து வருதலால் நீபோன காலத்து அதன் றொளைவு உனக்கு அறியப்படாது' எனத் தோழி சொல்லி வரைவுகடாயது.

இ-ள்: நீண்ட கொம்பையுடைய வலிய கடாய் தன்னிடத்துக் குறித்த காலத்தில் வராது தவறினும், நிறம் விளங்குகின்ற மயிரையுடைய ஆட்டுமறி அதனைக் காணுமாசையாலின்னும் வருமெனவிருக்கின்ற பெரிய அருவி பொருந்திய குளிர்ந்த பெரிய சிலம்பனே! நீ இவ்விடத்து வருங்காலையில் இவளது அழகு பொருந்தப் பெறும், எ-று.

வார்கோட்டு......நல்குமென்றது, இவளும் இவ்வாறே நின்னைக் காணலாமென்னுமாசையாலே உயிரோடு வாழா நின்றாள் என்பதாம். உம்மை - சிறப்பு. மாதோ, முன்னிலையசை; ஏகாரம் - தேற்றம்; மெய்ப்பாடும் பயனும் அவை. (8)

239. சுரும்புணக் களித்த புகர்முக வேழ
மிரும்பிணர்த் துறுகற் பிடிசெத்துத் தழூஉநின்
குன்று கெழு நன்னாட்டுச் சென்ற பின்றை
நேரிறைப் பணைத்தோண் ஞெகிழ
வாரா யாயின் வாழேந் தெய்யோ.

எ-து: இதுவுமது. 'வரைவிடைவைத்துப் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி கூறியது.

இ-ள்: வண்டுகளுண்ணும்படி மதத்தையுடைய களிறு கரிய சருச்சரையையுடைய குண்டாகிய கல்லைப் பிடியென்று

கருதித் தழுவுகின்ற நினது சிறுமலைகள் பொருந்திய அழகிய நாட்டின் சென்றபின்பு ஒத்த சந்தினையுடைய பருத்த தோள் மெலிய வாராயாயின் யாம் வாழும் தன்மை யமல்லேம், எ-று.

சுரும்புணக்களித்த புகர்முக வேழ மிரும்பிணர்த்துறு கற்பிடி செத்துத் தழுவும் என்றது, நினைக்குத் தகுதியல்லா ளொருத்தியைத் தகுதியுடையளென்று வரையவுங் கூடுமென நகையாடிக் கூறியது. கரும்புணக்களித்தவென்று பாடமா யின், தான் விரும்புமுணவாகிய கரும்பையுண்டு மதங் கொண்ட என்க. நேரிறைப்பணைத்தோள், ஒத்த வரைகளை யுடைய பணை போலுந் தோளென்றுமாம். செத்து-கருதி யென்பது. பொய்யாக வீழ்ந்தேனவன் மார்பின் வாயாச் சொத்து-ஒய்யென வாங்கே யெடுத்தனன்"[1] மெய்ப்பாடு - நகையைந் சார்ந்த பெருமிதம்; பயன் - வரைதல். (9)

240. அறியே மல்லே மறிந்தன மாதோ
பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்
சாந்த நாறு நறியோள்
கூந்த ணாறுநின் மார்பே தெய்யோ.

எ-து: "பெறற்கரும் பெரும் பொருள்" (தொல். கற்பியல். சூத். 9). என்னும் சூத்திரத்தில் "பிற"வாற் கொள்வது. தலைமகற்குப் புறத்தொழுக்க முளதானமையறிந்து தலை மகள் புலந்தவழி அவன் அதனை இல்லையென்று மறைத் தானாகத் தோழி சொல்லியது.

இ-ள்: யாமறியாதேமல்லேம், அறிந்தேம்; எதனாலாயின் புள்ளி பொருந்திய பல நிறமுடைய சிறகினையுடைய வண்டுக் கூட்டம் மொய்க்கும்படி சந்தனம் நாறும் நறிவியோளது கூந்தலினது வாசனை வீசா நிற்கும், நினது மார்பானது, எ-று.

மாதோ - அசை; மெய்ப்பாடு - மருட்கையைச் சார்ந்த வெகுளி; பயன் - பரத்தைமை நீக்குதல். (10)

தெய்யோப் பத்து முற்றிற்று

---

1. குறிஞ்சிக்கலி, செய். 1.

## 25. வெறிப் பத்து

241. நம்முறு துயர நோக்கி யன்னை
வேலற் றந்தா ளாயினவ் வேலன்
வெறிகமழ் நாடன் கேண்மை
யறியுமோ தில்ல செறியெயிற் றோயே.

*எ-து: "களம் பெறக்காட்டினும்" (தொல். களவி. சூத். 23, வரி 39) என்பதால், இற்செறித்தவழித் தலைமகட்கு எய்திய மெலிவு கண்டு, இஃது எற்றினானாயிற்றென்று வேலனைக் கேட்பத் துணிந்துழி, அறத்தொடுநிலை துணிந்த தோழி செவிலி கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லியது.*

*இ-ள்: செறிந்த எயிற்றையுடையாய்! அன்னை நம்மிடத்துப் பொருந்திய துயரத்தைப் பார்த்து வெறியாட்டாளனை அழைத்து நந்துயரத்தை வினவுவளாயின், அந்த வெறியாட்டாளன் வாசனை கமழா நிற்கும் மலைநாடனோடு நம்மிடையுறவு அறிவானோ? எ-று.*

*அவ்வென்னுஞ் சுட்டு, அறியாமையை உணர்த்தி நின்றது. தில்லை என்பது, அறிந்தால் இன்னாமையுடைய தொன்றாயிருக்குமென ஒழிபிசைக்கண் வந்தது. ஓகாரம் - வினா.*

*காப்புமிகுதி, நொதுமலர் வரைவு, அவன் வரைவு மறுத்தல், அவனூறஞ்சலாகிய இவற்றிலோரிடத்தில் தலைமகட்கு வேறுபாடுண்டாம். அஃது அப்பொழுதே தன் அவள் என்னும் வேற்றுமையிலளாகிய தோழிக்குப் புலனாம். அவ்வாறாயினவிடத்துத் தோழி எனக்குப் புலனாயினவாறுயாய்க்குப் புலனாயின ஞான்று வாளாவொழியாள்; அறிவரை வினாவும். அவரும் தெய்வத்தினானாயிற்றென்ப. என்னை? பிறிதொன்று சுட்டியுணரும் தன்மைத்தன்று. இக்குலமாகலானும் அதுவே சொல்லுதற் பயத்தது தங்கருமமாகலானும் அறியாதேயுஞ் சொல்லுப; சொல்ல இவள் தெய்வத்திற்கு வழிபாடு செய்விக்கும்; செய்விக்கத் தலை*

மகட்குக் கற்பழியும்; யாதாயின், தம் தலைவரையன்றிப் பிறிதோர் தெய்வம் வணங்கார் பத்தினியாராகலின். என இன்னோரன்னவுன்னி யாற்றாளாய் இனி என்னை வினாவி யன்றே பிறரை வினாவுவது, அவ்விடத்து இன்னது மாறு கோளில்லா வகையாற் சொல்லுவேனெனக் கூட்டமில் நாட்டவகையாற் சிந்தித்துக் கொண்டிருந்தாள். இருக்கயாய் பிற்றைநாள் சிறுகாலைபுக்கு மகளை அடியிற் கொண்டு முடிகாறு நோக்கி என்மகள் பண்டையளல்லள்; ஆகையால் இவ்வேறுபாடு எற்றினானாயிற்றென்று சிந்தித்து இவளை வினாவாதே அறிவாரை வினாவின் அவர் அஃது தெய்வத்தி னான் ஆயிற்றென்ப; என்றக்காற் றெய்வத்திற்கு வழிபாடு செய்விப்பான் வேலனைக் கூவி வெறியாட்டெடுத்துக் கொண்டு வெறியாடுமிடத்து வேலற்கும் கட்டுவித்திக்கும் கழங்கிற்கும் கூறுவாளாய்க் கூறும்; அதுகேட்டுத் தாய் என் சொல்லியவாறோ என்னும், அவள் குறிப்பறிதற்கு. அது கேட்டுச் சொல்லும், “அஃது என்னால் அறியப்படுவதுஞ் சிறிது உண்டு; யாதெனின், எம்மைக் கூழைக்கற்றைக் குழ விப் பிராயத்து மாழை கலந்த வேழை நீர்மையாரொடு நாட் கோலஞ்செய்து விளையாடி வம்மினென்று போக்கினாய்; யாம் போய் ஒரு வெண்மணலடர்ந்த தண்மலர்ப் பொழி லிடை விளையாடா நின்றேமாக, அந்நேரத்து ஒரு தோன் றல் ஒரு சுனைக் குவளைப் பூக்கொண்டு அவ்வழியே போந் தான்; நின் மகளவனை நோக்கிப் பூவை யென்பாவைக் கணியத் தம்மின் என்றாள்; அவனும் பிறிதொன்றுஞ் சிந்தி யாது கொடுத்து நீங்கினான்; இஃது அறியாக்காலத்தில் நிகழ்ந்தது” என்னும்.

“இஃது அறிவது அறியாக்காலத்து நிகழ்ந்ததனை அறி வதறிந்து ‘கொண்டாற்குரியர் கொடுத்தார்” எனவும் ‘உற் றார்க்குரியார் பொற்றொடி மகளிர்’ எனவும் நினைந்து, அவனை வழிபடாது பிறிதொன்றாவதாயின் இக்குலத்துக்கு வடுவாங்கொல்லோ எனக் கருதினமையான் நின் மகள் வேறு பட்டது” என்னும். எனவே தாயறிவினோடு மாறுகொள்ளா தாயிற்று விளையாடி வம்மின் என்றமையின். இனிப்

பெருமையோடு மாறு கொள்ளாதாயிற்று. அக்காலம் நற்செய்கை செய்ததனை இக்காலத்து நினைந்தமையின். இனிக் காவலோடு மாறுகொள்ளாதாயிற்று இருவருமிருந்த நிலைமைக்கண் நிகழ்ந்ததென்றமையின். இனி நாணினோடு மாறு கொள்ளாதாயிற்று அறிவது அறியாக் காலத்து நிகழ்ந்தது என்றமையின். இனி உலகினோடு மாறு கொள்ளாதாயிற்று உற்றார்க்குரியார் பொற்றொடி மகளிரென்றமையின். இதுவே மாறுகோளில்லா வகையாம் (இறை. அகப். உரை). இப்பத்திற்கும் இச்செய்யுள் விதியே கொள்க.

அறத்தொடுநிலை எழுவகையுள் இது கூறுதலுசாதல் (தொல். பொருளியல், சூத். 13). மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - களவு வெளிப்படுத்தல். (1)

**242.** அறியாமையின் வெறியென மயங்கி
யன்னையு மருந்துய ருளந்தன ளதனா
லெய்யாது விடுதலோ கொடிதே நிரையித
ழாய்மல ருண்கண் பசப்பச்
சேய்மலை நாடன் செய்த நோயே.

எ-து: செவிலி தலைமகள் மெலிவு கண்டு 'இஃது எற்றினானாயிற்று' எனக் கவன்று வெறியானறியக் கருதி வழி, தலைமகள் அறத்தொடுநிலை நயப்ப வேண்டித் தோழி அவட்குக் கூறியது.

இ-ள்: அன்னை அறியாமையினால் அணங்கு கொள்ளப்பட்டாளென மயங்கிப் பிறிதொன்றானு நீங்காத துயரெய்தினாள்; ஆதலின் நிரையாகிய விதழ் பொருந்திய ஆராய்ந்து எடுக்கப்படும் மலர் போலும் மையுண்ட கண்கள் பசப்பூர, சேயது மலையைவுடைய நாடன் நமக்கு உண்டாக்கிய நோயை அவள் அறியாதுவிடுதல் கொடிது, அறிவிக்க வேண்டும், எ-று.

வெறி - ஆகுபெயர்; அன்றிச் சில சொல் வருவித்துரைப்பினுமமையும். எய்யாமை-அறியாமை; "எய்யாமையே அறியாமையே"[1] என்பதோத்தாகலின். சேய் - முருகவேள்;

1. தொல். சொல். உரி. சூத். 46.

அன்றித் தூரிய விடமுமாம். ஏகாரம்-தேற்றம். அறியாமை - அவன் செய்த நோயையறியாமை; மெய்ப்பாடு - அது; பயன் - அறத்தொடு நிலை நயப்பித்தல். (2)

243. கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
யறியா வேலன் வெறியெனக் கூறு
மதுமனங் கொள்குவை யனையிவள்
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே.

எ-து: தாயுழையறியாமை கூறித் தோழி வெறி விலக்கியது.

இ-ள்: கறிக்கொடி வளரா நிற்குஞ் சிலம்பிடத்துக் கடவுளாற் பாதுகாத்தலறியாத வெறியாட்டாளன் வெறியான றிய வேண்டுமெனக் கூறுகின்ற அதை, இவள் புதிய மலர் போலு மழைக்கண் தனிமையுற்றதால் வந்த பசப்பிற்குங் கேட்டறிய மனங்கொள்ளா நின்றாய், அன்னையே! எ-று.

அவனதை அறிந்து சொல்லமாட்டானென்பது குறிப்பு.

கறி-மிளகு. கடவுட்பேணி யறியாவேலன்-கடவுளை விரும்பியறியாத வேலன், கடவுளைப் பாதுகாக்கப்படாத வேலன், கடவுளை வழிபட்டு அறிய வேண்டுவனவற்றை அறியாத வேலன், அறியாமையையுடைய வேலன் ஒருவாற் றானு மறியப்படாத கடவுளை வெறியானறிய விரும்பிக் கூறும் எனப் பொருள்படுமாறு காண்க. "பிணையும் பேணும் பெட்பின் பொருள"[1] என்றலின் குறிப்பினாற் புறந் தருதலும், 'பெட்பின் பொருள' என்பதால் விரும்புதலுமாம். பேணி இரண்டுமாதல் "உருகெழு மரபிற் கடவுட் பேணியர்"[2] என்றும் "வானத்து - நிலைபெறு கடவுளும் விழை தகப் பேணி"[2] என்றும் வருவதானறிக.

கறிவளர்சிலம்பிற் கடவுள் என்பது, அனுபவஞ் ஞான மாகிய நல்லறிவானன்றி அறியப்படாத கடவுள்; அன்றிப் புறத்தினிமைபோற் றோன்றி அகத்தின்னாமையையுடைய வெறியென்றுமாம்.

1. தொ. சொல். உரி. சூத். 42.

2. பதிற்று. செய். 21.

*இது உண்மை செப்பல் அறத்தொடுநிலை. மெய்ப்பாடு -பெருமிதம்; பயன் - களவு வெளிப்படுக்க வெறி விலக்கல். (3)*

244. அம்ம வாழி தோழி பன்மலர்
நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை
குன்றம் பாடா னாயி
னென்பயஞ் செய்யுமோ வேலற்கவ்வெறியே.

*எ-து: வெறியாடல் துணிந்துழி விலக்கலுறுந்தோழி செவிலி கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லியது.*

*இ-ள்: தோழி! பலலரையுடைய நறிய தண்ணிய சோலை பொருந்திய நாட்டையுடைய நெடுந்தகையானது மலையைப் பாடானாயின், வேலனுக்கு அந்த வெறியானது யாது பயனைச் செய்யும்? எ-று. ஒன்றுமில்லை என்றபடி.*

*அம்ம வாழி - முன்னிலையசை; ஓகாரம் எதிர்மறை; பாடுவனாயின் பயனைத் தரும். மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - அது. (4)*

245. பொய்யா மரபி னூர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயிற்
கெழுதகை கொல்லிவ ளணங்கி யோற்கே.

*எ-து: "நாற்றமுந் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்துப் "பிற" வாற் கொள்வது. தலைமகன் சிறைப்புறத்தானாக வெறியறிவுறீஇத் தோழி வரைவுகடாயது.*

*இ-ள்: பொய்யற்ற முறைமையுடைய நஞ்சிற்றூரிலுள்ள முதிய வேலன் கழற்காயை மெய்யிலணிந்து மருந்தைத் தூக்கிக்கொண்டு முருகணங்கின் குறையெனச் சொல்லுமாயின் இவளை வருந்தும்படி செய்த சிலம்பனுக்குரிமையுடையவாங்கொல்லோ? எ-று.*

*அவ்வெறியுமையன்றென்பது. கன்னம் என்பது நோய் தணித்தற்குச் செய்து கொடுக்குமோர் படிமம். கெழுதகை-உரிமை; மெய்ப்பாடு - அது; பயன் - வரைவுகடாவல். (5)*

246. வெறிசெறித் தனனே வேலன் கறிய
கன்முகை வயப்புலி கழங்குமெய்ப் படுஉ
மெய்ம்மை யன்ன பெண்பாற் புணர்ந்து
மன்றிற் பையு டீருங்
குன்ற நாட னுறீஇய நோயே.

*எ-து: இதுவுமது. வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாய் நின்றுழி அவன் கேட்குமாற்றால் வெறி நிகழா நின்றமை தோழி தலைமகட்குச் சொல்லியது.*

*இ-ள்: மிளகுக் கொடி பொருந்திய மலைக்குகையில் வாழும் வயப்புலியானது கழற்காயைக் கண்ணாகவுறுத்திப் பொய்ம்மை வகையாற் பண்ணிவைத்த பெண்பாற் புலியை மெய்ப்புலியென்று புணர்ந்து, படப்பை நடுவே தனது வேட்கை நோய் தீரும் மலைநாடனாற் பொருந்திய நோயே காரணமாக, அன்னையாலழைக்கப்பட்டு வேலன் வெறியாடுவான் நின்றான்; யாது செய்வோம், எ-று.*

*பயிர் விளைப்பார் விலங்குகள் நலியாமை காரணமாகப் பார்வை பண்ணி வைத்தலியல்பு. மன்று-பலரும் வந்து கூடுதற்கும் காணுதற்குமமையச் செய்யும் இல்லம். இங்கு தோட்ட நடு வயப்புலி புணர்ந்தெனவே பெண்புலியென்பது பெறப்படும். ஏகாரம் முன்னது தேற்றம்; பின்னது பிரிநிலை. வயப்புலி......தீருமென்றது, நம்மை வரைந்து கொள்ள நினையாது இக்களவிற் புணர்கின்ற மாயப் புணர்ச்சி யானே இன்பம் முடிய நுகர்கின்றான் என்பதாம். மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - வரைவுகடாவல்.*

*(6)*

247. அன்னைதந்த தாகுவ தறிவன்
பொன்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயி
னருவரை நாடன் பெயர்கொலோ வதுவே.

*எ-து: 241ஆம் செய்யுள் விதி. வெறிவிலக்கலுறுந் தோழி தமர் கேட்பத் தலைமகளை வினவுவாளாய்ச் சொல்லியது.*

இ-ள்: அன்னை வேலனை அழைத்த தன்மையையறி வேன்: பொன்னகர்போலு மிக்களத்தில் படிமக்கலத்தை யெடுத்து நின்று முருகணங்கின் குறையெனச் சொல்லுமா யின், அவன் சொல்லுமப் பெயர் அரிய மலை நாடனது பெயர் கொல்லோ! எ-று. ஓகாரம்-எதிர்மறை.

'அன்னை தந்தபு வாகுவது' என்றும் பாடம். இதற்கு அன்னையது அறியாமையாவதை என்க. ஏகாரம்-பிரிநிலை. மெய்ப்பாடு - நகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - களவு வெளிப்படுதல். (7)

248. பெய்ம்மணன் முற்றங் கவின்பெற வியற்றி
மலைவான் கொண்ட சினைஇய வேலன்
கழங்கினா னறிகுவ தென்றா
னன்றா லம்ம நின்றவிவ ணலனே.

எ-து: இதுவுமது. தலைமகள் வேறுபாடு கழங்கினாற் றெரியுமென்று வேலன் கூறியவழி, அதனைப் பொய்யென இகழ்ந்த தோழி வெறிவிலக்கிச் செவிலிக்கு அறத்தொடு நின்றது.

இ-ள்: இடப்பட்ட மணல்முற்றம் அழகுசெய்து வெறி யாடலையேறிட்டுக் கொண்ட கோபித்தலையுடைய வேலன், இவளது வேறுபாடு கழங்குக் குறி பார்த்தலினாற் றெரியு மெனக் கூறா நின்றான்; அது மிக நன்றாயிருக்கின்றது, எ-று. இதனைலறிய முடியாதென்பது குறிப்பு.

மலைதல் இப்பொருட்டாதல் "அரசருமமர் மலைந் தரணம் வீசினார்"[1] அரசரும் போரை யேறிட்டுக் கொண்டு கவசத்தையணிந்தார் என்பது சிந்தாமணி. அம்ம-முன்னிலை யசை; ஏகாரம்-ஈற்றசை; ஆல்-அசை; இவணலன் நன்று எனினுமமையும்; மெய்ப்பாடும் - பயனும் அவை. (8)

249. பெய்ம்மணல் வரைப்பிற் கழங்குபடுத் தன்னைக்கு
முருகென மொழியும் வேலன் மற்றவன்

1. சீவகசிந். காந்தருவ.செ. 285.

வாலிய விலங்கு மருவிச்
சூர்மலை நாடனையறியா தோனே.

எ-து: இதுவுமது. வேலன் கூறிய மாற்றத்தை மெய் யெனக் கொண்ட தாய் கேட்பத் தலைமகளுக்குத் தோழி சொல்லியது.

இ-ள்: இடப்பட்ட மணல் பொருந்திய முற்றத்தில் கழங்கையிட்டுக் குறி பார்த்து யாய்க்கு இவள் வேறுபாடு முருகணங்கினா னாயிற்றென்று வேலன் கூறுமாயின் அவ் வேலன் வெள்ளிய குறுக்கிட்டுப் பாயும் அருவியுடைய அச்சம் பொருந்திய மலைநாடனையறியான், எ-று. அறியி னிவ்வாறு கூறானென்பது குறிப்பு. மற்று - அசை; மலை நாடன் - முருகன்; மெய்ப்பாடு - மருட்கையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - அது. (9)

250. பொய்படு பறியாக் கழங்கே மெய்யே
மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்
மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோ
னாண்டகை விறல்வே ளல்லனிவள்
பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே.

எ-து: இதுவுமது. தலைமகட்கு வந்த நோய் முருகனால் வந்தமை இக்கழங்கு கூறிற்றென்று வேலன் சொன்னானென் பது கேட்ட தோழி, அக்கழங்கிற் குரைப்பாளாய்ச் செவிலி கேட்குமாற்றால் அறத்தொடுநிலை குறித்துச் சொல்லியது.

இ-ள்: பொய்யாதலை யறியாத கழங்கே! பூணைத்தாங் கிய இளமுலையையுடைய இவளை வருத்தியவன், நீலமணி போலும் மலையிலுள்ள காட்டில் அழகிய மயில்கள் ஆர வாரித் தாடும் நமது விரிந்த வள்ளியங்கானத்தை யுரியவனா கிய வாண்டகைமையுடைய வெற்றி பொருந்திய முருக வேளல்லன்; இது மெய்யே, எ-று.

அணங்கியோன் நங்கானங்கிழவோன், வேளல்லன்; இது மேய்யே என்றுமாம். மலைக்குகையாகிய காட்டில்

வாழும் மயில்களாரவாரித்தாடும் கொடி பொருந்திய காடு என்றுமாம். மடம் இப்பொருட்டாதல் "குடப்பாலுறை யாகு வியிமி லேற்றின்-மடக்கணீர் சோரும்வருவ தொன்றுண்டு"[1] என்பதானுணர்க. பொய்படுபறியாக் கழங்கே என்றது, நின்னாற் கூறப்படுவது எக்காலத்தும் எவரானுமறியப்படாத கழங்கென்றும், நீ கூறுவதும் பொய்யாத லறியாத கழங்கே எனவும் பொருள் தந்து நின்றது. ஏகாரம் - முன்னது தேற்றம்; பின்னது பிரிநிலை; மெய்ப்பாடும் பயனும் அவை.

கழங்கு பார்த்தலாவது நெற்குறி பார்த்தல் போல்வது. அது வெறிக்களத்தில் பரப்பியிட்டுப் பார்க்கும்போது மூன்று மிரண்டு மொன்றும் படுகை. மூன்று-மயில். இரண்டு-கோழி. ஒன்று வேல். இதனை அடி கொடி உவகையென்று பெயர் கூறுப. இவ்வாறுபடின் முருகணங்கினாலயிற்றென்பது. இது குறிஞ்சி நிலத்தார் வழக்கு. கழங்கு பார்த்தல் வேலனும், நெற்குறி பார்த்தல் கட்டுவித்தியும் என அறிக. (10)

வெறிப் பத்து முற்றிற்று

---

## 26. குன்றக் குறவன் பத்து

**251.** குன்றக் குறவ னார்ப்பி னெழிலி
நுண்ப லழிதுளி பொழியு நாட
நெடுவரைப் படப்பை நும்மூர்க்
கடுவர லருவி காணினு மழுமே.

எ - து: 236-ம் செய்யுள் விதி. வரையாது வந்தொழுகுந் தலைமதற்கு வரைவுவேட்ட தோழி கூறியது.

இ-ள். குன்றக் குறவன் தினை முதலிய விளைவு காரணமாக ஆர்ப்பின் அதற்கு இன்றியமையாத நீரை மேகமா

---

1. சிலப்ப. 17 ஆச்சியர். உரைப்பாட்டுமடை 1-2.

னது நுண்ணிய பலமிக்க துளியாகப் பொழியு நாடனே! நீண்ட மலைக்கண்ணுள்ள தோட்டம் பொருந்திய நும்மு ரிடத்தவாகிய மிக விரைந்து வருகையையுடைய அருவி யைக் கண்டாலும் (அது நின் மலையினின்றும் வீழ்கின்ற அருவியென்றது கொண்டு) அதற்கு நின் கொடுமை கூறி இவள் அழும், எ-று.

குன்றக்குறவன்........நாடவென்றது, குறவர் பயிர் விளைத் தற்குத் தன்னை விரும்பி யாவாரஞ்செய்ய அவர்க்கு வேண் டும் நீரை மழை பொழியு நாடனாகியும் அதற்குத்தக வொழு குகின்றிலையென்பது. யாம் வரைவு வேண்டிக் கூறவும் வரை கின்றிலை என்பதாம். உம்மை முன்னது உயர்வு சிறப்பு; பின்னது இழிவு - சிறப்பு; ஏகாரம் - தேற்றம்; மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - வரைதல். (1)

252. குன்றக் குறவன் புல்வேய் குரம்பை
மன்றா டிளமழை மறைக்கு நாடன்
புரையோன் வாழி தோழி விரைபெய
லரும்பனி யளைஇய கூதிர்ப்
பெருந்தண் வாடையின் முந்துவந் தனனே.

எ-து: "ஆங்கதன்றன்மையின் வன்புறையுளப்பட" (தொல். களவி. சூத். 23, 44) என்பதால், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன், குறித்த பருவத்துக்கு முன்னே வந்தானாக உவந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: குன்றக் குறவனது புல்லால் வேய்ந்த சிறு குடி லைப் புறத்தே வெளியில் திரிகின்ற பயன்படுவதாகிய மேகங் கள் மறைக்கின்ற சிலம்பன் உயர்ச்சியையுடையோன், வாழ் வாயாக தோழி! விரைந்து பெய்யும் அரிய பனி கலந்த கூதிர்ப் பருவத்துப் பெரிய குளிரும் வாடைக் காற்றுக்கு முன்னே வந்தான், எ-று.

குரம்பையாகிய மன்றையென்றுமாம். ஆடுமிளமழை யென்பதை "இளமழை யாடு மிளமழை யாடு - மிளமழை

வைகலுமாடும்"[1] என்பதானறிக. புரைவன எனப் பாடமாயின் விரைபெயல்புரைவன வரும்பனியெனவியையும், விரைபெயலரும் பனி யளைஇய என்றது, எங்குங் கலந்த பெயலாலரிய குளிர் கலந்த எனினுமாம். குறவன்.....நாடன் என்றது, புல்வேய் குரம்பைப் பொல்லாங்கை மழை மறைத்தாற் போல நமக்கு வாடையான் வந்த நோய் தீர்க்க வந்தானென்பது; ஏகாரம் - தேற்றம்; மெய்ப்பாடு - உவகை; பயன் - ஆற்றுவித்தல். (2)

**253.** குன்றக் குறவன் சாந்த நறும்புகை
தேங்கமழ் சிலம்பின் வரையகங் கமழுங்
கானக நாடன் வரையின்
மன்றலு முடையள்கொ றோழி யாயே.

எ-து: "வரைவுதலைவரினும்" (தொல். களவி. சூத். 20, வரி 25) என்பதால், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் வரைவொடு புகுதரா நின்றானென்பது தோழி கூறக் கேட்ட தலைமகள் அவட்குச் சொல்லியது.

இ-ள்: குன்றக்குறவன் புனத்திற் சந்தனமரத்தை வெட்டிச் சுடுகின்றபுகை தேன் நாறும் மலையெல்லையினுள்ளிட மெல்லாம் மணம் வீசுங்கானக நாடன் வரையுமாயின் தோழியே! யாய்தானும் மணவினை இயைதலையுடையாள் கொல்! எ-று.

குன்றக்குறவன்.......நாடனென்றது, புகை தன்னுறுப்பாகிய தேனோடு கலந்து நறு மணங்கமழ்ந்தாற்போல இவனும் நம்மோடு கூடி இன்ப முண்டாக்குவானென்பது. உம்மை - சிறப்பு; நம்மனைக்கட் செய்கின்ற சிறப்புக்கு மேலே மணவினையால் அவர் செய்யுஞ் சிறப்பு மிகும் வண்ணம் விளைப்பாள்கொல் என்றுமாம்; மெய்ப்பாடு - உவகை; பயன் - ஐயமகறல். (3)

**254.** குன்றக் குறவ னார மறுத்தென
நறும்புகை சூழ்ந்து காந்த ணாறும்

1. குறிஞ்சிக்கலி, செய். 5, 25-6.

வண்டிமிர் சுடர்நுதற் குறுமகள்
கொண்டனர் செல்வர்தங் குன்றுகெழு நாட்டே

எ-து: "போக்கற் கண்ணும்" (தொல். அகத்திணை சூத். 39) என்பதால், உடன்போக்கு உடன்பட வேண்டிய தோழி தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: குன்றக் குறவன் சந்தனத்தை வெட்டிச் சுட்டா னாக அதினின்று மெழுந்த நறும்புகை சூழ, காந்தட்பூ மணம் வீசும் வண்டுகள் ஒலிக்கும், ஒளி பொருந்திய நுதலை யுடைய குறுமகளை நந்தலைவர் தமது மலையையுடைய நாட்டிற்குக் கொண்டுபோவான் கருதுவார், எ-று.

நறும்புகை சூழ அதை அந்தியில் வந்த மேகமென்று கருதிக் காந்தள் நாறுமென்க. காந்தள் நாறும் குன்று கெழு நாடெனக் கூட்டுக. சூழ்ந்து சூழ, "நாறிருங் குழலினானை நாகணைவிடையிற் புல்லிக் - கோறொடுத் தநங்கனெய்யக் குழைந்துதார் திவண்ட தன்றே"[1]; என்பதில் புல்லி - புல்ல என்றாற்போல; புகை சூழக் காந்தள் நாறுமென்றது, அய லார் கூறுமலரடங்கிக் கற்புடைமையோடு இல்வாழ்க்கைச் சிறப்பு பொருந்தச் செய்யு நாடன் என்பதாம். வண்டிமிர் காந்தளென்க. சுடுதல் - இசையெச்சம்; கெழு - சாரியை; "முடிகெழுவேந்தர் மூவர்" என்புழிப்போல; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - உடன்போக்குமாட்சிமைப்படுதல். (4)

255. குன்றக் குறவன் காதன் மடமகள்
வரையர மகளிர்ப் புரையுஞ் சாயல
ளைய ளரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே.

எ-து: "குற்றங்காட்டிய வாயில்பெட்பினும்" (தொ. கள. சூத். 11, வரி 9) என்பதால், நின்னாற் காணப்பட்டவள் எத் தகைமையள்? என்ற பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

1. சீவகசிந். சுரமஞ்சரி. செய். 68.

*இ-ள்: பாங்க! அவள் குன்றக்குறவனது அன்பு பொருந்திய மடமகள்; வரையரமகளிரைப்போலும் சாயலையுடையள், வியக்கத்தக்கவள்; அரும்பிய தனத்தையுடையள்; தேமல் படர்ந்த மார்பினள்; அறிவாய், எ-று.*

*பாங்கன் அவள் என்பன, வருவித்துரைக்கப்பட்டன. குறவன் காதன் மகளெனவே மகளரவாளிவளொழிய வின்றெனவும், மடமகளெனவே தன்வரைப்பன்றி என் வரைப்பினள் எனவும், வரையமகளிர்ப் புரையுஞ் சாயலளெனவே இடமும் அருமையும் பெற்ற பயனும், இளையள் முலையள் என்றதனாலே பிராயமும், வாயினள் மார்பினள் எனவே உருவும் தோற்றக் கூறினான். இதனால் "பிறப்பே குடிமை" என்னுஞ் சூத்திரத்துக் கூறிய வகை ஒத்திருத்தல் கண்டு கொள்க. (தொல். மெய்ப்பாட். சூத். 25) மெய்ப்பாடு உவகை; பயன் - பாங்கற்குணர்த்தல். (5)*

256\. குன்றக் குறவன் காதன் மடமகள்
வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி
வளையண் முளைவா ளெயிற்ற
ளிளைய ளாயினு மாரணங் கினளே.

*எ-து: "பண்பிற்பெயர்ப்பினும்" (தொல். களவி. சூத். 12) என்பதால், நீ கூறுகின்றவள் நின்னை வருத்தும் பருவத்தினளல்லள் என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.*

*இ-ள்: குன்றக் குறவன் காதன் மகளாகிய வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையுடைய தண்ணிய தழையை யணிந்த கொடிச்சி வளையையணிந்தவள், வெள்ளிய முளை போலும் பற்களையுடையள்; இளைமையள்; ஆயினும் வருத்துந் தன்மையுடையள், எ-று.*

*'வளையணி முன்கைவாலெற்றரிவை' என்றும் பாடம்; மன்னணங்கினளே என்றும் பாடம்; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஐயமறுத்தல். (6)*

257. குன்றக் குறவன் கடவுட் பேணி
யிரந்தனன் பெற்ற வெல்வளைக் குறுமக
ளாயரி நெடுங்கண் கலிழச்
சேயதாற் றெய்யநீ பிரியு நாடே.

*எ-து: இதற்கு 236ஆம் செய்யுள் விதி. 'வரைவிடை வைத்துப் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி யுடன்படாது கூறியது.*

*இ-ள்: குன்றக் குறவன் தன் குலதெய்வத்தை விரும்பி இரந்து பெற்ற ஒளி பொருந்திய வளையணிந்த சிறுமகளது ஆராயப்படும் செவ்வரி பரந்த நீண்ட கண் கலங்க நீ பிரிந்து போகின்ற நாடுதான் தூரியது, எ-று.*

*அவ்விடைச் சென்று வரும் வரை இவள் உயிர் வாழ்தலரிதாகலின் பிரியற்க வென்பது குறிப்பு.*

*குறவன் கடவுட்பேணி இருந்துபெற்ற மகள் என்றதனான், குறவற்கொரு மகளாய்த் துன்பமறியாதாள் துன்பமடையவென அவள் அருமையுணர்த்தியவாறு. ஆலும் தெய்யவும் - அசை; ஏகாரம் தேற்றம்; மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - செலவழுங்குவித்தல். (7)*

258. குன்றக் குறவன் காதன் மடமக
ளணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாயிற்
கொடுத்தனெ மாயினோ நன்றே
யின்னு மானாது நன்னுத றுயரே.

*எ-து: "அவன் வரைவுமறுப்பினும்" (தொல். களவி. சூத்.23, வரி. 40) என்பதால், வரைவு வேண்டிவிட மறுத்துழித் தமர்க் குரைப்பாளாய் வரையாது வந்தொழுகுந் தலை மகற்குத் தோழி அவன் மலைகாண்டலே பற்றாகத் தாங்கள் உயிர் வாழ்கின்றமை தோன்றச் சொல்லியது.*

*இ-ள்: குன்றக் குறவன் காதன் மடமகளாகிய அழகிய மயில் போலுஞ் சாயல் பொருந்திய அசைந்த நடையையுடைய கொடிச்சியைப் பெரிய மலைநாடன் வரைந்து*

கொள்ளுமாயின் யாம் கொடுத்தோமாயின் அறமாம், கொடா விடின் அவள் துயரம் மேலும் அமையாது, எ-று.

ஓகாரம் - சிறப்பு; அறமாவது - கற்பு என்றபடி; அணி மயிலன்ன அசை நடைக் கொடிச்சி - வினையுவமம். அது மயில்களும் முகிலைக் காணின் இறகு விரித்தலங்காரமுற்று நடித்துக் களிக்குமாறு அவனைக் காணின் இவளுமுரியள் என்பது. நடை - ஒழுக்கம்; பெருவரை - எங்குந் தோற்றும் வரை; எனவே அதனைக் கண்டு ஆற்றியுளாளென்பது.

மெய்ப்பாடு - அது; பயன் - தமர்க்கு வரைவுடன் படுத்து வித்தல்; தலைவற்குப் பின்னும் வரைவு வேண்டுவித்தல், அன்றி உடன்போக்குரைத்தலுமாம். (8)

259. குன்றக் குறவன் காதன் மடமகண்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்
தேம்பலிச் செய்த வீர்நறுங் கையண்
மலர்ந்த காந்த ணாறிக்
கலிழ்ந்த கண்ணளெம் மணங்கி யோளே.

எ-து: "அவட்பெற்றுமலியினும்" (தொல். கள. சூத். 12) என்பதை யிரட்டுறமொழிதலென்பதால், வரையத் துணிந்த தலைமகன் வரைவு முடித்தற்குத் தலைமகள் வருந்தும் வருத்தம் (பகற்குறிக்கண்) தோழி காட்டக்கண்டு இனி அது கடுக முடியுமென உவந்தவுள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல் லியது.

இ-ள்: குன்றக் குறவன் காதன் மடமகண்; மிகுந்த வேங்கை மலர் சிலவற்றைக் கண்டு மலையுறை கடவுளாகிய குல தெய் வத்துக்கு அருச்சித்து இனிய பலியிடுதல் செய்த மலர்ந்த காந்தள்போலத் தோன்றிய ஈரிய நறியகையையுடையாள் கலங்கிய கண்ணையுடையாளாய் வருந்துவாள்; எம்மை வருத்தியவள், எ-று.

காந்தணாறும் மலை எனினுமாம். தோத்திரம் பண் ணிப் பூசை செய்தென்றுமாம். நாறி - நாறிய எனத் திரிக்கப் பட்டது. "பிறர்க்கின்னா முற்பகல் செய்யிற் றமக் கின்னா -

*பிறபகற்றானே வரும்"¹ என்பது கொண்டு எம் மணங்கி யோள் கலிழ்ந்த கண்ணளென்றான்; மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல்.* *(9)*

260. குன்றக் குறவன் காதன் மடமகண்
மென்றோட் கொடிச்சியைப் பெறற்கரிது தில்ல
பைம்புறப் படுகிளி யோப்பலர்
புன்புல மயக்கத்து விளைந்தன திணையே.

*எ-து: இதற்கு 236ஆம் செய்யுள் விதி. பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி 'இனிப் புனங்காவற்கு வாரோ' மெனக் கூறி வரைவுகடாயது.*

*இ-ள்: குன்றக் குறவன் காதன் மடமகளாகிய மெல்லிய தோளையுடைய கொடிச்சியை யினிக் குறியிடத்து வந்து காணப் பெறுதலரிது. பசிய புறத்தையுடைய கிளி கடிய வாரோம், குறவரது புன்செய்க் கலப்பினால் திணை விளைந் தன, எ-று.*

*'ஓம்பல்' என்று பாடமாயின் கடிதலில்லை யென்க தில்ல காலத்தின்கண் வந்தது. அத்து - சாரியை, அவ்வழி. விளைந்தன - முற்றின; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவுகடாவல்.* *(10)*

குன்றக் குறவன் பத்து முற்றிற்று

---

## *27. கேழற் பத்து*

261. மென்றினை மேய்ந்த தறுகட் பன்றி
வன்க லடுக்கத்துத் துஞ்சு நாட
னெந்தை யறித லஞ்சிக்கொ
லதுவே மன்ற வாரா மையே.

*எ-து: "அல்லகுறிப் படுதலு மவள்வயினுரித்தே - அவன் குறி மயங்கிய வமைவொடு வரினே" (தொல். கள. சூத். 42).*

---

1. திருக்குறள், செய். 319.

என்பதால், அல்ல குறிப்பட்டுத் தலைமகன் நீங்கினமை அறியாதாள் போன்று தோழி, பிற்றை ஞான்று அவன் சிறைப்புறத்தானாய் நிற்பத் தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: மென்மையுடைய தினைப் பயிரையுண்ட தறு கண்மையைப் பொருந்திய பன்றியானது வலிய மலைச்சார லில் நித்திரை செய்கின்ற சிலம்பன் எம்பிதாவறிதலுக்குப் பயந்ததுவே கொல்! மிகவும் வராமைக்குக் காரணம், எ-று.

அதுவேயென்னும் ஏகாரம் - பிரிநிலை; தினைமேய்ந்த பன்றி மலைச்சாரலிற்றுஞ்சு நாடனென்றது, தான் வேண் டின இன்ப நுகர்ந்து இனிது கண்படுதலல்லது வரைதற்கு வேண்டுவன முயலாதானென்பதாம். மெய்ப்பாடு - பெரு மிதம்; பயன் - வரைவுகடாவல். (1)

262. சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி
துறுக லடுக்கத்துத் துணையொடு வதியு
மிலங்கு மலைநாடன் வரூஉ
மருந்து மறியுங்கொ றோழியவன் விருப்பே.

எ-து: "கூறியவாயில் கொள்ளாக் காலையும்" (தொல். கள. சூத். 20, 11) என்பதால், வரைந்து கொள்ள நினைக் கின்றில னென்று வேறுபட்ட தலைமகள், 'அவன் நின்மேல் விருப்புடையன் நீ நோகின்றது என்னை?' என்ற தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: சிறுதினை மேய்ந்த அஞ்சா நிலைமையினையு டைய பன்றி கல்விரவி யுயர்ந்த பக்கமலைக்கண் தன் பெண் பன்றியோடு தங்கும் விளங்குகின்ற மலைநாடன் வரைவோடு வருகின்ற மருந்துதானும் அறியுங் கொல்லோ? தோழியே! அவன் விரும்புகின்ற விருப்பம், எ-று.

நாடன் வருமருந்து மறியுங்கொல் தோழியவன் விருப்பு என்பதால், தோழி கூறியதே தலைவிகொண்டு கூறினாள் என்பது தோன்றும். தினைமேய்ந்த பன்றி துறுகல்லடுக்கத் துத் துணையொடு வதியுநாடனென்பது, களவொழுக்கத் தான் வரும் சிற்றின்பமின்றியே வரைந்துகொண்டு நின்னோடு

ஒழுகுவன் எனத் தோழி கூறியவாறு கொண்டு அவன்வயிற் பரத்தைமை கூறிற்றெனக் கொள்க. மெய்ப்பாடு - அழுகை யைச் சார்ந்த பெருமிதம்; பயன் - வன்புறை யெதிரழிந் திரங்கல். (2)

**263. நன்பொ னன்ன புனிறுதீ ரேனல்**
**கட்டளை யன்ன கேழன் மாந்துங்**
**குன்றுகெழு நாடன் றானும்**
**வந்தனன் வந்தன்று தோழியென் னலனே.**

*எ-து: "வரைவுதலைவரினும்" (தொல். கள. சூத். 20, 25) என்பதால், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் மீண் டமையறிந்த தலைமகள் 'தொலைந்த நலம் நீ இன்று எய் திய காரணமென்னை?' என்ற தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: ஓட வைத்த பொன்னன்ன முற்றிய தினையை உரைகல்லையன்ன பன்றி உண்கின்ற மலைநாடன் தானும் வந்தான்; தோழி! எனது அழகுதானுமது காரணமாக வந் தது, எ -று.*

*உம்மை-நலனும் வந்தன்று எனவே எச்சம்; நன்பொன்- மாற்றுயர்ந்த பொன்; நால்வகைப் பொன்னிலுயர்ந்த சாம் புனதப் பொன்னுமாம். அது பொன்மலையிலுள்ள பொன் னாவற்கனிச்சாறு பாயும் ஆற்றிலுண்டாய பொன். கட் டளை, "அழல்வினையமைந்த நிழல்விடுகட்டி- கட்டளை வலிப்ப"[1] என்பதனானுணர்க. பொனன்ன கேழல் மாந்து நாடனென்றது, தன்னாட்டு வாழும் விலங்குகளும் தமக்கு வேண்டுவன குறைவின்றிப் பெற்று இன்பநுகரு நாடன் என்றவாறு. இனிக்கல் பொன்னைத் தராதரங் காட்டுமாறு போல அவனும் நம்மை வரைந்து நமது நலத்தை நுகர்ந்து மனைக்கண் இல்வாழ்க்கைச் சிறப்பை எய்துவிக்கு நாடன் என்ற வாறுமாம். பொனன்ன, கட்டளையன்ன என்னும் ஏனை யுவமைகள் மேல்வருங் கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து நின்றன. மெய்ப்பாடு - உவகை; பயன் - ஐயமறுத்தல். (3)*

---

1. பதிற்றுப். செய் 81, 16-17.

264. இளம்பிறை யன்ன கோட்ட கேழல்
களங்கனி யன்ன பெண்பாற் புணரு
மயந்திகழ் சிலம்ப கண்டிகும்
பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே.

*எ-து: "நாற்றமுந் தோற்றமு" மென்னுஞ் சூத்திரத்துப் 'பிற'வாற் கொள்வது. வரையாது வந்தொழுகுந் தலைமகனைப் பகற்குறிக்கண்ணே எதிர்ப்பட்டுத் தோழி வரைவு கடாயது.*

*இ-ள்: இளம்பிறை போலுங் கோட்டினையுடைய பன்றி களாக்கனி போலும் பெண்பாற் பன்றியைப் புணர்கின்ற நீர் விளங்குகின்ற சிலம்பனே! காண், நீ விரும்பிய தோள்களும் கண்களும் பசந்தன, எ-று.*

*கேழல் பிணைவைப் புணருமென்றது, நல்லறிவில்லாதன வொழுகு மொழுக்கமும் நின்மாட்டுக் கண்டிலேம் என்றவாறு. மாதோ-அசை; மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைவு கடாவல். (4)*

265. புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பிற் கேழல் புரக்குங்
குன்றுகெழு நாடன் மறந்தனன்
பொன்போற் புதல் வனோ டென்னீ த்தோனே.

*எ-து: "வாயிலின் வருஉம் வகை"யாற் கொள்வது (தொல். கற்பியல், சூத். 6, 42), பரத்தையிடத்தனாய் ஒழுகுகின்ற தலைமகள் விடுத்த வாயின்மாக்கட்குத் தலைமகள் சொல் லியது.*

*இ-ள்: புலியாற் கொல்லப்பட்ட பெண்பாற் பன்றி யால் வளர்ந்த மெல்லிய அழகிய குட்டியை வளைந்த வெள் ளிய மருப்பையுடைய களிற்றுப் பன்றி காக்கும் மலைபொருந் திய நாடன் பொன்னைப் போல் பாதுகாக்கப்படும் புதல்வ னோடு என்னைத் துறந்தானாய் மறந்தான், எ-று.*

*புலி கொல் நாடன் என்றது, பரத்தை காரணமாக யானி றந்தால், தன் புதல்வனைத் தானே காக்கத் துணிந்து என்னை*

நித்தான் என்பதாம். மெய்ப்பாடு - அழுகை; பயன் - வாயி னேர்தல். (5)

**266.** சிறுகட்பன்றிப் பெருஞ்சின வொருத்தலொடு
குறுங்கை யிரும்புலி பொரூஉ நாட
நனிநா ணுடைமைய மன்ற
பனிப்பயந் தனநீ நயந்தோள் கண்ணே.

எ-து: "பிறன் வரைவாயினும்" (தொல். கள. சூத். 23, 40) என்பதால், நொதுமலர் வரைவு பிறந்துழித் தலைமகட் குளதாகிய வேறுபாடு தோழி கூறித் தலைமகனை வரைவு கடாயது.

இ-ள்: சிறு கண்ணையுடைய பன்றியாகிய பெரிய சினத்தைப் பொருந்திய வொருத்தலோடு குறுத்தகையை யுடைய பெரிய புலி போரைச் செய்கின்ற நாடனே! மிக நாணத்தையுடைமைய, நீரைச் சிந்துவ, நீ விரும்பிய கண் கள், எ-று.

பன்றியொருத்தலோடு புலி பொரும் என்றது, நினக்கு நிகரல்லாதார் வந்து தலைப்படவும் அதனை நீக்காது இடங்கொடுத்து ஒழுகுகின்றாயென்பதாம். "வார்கோட்டி யானையும் பன்றியுமன்ன"[1] என்பதால் பன்றிக்கு ஒருத்தல் கொள்ளப்பட்டது. நணி நாணுடைமையவென்றது நொது மலர் வரையக் கருதுதல் நாணமுடையவொன்று என்பது. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - வரைவுகடாவல். (6)

**267.** சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்த
றுறுக லடுக்கத்து வில்லோர் மாற்றி
யைவனங் கவரு குன்ற நாடன்
வண்டுபடு கூந்தலைப் பேணிப்
பண்பில சொல்லுந் தேறுதல் செத்தே.

எ-து: "வேண்டாப் பிரிவினும்" (தொல். களவி. சூத். 23 வரி 22) என்பதால், தலைமகளைத் தலைமகன் வரை

1. தொல்கா. மரபியல். சூத். 36.

வலெனத் தெளித்தானென்று அவள் கூறக் கேட்ட தோழி அவன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

இ-ள்: சிறிய கண்ணையுடைய பெருஞ் சினத்தைக் கொண்ட பன்றி யொருத்தல் நெருங்கிய கற்கள் பொருந் திய பக்கமலைக்கண் பயிரைக் காக்கின்ற கானவர்களைத் தப்பி அவராற் காக்கப்பட்ட மலை நெல்லை மேயும் மலை நாடன் வண்டுகள் ஒலிக்குங் கூந்தலையுடையாளை விரும் பிப் பொய்ம்மொழிகளைக் கூறா நிற்கும், தான் சொன்ன வார்த்தைகளை இவள் மெய்யாகக் கொள்ளுமென்பது கருதி, எ-று.

கூந்தல்-அன்மொழித்தொகை. பன்றியொருத்தல்.... கவ ரும் நாடன் என்றது, இல்லின்கட் காவலை வென்று களவி பெறு மின்பமே விரும்புவானென்பது; மெய்ப்பாடு - அது; பயன் - வரைவுகடாவல். (7)

268. தாஅ யிழந்த தழுவரிக் குருளையொடு
வளமலைச் சிறுதினை யுணீஇக் கானவர்
வரையோங் குயர்சிமைக் கேழ லுறங்கு
நன்மலை நாடன் பிரித
லென்பயக் கும்மோ நம்விட்டுத் துறந்தே.

எ-து: இதுவுமது. அவன் குறிப்பிருந்தவாற்றால் நம் மைப் பிரிந்து வந்தல்லது வரையமாட்டான் போன்றி ருந்தது எனத் தலைமகள் கூறக் கேட்ட தோழி அவட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

இ-ள்: கேழல் தாயை யிழந்த தழுவும் தன்மையுடைய அழகிய குட்டியோடு வளநிறைந்த மலையில் சிறுதினையை யுண்டு வேடரது உயர்ந்த மலையினுயர்ந்தவுச்சிக்கண்ணே யுறங்குகின்ற நல்ல மலைநாடன் நம்மை விட்டுப் பிரிந்து துறக்கின்றது யாது பயனைத் தரும்? எ-று.

தாஅயிழந்த..... கேழலுறங்கு நாடனென்றது, தாயிழந்த குருளையோடே தினையையுண்டு கேழலுறங்குகின்ற இத் தன்மையையுடைய நாடனாதலால் இவ்வாறு நிகழ்தல் கூடாதென்பதாம். இனி, தாய் என்றது தலைவி; குருளை

யென்றது அன்பு. எனவே தாம் நம்மைப் பிரிய. பிரிவாற்ற கில்லாது நாமிறந்துபட நம்மேற்கொண்ட அன்போடு வருந்தி யிருத்தலன்றிப் பிரிதல் வேறு பயனைத் தராவென்பது. இதற்கு தினையுணீய கானவர் என்ற பாடங் கொள்க. மெய்ப் பாடு - அது; பயன் - பிரிவழுங்குவித்தல். (8)

269. கேழ லுழுதெனக் கிளர்ந்த வெருவை
விளைந்த செறுவிற் றோன்று நாடன்
வாரா தவணுறை நீடி னேர்வளை
யிணையீ ரோதி நீயழத்
துணைநனி யிழக்குவென் மடமை யானே.

எ-து: இதுவுமது. குறைநயப்புக் கூறித் தலைமகளைக் கூட்டிய தோழி அவன் இடையிட்டுவந்து சிறைப்புறத்து நின்றுழித் தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: பன்றி யுழுததாக வளர்ந்த கொறுக்கைச்சி நெல் விளைந்த செறுவைப் போலத் தோன்றுகின்ற நாடன், ஒத்த வளையையு மிணைந்த ஈரிய கூந்தலையுமுடையாளே! நீயழ வாராது அவ்விடத்துறைதல் நீட்டிக்கின், யான் அவனைத் தேறி முன் செய்த மடமையான் நீ எனக்குந் துணையாதலை யிழப்பேன், எ-று. இறந்து படுவேனென்பதாம்.

கேழலுழுதென........தோன்று நாடனென்றது, வேட்கை நலியத் தனக்கு வந்த வருத்தத்தானே தலைசாய்ந்து நல்லா ரைப்போல வொழுகிய துணையேயுள்ளானென்பதாம். நீயழ வாராது அவணுறை நீடின் எனக் கூட்டுக. 'இழக்கு வன் மடமையோனே' என்றும் பாடம். மெய்ப்பாடும் பயனும் அவை. (9)

270. கிழங்ககழ் கேழ லுழுத சிலம்பிற்
றலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்
புல்லென் குன்றத்துப் புலம்புகொ ணெடுவரை
காணினுங் கலிழுநோய் செத்துத்
தாம்வந் தனர்நங் காத லோரே.

எ-து: "ஆங்கதன் றன்மையின் வன்புறை யுளப்பட (தொல். கள. சூத். 23, 44) என்பதால், வரைவு காரணமாக நெட்டிடை கழிந்து பொருள்வயிற் போகிய தலைமகன் வந்தமையறிந்த தோழி உவந்த உள்ளத்தளாய்த் தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: மலைக்கண் தன் இரை காரணமாகக் கிழங்கைத் தோண்டியெடுக்கும் பன்றி, உழுத புழுதிக்கண்ணே வித்த விளைந்த பயிரை வேடர்கள் கொய்து செல்லும் பொலிவழிந்த மலையின் நீண்ட தனிமையுற்ற சாரலைக் கண்டாலும் நாம் அழுகின்ற வருத்தத்தைக் கருதித் தாமே வந்தார், நமது காதலர், எ-று.

வருத்தமின்றி விழையும் பயிரைக் கானவர் கொய்யுஞ் சிறப்புடையதேனும் அவன் அவ்விடத்து உறையாமையின், புல்லெனவும் புலம்புகொள் எனவும் இழித்துக் கூறப்பட்டதெனக் கொள்க. உம்மை-சிறப்பு. வருத்தமின்றிப் பொருளைத் தேடிக் குறித்த பருவத்தில் வந்தனனென்பதுந் தோன்றும்; மெய்ப்பாடு - உவகை; பயன் - வற்புறுத்தல். (10)

கேழற் பத்து முற்றிற்று

---

## 28. குரக்குப் பத்து

271. அவரை யருந்த மந்தி பகர்வர்
பக்கிற் றோன்று நாடன் வேண்டிற்
பசுப்போற் பெண்டிரும் பெறுகுவன்
றொல்கே ளாகலி னல்குமா லிவட்கே.

எ-து: "அவன் வரைவு மறுப்பினும்" (தொல். கள. சூத். 23, 40) என்பதால், தலைமகன் வரைவுவேண்டி விடத் தமர் மறுத்துழிச் செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.

இ-ள்: அவரையை நிறையத் தின்ன மந்தியின் வயிறு பண்ட வாணிகரது பைபோலத் தோன்றும் நாடன் தான் விரும்பின், இத்தீங்கு செய்யாது தான் நினைத்த வழியொழு கும் குணமுடைய பெண்டிர் பலரையும் பெறுகுவன். இவட் குப் பழைய உறவினன் ஆகலின் அருள் செய்யும், எ-று.

அவரை.....நாடனென்றது, ஆண்டு வாழ்வனவும் மேலா முணவுகளிற் குறைவின்றி உண்ணுநாடன் என்பது, உயர்த் திக் கூறியது.

உம்மை - சிறப்பு; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - அறத் தொடு நிற்றல். (1)

272. கருவிரன் மந்திக் கல்லா வன்பற
ழருவரைத் தீந்தே னெடுப்பி யயல
துருகெழு நெடுஞ்சினைப் பாயுநாட
னிரவின் வருத லறியான்
வரும்வரு மென்ப டோழி யாயே.

எ-து: "குறியினொப்புமை மருடற் கண்ணும்", தொல். கள. சூத். 20, 24.) என்பதால், அல்லகுறிப்பட்டு நீங்குந் தலைமகன் சிறைப்புறத்தானாக முன்னை நாள் நிகழ்ந்தத னைத் தோழிக்குச் சொல்லுவாள் போன்று தலைமகள் சொல்லியது.

இ-ள்: வலிய விரல்களையுடைய பிறிதொன்றுமறியாத குரங்கின் குட்டி அரிய மலைக்கண்ணுள்ள இனிய தேன் கூட்டைக் கிளர்த்தெழுப்பி ஈக்கு வெருவிப் பக்கத்தேயுள்ள அச்சம் பொருந்திய நீண்ட மரக்கிளையிற் பாய்கின்ற நாடன் இரவின் இவ்விடத்து வருதலறியான். ஆகவும் யாய் வருவான் வருவான் என்று கூறா நிற்பாள், தோழியே! எ-று.

கருவிரன் மந்தி...பாயு நாடனென்றது, தாம் நம்மை நுகரக் கருதி வந்து குறியுணர்த்த அதைச் சுற்றத்தார் பலரு முணர்ந்தமையை யறிந்து வெருவிப் பெயர்வான் என்பது.

மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவொடுவருதல்; குறியாவது: தலைவன் குறியிடத்து வந்தமை தோழிக்கும்,

தலைவிக்குந் தோன்றச் செய்வது அது நீரொலிப்படுத்த லும் புள்ளெழுப்புதலு முதலாயின. இவை தலைவனாலன் றிப் பிறிதோர் காரணத்தான் நிகழ்வது. நிகழத் தலைவனி னாயவெனக் கொண்டு போந்து அவ்விடத்து அவனினா காமையுணர்ந்து மனையகம் புகும். பின்னையவன் வந்து அக் குறி செய்ய உடன் போதலுற்றாரால் ஆராயப்படுவ தொன் றாகலின் போகாது அங்கிருந்தே பிறிதொன்றன் மேலிட்டு நிகழ்ந்தவற்றை அவனறியக் கூறும். குறி வேறு காரணத்தா னிகழ்வதாவது: நீர்க்கரையிலுள்ள மரங்களின் பழ முதலியன மூக்கூழ்ந்தும் காற்றினாலடி பட்டும் நீர்மேல் வீழ்தல்; புட்கள் வேற்றுப் புள் வருகையாலும் வெருவுகையாலும் எழும்.

இனிக் குறியிடமாவது: வண்டுந் தும்பியும் வரிக்கடைப் பிரசமும் கொண்டு. புணர் நரம்பென முரன்று ஐந்து வாயி லானுங் கொள்ளப்படுந் துப்புரவினைத் தன்னகத்துடைத் தாய்ப் பலவகைப்பட்ட மரங்களானும் கொடிகளானும் பொலிவுடைத் தாய்ப்புறத்தார் அகத்தாரைக் காண்பதரி தாய், அகத்தார் புறத்தாரைக் காண்பதெளிதாய் விழைவு விடுத்த விழுமியோரையும் விழைவு தோற்றுவிக்கும் பண் பிற்று என்பது[1] இது பகற்குறியிடம். “இரவுக் குறியேயில் வரையிகவாது,[2] என்பதால் பகற்குறியில் இகப்பதென்க. அட்டில், கொட்டகாரம், பண்டசாலை, கட்டகாரம், பள்ளி யம்பலம், உரிமையிடம், கூத்தப் பள்ளியென இவற்றுள் நீங் கிச் செய்குன்றும், இளமரக்காவும், பூம்பந்தரும், விளை யாட்டிடமும் அவற்றைச் சார்ந்தனவற்றுள்ளும் பிறவற் றுள்ளுமாம். குரவரிருக்கு மனை தெய்வத்தானமென்று கருதப்படும். அல்லுதூஉம் புகவும் போகவும் அருமையுடை மையானு மாகாதென்பது. இரவுக்குறியொன்றும் பகற்குறி பலவுமாம். “மனையோர் கிளவி கேட்குமிடத்துச்-செலவு வரவில்லாத தொழிலிற்றாகி மனையிறந் தெல்லையின் மாண்புடைத்தாகு-மகப்புறமாயின் மறுதலைப்படுமே”[3] எனக் கூறப்படுதலின். (2)

---

1. இறையனாரகப். சூத். 18 உரை.
2. மேற்படி சூத். 19.
3. மேற்படி சூத், 21 உரை

273. அத்தச் செயலைத் துப்புற ழொண்டளிர்
புன்றலை மந்தி வன்பற ழாரு
நன்மலை நாட நீசெலி
னின்னயந் துறைவி யென்னினுங் கலிழ்மே.

*எ-து: "அனைநிலைவகையாற்" (தொல். கள. சூத். 23, 36) கொள்வது வரைவிடை வைத்துப் பிரியுந் தலைமகன் 'நின்று ணைலியை உடம்படுவித்தேன். இனி, நீயேயிதற்கு உடன் படாது கலிழ்கின்றாய்' என்றார்க்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: காட்டிலுள்ள அசோகினது பவழம் போலுஞ் சிவந்த வொள்ளிய தளிரைப் புல்லிய தலையையுடைய மந் தியது வலிய குட்டியுண்ணும் நல்ல மலைநாடனே! நீ பிரிந்து செல்வையேல், உன்னை விரும்பி யுறைகின்றவள் இப்போத ழும் என்னினுங்காட்டி அழா நிற்கும், எ-று.*

*பிரிவுடம்பட்டாளாயினும் நீ பிரியின் ஆற்றாளென்ப தாம். உம்மை - சிறப்பு; அந்தச் செயலை...... நாடவென்றது, அசோகின் இளமையும் வனப்பும் மிக்க தளிரைக் குட்டி யுண்ணுந் தன்மையாக நீயும் இவளை இளமை நீங்கு முன் வரைவாயென்பதாம். கலிழும் என்பது, கலிழ்ம் எனத் திரிந்து நின்றது; போலும் என்பது, போன்ம் என நின்றாற்போல (முல்லைக்கலி, 1ஆம் செய்யுளிற் காண்க). துப்புறழொண் மணி யென்றும் பாடம்; மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைதல். (3)*

274. மந்திக் கணவன் கல்லாக் கடுவ
னொண்கேழ் வயப்புலி குழுமலின் விரைந்து
குன்றுய ரடுக்கங் கொள்ளு நாடன்
சென்றனன் வாழி தோழியென்
மென்றோட் கவினும் பாயலுங் கொண்டே.

*எ-து: "வரைவிடை வைத்தகாலத்து வருந்தினும்" (தொல். கள சூத். 21) என்றதால், வரைவிடைவைத்துத் தலை மகள் பிரிந் துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது'.*

இ-ள்: மந்திக்கணவனாகிய பிறிதொன்றுங் கற்றறியாத கடுவன் குரங்கு, ஒள்ளிய நிறம் பொருந்திய வெற்றியை யுடைய புலி முழக்கிற்கு அஞ்சி விரைந்து உடனே மலை யிலுள்ள வுயர்ந்த பக்க மலையிலேறுகின்ற சிலம்பன், வாழ் வாயாக தோழியே! எனது மெல்லிய தோளினதழகையும் சாயலையுங் கொண்டு சென் றனன், எ-று.

மந்திக்கணவன்.....நாடனென்றது, புலி பிறவற்றைத் தீங்கு செய்யக் கருதாது செய்த முழக்கைத் தனக்குத் தீங்கு செய்ய கருதிற்றென்று கருதிக் கடுவனுயர்ந்த பக்க மலைக்கட் சென் றாற் போல, இவனுந் நாம் எம்மைப் பாதுகாத்துரைக்கின்ற உரைக்கு அஞ்சிச் சென்றானென்பதாம். உம்மை - எச்சம்; குழுமல் - முழங்குதல் என்பது, அகம். 321ஆம் செய்யுளிற் காண்க. மெய்ப்பாடு - அது; பயன் - ஆற்றுதல். (4)

**275.** குரங்கின் றலைவன் குருமயிர்க் கடுவன்
சூரலஞ் சிறுகோல் கொண்டு வியலறை
மாரி மொக்குள் புடைக்கு நாட
யாநின் னயந்தன மெனினுமெம்
மாய்நலம் வாடுமோ வருளுதி யெனினே.

எ-து: "அனை நிலைவகையாற்" கொள்வது, 273ஆம் செய்யுளிற்போல, வரையாது வந்தொழுகுந் தலைமகன் இடையிட்டு வருதலால் எதிர்ப்பாடு பெறாத் தோழி குறி யிடத்தெதிர்ப்பட்டு அவன் கொடுமை கூறி நெருக்கிச் சொல்லியது.

இ-ள்: குரங்கின் தலைவனாகிய நிறம் விளங்குகின்ற கடுவனானது, பிரம்பின் சிறிய கோலைக்கொண்டு அகன்ற பாறையிடத்து மழையிலுண்டாகிய மொக்குளை அடிக் கின்ற நாடனே! யாம் நின்னை விரும்பியதை நீ வெருளாது அருளப் பெறுவேமாயின், எங்களது விரும்பப்படும் அழகு வாடுமோ? எ-று. நீயருளப்பெறின் நம் நலம் வாடாதென்ப தாம்.

குரங்கின் தலைவன் சூரற்கோல் கொண்டு பாறையின் மாரி மொக்குள் புடைக்குநாட என்றது, நின்னயந்த எங்க ளது நலம் நீ வரையாமலே அழிகின்றதனை, நீ இவ்விடை யிட்ட ஒழுக்கத்தாலே அழிக்கின்றாயென்பது. மெய்ப்பாடு - அது; பயன் - வரைவுகடாவல். (5)

276. மந்திக் காதலன் முறிமேய் கடுவன்
றண்கமழ் நறைக்கொடி கொண்டு வியலறைப்
பொங்க லிளமழை புடைக்கு நாட
நயவா யாயினும் வரைந்தனை சென்மோ
கன்முகை வேங்கை மலரு
நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே.

எ-து: இதுவுமது. வரையாது வந்தொழுகுந் தலைமக னைத் தோழி நெருக்கிச் சொல்லியது.

இ-ள்: மந்தியது காதலனாகிய தளிரை யுண்ணுங்கடு வன், குளிர்ச்சியையுடைய மணங்கமழு நறைக்கொடியைக் கொண்டு அகன்ற பாறையின் மிகக் கருக்கொண்ட முகிலை யடிக்கின்ற நாடனே! நம்மீது நினக்கு அன்பில்லையாயி னும் வரைந்தனையாய்ச் செல்வாய், கன்முகையிலுள்ள வேங்கை மரம் மலருகின்ற நல்ல மலைநாடனது பெண் டென்று யாவருங் கூறுதற்கு, எ-று.

மேல்கருக்கொண்டு முற்றிப் பயன்படுவதாகிய இள முகிலைக் கடுவன் நறைக்கொடி கொண்டு அடித்துக் கெடுப்பது போல, நீயும் வரைந்து மணப்பேற்றிற்குரிய ளாகிய இவளை இம் மறைந்த வொழுக்கத்தாலே கொலை சூழ்கின்றாயென்பது. கன்முகை வேங்கை மலருமென்றத னால் வரைதற்குரிய பருவமுங் கூறியவாறாயிற்று. இனி, ஈரமற்ற கன்முகைக்கண்ணின்றும் வேங்கை மலர்ந்து சிறப்பு எய்தினாற்போல இவளும் தன்மேலன்பில்லாத நின்னில் லின் கண்ணிருந்து மகப்பெற்றுச் சிறப்படைதற்கு உரிய ளென்பதுமாம். மெய்ப்பாடும் பயனும் அவை. (6)

277. குறவர் முன்றின் மாதீண்டு துறுகற்
கல்லா மந்தி கடுவனோ டுகளுங்

குன்ற நாடநின் மொழிவ லென்றும்
பயப்ப நீத்த லென்னிவள்
கயத்துவளர் குவளையி னமர்த்த கண்ணே.

*எ-து: இதுவுமது. வரையாது வந்தொழுகுந் தலைமகன் புணர்ந்து நீங்குழி எதிர்ப்பட்ட தோழி வரைவு கடாவியது.*

*இ-ள்: குறவரது முற்றத்தில் மிருகங்கள் சொறி மாற்றுதல் காரணமாகவுள்ள துறுகற் கண்ணே பிறிதொன்றுங் கற்றறியாத மந்தி கடுவனோடு துள்ளும் மலைநாடனே! நினக்கு யானொன்று சொல்லுவேன்; இவளது, தடாகத்தில் வளர்கின்ற குவளை மலர் போலும் சுழலுதலையுடைய கண்கள் எக்காலத்தும் பசப்பூரப் பிரிகின்றது யாதோ? எ-று.*

*குறவர்......நாடவென்றது, சுற்றத்ததார் நடுவே இவளொழுக்கம் புலனாகியஞான்று விளையுமேதத்துக்கு நாணாதோய் என்பது இனிக் கல்லாமையையுடைய மந்தி தானுங் குறவர்க்கு வெருவுதலின்றி அவர் முற்றத்துக்கண்மேல் தன் கடுவனோடு பிரிவின்றித் துள்ளி விளையாடு நாடனாகியைத்தும், இதற்குத்தக வொழுகாது இவளை இவ்விதம் வருத்தல் தகாதென்பதாம். உகளுமென்பது, முற்கூறிய பொருட்கு இடக்கர். கடுவனெடுக்குமெனவும் பாடம். மந்தி தானு மென்னுமும்மை தொக்காது; சிறப்பும்மை; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவுகடாவல். (7)*

278. சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்
குரங்கின் வன்பறழ் பாய்ந்தென விலஞ்சி
மீனெறி தூண்டிலி னிவக்கு நாட
னுற்றோர் மறவா நோய்தந்து
கண்டோர் தண்டா நலங்கொண் டனனே.

*எ-து: "மறைந்தவற் காண்டல்" என்னுஞ் சூத்திரத்து "அன்னவுமுளவே" (தொல். கள. சூத். 20) என்பதால், வரையாது வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக் குச் சொல்லியது.*

இ-ள்: மலையிலுள்ள மூங்கிலாகிய கணுக்கள் விட்டு விளங்குங் கழைக்கோல் குரங்கின் வலிய குட்டி பாய, நீர் நிலையில் பரதவர் மீனைப் படுத்தற்கு எறியுந் தூண்டிலைப் போல், ஓங்கியுந் தாழ்ந்துந் தோன்றுகின்ற நாடன், தன்னை யடைந்தவர்கள் ஒரு காலத்தும் மறவாத படராகிய நோயைத் தந்து கண்டவர்களுக்கு எவ்வகையானும் கவர்தலமையாத அழகைக் கொண்டாள், எ-று.

உற்றோர் மறவா நோய்-உற்றோர் எக்காலத்து மறவா நோயென்றும், சுற்றத்தார் கண்டு மறவா நோய் என்றும், உறப்படுவோரைக் கூறுவோர் நினைக்கும் நோய் என்றும் பொருள்படுமாறு காண்க. மறவா நோய், தண்டாநலம் என்பன மிகுதி கூறியவாறு. "ஏனல் காவலர் கவணொலி வெரீஇக் கான யானைகை விடு பசுங்கழை-மீனெறி தூண்டிலினிவக்கும்"[1] என்பது குறுந் தொகை. அத்து-சாரியை. உற்றோர் என்றது தன்னைக் கண்டோரென்றது தலைவனை.

குரங்கு தன் மேலிருந்துழி வளைந்து அது பாய்ந்து போவுழி நிமிர்கின்ற மூங்கிற்கோல் மீனெறி தூண்டில் போலவோங்கு நாடனாதலால், தன்னெஞ்சத்து அன்புளதாகிய காலத்து வளைந்து வளைந்தொழுகி இன்பற்ற காலத்துப் பணிவின்றித் தலைமை செய்து நம் நலங் கொண்ட தன் கொடுமை தோன்ற ஒழுகுகின்றானென்பதாம். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - வரைவுவேட்கை. (8)

**279.** கல்லிவ ரிற்றி புல்லுவன வேறிக்
குளவி மேய்ந்த மந்தி துணையொடு
வரைமிசை யுகளு நாட நீவரிற்
கல்லகத் ததுவெம் மூரே
யம்பற் சேரி யலராங் கட்டே.

எ-து: "களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக் காதன் மிகுதி யுளப்படப் பிறவும்" (தொல். கள. சூத். 23, 31) என்பதால், இரவுக்குறி வேண்டுந் தலைமகனைத் தோழி வரவருமை கூறி மறுத்தது.

---

1. குறுந்தொகை, செய். 54.

இ-ள்: மலைக்கட் பரந்த இத்தியைத் தழுவினவாயேறி அதன்மேற் படர்ந்த மலை மல்லிகைத் தளிரை மேய்ந்த மந்தி தன் கடுவனோடு சிகரத்தின்மேல் துள்ளி விளையாடு கின்ற நாடனே! நீ வரவேண்டின் எமதூரானது சூழ்ந்த மலைகளின் நடுவிடத்தது; அன்றி அவ்விடத்து அம்பலை யுடைத்தாய சேரி அலரையும் உடைத்து, எ-று.

உகள்தல்- "பல்லானன்னிரை புல்லருந்துகளப்-பயன் கடையறியா"[1] என்பதும் இது. குளவி-குளவிக்கொடியுமாம், மலைப் பச்சையுமாம்: "ஏன லுழவர் வாகுமீ திட்ட-கான் மிகு குளவிய வன்புசே ரிருக்கை."[2] என்பதற்போல. இத்தி யைத் தழுவுவன வாய்ப் படர்ந்த குளவியை என்றுமாம். இத்தியைத் தழுவிய குளவியிலேறி எனினுமாம்; ஏகாரம் - சிறப்பு.

இற்றிமேற்படர்ந்த குளவித் தளிரை மேய்ந்து வரையகத் திலே மந்தி கணவனோடு உகளுநாடனாதலால், இதற்கு முன்பு இவள் நின்னோடு நுகர்ந்ததே கொண்டு இனி இவள் நும்பதிக் கண் வாழ்தல் வேண்டுமென்பதாம். இனி, கல்லிவரிற்றி சுற்றத்தாராகவும், புல்லுங்குளவி அயலாராக வும், தளிரைத் தின்னுதல் அவர்களாலுண்டாய அம்பலையு மலரையுங் கெடுத்தலாகவும், மந்தி தலைவியாகவும், வரை தலைவன் மனையாகவும், உகள்தல் இல்வாழ்க்கையிற் சிறப் புறுதலாகவுங் கொள்க.

அம்பலென்பது: சொல் நிகழப்பெறாதே முகிழ் முகிழ்த் தாற்போல இவர் செயல் இன்னதன்கண்ணதென்பது. அறிய லாகாது ஐயுறு நிலையாதல். அலரென்பது இன்னானோ டின்னாளிடை இதுபோலும் பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது. உட்டன்மை தோன்றப்பெறாது முகிழ்போறலின் அம்பல் என்றும் உட்டமை தோன்ற இருத்தலின் அலர் எனவும் உவமை முகத்தாற் கூறப்படுமாறு காண்க. அப்படி யாயினும் தந்தை தன்னையர் அறியுமளவும் களவாமென் பது. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவுகடாவல். (9)

1. பதிற்றுப்பத்து, செய். 89, 5-6.

2. மேற்படி செய். 30, 22-3.

280. கருவிரன் மந்திக் கல்லா வன்பார்ப்
பிருவெதி ரீர்ங்கழை யேறிச் சிறுகோன்
மதிபுடைப் பதுபோற் றோன்று நாட
வரைந்தனை நீயெனக் கேட்டியா
னுரைத்தனெ னல்லெனோ வஃதென் யாய்க்கே.

*எ-து; "தலைவருவிழுமம்" என்னும் (தொல். அகத்திணை. 39ஆம்) சூத்திரத்து "இயல்புற" என்றதனால், புணர்ந்துடன் போகிய தலைமகன் தலைமகளைக் காண வகையான் வரைந்தானாக. எதிர் சென்ற தோழிக்கு 'இனியான் இவளை வரைந்தமை நுமர்க்கு உணர்த்த வேண்டும்' என்றானாக அவள் சொல்லியது.*

*இ-ள்: வலிய விரல்கள் பொருந்திய மந்தியது கல்லாமை யையுடைய இளம் பார்ப்புப் பெரிய மூங்கிலினீரிய கோலின் கண்ணேறிச் சிறிய கோலால் மதியை அடிப்பது போலத் தோன்றும் நாடனே! நீ வரைந்து கொண்டாயென்று (ஈண்டு நின்றாண் டுற்றோர் சொல்லக்) கேட்டு அதை யான் என்றாயர்க்குச் சொன்னேனல்லவோ, எ-று.*

*குரங்கினிளம் பார்ப்பு இரு வெதிர்ங்கழையேறி மதி புடைப்பதுபோற்றோன்று நாடவென்றது, தீங்கு செய்வா ரைப் போலத் தோன்றுவல்லது உண்மைவகையாற் செய்யா யென்பதாம் மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்வித்தல். (10)*

குரக்குப் பத்து முற்றிற்று

---

## *29. கிள்ளைப் பத்து*

**281.** வெள்ள வரம்பி னூழி போகியுங்
கிள்ளை வாழிய பலவே யொள்ளிழை
யிரும்பல் கூந்தற் கொடிச்சி
பெருந்தோட் காவல் காட்டி யவ்வே.

*எ-து: "மெய்தொட்டுப் பயிறல்" (தொல். கள. 11) என் னுஞ் சூத்திரத்து "சொல்லிய" வென்பதால் காட்சி நிமித்த*

மாகிய கிள்ளையை வாழ்த்திய தென்பர் நச்சினார்க்கினியர். ஆயத்தோடு விளையாட்டு விருப்பினாற் பொழிலகம் புகுந்த தலைவியை எதிர்ப்பட்டு ஒழுகுகின்ற தலைமகன் அவள் புனங்காவற்கு உரியளாய் நிற்கின்றது கண்டு மகிழ்ந்து சொல்லியது.

இ-ள்: வெள்ளமாகிய எண்ணளவு பொருந்திய பலவூழி கழிந்தும் கிள்ளை வாழ்க; ஒள்ளிய இழையும் கரிய பல கூந்தலையுமுடைய கொடிச்சியது பெரிய தோள்கட்குக் காவலைக் காட்டியது, அதனால், எ-று.

'வெள்ள வரம்பி னூழி வாழிய பலவே' என்பதை

"அடையடுப் பறியா வருவியாம்ப
லாயிர வெள்ள வூழி
வாழியாத வாழிய பலவே."(பதிற்று. செ. 63.)

என்பதானுமுணர்க. பலவே - ஏகாரம் தேற்றம்; மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல். (1)

282. சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினைப்
பேரமர் மழைக்கட் கொடிச்சி கடியவுஞ்
சோலைச் சிறுகிளி யுன்னு நாட
வாரிருள் பெருகின வாரல்
கோட்டுமா வழங்குங் காட்டக நெறியே.

எ-து: இதற்கு 279ஆம் செய்யுளிற் கூறியது. இரவுக் குறி நேர்ந்த தோழி தலைமகன் வந்து புணர்ந்து நீங்குழி அவனை எதிர்ப்பட்டுச் சொல்லியது.

இ-ள்: சாரல் மலையின் புறத்தவாய பெரிய கதிரை யுடைய சிறு தினையைப் பெரிய அமர்ந்த குளிர்ச்சியை யுடைய கண்ணையுடைய கொடிச்சி காவலைச் செய்து ஓட்டவும் சோலையிலுள்ள சிறிய கிளியானது மறித்து மதனைக் கவர நினைக்கின்ற நாடனே! நீ வரும் வழி காட்டகத்தே யானைகள் சஞ்சரிக்கும், வருதற்கரிய இருள் மிகுந்தன, ஆதலின் வாரற்க, எ-று.

அரிய இருள் மிகுந்தன, நீ வரும் வழி யானைகள் சஞ் சரிக்குங் காட்டக வழியாதலின் வாராதே யென்றுமாம். கடியவும் - உம்மை சிறப்பு.

கொடிச்சி கடியவுஞ் சோலைச் சிறுகிளி தினையுன்னு நாடவென்றது, காவலர் காத்தொழுகவும் களவொழுக்கத் தையே விரும்பா நின்றாயென்பதாம். சாரற்புறம் தலைவி மனையாகவும், பெருங்குரற் சிறுதினை தலைவியாகவும், கொடிச்சி செவிலி முதலிய காவலராகவும், சோலைச் சிறு கிளி தலைவனாகவும், உன்னுதல் இரவுக்குறிக்கண் வருத லாகவுங் கொள்க. சோலைச் சிறு கிளியெனவே தலைவ னில்லையும் தலைவன் பிறப்பையும் இறப்பக் கூறி, இப் பெருமையுடைய நீ வரைவொடுவரின் நமர் ஏற்றுக் கொள் வர் என இரவுக்குறி யேதங்காட்டி வரைவு கடாயவாறு. புணர்ந்து நீங்குழியெனக் கருத்துரை கோடலின் 'உண்ணு நாட' வென்ற பாடம் பொருந்தும் போலும். மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவுகடாவல். (2)

283. வன்கட் கானவன் மென்சொன் மடமகள்
புன்புல மயக்கத் துழுதவேனற்
பைம்புறச் சிறுகிளி கடியு நாட
பெரிய கூறி நீப்பினும்
பொய்வலைப் படூஉம் பெண்டுதவப் பலவே.

எ-து: "நாற்றமும் தோற்றமு" மென்னுஞ் சூத்திரத்துப் 'பிற'வாற் கொள்வது. தோழி வாயின் மறுக்கவும், தலைமக னாற்றாமை கண்டு தலைமகள் வாயில்நேர, அவன் பள்ளி யிடத்தானாயிருந்துழிப் புக்க தோழி கூறியது.

இ-ள்: தறுகண்மையுடைய குறவனது மெல்லிய சொற் களையுடைய மடமகள் மயக்கத்தால் அவன் புன்புலத்தில் உழுது வித்திய எனற் கண்படியும் சிறிய புறத்தையுடைய கிளிகளை (யோப்ப முடியாதாகவும்) ஒப்புகின்ற நாடனே! தம் தமராயுள்ளார் நின்குறை பலவுங் கூறி நீப்பினும் நின் பொய் வார்த்தையாகிய வலையில் அகப்படும் பெண்டிர் மிகப் பலர் எ-று. இவளும் அவருள் ஒருத்தியென்பதாம்.

தினைப்புனத்துப் பலவாய்ப் படிகின்ற கிளிகளை ஒருத்தி தன்னாற் காக்க முடியாதாயினும், அவற்றை அவள் கடிய முயல்கின்ற நாடவென்றது, நின்னோடு இன்ப நுகர்ச்சி விரும்பு மகளிரை யாங்கள் விலக்க முயல்கின்றது முடியா தென்பதாம், இனி நம்மால் வாயின் மறுக்கவுந் தடைப் படாது விரும்பிய முடிக்கும்-நாடவென்றவாறு. பெரிய கூறி நீப்பினும் - எனது முன் பெரிய சூளுறவைக் கூறிப் பின் அதை விடினும் என்றுமாம். பின்னிரண்டடியும் முன்னி லைப் புறம் (தொல். கற்பி. சூத். 26).

நாடன் என்ற பாடத்திற்கு வாயின் மறுக்கப்பட்ட தலை மகன் ஆற்றாமை வாயிலாச் சென்று தலைவி சிவப்பாற்றி னமை யறிந்த வாயில்கள் தம்முட் கூறியது. "வாயிலுசாவே தம்முளு முரிய"[1] என்றும் "எல்லா வாயிலு மிருவர்தேஎத் தும் - புல்லிய மகிழ்ச்சிப் பொருளவென்ப"[2] என்று மோத் தாகலின் மயக்கமென்பதை வேண்டுமிடத்திற் கூட்டுக.

இன்ன நாள் வரைவலெனக் கூறி யன்னாள் வரையாது இரவுக்குறிக்கண் வந்து புணர்ந்து நீங்குந் தலைமகனை எதிர்ப்பட்டுத் தோழி கூறியதூஉமாம். நாடனெனில் சிறைப் புறம், மெய்ப்பாடும் பயனுமற்குமாறு கொள்க. (3)

284. அளிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி
குன்றக் குறவர் கொய்தினைப் பைங்கா
லிருவி நீள்புனங் கண்டும்
பிரித றேற்றாப் பேரன் பினவே.

எ-து: "ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்" (தொல். கள. சூ. 23, 25) என்பதால், தினையரிந்துழிக் கிளியை நோக் கிக் கூறுவாள்போல் தோழி சிறைப்புறமாக ஓம்படுத்தது.

இ-ள்: தாமே, செய்ய வாயையுடைய பசிய கிளிகள் மலை வாணரால் தினை கொய்யப்பட்ட பசிய காலையுடைய இருவி நீண்ட புனத்தைக் கண்டும் அதைவிட்டுப் பிரிதலையறியாத பேரன்பினையுடைய; ஆதலின், அளிக்கத்தக்கன வாம், எ-று.

---

1. தொல். செய்யுளியல், சூத். 200.
2. தொல். கற்பியல், சூத். 37.

தமக்குப் பயமின்றாய கதிர்கொய் புனத்தைப் பழகிய காரணத்தால் விடாது கிளிகள் வருவதுபோல நம்மையும் விடாது பாதுகாக்கவென்பது குறிப்பு. ஏகாரம் - தேற்றம்; உம்மை - சிறப்பு; பிரிதறோற்றா என்றும் பாடம்; மெய்ப் பாடு - மருட்கை; பயன் ஒம்படுத்து வரைவுகடாவல். (4)

**285.** பின்னிருங் கூந்த னன்னுதற் குறமகண்
மென்றினை நுவணை யுண்டு தட்டையி
னைவனச் சிறுகிளி கடியு நாட
வீங்குவளை நெகிழப் பிரிதல்
யாங்குவல் லுநையோ வீங்கிவட் டுறந்தே.

எ-து: "வேண்டாப் பிரிவினும்" (தொல். கள. சூ. 23, 22) என்பதால், ஒருவழித் தணந்து வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

இ-ள்: பின்னப்படுங் கரிய கூந்தலையுடைய அழகிய நுதலமைந்த கொடிச்சி, மெல்லிய தினைமாவையுண்டு மூங்கிற்பிளாச்சினாலாக்கப்பட்ட தட்டுந் தொழிலையுடைய கருவியால் ஒலியுண்டாக்கி, மலைநெல்விற் படியுங் கிளி களையோப்புகின்ற நாடனே! இத்தன்மையுடைய இவ ளைத் துறந்து இறுகிய கைவளை கழலப் பிரிகின்றது எவ் விதம் வல்லாயோ! எ-று.

ஒகாரம் சிறப்பு. நுவணை - திணைமா; குறமகள் தினைப் பிண்டியையுண்டு ஐவனச் சிறுகிளி கடியுநாடவென்றது, நின்னோடு இக்காலத்து இன்ப நுகர்ந்து பின்பு நின்மனைச் செல்வமும் பிறர் மகளிரொழியத் தானே நுகரும் வேட்கை யுடையானளப் பிரிந்து ஒழுகுகின்றா யென்பதாம். மெய்ப் பாடு - அது; பயன் - வரைவுகடாவல். (5)

**286.** சிறுதினை கொய்த விருவி வெண்கூற்
காய்த்த வவரைப் படுகிளி கடியும்
யாண ராகிய நன்மலை நாடன்
புகரின்று நயந்தனன் போலுங்
கவருந் தோழியென் மாமைக் கவினே.

---

1. தொல் கள. சூத். 21.

*எ-து: "வரைவிடை வைத்த காலத்து வருந்தினு" மென்ப தால், உடன்போக்குத் துணிந்த தலைமகன் அஃதொழிந்து தானே வரைவிடை வைத்துப் பிரிய நினைந்ததனைக் குறிப் பினாலறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*தலைமகன் வரைவிடை வைத்துப் பிரிவலென்றவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.*

*இ-ள்: சிறுதினை கொய்யப்பட்ட வெறிய தண்டின்கண் காய்த்திருக்கும் அவரைக்கண் படுங்கிளியை ஒப்புகின்ற புது வருவாயையுடைய நல்ல மலைநாடன் நம்மைத் துறந்து போதலையின்று விரும்பினான் போலும். அதுவே எனது மாமையாகிய கவினைக் கவரா நிற்கும், தோழி! எ-று. அதுவே என்னுஞ் சுட்டு வருவித்துரைக்கப்பட்டது.*

*தினையிற் கடிந்த கிளியைத் தினையரிகாற்கண் விளைந்த வரைக்கண்ணும் கடியுநாடனென்றது, வரையாதொழுகுத லன்றி உடன் போதலையும், நம்மை விலக்கா நின்றானென் பதாம். புகரென்றது; உடன்போதலை. புகரின்றுய்ந்தனன் என்றும் பாடம். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஆற் றாமை நீங்குதல். (6)*

**287.** **நெடுவரை மிசையது குறுங்கால் வருடை**
**தினைபாய் கிள்ளை வெரூஉ நாட**
**வல்லை மன்ற பொய்த்தல்**
**வல்லாய் மன்றநீ யல்லது செயலே.**

*எ-து: "நாற்றமுந் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்துப் 'பிற'வாற் கொள்வது இன்னா நாளில் வரைவலென்று கூறி அந்நாளில் வரையாது பின்னுமவ்வாறு கூறுந் தலைமகற் குத் தோழி கூறியது. தலைனைப் பழித்தது.*

*இ-ள்: நீண்ட மலைமேலதாய குறிய கலையுடைய மானுக் குத் தினையிற்படியும் கிளிகள் பயப்படுகின்ற நாடனே! நீ பொய்க்குந் தன்மையில் மிகவும் வன்மையுடையாய், பொய் யாத தன்மையில் மிகவும் வன்மையில்லாய், எ-று.*

*தனக்கிடையூறொன்றுஞ் செய்யாத நெடுவரைக்கண் வாழும் வருடையைத் தினையை மேய்கின்ற கிளி வெரூஉம்*

நாடவென்றது, நீ சொன்னபோழ்தே எஞ்சுற்றத்தார் வரைவுக்கு இடையூறு செய்யாரென்ப தறியாது வெருவுகின்றா யென்பதாம். 'வல்லைமன்றம்ம' எனவும் 'வல்லாய்மல்ல நீ' யெனவும் பாடம்; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவு கடாவல். (7)

**288.** நன்றே செய்தவுதவி நன்றுதெரிந்
தியாமெவன் செய்குவ நெஞ்சே காமர்
மெல்லியற் கொடிச்சி காப்பப்
பல்குர லேனற் பாத்தருங் கிளியே.

*எ-து: "அவட்பெற்று மலியினும்" என்றதற்கு இரட்டுற மொழிதலென்பதால் (தொல். கள. சூத். 12), கிளிகள் புனத்தின் கட்படியா நின்றனவென்று தலைவியைக் காக்க வேவிய வழி, அதனையறிந்த தலைமகன் உவந்து தன் னெஞ்சிற்குச் சொல்லியது. பெற்றேமென மகிழ்ந்து கூறியதென்பர் நச்சினார்க்கினியர்.*

*இ-ள்: நெஞ்சமே! அழகிய மெல்லிய இயல்பையுடைய கொடிச்சி காக்குங் காரணமாகப் பல்கதிர்கள் பொருந்திய தினைப் புனத்தின்கண் பரக்குங்கிளி நமக்கு நன்மையே செய்தன. அவை செய்தவுதவியின் நன்மையை யறிந்து யாமி யாது தான் அவைக்குச் செய்குவேம்! எ-று.*

*பிரதியுபகாரம் பிறிதில்லையென்றபடி. கிளிகள் செய்த உதவி நன்று, அந்நன்றியை யறிந்து எனினுமாம். நன்றி திரிந்து என்றும் பாடம். மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல். (8)*

**289.** கொடிச்சி யின்குரல் கிளிசெத் தடுக்கத்துப்
பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக்
காவலுங் கடியுநர் போல்வர்
மால்வரை நாட வரைந்தனை கொண்மோ.

*எ-து: 287ஆம் செய்யுளிற் கூறிய 'பிற'வினாற் கொள்வது. இற்செறித்த பின்னர்த் தோழி வரைவுகடாவுழி முதிர்ந்த தினைப்புனம் இவள் காத்தொழிந்தால் வரைவலென் றாற்கு அவள் சொல்லியது.*

*இ-ள்: பெரிய வரைநாடனே! கொடிச்சியது இனிய குரலைக் கேட்டுக் கிளிகள் தம்மினத்தின் குரலென்று கருதி மலையிற் பசிய கதிரையுடைய தினைப்புனத்தில் படர்தரா நிற்குங் கிளிகளென்று, அவளைக் காவலின் விலக்குவார் போன்றார் நமர், ஆதலின் வரைந்துகொள்வாயாக, எ-று.*

*மலைந்தனை கொண்மோ என்றும் பாடம்; மெய்ப் பாடு - பெருமிதம்; பயன் - வரைவுகடாதல். மோ - முன்னி லையசை.* *(9)*

**290.** **அறம்புரி செங்கோன் மன்னனிற் றாநனி**
**சிறந்தன போலும் கிள்ளை பிறங்கிய**
**பூக்கமழ் கூந்தற் கொடிச்சி**
**நோக்கவும் படுமவ ளோப்பவும் படுமே.**

*எது: "புணர்ச்சி வேண்டினும்" (தொல். கள. சூ. 23, 22) என்பதால், காவன் மிகுதியான் இரவுக்குறி மறுக்கப்பட்டு நீங்கிய தலைமகன் வந்துழி, அவன் கேட்டு வெறுப்புத் தீர்த்தற் பொருட்டால் தினைப்புனங் காவல் தொடங்கா நின்றாளென்பது தோன்றத் தோழி கூறியது.*

*இ-ள்: நன்னெறியை விரும்புஞ் செங்கோன்மையையு டைய அரசனைக் காட்டினும் மிக நன்கு மதிக்கப்படுந் தன்மையன போலும் கிளிகள், விளங்கிய பூமணங் கமழா நிற்கும் கூந்தலையுடைய கொடிச்சியான் நினைக்கவும் படும் துரத்தவும் படும், எ-று.*

*அறம் நீதி நூல், புண்ணியமுமாம். புரி - முதனிலைத் தொழிற்பெயர், செய்தலெனினுமாம். செங்கோல் பிறிதினி யைபு நீக்கிய விசேடணம். மன்னன் என்றது தலைமகனை. இல் ஏதுவின் கண்ணது. தான் தெளிவுப் பொருளில் வந்தது; நோக்கல் - நினைத்தல், அது பகற்குறிக் கண் தலைவனை எதிர்ப்படுத்தற்கு ஏதுவாயிருந்ததனை. தனக்குப் பிறர் செய்த தீமையைப் பொருட்படுத்தாது அவர் செய்த நன் மையை விரும்புமரசன் எனப் பொது வகையாற் கூறி வெறுப்பு நீக்கியது. நோக்கவும்படு மோப்பவும் படுமென்றது. நமக்கு*

வருமேதத்திற்கஞ்சி மறுக்கப்பட்டும் மறக் கமாட்டேமென் பது குறிப்பு. உம்மைகள் சிறப்பு. மெய்ப்பாடும் பயனுமவை. (10)

கிள்ளைப் பத்து முற்றிற்று

---

## 30. மஞ்ஞைப் பத்து

291. மயில்க ளாலக் குடிஞை யிரட்டுந்
துறுகல் லடுக்கத் ததுவே பணைத்தோள்
ஆய்தழை நுடங்கு மல்குற்
காதலி யுறையு நனிநல் லூரே.

*எ-து: "ஆற்றிடையுறுதலும் என்பதை இரட்டுற மொழித லென்பதால்" (தொல். கள. சூத். 12), வரைவிடை வைத்துப் பிரிந்து மீள்கின்ற தலைமகன் பாங்கற்குச் சொல்லியது.*

*இ-ள்: மூங்கில்போலுந் தோலையும் அழகிய தழையசை கின்ற அல்குலையுமுடைய நங்காதலி உறைகின்ற நனி நல் லூரானது, மயில்கள் ஆரவாரித்தாட யாறும் மாறொ லியை யுண்டாக்கும் நெருங்கிய மலைச் சாரலினிடத்தது, எ-று. ஏகாரம் - தேற் றம்.*

*மயில்களாலக் குடிஞை யிரட்டுமென்றது, பிரிவாற் றாது வருந்துகின்ற தலைவியைத் தோழி யாற்றுவித்திருக் கும் என்றவாறு. இனி நாம் வரைவொடு புகத் தலைவி மன மகிழ அவர் செய்யுஞ் சிறப்புமாம். மெய்ப்பாடு - உவகை; பயன் - இது கேட்டுப் பாகம் தேரை விரையக் கடாவல். (1)*

292. மயில்களாலப் பெருந்தே னிமிரத்
தண்மழை தழீஇய மாமலை நாட
நின்னினுஞ் சிறந்தன ளெமக்கே நீநயந்து
நன்மனை யருங்கடி யயர
வெந்நலஞ் சிறப்பயா மினிப்பெற் றோளே.

*எ-து: "பின்முறையாக்கிய பெரும்பொருள் வதுவைத் - தொன்முறை மனைவி யெதிர்ப் பாடாயினும்" (தொல். கற்பி. சூத். 31) என்பதால், பின்முறையாக்கிய பெரும் பொருள் வதுவை முடித்தாளை இல்லத்துக்கொண்டு புகுந் துழித் தலைமகள் உவந்து சொல்லியது.*

*இ-ள்: மயில்கள் ஆரவாரிக்கப் பெரிய வண்டுகள் ஒலிக்க மழை தழுவிய பெரிய மலைநாடனே! நீ விரும்பி நல்ல மனைக்கண் அரிய கலியாணஞ் செய்ய, யாமிப் போது தங்கையாகப் பெற்றவள் எமக்கு நின்னினுஞ் சிறப்புடை யள்; ஆயின் அவட்கு என்போலு மின்பஞ் சிறப்பதாக. எ-று.*

"அவன் சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்
மகன்றா யுயர்புந் தன்னுயர் பாகுஞ்
செல்வன் பணிமொழி யியல்பாக லான"

*(தொல். கற்பி. சூத். 33). என்பதோத்தாகலின் இவ்வாறு கூறப் பட்டது.*

*மழைப் பருவம் வேண்டியிருக்கின்ற மயில்கள் ஆலத் தேன் களிமிர மழை பெய்யும் நாடவென்றது, யாங்கள் கருதி யிருக்கின்ற பெரும்பொருளாகிய வதுவைச் சடங்கை யாமு வப்ப முடித்தனை என்றவாறு. மயில் தலைவி, தேன் பின் முறை வதுவையாள், மழை தலைவன் செய்த அருள் எனக் கொள்க. மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - பரத்தைமை நீக்குதல். (2)*

**293.** சிலம்புகமழ் காந்த ணறுங்குலை யன்ன
நலம்பெறு கையினென் கண்புதைத் தோயே
பாய லின்றுணை யாகிய பணைத்தோட்
டோகை மாட்சிய மடந்தை
நீயல துளரோவென் னெஞ்சமர்ந் தோரே.

*எ-து: "பண்ணமை பகுதி......எண்ணருஞ் சிறப்பிற் கிழ வோன் மேன" (தொல். கற்பி. சூத். 5) என்பதால், பகற்குறி யிடம்புக்க தலைவி பின்னாக வந்து அவனது கண்புதைத் துழிச் சொல்லியது.*

இ-ள்: மலைக்கண் மணம் வீசுகின்ற காந்தளினது நறிய பூங்கொத்தைப்போல, அழகு விளங்குகின்ற கையினால் எனது கண்ணை மூடிய பெண்ணே! எனக்குப் பாயலினிடத்துத் துணையாகிய பருத்த தோளையும் மயில்போலும் பெருமையையுமுடைய பெண்டு, நீயன்றி என்னெஞ்சின் விரும்பியிருக்கின்றவர் பிறர் யாருமில்லையே! எ-று.

ஏகாரம் - வினா; ஒகாரம் - எதிர்மறை.

'நீயலதுளரோ வென்னெஞ்சமர்ந்தோரே' என்றது, நீயலது பிறருளராயினன்றே நான் கூறுவது அறிதல் வேண்டிக் கண் புதைக்கற்பாலது, அஃதில்லாவழிப் புதைப்பது என்? என்று அவள் பேதைமையை யுணர்த்தியதாம். மெய்ப்பாடு - பெரு மிதம்; பயன் - ஐயநீங்குதல், அன்றி மகிழ்ச்சியுமாம்.

(3)

294. எரிமருள் வேங்கை யிருந்த தோகை
யிழையணி மடந்தையிற் றோன்று நாட
வினிதுசெய் தனையா னுந்தை வாழியர்
நன்மனை வதுவை யயரவிவள்
பின்னிருங் கூந்தன் மலரணிந் தோயே.

எ-து: "அற்றமழிவுரைப்பினும்" (தொல். கற்பி. சூத். 9, 3) என்பதால், வதுவை செல்லா நின்றுழித் தலைமகற்குத் தோழி கூறியது.

இ-ள்: நெருப்புப் போலும் மலர்கள் பொருந்திய வேங்கை மரத்தின் கண்ணிருந்த மயில் ஆபரணமணியும் மடந்தையைப் போற்றோன்று நாடனே! நமக்குப் பெறற் கரும் பெரும் பொரு ளாகிய இனிமையைச் செய்தாயாதலின் நுந்தை வாழ்க, இக்கடி மனைக்கண் வதுவையயரும் படி இவளது பின்னிய கரிய கூந்தலின் முன் மலரையணிந் தோய்! எ-று.

நாடனே மலரணிந்தோய், இனிது செய்தாய் நுந்தை வாழியர் என்க. மருள் - "வரைமருள் புணரி வான்பிசிருடைய" என்றாற் போல உவமையுருபு (பதிற்றுப்பத்து, செய். 11). இழையணி மகளிர்-கல்யாணக் கோலமமைந்த மகளிர், ஆல்-அசை.

மலர்ந்த வேங்கைக்கணிருந்த தோகை பொன்னணி மடந்தையிற்றோன்று நாடவென்றது, நீ வரையாது ஒழுகுகின்ற ஞான்றும் நின்றமர் பொன்னணிந்த இன்றுபோல இவள் சிறப்ப வொழுகினாயென்பதாம். இலை, பூ முதலியவற்றால் பொதுளப்பட்ட வேங்கை வதுவையஞ்சாலையாகவும், பூ ஓமாக்கினியாகவும், தோகை கலியாணக் கோலமமைந்த தலைவி யாகவுங்கொள்க. மெய்ப்பாடும் பயனுமவை. (4)

295. வருவது கொல்லோ தானே வாரா
தவணுறை மேவலி னமைவது கொல்லோ
புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை
யிருவி யிருந்த குருவி வருந்துறப்
பந்தாடு மகளிரிற் படர்தருங்
குன்றுகெழு நாடனொடு சென்றவென் னெஞ்சே.

எ-து: “வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்” (தொல். கள. சூத். 21) என்பதால், தலைமகன் வரைவிடை வைத்துப் பிரிந்து நீட்டித்துழி, உடன் சென்ற நெஞ்சினைத் தலைமகள் நினைந்து கூறியது.

இ-ள்: வேடர்களது நெருப்புக் கொள்ளிக்குப் பயந்து தன் கூடாகிய இருப்பிடத்தையடையும் மயில், கதிர் கொய்த அரிதாளின்கண்ணிருந்த குருவிகள் பந்தாடு மகளிரைப் போன்று, எழுவது விழுவதாய் வருந்துறச் சிறகை விரித்து ஆடிச் செல்லும் மலைகள் பொருந்திய நாடனோடு போய மனம் தானே வருவதுகொல்லோ! அன்றி வாராது அவ்விடத்துறைதலை விரும்புதலின் பொருந்தியது கொல்லோ! யானதனை யறியேன். எ-று.

ஏகாரம் - பிரிநிலை; கொல் - ஐயம்; ஓகாரம் இரக்கம்; ‘கொள்ளிக்கு’ என இல்லுருபு குவ்வுபாகத் திரிக்கப்பட்டது. கெழு - அசை; பந்தாடு மகளிரென்னும் ஏனையுவமை உள்ளுறை உவமைக்குச் சிறப்புக் கொடுத்து நின்றது. புனவர் ... ... நாடன் என்றது, பின்பு வரைந்து கொள்ளக் கருதாதே அலரஞ்சித் தன் மனைவயிற் சென்றவன் இக்காலத்து யானும் என்னாயத்தாரும் வருந்துறப் பிரிந்தானென்பதாம்.

இதனை நச்சினார்க்கினியர், "பிரிந்தவழிக் கலங்கினும்"[1] என்னுமிடத்திற்குக் காட்டுவர். அதற்குத் 'தலைமகன் ஒருவழித் தணந்து நீட்டித்துழி உடன் சென்ற நெஞ்சை நினைந்து கூறியதுபோலும்; இதற்கு வேடர் தாம் தமக்குப் பாதுகாவலாக வைத்திருக்குங் கொள்ளியால் தனக்குத் தீங்கு வருமென்று கருதி நெடுநாட் பழகிய குருவிகளும் மிக வருந்த மயில் தன் கூட்டிற் சென்றாற்போல, இவனும் அலர் எழுந்ததெனக் கருதி அதற் கஞ்சித் தன்னூர்க்கு நம்மை வருந்தவிட்டுச் சென்றான் என்ப தாம்.

"நோயுமின்பமும்"[2] என்னுஞ் சூத்திர விதியினால் நெஞ்சை உணர்வுடையதுபோலவும் உறுப்புடையது போலவுங் கூறிற்று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல். (5)

**296.** கொடிச்சி காக்கும் பெருங்குர லேன
லடுக்கன் மஞ்ஞை கவரு நாட
நடுநாட் கங்குலும் வருதி
கடுமா தாக்கி னறியேன் யானே.

எ-து: 279ஆம் செய்யுளிற் காண்க. இரவுக்குறி வருகின்ற தலைமகற்குத் தோழி ஆற்றாருமை கூறி மறுத்தது.

இ-ள்: கொடிச்சியாற் காக்கப்படும் ஏனலது பெரிய குரலை மலையில் வாழும் மயில் கவருகின்ற நாடனே! நீ நடுநாளாகிய கங்குலிலும் வருகின்றாய்; வருங்கால் அவ்விடத்துக் கடுமா தாக்குமாயின் இதனால் விளைவன யானறியேன், எ-று.

கொடிச்சி காக்குந் தினையை அவள் காவலைத் தப்பி மயில் கவர்ந்தாற்போல, நீயுமிவ்விடத்துக் காவலைத் தப்பி இரவுக்குறிக்கண் வருகின்றாய் என்பதாம். கங்குல் - நடுநாள் என்றுமாம்; கடுமா - புலி; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவு கடாவல். (6)

1. தொல். களா. சூத். 20, 9.

2. தொல். பொருளியல், சூத். 2.

297. விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாட
பிரியினும் பிரிவ தன்றே
நின்னொடு மேய மடந்தை நட்பே.

*எ-து: "நாற்றமுந் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்துப் 'பிற'வினமைவது. ஒருவழித் தணந்து வந்து வரைய வேண்டு மென்ற தலைமகற்குத் தோழி கூறியது.*

*இ-ள்: அலர்கள் விரிந்த வேங்கை மரத்தின் பெரிய சினைக் கண்ணிருக்கின்ற தோகையானது, பூக்கொய்கின்ற மகளிரைப் போலத் தோன்றும் நாடனே! நின்னோடு பொருந்திய மடந்தையுடைய நட்பானது நீ பிரியினும் பிரி யத்தக்கதன்று, எ-று.*

*மலர்ந்த வேங்கைச் சினைக்கண்ணிருந்த தோகை மலர் கொய்யும் மகளிரைப்போலத் தோன்று நாடவென்றது, நீ மனத்தால் எங்கட்கு நல்லது புரியாயாயினும் நன்மை செய் கின்றாய் போலத் தோன்றுகின்றாயென்பதாம். விரிந்த வேங்கை என்றதால் வரைவு நாளாயிற்றெனவும், தோகை பூக்கொய் மகளிரிற் றோன்றல் நீயதனை இக்காலத்து முடிக்க வேண்டும் எனவுங் கூறியவாறு. பூக்கொய் மகளிரிற் றோன்றும் என்னும் ஏனையுவமை, உள்ளுறையுவமையைத் தருங் கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து நின்றது. உம்மை - சிறப்பு; ஒடு - வேறு வினையொடு; மெய்ப்பாடு - பெருமி தம்; பயன் - வரைவுகடாவல். (7)*

298. மழைவர வறியா மஞ்ஞை யாலு
மடுக்க னல்லூ ரசைநடைக் கொடிச்சி
தானெம் மருளா ளாயினும்
யாந்தன் னுள்ளுபு மறந்தறி யேமே.

*எ-து: "பண்பிற் பெயர்ப்பினும்" (தொல். கள. சூத். 12) என் பதால், தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட் குணர்த் தியவழி அவள் நாணத்தினால் மறைத்தொழுகிய வதனைக் கூறக்கேட்ட தலைமகன் சொல்லியது. "பரிவுற்று மெலியினும்" என்பது நச்சினார்க்கினியர் கருத்து.*

*இ-ள்: மழையின் வரவையறிந்து மயில்கள் ஆரவாரித் தாடும் மலைநாட்டையுடைய அசைந்த நடையையுடைய கொடிச்சி தான் எமக்கு அருள் செய்யாளாயினும் யாந் தன்னை நினைத்தலை ஒருகாலத்தும் மறந்தறியேம், எ-று.*

*மயிலினது வரவையறிந்து மஞ்ஞையாலு மென்றது, யான் நின்னிடத்து வருகின்ற வரவினை யறிந்து இதற்கு அவள் மகிழா நிற்கும்; நீ கூறுகின்றது பொய்யென்பது.*

*மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஆற்றாமை நீங்குதல்; ஐயம் - நீங்குதல். (8)*

**299.** குன்ற நாடன் குன்றத்துக் கவாஅற்
பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையு
மஞ்சி லோதி யசைநடைக் கொடிச்சி
கண்போன் மலர்தலு மரிதிவ
டன்போற் சாயன் மஞ்ஞைக்கு மரிதே.

*எ-து: இதுவுமது, இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங் கிய நிலைமைக்கண் தலைமகள் ஆயவெள்ளத்தோடு கூடி நிற்கக் கண்ட தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.*

*இ-ள்: குன்ற நாடனது மலையின் சாரலின் பசிய சுனைக் கண் விரிந்த வாயையுடையவாய் அலர்ந்த குவளையும் அழ கிய சிலவாகிய கூந்தலையுடைய அசைந்த நடையையுடைய கொடிச்சியது கண்ணைப் போல மலர்தலுமரிது; இவள் சாயலைப் போலும் சாயல் சாயலையுடைய மயிலுக்கு மரிது, எ-று.*

*சாயல் ஐம்பொறியான் நுகரும் - மென்மை; உம்மை - சிறப்பு. குன்றநாடன் அந்நிலத்துக்குரிய முருகவேள், அன் றித் தந்தையுமாம். மலர்தலரிதென்றும் பாடம். மெய்ப்பாடு - அது; பயன் - புகழ்தல். (9)*

**300.** கொடிச்சி கூந்தல் போலத் தோகை
யஞ்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பன்

வந்தன னெதிர்ந்தனர் கொடையே
யந்தீங் கிளவி பொலிகநின் சிறப்பே.

எ-து: "ஆங்கதன் றன்மையின் வன்புறை யுளப்பட" (தொல். கள. சூத். 23, 44.) என்பதால், தலைமகன் தானே வரைவு வேண்டி விடச் சுற்றத்தார் கொடை நேர்ந்தமை தலை மட்குத் தோழி சொல்லியது.

இ-ள்: கொடிச்சியது கூந்தலைப்போலத் தோகையா னது தன்னழகிய சிறகை விரிக்கின்ற பெரிய மலையை யுடைய சிலம்பன் வரைவொடு வந்தான்; வந்தமையை யேற்று அவர்க்குக் கொடையெதிர்ந்தார்கள்; அதனால் அழகிய இனிய கிளவியையுடையாளே! நின் சிறப்புப் பொலிவதாக, எ-று.

ஏகாரம் - தேற்றம்; கிளவி - அன்மொழி.

கொடிச்சி கூந்தல்போல வேண்டி மயில் சிறகை விரிக் கும் வெற்பன் என்றது, நின் மகிழ்ச்சிக்குத்தக நின்தமர் மகிழ்ச்சி கூர்ந்தார் என்பதாம்.

மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவு நேர்ந்தமை கூறி வற்புறுத்தல். (10)

மஞ்ஞைப் பத்து முற்றிற்று

---

## குறிஞ்சி முற்றிற்று

*கபிலர்*

○○○

# 4. பாலை

*பாலையாவது பிரிதலென்னு முரிப்பொருளைக் கூறுவது. பிரிதல் என்பது ஓதல், காவல், பகை தணிவினை, வேந்தற்குற்றுழி, பொருட்பிணி என்பனவும் உடன்போக்குமாம். இதை முதல், கரு, உரி என்ற மூன்று பொருளினாலுமறிய வேண்டும். பாலைக்கு நிலமின்றென்ப, ஆயினும் நிலக் கலப்பே நிலமாம்.*

முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலையென்பதோர் படிவங் கொள்ளும்

*(சில. காடு. 64-6) என்பது சிலப்பதிகாரம்.*

*கருப்பொருள்: தெய்வமின்றெனவும், கலந்த நிலத்தெய்வமெனவும், சூரியனும் துர்க்கையுமெனவும் கொள்ப. உணா - ஆறலைத்தனவும் ஊரெறிந்தனவுமாம்; மா - வலியழிந்த யானையும் புலியும் செந்நாயுமாம்; மரம் - இருப்பையும் ஓமையும்; புள் - கழுகும் பருந்தும் புறாவும்; பறை - பூசற்பறையும் ஊரெறி பறையும் நிரைகோட் பறையும்; தொழில் - நிரைகோடலும், சரத்தெறிதலும், சூறையாடலும்; பண் - பஞ்சுரம்; மக்கள் - மீளி, காளை, விடலை, எயிற்றி, பேதை, எயினர் எயிற்றியர், மறவர் மறத்தியர்; பூ - மரா, துரா, பாதிரி இவற்றின் பூ நீர் - அறுநீர்க்கூவலும் அறு நீர்ச் சுனையும்; ஊர் - கொல் குறும்பு; உரிப்பொருள் பிரிவுணர்த்துவனவும் செலவழுங்குவனவும் செலவழுங்குவிப்பனவும் பிரிந்துழி இரங்குவனவுமாம்.*

## *31. செலவழுங்குவித்த பத்து*

301. மால்வெள் ளோத்திரத்து மையில் வாலிண
ரருஞ்சுரஞ் செல்வோர் சென்னிக் கூட்டு
மவ்வரை யிறக்குவை யாயின்
மைவரை நாட வருந்துவள் பெரிதே.

எ-து: பிரியுங் காலை யெதிர்நின்று சாற்றிய - யாபுடை யெதிரு முளப்படப் பிறவும்" (தொல். கற்பி. சூத். 9, 29-30) என்பதால், பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்குச் சொல்லியது.

இ-ள்: பெருமையுடைய வெள்ளி லோத்திரத்தின் குற்ற மற்ற வெள்ளிய பூங்கொத்தை அரிய சுரத்தைச் செல்வோர் தஞ்சென்னியில் வெப்பந்தீர அணிந்துபோம்; அவ்வெல்லை யைக் கடப்பையாயின் மைவரை நாடனே! அவள் மிக வருந்து வாள், எ-று.

மைவரை நாடவென்றது, நின்னாட்டு வாழ்வார் யாதோர் குறைவுமின்றி இன்பமனுபவித்திருப்பார் என்றால், அவருள் இவளுமொருத்தியாதலின் இவள் வருந்தாவண்ணஞ் செய் கவென்பது, மழை எல்லார்க்கு மொப்பப் பயன் கொடுத்த லின். இறக்குவையாயினெனவும் வருந்துவளெனவும் எதிர் கால நுகர்ச்சி கூறியவாறு. மெய்ப்பாடு - அழுகை; பயன் - செலவழுங்குவித்தல். (1)

302. அரும்பொருள் செய்வினை தப்பற்கு முரித்தே
பெருந்தோ ளரிவை தகைத்தற்கு முரியள்
செல்லா யாயினோ நன்றே
மெல்லம் புலம்ப விவளழப் பிரிந்தே.

எ-து: "ஒன்றாத் தமரினும்" என்னும் தொ. அகத். 41 ஆம்) சூத்திரத்து:

நாளது சின்மையு மிளமைய தருமையுந்
தாளாண் பக்கமுந் தகுதிய தமைதியு
மின்மைய திளிவு முடைமைய துயர்ச்சியு
மன்பின தகலமு மகற்சிய தருமையு
மொன்றாப் பொருள்வயி னூக்கிய பாலினும்

என இவற்றைத் தலைமகன் கூறக் கேட்டிருந்த தோழி, "நிகழ்ந் தது கூறி நிலையலுந் திணையே" (தொ. அகத். சூத். 44) என்ப தால், பொருள்வயிற் பிரியுந் தலைமகன் பிரிவுடன் படுத்த வேண்டுமென்றானாக, அவற்குத் தோழி சொல்லியது.

இ-ள்: மென்மையாகிய கடற்கரையையுடையவனே! இவளழும்வண்ணம் பிரிந்து சென்று தேடக் கருதுமரிய பொருளை யீட்டுந்தொழிலுந் தவறுதலுமுண்டு அன்றி, பெரியவாய தோள்களையுடைய அரிவையுந் தடுத்தற்கு முரியளாதலின், நீ செல்லாயாயின் நன்று, எ-று.

செல்லிற்றீமையென்பதாம். ஒகாரம் எதிர்மறை ஏகாரங்கள் தேற்றம்.

இதனுள், தகைத்தற்குமுரியள் என்றது மனமேவுதலால், தாளாண் பக்கம் செய்வினை தப்பற்குமுரித்து என்றது தத்தம் நிலைமைக்கு ஏற்பப் பொருள் தேட வேண்டுதலின், அது தவறு தலுமுண்டென்றலின் தகுதிய தமைதி செல்லாயாயினோ நன்றே என்றது அன்பினதகலம் இவளழ என்றது அகற்சிய தருமை. இதனை "நிகழ்ந்தது கூறி" என்னுஞ் சூத்திர உரையானுணர்க. 'தப்பற்குமுரியள்' என்றும் பாடம். மெய்ப்பாடும் பய னும் அவை. (2)

303. புதுக்கலத் தன்ன கனிய வாலம்
போகிறனைத் தடுக்கும் வேனி லருஞ்சுரந்
தண்ணிய வினிய வாக
வெம்மொடும் சென்மோ விடலை நீயே.

எ-து: "நாற்றமும் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்துப் 'பிற'வாற் கொள்வது. சுரத்தருமை கூறி உடன் செலவு மறுக்குந் தலைமகற்குத் தோழி சொல்லியது.

இ-ள்: புதிய மட்பாண்டம்போலும் கனியையுடையவாய ஆலமரம், பறவைகளைப் போக விடாது தடுக்கின்ற வேனிற்கால மிகுந்த அரிய சுரமானது குளிர்ச்சியையும் இனிமையையுமுடையவாக விடலையே! நீ எம்மோடுஞ் செல்வாய், எ-று.

"புதுக்கலம்போலும் பூங்கனியாலும்"[1] என்பது சிந்தாமணி; உம்மை - எதிர்மறை; மோ- முன்னிலையசை. 'போகினைத் தடுக்கும் என்றும் பாடம். மெய்ப்பாடும் பயனும் அவை. (3)

---

1. சீவகசிந். மண்மகளிலம்பகம், செய் 7.

304. கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய
வானீர்ப் பத்தல் யானை வெளவுங்
கல்லதர்க் கவலை செல்லின் மெல்லியற்
புயனெடுங் கூந்தல் புலம்பும்
வயமான் றோன்றல் வல்லா தீமே.

*எ-து: "தலைவரும் விழும நிலையெடுத் துரைப்பினும்" (தொல். அகத்திணை. சூத். 39) என்பதால், பொருள் வயிற் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: தந்தொழிலன்றி மற்றொன்றுங் கற்றறியாத கோவலர் கோலினாற் றோண்டிய பள்ளத்திலுள்ள வெள்ளிய நீரைநீர் வேட்கையின் வருந்திய யானை பருகும் பல வழிகளை யுடைய கல்லதர்க்கண்ணே செல்லுவையாயின், மெல்லியலை யும் கரிய நெடிய கூந்தலையு முடையான் புலம்புவாள்; ஆத லின் வயமான் தோன்றலே! எல்லாம் வல்லையாயினும் இது வல்லமையல்லையாயிருப்பாய், எ-று.*

*வயமான் தோன்றல் புலி மறவ னென்றாற் போல உவ மைத் தொகை; வானீர்ப்பதலை என்றும் பாடம்; மெய்ப்பா டும் பயனும் அவை. (4)*

305. களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது
பசிதின வருந்தும் பைதறு குன்றத்துச்
சுடர்தொடிக் குறுமக ளினைய
வெனைப் பயஞ்செய்யுமோ விடலை நின்செலவே.

*எ-து: இதுவுமது. உடன்போக்கொழித்துத் தனித்துச் செல்வல் என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: களிற்றியானை தன் பிடியைத் தழுவி வேற்றுப் புலத் தின்கண் செல்லாதாய்ப் பசி அறிவை வருத்த வருந்து கின்ற பசுமையற்ற மலைவழிக்கண் விடலையே! சுடர்த் தொடிக்குறு மகள் வருந்த நின் செலவு யாது பயனைச் செய்யும்? எ-று.*

ஒன்றையுந்தராது என்பது. ஓகாரம் - எதிர்மறை; மாரி யின்றி வெயில் தெறுகையால் பசுமையற்ற குன்றம். "உண்டற் குரிய வல்லாப் பொருளை - உண்டன போலக் கூறலும் விதியே" என்ப தால் பசிதினவென்னப்பட்டது (தொல். பொரு ளியல், சூ. 19). 'புலம் படர்ந்து' என்றும் பாடம்; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - அது. (5)

306. வெல்போர்க் குரிசினீ வியன்சுர னிறப்பிற்
பல்கா ழல்கு லவ்வரி வாடக்
குழலினு மினைகுவள் பெரிதே
விழவொலி கூந்தன் மாஅ யோளே.

எ-து: இதுவுமது. பிரியுந் தலைமகற்குத் தோழி பிரிவாற் றாமை கூறியது.

இ-ள்: போரை வெல்லுந் தன்மையையுடைய குரிசிலே! நீ அகன்ற சுரத்தைக் கடந்து செல்லின் பலவடம் அமைந்த அல்குலையுடையாள் அழகிய வரிவாட விழவுபோலு நறு மணம் வீசுந்தழைத்த கூந்தலையுடைய மாயோள் பெரிதும் குழலினுங் காட்டியிரங்குவாள், எ-று.

உம்மை - சிறப்பு; ஏகாரம் - தேற்றம்; விழவு - திருவிழா; விழவொலி - உவமைத்தொகை; "விழவாற்றுப் படுத்தபிற் - புல்லென்ற களம்போல"[1] எனவும், "இந்திரவிழவிற் பூவி னன்ன"[2] எனவும் பல சான்றோரும் விழவைப் பலவகைக்குங் கரட்டுதல் காண்க. அவிழொலி கூந்தலென்றும் பாடம்; மெய்ப்பாடும் பயனும் அவை. (6)

307. ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉங்
குன்றுடை யருஞ்சுரஞ் செலவயர்ந் தனையே
நன்றில் கொண்கநின் பொருளே
பாவை யன்னநின் றுணைப்பிரிந்து வருமே.

எ-து: பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகன் அதன் சிறப்புக் கூறியவழித் தோழியதனை இழித்துக் கூறியது.

---

1. பாலைக்கலி, செய். 4, 10-1.

2. இந்நூல் 62ஆம் செய்யுள்.

*இ-ள்: ஒன்றோடொன்று உரிஞ்சிய மூங்கிலிடத்துப் பிறந்த ஒலிக்கின்ற காட்டாக்கினிக்குப் புலியானது பயப்படு கின்ற மலை பொருந்திய அரிய காட்டைக் கடத்தலை விரும்பி னாய், கொண்கனே! பாவையைப் போலும் நினது துணை யைப் பிரிந்து தேடி வரும் பொருள் நன்மையைத் தருவ தின்று, எ-று.*

*ஏகார்ரம் பிரிநிலை. பாவை இயற்றுவோனா லெவ்வித மியற்றப்பட்டதோ அவ்விதம் தான் அழியும் வரை நிற்பது போலப் பெண்களும் நாயகராற் கற்பித்தவண்ணம் நிற்றலின் உவமை கூறப்பட்டது; பண்புவமையும் தொழிலுவமையும். செலவயர்ந்தனையே என்பதில் ஏகாரம் தேற்றம்; பொருளே என்பதில் ஏகாரம் பிரிநிலை. மெய்ப்பாடும் பயனும் அவை. (7)*

**308.** பல்லிருங் கூந்தல் மெல்லிய லோள்வயிற்
பிரியா யாயினு நன்றே விரியிணர்க்
காலெறு ழொள்வீ தாஆய்
முருகமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே.

*எ-து: பிரிவலென்ற தலைமகற்குத் தோழி பிரியாதொழி யப் பெறின் நன்று; பிரிவையாயின் இப்பருவத்து இம்மலை எங்களை விட்டுப் பிரிந்தாற் பிரியெனச் சொல்லியது.*

*இ-ள்: பலவாய கரிய கூந்தலையும் மெல்லிய வியல்பை யுமுடையாளைப் பிரியாதொழிதல் நன்று; விரிந்த தாற மைந்த தண்டமைந்த எறுழினது ஒள்ளிய பூப்பரந்த முரு கணங்கு வீற்றிருக்கும் பெரிய மலையானது, எங்களை விட் டுப் பிரிய நீயும் பிரிவாயாக, எ-று.*

*உம்மை - எச்சம்; மெய்ப்பாடும் பயனும் அவை. (8)*

**309.** வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து
செலவயர்ந் தனையா னீயே நன்று
நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்
முறுவல் காண்டலி னினிதோ
விறுவரை நாட நீ யிறந்துசெய் பொருளே.

எ-து: "நாற்றமுந் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்துப் 'பிற'வாற்கொள்வது. 'பொருள்வயிற் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது. எதிரது நோக்கிக் கூறியது.

இ-ள்: வேனிற்றிங்களின் வெவ்விய காட்டைக் கடந்து போதலை விரும்பினால் நீயே, பெரிதும் நின்னை விரும்பியுறைவாளது கடுஞ்சூற் சிறுவனது முறுவலைக் காண்டலினுங் காட்டி இனிமையையுடையதோ இறுவரை நாடனே! நீ சிறுவனை விட்டுக் கடந்து தேடும் பொருள், எ-று.

ஏகாரம் - தேற்றம்; ஓகாரம் - எதிர்மறை; 'விரைந்து செய் பொருளே' என்றும் பாடம். மெய்ப்பாடும் பயனும் அவை. (9)

**310.** **பொலம்பசும் பாண்டிற் காசுநிறை யல்கு**
**லிலங்குவளை மென்றோ ளிழைநிலை நெகிழப்**
**பிரிதல் வல்லுவை யாயி**
**னரிதே விடலையிவ ளாய்நுதற் கவினே.**

எ-து: பிரிகின்ற தலைமகற்குத் தோழி 'நீ நினைக்கின்ற கருமம் முடித்தாயாயினும் இவள் நலம் மீட்டற்கு அரிது' எனச் சொல்லிச் செலவழுங்குவித்தது.

இ-ள்: பொன்னாலாகிய பசிய வட்டமாகிய காசு நிறைந்த அல்குலையுடையாள், ஒளி பொருந்திய வளையணிந்த மெல்லிய தோளிலணிந்த இழைநிலையானது கழலப் பிரிதலை வல்லையாயின், விடலையே! இவளது அழகு நிறைந்த நெற்றியழகு மீட்டற்கு அரிது. எ-று..

ஏகாரம் - தேற்றம்; மெய்ப்பாடும் பயனும் அவை. (10)

செலவழுங்குவித்த பத்து முற்றிற்று

---

## 32. செலவுப் பத்து

311. வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினு
மாரிடைச் செல்வோர் ஆறுநனி வெரூஉங்
காடிறந் தனரே காதலர்
நீடுவர் கொல்லென நினையுமென் னெஞ்சே.

*எ-து: "அவனறிவாற் றவறியுமாகலின்" என்னும் (தொல். கற்பி. 6ஆம்) சூத்திரத்துப் 'பல்வேறு நிலை'யாற் கொள்வது. ஆற்றது அருமை நினைந்து நீ ஆற்றாயாதல் வேண்டா, அவர் அவ்வழி முடியச் சென்றார் என்ற தோழிக்குத் தலை மகள் சொல்லியது.*

*இ-ள்: வேங்கைப்பூக் கொய்கின்றவர்கள் பாலைப் பண்ணைப் பாடினும் அரிய வழியிற் செல்வோர் அவ்வழி போதற்கு மிக வெருவுங் காட்டை நம் காதலர் கடந்தார்; அவர் காட்டிற் போயதற்கன்று, அங்ஙன் நீட்டிப்பார் கொல்லோ என நினைந்து நையா நிற்கும் என் நெஞ்சம், தோழியே! எ-று.*

*ஏகாரம் - தேற்றம்; கொல் - ஐயம்; இதில் பாலை யாழ்ப் பண்ணைக் கூறுக. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுதல்.*

*(1)*

312. அறஞ்சா லியரோ அறஞ்சா லியரோ
வறனுண் டாயினு மறஞ்சா லியரோ
வாள்வனப் புற்ற வருவிக்
கோள்வ லென்னையை மறைத்த குன்றே.

*எ-து: "எஞ்சியோர்க்கு மெஞ்சுதலிலவே" (தொல். அகத்தி. சூ. 42) என்பதால், உடன் போயின தலைமகள் மீண்டு வந்துழி, 'நின் ஐயன்மார் பின்துரந்து வந்தவிடத்து நிகழ்ந்தது என்னை?' என்ற தோழிக்கு நிகழ்ந்தது கூறித் தலைமகன் மறைதற்கு உதவி செய்த மலையை வாழ்த்தியது.*

*இ-ள்: புண்ணியம் நிறைவதாக, புண்ணியம் நிறைவதாக, வெம்மையுண்டாயினும் புண்ணியம் நிறைவுதாக; கொள்ளுதலில் வலிமையுடையவென் தலைவனை மறைத்தலாள் போலு மருவி பொருந்திய மலை. எ-று.*

அடுக்கு - உவகை பற்றிய விரைவு; ஒகாரம் - அசை; தலைவனை அன்னையென்றல் "அன்னை யென்னை என்றலுமுளவே" என்னும் பொருளியல் (52ஆம்) சூத்திரத்து வழுவமைதியாற் கொள்ளப்படும். மெய்ப்பாடு - உவகை; பயன் ஐயநீக்குதல். (2)

313. தெறுவ தம்ம நும்மகள் விருப்பே
யுறுதுய ரவலமொ டுயிர்செலச் சாஅய்ப்
பாழ்படு நெஞ்சம் படரடக் கலங்க
நாடிடை விலங்கிய வைப்பிற்
காடிறந் தனணங் காத லோளே.

எ-து: "தன்னு மவளு" மென்னும் (தொல். அகத்திணை, 36ம்) சூத்திரத்து "அவ்வழியாகிய கிளவியும்" என்பதால், தலைமகள் புணர்ந்துடன் போகியவழிச் செவிலியாற்றாமைகண்ட நற்றாய் அவட்குச் சொல்லியது.

இ-ள்: யானும் நும்மகள்மேல் வைத்த காதல் கடியப்படுவது; பொருந்திய துயரத்தைத் தருங்கையாறோடே உயிர் செல்லும்படி மெலிந்துபடு மியல்பிற்றாய நெஞ்சம்,படு நோய் வருத்தக் கலக்கமுற்று நாட்டினிடையே குறுக்கிட்டவைப் பின்கண் காட்டைக் கடந்தனள் நமது காதலள், எ - று.

பொருந்துந் தன்மைத்தாகிய துயராகிய அவலத்தோடு உயிர் போம்வண்ண மெலிந்து பாழ்படு நெஞ்சம் படர்வருத்துதலின் கலங்க நாட்டிடையிற் பொருந்தக் குறுக்கிட்டிருக்குமிடமாகிய காட்டைக் கடந்து சென்றாள் நமது காதலள்; ஆதலின் அவள்மேல் யான் வைத்த காதல் என்னால் நீக்கப்படுவது என்பதாம்.

அம்ம - முன்னிலையசை; நும்மகள் - சுட்டு; விருப்பே என்னு மேகாரம் பிரிநிலை; ஒடு - எண்ணொடு; தெறுவது - அழிக்கப்படுவது.

....... முக்கண்ணான் மூவெயிலு
முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலிற்
சீறருங் கணிச்சியோன் சினவலின் ..... (பாலைக்கலி செ.1.)

என்பதிற்போல.

*மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்: பயன் குறிப்பினால் அவள் காதலை விடுக என்றலின் ஆற்றுவித்தல்.(3)*

314. அவிர்கொடி கொட்பக் கழுதுபுக வயரக்
கருங்கட் காக்கையொடு கழுகுவிசும் பகவச்
சிறுகண் யானை யாள் வீழ்த்துத் திரிதரு
நீளிடை யருஞ்சுர மென்பநந்
தோளிடை முனிநர் சென்ற வாறே.

*எ-து: "ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்" (களவியல், சூத். 6) என்பதால், தலைவன் பிரிந்துழி அவனுடன் போய் மீண்டார் வழியதருமை தங்களிற் கூறக்கேட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: விளங்குகின்ற கொடி சுழலப் பேய் போதற்கு வருந்தற் கரிய கண்ணையுடைய காக்கையோடு கழுகுகள் விசும்பின்கண்ணொலிக்கச் சிறிய கண்ணையுடைய யானைகள் அவ்வழிக்கண்ணே செல்வோரையடித்து விழுத்தித் திரிதருகின்ற நெடிய விடத்தையுடைய அரிய காடென்று கூறுப, நமது தோளை வெறுத்தவர் சென்ற வழி, எ-று.*

'தோளிடை' என ஏழாவது "கன்றலுஞ் செலவு மொன்றுமார் வினையே"[1] என்பதாற் கொள்ளப்படும். ஒடு - உடனிகழ்ச்சி; மெய்ப்பாடு - அச்சம்; பயன் - ஆற்றுதல். (4)

315. பாயல் கொண்ட பனிமலர் நெடுங்கட்
பூசல் கேளார் சேய ரென்ப
விழைநெகிழ் செல்ல லுறீஇக்
கழைமுதிர் சோலைக் காடிறந் தோரே.

*எ-து: இதுவுமது. சொல்லாது தலைமகன் பிரிந்துழித் தலைமகள் வேறுபாடு கண்ட தோழி இரங்கிச் சொல்லியது.*

*இ-ள்: இழை நெகிழும்படியாகிய துயரத்தையுறுத்தி, மூங்கில்கள் முதிர்ந்த சோலை பொருந்திய காட்டைக் கடந்து சென்றவர், நம்மை விட்டுப் போகின்ற காலத்து அவரை*

1. தொல். சொல். வேற்றுமை மயங்கியல், சூத். 3.

விலக்காத வகை துயின்றிரெனக் கண்ணோடு புலர்ந்து நாம் கூறுகின்ற பூசலைக் கேளாராய்த் துரிய விடத்தினரென்று கூறுப, அவர் செயல் இருந்தவாறென்னே! எ - று.

மண்டிலத்தருமை கூறியவாறு. மெய்ப்பாடு - அழுகை; பயன் - அது. (5)

316. பொன்செய் பாண்டிற் பொலங்கல நந்தத்
தேரக லல்கு லவ்வரி வாட
விறந்தோர் மன்ற தாமே பிறங்குமலைப்
புல்லரை யோமை நீடிய
புலிவழங் கதர கானத் தானே.

எ-து: இதுவுமது. தலைமகள் மெலிவிற்கு நொந்து தலைமகன் பிரிவின்கண் தோழி கூறியது.

இ-ள்: பொன்னாற் செய்த வழகிய வட்டமாகிய காசு பெருகத் தேர்த்தட்டுப் போலும் அல்குலையுடையாளது அழ கிய தேமலகுகெட, விளங்குகின்ற மலைக்கண் புல்லிய அரையையுடைய ஓமைகள் நீண்டிருக்கும், புலிகள் சஞ்சரிக்கும் வழிகள் பொருந்திய காட்டுவழியான் மிகத் தாமே சென்றார், எ-று. தாமே - ஏகாரம் தேற்றம்; மெய்ப்பாடும் பயனுமவை. (6)

317. சூழ்கம் வம்மோ தோழிபாழ் பட்டுப்
பைதற வெந்த பாலை வெங்காட்
டருஞ்சுர மிறந்தோர் தேஎத்துச்
சென்ற நெஞ்ச நீடிய பொருளே.

எ-து: "பல்வேறுநிலை" யாற் கொள்வது. தலைமகன் பிரிந்து நீட்டித்துழி, நெஞ்சினைத் தூதுவிட்ட தலைமகள் அது வாராது தாழ்த்துழித் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழியே! வருவாயாக. பாழ்பட்டு ஈரமற வெந்த பாலையெனப்படும் வெவ்விய காடாகிய அரிய சுரத்தைக் கடந்து சென்றவர்மாட்டுப் போய மனம் நீடிய பொருளை யாதென்று ஆராய்வோம், எ-று.

ஈட்டிய பொருளென்று பாடமாயின் என்பதாம். தேளத்து என்பது "தோழிதேளத்து" (அகத்திணையியல், சூத். 36.) என்றாற் போல, "நோயுமின்பமும்" (தொல். பொரு ளியல். 2) என்னுஞ் சூத்திரத்திற்கமையச் சென்ற நெஞ்சும் என நெஞ்சையுறுப்புடையதுபோற் கூறப்பட்டது. மெய்ப் பாடு - அழுகை; பயன் - ஆற்றுதல். (7)

318. ஆய்நலம் பரப்ப வரும்படர் நலிய
வேய்மருள் பணைத்தோள் வில்லிழை நெகிழ
நசைநனி கொன்றோர் மன்ற விசைநிமிர்ந்
தோடெரி நடந்த வைப்பிற்
கோடுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

எ-து: "பல்வேறுநிலை"யினாற் கொள்வது. நம்மைப் பிரியார் என்று கருதியிருந்த தலைமகள் அவன் பிரிந்துழி இரங்கிச் சொல்லியது.

இ-ள்: குறைவுபட்டவழகு பரக்க அரிய படர்நோய் வருத்த, வேய்போலும் பருத்த தோள்களிலணிந்த பிரகா சத்தையுடைய வணிகன் கழல நம்மீது வைத்த அன்பு சிறிது மின்றிக் கெடுத்தவர், விசை மரம் மிகவுயர்ந்த கூட்டமாகக் காட்டழல் பரந்த விடத்தையுடைய சிகரங்களுயரப் பெற்ற பிறங்கலாகிய மலையைக் கடந்தவர், எ-று.

மலையிறந்தோர் நனி கொன்றாரென்க. 'வேய்மருள் பணைத்தோள்' - வேயையும் மயங்கச் செய்யுந்தோள், வேயைக் கண்டார் மனத்தை மயங்கச் செய்யுந்தோள் என்றுமாம். விசைமரம் திணைமாலை நூற்றைம்பது. மருள் - உவம வுருபு; மெய்ப்பாடும் பயனும் அவை. (8)

319. கண்பொர விளங்கிய கதிர்தெறு வைப்பின்
மண்புரை பெருகிய மரமுளி கான
மிறந்தன ரோநங் காதலர்
மறந்தன ரோதி மறவா நம்மே.

எ-து: இதுவுமது. தலைமகன் பிரிந்துழி அவனுணர்த் தாது பிரிந்தமை கூறிய தோழிக்குத் தலைமகள் கூறியது.

இ-ள்: கண்கள் பொரும் வண்ணம் விளங்கிய கதிர்தெறப் பெற்ற வைப்பினதாகிய மண்ணிடத்துப் புரை பெருகியுள்ள மரங்கள் காய்ந்துபடப் பெற்ற காட்டைக் கடந்து சென்றனரோ நங்காதலர், தம்மால் நமக்குமுன் கூறப்பட்டவற்றை மறவாத நம்மை மறந்தனராய், எ-று.

ஒகாரம் இரக்கத்தின்கண் வந்தது. மெய்ப்பாடும் பயனும் அவை. (9)

320. முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ
முழங்கழ லசைவழி யெடுப்ப வானத்
துருமுப்படு கனலி னிருநிலத் துறைக்குங்
கவலை யருஞ்சுரம் போயினர்
தவலி லருநோய் தலைத்தந் தோரே.

எ-து: இதுவுமது. தலைமகன் பிரிந்துழிச் சுரத்து வெம்மை நினைந்து தலைமகள் சொல்லியது. "புணர்ந்துடன் போகிய கிழவோள் மனையிருந் - திடைச்சுரத் திறைச்சியும் வினையுஞ் சுட்டி - யன்புறுதக்க கிளத்தற்றானே" என்பதால் இங்ஙனங் கூறியது (தொல். கற்பி. சூ. 7).

இ-ள்: முட்பொருந்திய அரையினையுடைய இலவமரத்தின் ஒள்ளிய பெரிய பூக்கள், முழங்கியெரியும் காட்டாக்கினி அசைதலாலுண்டாகிய காற்று எடுக்க வானத்தினுண்டாகுமிடியிற் றோன்றும் பொறிகள் நிலத்தில் வீழ்பவை போல, பெரிய நிலத்தின் வீழும் கவலை பொருந்திய அரிய காட்டைப் போயினார், குறைவுபடுதலில்லாத அரிய நோயை ஒருதலையா நமக்குத் தந்தோராய், எ-று.

மெய்ப்பாடும் பயனும் அவை. (10)

செலவுப் பத்து முற்றிற்று

---

## 33. இடைச்சுரப் பத்து

321. உலறுதலைப் பருந்தி னுளிவாய்ப் பேடை
யலறுதலை யோமை யங்கவட் டேறிப்
புலம்புகொள் விளிக்கு நிலங்காய் கானத்து
மொழிபெயர் பன்மலை யிறப்பினு
மொழிதல் செல்லா தொண்டொடி குணனே.

*எ-து: "மீட்டு வரவாய்ந்த வகையின் கண்ணும்" (தொல். கற்பி. சூத். 5,46) என்பதால், பிரிந்து போகா நின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்து இரங்கிச் சொல்லியது.*

*இ-ள்: காய்ந்த தலையினையுடைய பருந்தினது உளிவாயையுடைய பேடை, காய்ந்த தலையையுடைய ஓமையது அழகிய கவட்டின் கண்ணேறித் தனிமையுறக் கூவும் நிலங்காய்ந்த காட்டின் செல்லுதல் முடியாத பல மலைகளைக் கடந்தாலும், நம் மொண்டொடியாளது குணம் என்னை விட்டு நீங்கிலது, எ-று.*

*உம்மைச் சிறப்பு. 'மொழிபெயர்பன் மலையிறப்பினும்' என்றது, பின்னும் செல்லும் வழியை நோக்கி என்க. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுதல்.* *(1)*

**322.** நெடுங்கழை முளிய வேனி னீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே யினியே
யொண்ணுத லரிவையை யுள்ளுதொறுந்
தண்ணிய வாயின சுரத்திடை யாறே.

*எ-து: இதுவுமது. இடைச்சுரத்தின்கண் தலைமகன் தலைமகள் குணம் நினைத்தலில் தனக்குற்ற வெம்மை நீங்கியது கண்டு சொல்லியது.*

*இ-ள்: நெடிய மூங்கில்கள் உலர, வேனில் நீடித்துக் கடுங்கதிரையுடைய ஞாயிறு கல்லானது பிளக்க அழித்தலின் வெம்மையை யுடையவாயிருந்தன முன்னெல்லாம். இப்போது*

ஒள்ளிய நுதலையுடைய அரிவையை நினைக்குந் தோறுங் குளிர்ச்சியுடையவாயிருக்கின்றன, யான் செல்லா நிற்குமிக் காட்டக வழியானது, எ-று.

முன் - அவளை நினைக்குமுன்; ஏகாரங்கள் முன்னிரண்டும் தேற்றம்; எஞ்சியது அசை; மெய்ப்பாடு - வியப்பு; பயன் - ஆற்றுதல். (2)

323. வள்ளெயிற்றுச் செந்நாய் வயவுறு பிணவிற்குக்
கள்ளியங் கடத்திடைக் கேழல் பார்க்கும்
வெஞ்சுரக் கவலை நீந்தி
வந்த நெஞ்சநீ நயந்தோள் பண்பே.

எ-து: இதுவுமது. இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்த தலைமகன் அவள் பண்பு வந்தனவென உவந்து நெஞ்சிற்குச் சொல்லியது.

இ-ள்: கூரிய பற்களையுடைய செந்நாயானது கருப்பத்தையுடைய தன் பிணாவிற்கு உணாவேண்டிக் கள்ளி மரங்கள் பொருந்திய காட்டின்கண் பன்றியைத் தேடும் வெய்ய சுரத்தின் கவர்வழியைக் கடந்து வந்தன, நெஞ்சமே! நீ விரும்பியோளது பண்பு, எ-று.

"நோயுமின்பமும்" (பொருளியல் 2) என்னுஞ் சூத்திர விதியால் நெஞ்சைக் கேட்குநபோல உவமை தோன்றக் கூறியவாறு. மெய்ப்பாடு - உவகை; பயன் - ஆற்றுதல். (3)

324. எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடைச்
சிறிதுகண் படுப்பினும் காண்குவென் மன்ற
நள்ளென் கங்கு னளிமனை நெடுநகர்
வேங்கை வென்ற சுணங்கிற்
றேம்பாய் கூந்தன் மாஅ யோளே.

எ-து: "கரணத்தினமைந்து முடிந்தகாலை" என்னும் (கற்பியல், 5ஆம்) சூத்திரத்துப் 'பண்ணமை பகுதி'யாற் கொள்வது. பிரிந்து வந்த தலைமகன் தலைமகளை நலம் பாராட்டக்கண்ட தோழி 'இவள் குணத்தினை மறந்து அமைந்தவாறு யாது?' என வினாவினாட்கு அவன் சொல்லியது.

இ-ள்: காட்டழல் கவர்ந்துண்ட வெயில் மிகுந்த நீண்ட வழியிடத்துச் சிறிதே யான் துயில் கொள்ளுமிடத்தும், நள்ளென்னு மோசையுடைத்தாய இரவின் செறிந்த மனைகள் பொருந்திய நீண்ட நகரின் பொன்போலுஞ் சுணங்கினையுடைய நறுமணம் பரந்த கூந்தலையுடைய மாயோளை மிகக் காணப்பெறுவேன், எ-று.

எனவே ஒரு போதும் மறக்கவில்லையென்றான்; வென்ற உவமையுருபு; உம்மை - உயர்வு சிறப்பு; வேங்கைப்பூவை வென்ற என்றுமாம்; "மாணெழில் வேய்வென்ற தோளாய் நீ வரிற்றாங்கும்"[1] என்றாற்போல. மாயோள்-மாமை நிறத்தையுடையாள், பெண். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஐயமகற்றல். *(4)*

325. வேனி லரையத் திலையொலி வெரீஇப்
போகில்புகா வுண்ணாது பிறிதுபுலம் படரும்
வெம்பலை யருஞ்சுர நலியா
தெம்வெங் காதலி பண்புதுணைப் பெற்றே.

எ-து: இதுவுமது. பிரிந்து வந்த தலைமகன் சுரத்தின் வெம்மை எங்ஙனம் ஆற்றினீர் என்ற தோழிக்குக் கூறியது.

இ-ள்: வேனிற்காலத்து அரை மரத்தினது இலையொலிக்குப் பயந்து பறவை தன்னுணவையுண்ணாது வேற்றுப் புலத்திற்குச் செல்லும் வெப்பத்தையுடைய அரிய காடு நம்மை நலிக்க மாட்டாது, எமது விருப்பத்தையுடைய காதலியது பண்பைத் துணையாகப் பெற்றுச் சேறலின், எ-று.

அரையத்து - மாத்து என்றாற்போல. போகில் - பறவை என்பது "புதுக்கலத் தன்னகனிய வாலம் போகிறனைத் தடுக்கு"[2] மென மேற்கூறியவாற்றானறிக. வெம்பலை - ஐசாரியை. சேறலின் என ஒரு சொல் வருவித்து முடிக்கப்பட்டது; மெய்ப்பாடும் பயனும் அவை. *(5)*

1. இந்நூல் 303ஆம் செய்யுள்.
2. பாலைக்கலி, செய்யுள் 20, 15.

326. அழலவிர் நனந்தலை நிழலிடம் பெறாது
மடமா னம்பிணை மறியொடு திரங்க
நீர்மருங் கறுத்த நிரம்பா வியவி
னின்னா மன்ற சுரமே
யினிய மன்றயா னொழிந்தோள் பண்பே.

*எ-து: இதற்கு 321ஆம் செய்யுள் விதி. இடைச்சுரத்து வெம்மை ஆற்றானாகிய தலைமகன் தலைமகள் குணம் நினைந்து நொந்து சொல்லியது.*

*இ-ள்: காட்டழல் விளங்கும் அகற்சியுடைய விடத்தில் நிழலையுடைய இடம் பெறாமல், மடப்பம் பொருந்திய மானினழகிய பிணையானது தன் கன்றோடு வாட, நீர் பக்கத் திலற்ற நிரம்பப்பெறாத வழியின் இன்னாமை மிகவுமுடைய, காடு; மிகவுமினி மையுடைய, யான் நீங்க இருக்கின்றோளது குணம், எ-று.*

*இயவு - வழி; சுரமே - ஏகாரம் தேற்றம்; மானின் இள மைக்கு மறி என்னும் பெயர்.*

யாடுங் குதிரையு நவ்வியு முழையு
மோடும் புல்வா யுளப்பட மறியே (மரபியல், 12.)

*என்பதாற் கொள்ளப்படும். மெய்ப்பாடு - வியப்பு; பயன் - ஆற்றுதல். (6)*

327. பொறிவரித் தடக்கை வேத லஞ்சிச்
சிறுகண் யானை நிலந்தொடல் செல்லா
வெயின்முனி சோலைய வேயுயர் சுரனே
யன்ன வாரிடை யானுந்
தண்மை செய்தவித் தகையோள் பண்பே.

*எ-து: இதுவுமது. பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின் கண் தலைமகள் குணம் நினைந்து இரங்கிச் சொல்லியது.*

*இ-ள்: புள்ளி பொருந்திய பல நிறங்களையுடைய பெரிய கையானது, வேதலுக்குப் பயந்து சிறிய கண்ணையுடைய யானை நிலத்தைத் தீண்டுதல் செய்யாத வெயிலான் முளியப்*

பட்ட சோலையையுடைய மூங்கில்களுயர்ந்த காடு. அத்தன் மையவாய அரிய காடே யாயினும், குளிர்ச்சியைச் செய்தன இந்தப் பெருமையையுடையாளது குணம், எ-று.

முளிதல் - உலர்தல்; ஏகாரம் - தேற்றம்; இத்தகையோள் என்றான் உருப்பு வெளிப்பாட்டினால்; அன்றி அவள் குணம் நினைந்த மாத்திரையே சுரம் தண்மையவாதலிற் கூறினானெ னினுமாம். மெய்ப்பாடும் பயனும் அவை. (7)

**328.** **நுண்மழை தளித்தென நறுமலர் தாஅய்த்**
**தண்ணிய வாயினும் வெய்ய மன்ற**
**மடவர லின்றுணை யொழியக்**
**கடமுதிர் சோலைய காடிறந் தேற்கே.**

எ-து: இதுவுமது. 'மழைவீழ்தலாற் சுரந் தண்ணென்றது, இனி வருத்தமின்றிப் போகலாம்' என்ற உழையர்க்குத் தலைமகன் சொல்லியது.

இ-ள்: நுண்ணிய மழை துளித்ததாக நறிய வாசனையையுடைய மலர்கள் பரந்து குளிர்ச்சியுடையவாயினும் மிகவும் வெப்பத்தையுடைய; யாதானாயின், மடவரலாகிய வினிய துணையில்லாது அரிய வழி பொருந்திய முதிர்ந்த சோலையவாய காட்டைச் செல்லும் எனக்கு, எ-று.

உம்மை - இழிவு சிறப்பு; காடிறந்தோற்கே என்றும் பாடம்; மெய்ப்பாடு - வியப்பு; பயன் - உற்றதுரைத்தல். (8)

**329.** **ஆள்வழக் கற்ற பாழ்படு நனந்தலை**
**வெம்முனை யருஞ்சுர நீந்தி நம்மொடு**
**மறுதரு வதுகொ றானே செறிதொடி**
**கழிந்துகு நிலைய வாக**
**வொழிந்தோள் கொண்டவென் னுரங்கெழு நெஞ்சே.**

எ-து: இதுவுமது. இடைச்சுரத்தின்கண் மீளலுறும் நெஞ்சினை நொந்து தலைமகன் உழையர்க்குச் சொல்லியது.

இ-ள்: ஆள்வழங்குதலில்லாத பாழ்படுதலமைந்த அகற்சியையுடைய விடமமைந்த வெம்முனையாகிய வரிய காட்டைக் கடந்து நம்மோடு சுழலாநின்றதுதானே, செறிதொடி கழிந்து சிந்துகின்ற நிலையவாக நம்மை நீங்கியவள் வாங்கிக் கொண்ட என்னுடைய வலியையுடைய நெஞ்சானது, எ-று.

ஒடு-உடனிகழ்ச்சி. கொல், கெழு அசை. "நோயுமின்பமும்" (பொருளி.2) என்னுஞ் சூத்திரவிதியான் துன்பம் பற்றி நெஞ்சை உறுப்புடையவாகக் கூறியவாறு. மெய்ப்பாடு அழுகை. பயன் ஆற்றுதல். (9)

330. வெந்துக ளாகிய வெயிற்கட நீந்தி
வந்தன மாயினு மொழிகினிச் செலவே
யழுத கண்ண ளாய்நலஞ் சிதையக்
கதிர்தெறு வெஞ்சுர நினைக்கு
மவிர்கோ லாய்தொடி யுள்ளத்துப் படரே.

எ-து: இதுவுமது. பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின் கண் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

இ-ள்: வெயிலான் வெந்து துகளாகிய காட்டைக் கடந்து வந்தேமாயினும் மனமே! இனிச் செலவை யொழிவேமாக; விளங்குந் திரண்டவழகிய தொடியையுடையாள் உள்ளத்துப் பொருந்திய துன்பத்தால் அழுகின்ற கண்ணையுடையள், ஆராயப்படும் அழகுகெடக்கதிரான் அழிக்கப்படும் வெய்ய சுரத்தை நினைத்து வருந்தும், எ-று.

உம்மை - எச்சம்; ஏகாரம் - தேற்றம்; வெந்துகள் - விகாரம்; கோல் - திரட்சி என்பதை, சீவகசிந். நாமகளிலம்பகம் 180ஆம் செய்யுளுரையிற் காண்க. மெய்ப்பாடும் பயனும் அவை. (10)

இடைச்சுரப்பத்து முற்றிற்று

---

## 34. தலைவியிரங்கு பத்து

331. அம்ம வாழி தோழி யவிழிணர்க்
கருங்கான் மராஅத்து வைகுசினை வான்பூ
வருஞ்சுரஞ் செல்லுந ரொழிந்தோ ருள்ள
வினிய கமழும் வெற்பி
னின்னா தென்ப வவர்சென்ற வாறே.

*எ-து: "பெறற்கரும் பெரும்பொருள்" (கற்பியல், 9) என்னுஞ் சூத்திரத்துப் 'பிற'வாற் கொள்வது. தலைமகன் பிரிந்துழி, 'செல்லும் வழியிடத்து மலையின் உளதாகிய நாற்றத்தால் நம்மை நினைந்து முடியச் செல்வார், மீள்வரோ?' என்ற தலைவிக்கு அவர் முடியச் சென்றார் என்பதறிந்து இரங்கித் தோழி கூறியது.*

*இ-ள்: தோழி! விரிந்த விணர்களையுடைய வலிய காலையுடைய கடம்பினது சினையிலுள்ள வெள்ளிய, பூ அரிய சுரத்தைச் செல்வோர் தாம் விட்டுப் பிரிந்தோரை நினைக்கும் பொருட்டு நறுநாற்றம் வீசும் மலையின் நந்தலைவர் சென்ற வழி இன்னாமையையுடையதென்று கூறுவர், எ-று.*

*அம்ம வாழி - முன்னிலையசை; மராம் - வெண்கடம்பு என்பது 'வான்பூ' என்பதாற் பெறப்படும்; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஐயந்தீர்த்தல்.* (1)

332. அம்ம வாழி தோழி யென்னதூஉ
மறனில மன்ற தாமே விறன்மிசைக்
குன்றுகெழு கானத்த பண்பின் மாக்கணங்
கொடிதே காதலிப் பிரிதல்
செல்ல லைய வென்னா தவ்வே.

*எ-து: "அவனறிவாற்ற"வென்னும் (கற்பியல் 6ஆம்) சூத்திரத்துப் 'பல்வேறு நிலை'யாற் கொள்வது. பிரிந்த தலைமகன், 'சுரத்திடைக் கழியச் சென்றான்' என்பது கேட்ட தலைமகள் அங்குள்ள மாக்களை நொந்து தோழிக்குச் சொல்லியது.*

இ-ள்: சிறிதும் தருமமில்லாதன தாம். வலிமிக்க மலைகள் பொருந்திய காட்டின்கண்ண நற்குணமில்லாத மிருகங்கள், 'கொடுமையையுடையது காதலியைப் பிரிதல்; நீ செல்லாதே' என்று கூறுகின்றில, எ-று.

வலிய உணவினையுடைய மலைகள் பொருந்திய காட்டிடத்தவாகிய மிருகக் கூட்டம் நந்தலைவர்க்கு 'நின் காதலியைப் பிரிதல் கூடாது, ஐயனே! செல்லல்' என்னாது; ஆதலின் அவை தாம் மிகச் சிறிதும் அறமுடையவல்ல என்று கூறியவாறாம், தாமே ஏகாரம் - பிரிநிலை; கொடிதே - ஏகாரம்; தேற்றம்; கெழு - அசை; மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுதல்; (2)

333. அம்ம வாழி தோழி யாவதும்
வல்லா கொல்லோ தாமே யவண
கல்லுடை நன்னாட்டுப் புள்ளினப் பெருந்தோ
டியாஅந் துணைபுணர்ந் துறைதும்
யாங்குப் பிரிந்துறைதி யென்னா தவ்வே.

எ-து: இதுவுமது. புட்களை நொந்து சொல்லியது.

இ-ள்: தோழியே! சிறிதும் வல்லமையில்லாதன கொல்லோ? அவ்விடத்த மலைகள் பொருந்திய நல்ல நாட்டினுள்ள புள்ளினமாகிய பெருங்கூட்டம்; 'யாங்கள் எமது துணையைச் சேர்ந்திருக்கின்றனம்; நீ எப்படி நினது துணையைப் பிரிந்திருக்கின்றனை?' என்கின்றில, எ-று.

தாமே - அசை; மெய்ப்பாடும் பயனும் அவை; பாடபேதம்; வல்லர், வல்லார்; 'அவரைக் கல்லுடை', 'யென்னுமாறே'; 'என்னாவவ்வே'; 'புள்ளைநொந்து' (இது கருத்துரையில்). (3)

334. அம்ம வாழி தோழி சிறியிலை
நெல்லி நீடிய கல்காய் கடத்திடைப்
பேதை நெஞ்சம் பின்செலச் சென்றோர்
கல்லினும் வலியர் மன்ற
பல்லித முண்க ணழப்பிரிந் தோரே.

*எ-து: இதுவுமது. பிரிவு நீட ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: தோழி! சிறிய இலைகளையுடைய நெல்லி மரங்கள் நீண்ட கற்கள் காய்ந்த காட்டின்கண் அறியாமையுடைய வென்னெஞ்சு தன்பின்னே செல்ல, பலவிதழ் பொருந்திய பூப்போலும் மையுண்ட கண்ணழ, பிரிந்து சென்றோர் கல்லினும் காட்டில் மிக மனம் வலியர், எ-று.*

*பின்வருவனவற்றை யுணர்ந்து அதற்குத்தக நடவாமையின் பேதைநெஞ்சமென்றாள். "நோயுமின்பமும்" என்னுஞ் சூத்திர விதியான் நெஞ்சையுணர்வுடையது முறுப்புடையதுமாகக் கூறினாள். ஒரும் ஏயும் அசை; மெய்ப்பாடும் பயனும் அவை.* *(4)*

**335.** **அம்ம வாழி தோழி நம்வயி**
**னெய்த்தோ ரன்ன செவிய வெருவை**
**கற்புடை மருங்கிற் கடுமுடையார்க்குங்**
**காடுநனி கடிய வென்ப**
**நீடி யிவண்வருநர் சென்ற வாறே.**

*எ-து: இதுவுமது. தலைமகன் சென்ற சுரத்திடத்துக்கு கொடுமை பிறர் கூறக்கேட்ட தலைமகள் ஆற்றாது தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: தோழி! நெய்த்தோரையன்ன சிவந்த கழுகு மலையின்புடையாகிய மருங்கின்கண் மிக்க புலால் நாற்றத்தையறிந்து ஆரவாரிக்குங் காடு மிகக்கொடிய, என்பார், நம்மை விட்டுச் சென்று இவ்விடத்து வருகின்றவர் சென்றவழி, எ-று.*

*நெய்த்தோர் - இரத்தம்; மெய்ப்பாடும் பயனும் அவை.*

*(5)*

**336.** **அம்ம வாழி தோழி நம்வயிற்**
**பிரியலர் போலப் புணர்ந்தோர் மன்ற**
**நின்றதில் பொருட்பிணி முற்றிய**
**வென்றூழ் நீடிய சுரனிறந் தோரே.**

எ-து: இதுவுமது. பிரிவதற்குமுன்பு தங்களுடனவனொ ழுகிய திறம் நினைந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழி, நம்மிடத்து முன்னெல்லாம் பிரியார் போன்று புணர்ந்தவர், மிகவும் நிலையில்லாத பொருள் மேற்சென்ற விருப்பம் முடிய வெயில் நீடித்த காட்டைக் கடந்தார், எ-று.

மெய்ப்பாடு - வியப்பு; பயன் - அது. (6)

**337.** அம்ம வாழி தோழி நம்வயின்
மெய்யுற விரும்பிய கைகவர் முயக்கினு
மினிய மன்ற தாமே
பனியிருங் குன்றஞ் சென்றோர்க்குப் பொருளே.

எ-து: இதுவுமது. தலைமகள் பொருள் வயிற்பிரிந்து ழித் தன்முயக்கினும் அவற்குப் பிற்காலத்துப் பொருள் சிறந் ததெனத் தலைவியிரங்கித் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழி! நம்மாட்டு மெய்யுறும்படி விரும்பிய கைகவர் முயங்கினுங்காட்டிற் பனி பொருந்திய பெரிய மலையைக் கடந்து சென்றவருக்குத் தாந்தேடக் கருதிய பொருள் பெரிதுமினியதாம், எ-று.

தாமே - ஏகாரம் அசை; மெய்ப்பாடு - அழுகை; பயன் - அது. (7)

**338.** அம்ம வாழி தோழி சார
லிலையில மலர்ந்த வோங்குநிலை யிலவ
மலையுறு தீயிற் சுரமுதற் றோன்றும்
பிரிவருங் காலையும் பிரித
லரிதுவல் லுநர்நங் காத லோரே.

எ-து: "பல்வேறு நிலை"யாற் (கற்பியல், 6) கொள்வது, தலைமகன் பிரிந்துழி இக்காலத்தே பிரிந்தாரெனத் தலை மகள் இரங்கித் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழி! சாரலில் இலையில்லாதனவாய மலர்ந் திருக்கின்ற உயர்ந்த தோற்றத்தையுடைய இலவமரம், மலை யிற் பற்றி எரிகின்ற அக்கினி போன்று காட்டிடத்தில் தோன் றும் பிரிவரிய காலத்தினும் பிரிதல் நங்காதலர் பெரிதும் வல்லுநர், எ-று.

மெய்ப்பாடும் பயனும் அவை. (8)

339. அம்ம வாழி தோழி சிறியிலைக்
குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய
வாவ லுகக்கு மாலையு
மின்றுகொல் காதலவர் சென்ற நாட்டே.

எ-து: இதுவுமது. தலைமகன் குறித்த பருவ வரவின் கண் மாலைப்பொழுது கண்டு ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தோழி! சிறிய இலையையுடைய குறுஞ்சினை களையுடைய வேப்ப மரத்தின் நறிய பழத்தை யுண்ணுதற்கு வௌவால் உயரப் பறக்கின்ற மாலைக் காலமுமின்று கொல்? நமது காதலவர் சென்ற நாட்டின், எ-று.

'உகுக்கும்' என்பது பாடமாயின் கக்கும் எனவும், 'உவக் கும்' என்பதாயின் மகிழும் எனவும் பொருள் கொள்க. இதற்கு உணீ இய - உண்டவென்க. காதலவர் என்னுமிடத் தில் தோழியவர் என்று பாடங்கொள்ளின், முதலடியிலு ள்ள தோழி என்பது மிகையாகவிருத்தலின், காதலவர் என் னும் பாடம் சிறப்பு டைத்து. மெய்ப்பாடும் பயனும் அவை.
(9)

340. அம்ம வாழி தோழி காதல
ருள்ளார் கொன்னா மருளுற் றனங்கொல்
விட்டுச் சென்றனர் நம்மே
தட்டைத் தீயி னூரல ரெழவே.

எ-து: இதுவுமது. தலைமகன் பிரிந்துழிக் கடிதின் வரு வர் என ஆற்றியிருந்த தலைவி, அவன் நீடித்துழி ஆற்றாது தோழிக்குச் சொல்லியது.

*இ-ள்: தோழி! காதலர் நம்மைவிட்டுச் சென்றவர் நினை யார்கொன்? மூங்கிலிற் றோன்றிய தீயைப்போல ஊரின் கண் அலரெழயாம் மருளூற்றனம், எ-று.*

*நம்மே - ஏ அசை; கொன் காலத்தின் வந்தது; கொல் அசை. மெய்ப்பாடும் பயனும் அவை.* *(10)*

தலைவியிரங்கு பத்து முற்றிற்று

---

## *35. இளவேனிற் பத்து*

**341.** **அவரோ வாரார் தான்வந் தன்றே**
**குயிற்பெடை யின்குர லகவ**
**வயிர்க்கேழ் நுண்ணற னுடங்கும் பொழுதே.**

*எ-து: "பல்வேறு நிலை" (கற்பியல், சூத். 6) யாற் கொள் வது. தலைமகன் பிரிந்துழிக் குறித்த பருவம் வரக்கண்ட தலை மகள் சொல்லியது. இப்பத்திற்கும் இதுவே துறை.*

*இ-ள்: அவரோ வாரார், அவராற் குறிக்கப்பட்ட குயிற் பெடையானது தனது இனிய குரலால் ஒலியா நிற்க, நுண் மணல் நிறம் விளங்கும் நுண்ணிதாயரித்தொழுகும் நீர் குறையுங்காலந்தான் வந்தது, எ-று.*

*ஒகாரம் - இரக்கக் குறிப்பு; அறல் - அரித்தொழுகு நீர் என்பது, பாலைக்கலி 34ஆம் செய்யுளில்,*

"அலர்தாய துறைநண்ணி யயிர்வரித் தறல்வார"

*என்பதனுரையானுணர்க. அயிர் - நுண் மணல் என்பதுங் காண்க. இப்பத்திற்கும் மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற் றுதல்.* *(1)*

**342.** **அவரோ வாரார் தான்வந் தன்றே**
**சுரும்புகளித் தாலு மிருஞ்சினைக்**
**கருங்கா னுணவங் கமழும் பொழுதே.**

*இ-ள்: அவரோ வாரார், அவராற் குறிக்கப்பட்ட வண்டு கள் தேனையுண்டு மயங்கிப் பண்ணைப் பாடா நிற்கும்*

*பெரிய சினைகள் பொருந்திய கருங்கால் நுணா மரம் பூக்களலர்ந்து மணம் வீசுங்காலந்தான் வந்தது, எ-று.* *(2)*

343. அவரோ வாரார் தான்வந் தன்றே
திணிநிலைக் கோங்கம் பயந்த
வணிமிகு கொழுமுகை யுடையும் பொழுதே.

*இ-ள்: அவர் வரவில்லை, அவராற் குறிக்கப்பட்ட திணிந்த நிலையுடைய கோங்க மரங்களீன்ற அழகுமிக்க கொழுவிய அரும்புகள் மலருங் காலந்தான் வந்தது, எ-று.* *(3)*

344. அவரோ வாரார் தான்வந் தன்றே
நறும்பூங் குரவம் பயந்த
செய்யாப் பாவை கொய்யும் பொழுதே.

*இ-ள்: அவரோ வரவில்லை; அவராற் குறிக்கப்பட்ட நறுவிய பூக்கள் பொருந்திய குரவமரமீன்ற அலங்கரிக்கப் படாத குராம் பாவையைப் பொழிற்கண் விளையாட்டிற்குக் கொய்யுங் காலந் தான் வந்தது, எ-று.*

*'நறும்பூங் குரவம் பயந்து செய்யாப்பாவை; என்பதில், நறும் பூ என்பது குரவம் என்னும் முதலுக்கேற்ற அடை; "கருந் தகட் - டுளைப்பூ மருதினொள்ளிண ரட்டி" (திருமுருகாற். 27-8) என்பதில் 'கருந்தகட்டுளைப்பூ' என்பதுபோல. செய்யாப் பாவை என்பது பூ, அது பாவை போறலின் பாவை எனப்பட்டது. செய்யும் பாவையோடு வேற்றுமை தோன்றச் செய்யாப் பாவை என்றார். இதனை, வினையெதிர் மறுத்துப் பொருள் புலப்படுத்தலாகிய விபாவனையணியென்பர் அணிநூலார்.*

*குராப்பூ பாவைபோலு மென்பது, "உண்டோலுறுத்த நீயு நின் பாவையு நின்று நிலாவிடு நீள்குரவே" (திருக் கோவை. செய். 241) என்பதனாலும், "குரவலர்ப்பாவை பெற்றெடுப்ப" (தணிகைப். நாடு. செய். 57) என்பதனாலும், "தழைகெழு பாவை பலவும் வளர்க்கின்ற தண்குரவே." (இறையனாரகப். சூத். 23, உரை. உதா. செய். 185) என்பதனாலும் அறியப்படும்.* *(4)*

345. அவரோ வாரார் தான்வந் தன்றே
புதுப்பூ வதிர றாஅய்க்
கதுப்பற லணியுங் காமர் பொழுதே.

*இ-ள்: நந்தலைவரோ வாரார், அவராற் குறிக்கப்பட்ட புதிய பூக்களையுடைய புனலிக் கொடியானது பத்தலினாலே கருமணலானது கதுப்பைப்போல அழகு கொள்ளுகின்ற விரும்பப்படத்தக்க இளவேனிற்காலந்தான் வந்தது, எ-று.*

*அதிரல் - புனலிக்கொடி. கதுப்பு = கூந்தல். தாஅய் என்னுஞ் செய்தென்னெச்சம் ஏதுப்பொருட்டு. தென்றற் காற்று வீசுவதனாலும் பலவகைப் பூக்களும் மலர்ந்து நறுமணங் கமழுதலானும் மன்மதன் முடிசூடுங் காலம் அதுவாகலானும் இளவேனிலைக் காமர் பொழுதென்றார். (5)*

**346.** அவரோ வாரார் தான்வந் தன்றே
யஞ்சினைப் பாதிரி யலர்ந்தெனச்
செங்க ணிருங்குயி லறையும் பொழுதே.

*இ-ள்: நந்தலைவரோ வாரார், அவராற் குறிக்கப்பட்ட வழகிய சினையையுடைய பாதிரி மரமானது மலர்ந்ததாகச் செங்கண்ணவாய கரிய குயில் கூவுங்காலந்தான் வந்தது. எ-று.*

*(6)*

**347.** அவரோ வாரார் தான்வந் தன்றே
யெழிற்றகை யிளமுலை பொலியப்
பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே.

*இ-ள்: நந்தலைவரோ வாரார், அவராற் குறிக்கப்பட்ட அழகு பொருந்திய பெருமையுடைய இளைய முலைகள் பொலிவடைய நெற்பொரிபோலும் பூவினையுடைய புன்க மரத்தின் தளிரையப் புங்காலந்தான் வந்தது, எ-று.*

*"செந்தலைய வெண்கறைய பொரிப்பூம்புன்கு" என்றார் பிறரும். (7)*

**348.** அவரோ வாரார் தான்வந் தன்றே
வலஞ்சுரி மராஅம் வேய்ந்துநம்
மணங்கமழ் தண்பொழின் மலரும் பொழுதே.

*இ-ள்: நந்தலைவரோ வாரார், அவராற் குறிக்கப்பட்ட வல மாகச் சுழித்த வெண்கடம்பினால் அலங்கரிக்கப்பட்டு நம்முடைய நறுமணம் வீசும் குளிர்ந்த சோலை மலருங் காலந்தான் வந்தது, எ-று. (8)*

349. அவரோ வாரார் தான்வந் தன்றே
பொரி கான் மாஞ்சினை புதைய
வெரிகா லிளந்தளி ரீனும் பொழுதே.

*இ-ள்: நந்தலைவரோ வாரார், அவராற் குறிக்கப்பட்ட பொரியுங் காலையுடைய மாமரத்தின் கொம்பர் மறைய நெருப்பைக் கக்கும் இளந்தளிரை யீனுங் காலந்தான் வந்தது, எ-று. (9)*

350. அவரோ வாரார் தான்வந் தன்றே
வேம்பி னொண்பூ வுறைப்பத்
தேம்படு கிளவியவர் தெளிக்கும் பொழுதே.

*இ-ள்: நந்தலைவரோ வாரார், அவராற் குறிக்கப்பட்ட வேம்பினது ஒள்ளிய பூவுதிர இனிமையுண்டாகுங் கிளவியை யுடையவர் நம்மைத் தெளிவிக்குங்காலந்தான் வந்தது, எ-று.*

*இப்பத்திலுமுள்ள ஓகாரம் இரக்கம், ஏகாரங்கள் அசை. இவற்றிற்கு மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுதல். (10)*

இளவேனிற் பத்து முற்றிற்று

---

## *36. வரவுரைத்த பத்து*

351. அத்தப் பலவின் வெயிறின் சிறுகா
யருஞ் சுரஞ் செல்வோர் அருந்தினர் கழியுங்
காடுபின் னொழிய வந்தனர் தீர்கினிப்
பல்லித ழுண்கண் மடந்தைநின்
னல்லெழி லல்குல் வாடிய நிலையே.

*எ-து: "மரபுநிலை திரியா மாட்சிய வாகி - விரவும் பொருளும் விரவுமென்ப" (அகத்திணையியல், 45) என்பதால், பிரிந்த தலைமகன் வரவுணர்ந்த தோழி தலைமகட் குச் சொல்லியது.*

இ-ள்: காட்டுப் பலாவினது வெயில் தின்ற சிறிய காயை அரிய காட்டிடைச் செல்கின்றவர்கள் அருந்தினராய்க் கழி கின்ற காடானது பின்னே கழிய, நந்தலைவர் வந்தனராகலின் பலவிதழ்கள் பொருந்திய பூப்போலும் மையுண்ட கண்ணை யுடைய மடந்தையே! நினது நல்லழகினையுடைய வல்குல் வாடின தன்மையினித் தீர்குவாய், எ-று. மெய்ப்பாடு - பெரு மிதம்; பயன் - ஆற்றுவித்தல். (1)

352. விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோ
ரெழுத்துடை நடுக லன்ன விழுப்பிணர்ப்
பெருங்கை யானை யிருஞ்சின முறைக்கும்
வெஞ்சுர மரிய வென்னார்
வந்தனர் தோழிநங் காத லோரே.

இதுவுமது.

இ-ள்: குற்றமில்லாத தொடையையுடைய மறவர் வில்லி னின்றும் அம்பையேவுவதனால் தொலைந்தோரது பெயர் பொறிக்கப்பட்ட நடுகல்லைப் போன்ற பெரிய சருச்சரை யையுடைய பெரியகை பொருந்திய யானை, வலிய கோப மிகும் வெவ்விய சுரம் அரியவென நினையாராய்த் தோழி! நங்காதலர் வந்தனர்; வாட்டமொழிகுவாய், எ-று. 'தொலைந் தோர் எழுத்துடை நடுகல்' என்பது,

"கைவினை மாக்கள் கலுழிக்க ணோக்கிழந்து
செய்வினை வாய்ப்பவே செய்தமைத்தார் – மொய்போர்
மறவர் பிணம்பிறக்கி வாள்வாய்ந்து வீழ்ந்தோன்
பிறபெயர்சூழ் கன்மேற் பெரிது"[1]

என்பதிற்போல, யுத்தத்தினிறந்த வீரனது பெயரும் புகழும் எழுதி நடுங்கல். அவனுற்றார் இமய முதலிய புண்ணிய மலை யிற் கற்கொணர்ந்து தொழில் பெறுத்தி நட்டு அபிடேக அலங்காராதிகள் செய்து பூசித்து வாழ்தல் இயல்பு.

"என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்."[2] என்பது மிது.

'வெஞ்சுரமரிய வென்னார் வந்தனர்' என்றது, வழிய ருமை நோக்காது விரைவின் வந்தார் என்பது. மெய்ப்பா டும் பயனும் அவை. (2)

---

1. தொ. புறத்திணை. சூத்.5, உரை. 2. திருக்குறள், செய்.771.

353. எரிக்கொடிக் கவைஇய செவ்வரை போலச்
சுடர்ப்பூண் விளங்கு மேந்தெழி லகல
நீயினிது முயங்க வந்தனர்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே.

இதுவுமது.

இ-ள்: சோதிவல்லிக்கொடி சூழ்ந்த சிவந்த மலையைப் போல ஒளி பொருந்திய ஆபரணம் விளங்கும் ஏந்திய அழகை யுடைய மார்பைத் தோழி! நீ யினிதாக முயங்குதற்கு மிகப் பெரிய சோலை பொருந்திய மலையைக் கழிந்தோர் வந்த னர், எ-று. மெய்ப்பாடும் பயனுமவை. (3)

354. ஈர்ம்பிணவு புணர்ந்த செந்நா யேற்றை
மறியுடை மான்பிணை கொள்ளாது கழியு
மரிய சுரன்வந் தனரே
தெரியிழை யரிவைநின் பண்புதர விரைந்தே.

இதுவுமது

இ-ள்: அன்பினையுடைய பெண்ணாய் புணர்ந்த செந்நா யேற்றையானது, குட்டியையுடைய மான் பிணையைக் கொள் ளாதுபோம் அரிய சுரத்தைக் கடந்து விளங்குகின்ற இழையை யுடைய அரிவையே! நினது பண்பைத் தர விரைந்து வந்த னர், எ-று.

கொடுமை நினைந்து ஆற்றாளாய தலைவிக்குத் தீதின் றிய வழி வந்தாரென ஆற்றுவித்தது. மெய்ப்பாடும் பயனு மவை. (4)

355. திருந்திழை யரிவை நின்னல முள்ளி
யருஞ்செயற் பொருட்பிணி பெருந்திரு வுறுகெனச்
சொல்லாது பெயர்தந் தேனே பல்பொறிச்
சிறுகண் யானை திரிதரு
நெறிவிலங் கதர கானத் தானே.

எ-து: இதுவுமது. நினைந்த எல்லையளவும் பொருள் முற்றி நில்லாது பெற்ற பொருள் கொண்டு தலைவியை நினைந்து மீண்ட தலைமகன் அவட்குச் சொல்லியது.

இ-ள்: திருந்திய இழையையுடைய அரிவையே! யான் பிரிந்தவிடத்து நினது அழகை நினைந்து, அரிய செயலை யுடைய பொருள் மேற்கொண்ட ஆசை பெரிய செல்வத்தை யடைகுகவென்று நினைந்து, விலக்குவரெனக் கருதி நட்பி னர்க்கும் பேசாது, பல புள்ளி பொருந்திய முகபடாத்தை யுடைய சிறு கண்களையுடைய யானை திரிகின்ற குறுக்கு வழி யமைந்த வழி பொருந்திய காட்டு வழியே வந்தேன், எ-று.

'பொருட்பிணி பெருந்திருவுறுக' என்றது, குறிப்பி னால் வெகுண்டுரைத்தது. சொல்லாது பெயர் தந்தேனே என்றது நட்டோர் உடன் சென்றோருக்குச் சொல்லாமையை. செல்லாது என்றும் பாடம். ஏகாரம் - தேற்றம், பிரிநிலை; மெய்ப்பாடு - மருட்கை; பயன் - உவப்பித்தல். (5)

356. உள்ளுதற் கினிய மன்ற செல்வர்
யானை பிணித்த பொன்புனை கயிற்றி
னொள்ளெரி மேய்ந்த சுரத்திடை
யுள்ளம் வாங்கத் தந்தநின் குணனே.

எ-து: இதற்கு 324அம் செய்யுள் விதி. வினைமுற்றி மீண்டு வந்த தலைமகன் தலைவிக்கு அவள் குணம் புகழ்ந்து கூறியது.

இ-ள்: அரசர் யானை கட்டிய பொன்னாலு அலங் கரிக்கப்பட்ட கயிறுபோலும் ஒள்ளிய அக்கினி பற்றியெரிக் கப்பட்ட காட்டின்கண் யான் சஞ்சரிக்குங்கால் என்னுள் ளத்தை வாங்கும் பொருட்டுத் தந்த உன்னுடைய குணம் யாம் நினைத்தற்கு இனிய, எ-று.

எவ்வகையானுஞ் சிறத்தலின் செல்வரென்றது அரசரை. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்வித்தல். (6)

357. குரவ மலர மரவம் பூப்பச்
சுரனணி கொண்ட கானங் காணூஉ
வழுங்குக செய்பொருட் செலவென விரும்பிநின்
னங்கலிழ் மாமை கவின
வந்தனர் தோழிநங் காத லோரே.

எ-து: இதற்கு "அத்தப் பலவின்" என்னுஞ் செய்யுள் விதி கொள்க. பொருள்வயிற்பிரிந்து ஆண்டுறைகின்ற தலை மகன் குறித்த பருவ வரவுகண்டு கடிதின் மீண்டு வந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

இ -ள்: குரவ மரம் மலர, கடம்ப மரம் பூப்ப, சுரமா னது பொருந்திய காட்டைக் கண்டு மேல்வரும் பொருள் மேற்கொண்ட ஆசையான் வருஞ் செலவு கெடுவதாகவென நினைந்து நினது அழகொழுகாநின்ற அழகிய நிறம் அழகு பெறத் தோழி! நங்காதலர் வந்தனர், எ -று.

மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஆற்றுவித்தல். (7)

358. கோடுயர் பன்மலை யிறந்தன ராயினு
நீட விடுமோ மற்றே நீடுநினைந்து
துடைத்தொறுந் துடைத்தொறுங் கலங்கி
யுடைத்தெழு வெள்ள மாகிய கண்ணே.

எ-து: இதுவுமது. தலைமகளாற்றாமை கண்டு பிரிந்த தலை மகன் வந்தனனாகத் தோழி சொல்லியது.

இ-ள்: சிகரங்களுயரப்பட்ட பல மலைகளைக் கழிந்தா ராயினும் அவ்விடத்து அவரை நீட்டிக்க விடாதே, பெரிதும் அவர் பிரிந்திருத்தலை யெண்ணித் துடைக்குந்தோறும் துடைக் குந்தோறுங் கலங்கி அணையையுடைத் தெழு கின்ற வெள்ளமாகிய கண், எ-று.

ஓகாரம் - எதிர்மறை; மற்று - வினைமாற்று; அடுக்கு - மிகுதிக்கண் வந்தது; ஏகாரம் - அசை; களவுக் காலத்துக் கண் அவர்க்குச் செய்த நன்மை குறித்துக் கண்மேலேற்றி யும் தெளிவகப்படுத்தலின் பிரிந்து நீட்டியார் எனப் பிரி வின்மேலேற்றியு முரைக்க. நல்லதறிக. மெய்ப்பாடும் பயனு மவை. (8)

359. அரும்பொருள் வேட்கைய மாகிநிற் றுறந்து
பெருங்க லதரிடைப் பிரிந்த காலைத்
தவநனி நெடிய வாயின வினியே
யணியிழை யுள்ளியாம் வருதலி
னணிய வாயின சுரத்திடை யாறே.

*எ-து: மீண்டு வந்த தலைமகன் அவளைப் பிரிகின்ற காலத்துச் சுரத்துச் சேய்மையும் வருகின்ற காலத்து அதன் அணிமையுங் கூறியவாறு.*

"காமக் கிழத்தி மனையோ ளென்றிவ
ரேமுறு கிளவி சொல்லிய வெதிருஞ்
சென்ற தேஎத் துழப்புநனி விளக்கி."

*என்பது விதி. (தொ.கற்பி.சூத்.5,49 -51)*

*இ-ள்: அழகிய இழையாய்! நின்னைத் துறந்து அரிய பொருளிடத்து விருப்புடையமாகிப் பெரிய கல்லதர்க் கண்ணே பிரிந்து போங்காலத்து மிக நெடியவாயிருந்தன, யாமுள்ளியிப்போது வருதலின் மிக அணியவாயின அக் காட்டுவழி, எ-று.*

*எல்லாவற்றிலும் சிறத்தலின் அரும்பொருளெனப்பட் டது. தவநனி இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. மெய்ப் பாடு ஆக்கம் பற்றிய மருட்கை. பயன் மகிழ்வித்தல். (9)*

360. எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடை
யரிய வாயினு மெளிய வன்றே
யவவுறு நெஞ்சங் கவவுநனி விரும்பிக்
கடுமான் றிண்டேர் கடைஇ
நெடுமா னோக்கிநின் னுள்ளியாம் வரவே.

*எ-து: இதுவுமது. வினைமுற்றி மீண்டுவந்த தலைமகன் 'சுரத்தருமை நோக்காது வந்தவாறு என்னை?' என வினா விய தலைமகட்குச் சொல்லியது.*

*இ-ள்: நெடிய மான்நோக்குப்போலும் நோக்கினை யுடையாளே! ஆசைபொருந்திய நெஞ்சம் முயங்குதலை மிக விரும்பி, விசையினையுடைய குதிரைபூண்ட தேரைச் செலுத்தி நின்னை நினைத்து யாம் வர அக்கினி கைக் கொண்டு உண்ட வெயில் பொருந்திய நீண்டவழி அருமை யுடையவாயினும் அது நமக்கு எளிமையுடைய, எ-று.*

"கவவுக்கை விடப்பெறும் பொருட்டிறத்து
அவவுக்கை விடுத லதுமனும் பொருளே."

*(கலித்தொகை, செய்.14)*

என்பதிற்போல அவவு என்பது ஆசை, அவா. அன்றே அசை. உம்மை எதிரது தழீஇய வும்மை. 'கவவுநனி விரும்ப' என்றும் பாடம். மெய்ப்பாடும் பயனும் அவை. (10)

வரவு ரைத்த பத்து முற்றிற்று

---

## 37. முன்னிலைப் பத்து

361. உயர்கரைக் கான்யாற் றவிர்மண லகன்றுறை
வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்
தொடலை கைஇய மடவரன் மகளே
கண்ணினுங் கதவ நின்முலையே
முலையினுங் கதவநின் தடமென் றோளே.

எ-து: "ஒன்றாத் தமரினும்" என்னுஞ் சூத்திரத்து "அப் பாற்பட்ட வொருதிறத் தானும்" (அகத்திணை சூ.41) என்பதால், புணர்ந்துடன் போகிய தலைமகன் இடைச்சுரத்துக் கண் விளையாட்டு வகையாற் பூத்தொடுக்கின்ற தலைமகளைக் கண்டு புகழ அவள் அதற்கு நாணிக் கண்புதைத்த வழிச் சொல்லியது.

இ-ள்: உயர்ந்த கரைபொருந்திய கான் யாற்றின் விளங்குகின்ற மணல்பொருந்திய அகன்ற துறைக்கண்ணே வேனிற் காலத்துப் பாதிரி மலரைக் குவித்து அதனால் தொடலை தொடுக்கும் மடப்பந்தோன்றுதலையுடைய பெண்ணே! கண்ணினுங் கோபத்தை உடைய நினது முலை, அம்முலையினுங் கோபத்தை உடைய நினது பெரிய மெல்லிய தோள்கள், எ-று.

உம்மைகள் உயர்வு சிறப்பு. முலையே ஏகாரம் பிரிநிலை. தோளே ஏகாரம் தேற்றம். 'உயரறல்' என்றும் 'அவிரறல்' என்றும் பாடம். மெய்ப்பாடு நகை. பயன்உவகை. (1)

362. பதுக்கைத் தாய வொதுக் கருங் கவலைச்
சிறுகண் யானை யுறுபகை நினையா
தியாங்குவந் தனையோ பூந்தார் மார்ப

வருள்புரி நெஞ்ச முய்த்தர
விருள்பொர நின்ற விரவி னானே.

*எ-து: "பெறற்கருங் பெரும்" என்னுஞ் சூத்திரத்துப் 'பிற'வாற்கொள்வது. சேணிடைப் பிரிந்த தலைமகன் இடை நிலத்துத் தங்காது இரவின்கண் வந்துழித் தோழி சொல்லியது.*

*இ-ள்: பருக்கைக் கற்கள் பரந்த ஒதுக்கிடமரிதாய கவர்த்த வழிக்கண் சிறிய கண்ணையுடைய யானையது பகையாகிய புலி ஏதஞ் செய்யுமென்பதை நினையாது எவ் விதம் வந்தாயோ? பூவாலாய மாலைபொருந்திய மார்பனே! நமக்கு அருள்புரியு நெஞ்சு செலுத்த இருள் செறிய நின்ற இரவின்கண், எ-று.*

*ஆனுருபு ஏழாவதன் பொருட்கண் வந்தது. "பரத்தை யிற் பிரிந்த காலையான" (கற்பியல். 46) என்றாற் போல. 'பதுக்கை தாய' எனவும், 'முயாத்தர' எனவும் பாடம்; ஓகாரம் - வினா; மெய்ப்பாடு - அச்சம்; பயன் - வரைவுகடாவல். (2)*

363. சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்
கொலைவ லெயினர் தங்கைநின் முலைய
சுணங்கென் நினைதி நீயே
யணங்கென நினையுமென் னணங்கு நெஞ்சே.

*எ-து: இதற்கு 361ஆம் செய்யுள் விதி கொள்க. புணர்ந் துடன் போகின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தலை மகளை நலம் பாராட்டியது.*

*இ-ள்: சிலையாகிய வில்லும் பகழியும் செவ்விய துவ ராடையுமுடைய கொலைத்தொழில் வல்ல எயினரது தங்கையே! நின்னுடைய முலையிடத்தன சுணங்கென்று நினைக்கின்றாய் நீ, என்னுடைய வருந்துகின்ற நெஞ்சம் தெய்வமெனக் கருதும், எ-று.*

*ஏகாரம் - பிரிநிலை; 'கொலைவிலெயினர்' என்றும் பாடம். உள்ளுறையுணர்க. மெய்ப்பாடு - உவகை; பயன் மகிழ்வித்தல். (3)*

364. முளமா வல்சி யெயினர் தங்கை
யிளமா வெயிற்றிக்கு மிந்நிலை யறியச்
சொல்லினே னிரக்கு மளவை
வெள்வேல் விடலை விரையா தீமே.

*எ-து: "தலைவரும் விழுமம்" (அகத்திணை. சூத். 39) என்னுஞ் சூத்திரத்து "போக்கற் கண்ணு" மென்பதால், உடன் போக்கு நயந்த தலைமகன் அதனைத் தோழிக்குணர்த்த அவள் முடிப்பாளாய்ச் சொல்லியது.*

*இ-ள்: முட்பன்றியூனை உணவாகவுடைய எயினரது தங்கையாகிய இளமை பொருந்திய அழகிய எயிற்றிக்கும் நீர் உடன்போக்கு நயந்த தன்மையைச் சொல்லி உடன்படுவித்து வருங்காறும் வெற்றி பொருந்திய வேலையுடைய விடலையே! விரையாதே, எ-று*

*முளமா - முட்பன்றியாதல். "மோழலம் பன்றியோடு முளவு மாக் காதி யட்ட"[1] என்பதனாலறிக. எயிற்றிக்கும் - உம்மை எச்சம்; 'எயிற்றிக்கு நின்னிலை' என்றும் பாடம். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - உடன்போக்கு நயத்தல். (4)*

365. கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பு
நலமா ணெயிற்றி போலப் பலமிகு
நன்னல நயவர வுடையை
யென்னோற் றனையோ மாவின் றளிரே.

*எ-து: "பண்பிற்பெயர்ப்பினும்" (களவியல், 12) என்னுஞ் சூத்திரத்து "ஆற்றிடையுறுதலும்" என்பதையிரட்டுற மொழிதலாற் கொள்வது. வரைவிடை வைத்துப் பிரிந்து மீள்கின்றான். இடைச் சுரத்துக் குழைத்த மாவின் றளிர் கண்டு சொல்லியது.*

*இ-ள்: கூட்டமாகிய மிருகங்களைக் கொன்று தமையன்மார் கொடுத்த நிணமமைந்தவூனாகிய உணவில் படியும் பறவைகளை யோப்பும் நல்ல மாட்சிமையுடைய எயிற்றியைப்*

1. சீவகசிந். பதுமை. 68.

போல், பலம் மிகுந்த நல்ல அழகு விருப்பம் வருதலையுடையை; யாது தவஞ் செய்தாயோ? மாவினது தளிரே! எ-று.

ஓகாரம் - வினா; 'நிணவூண்' என்றும் 'அலமா லெயிற்றி போல நலமிக' என்றும் பாடம். இதனைப் போகின்றான் கூறியதென்பார் நச்சினார்க்கினியர் மெய்ப்பாடு - மருட்கை; பயன் - பாகன்விரையக்கடாவல், போகின்றானாயின் ஆற்றுதல். (5)

**366.** அன்னாய் வாழிவேண் டன்னை யென்றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயி னென்னதூஉ
மறிய வாகுமோ மற்றே
முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே.

எ-து: "நாற்றமுந் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்து "முன்னிலை யறனெனப் படுதெலன் றிருவகைப் - புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்" என்பதால், தலைமகளை நோக்கி இவ்வேறுபாடு எற்றினானாயிற்றென்று வினாவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.

இ-ள்: அன்னையே! வாழி, பிரார்த்திக்கின்றேன்; அன்னாய்! என் தோழி இப்போது பசப்புற்றாள் பெரிதாகவென்று சிவந்த கண்ணை, அச்சமுண்டாகச் செலுத்துவாயாயின் சிறிதும் அதனை யாம் அறிய முடியுமோ; முன் தளிர் பொருந்திய பூங்கொத்தினையுடைய கோங்கினாலாய தன்மை.

இது முன்னாள் அவன் தந்த கோங்கம்பூவால் விளைந்ததெனப் பூத்தருபுணர்ச்சி கூறியவாறு. இது கருப்பொருளாற் பாலை. ஓகாரம் - எதிர்மறை; மற்று - வினைமாற்று; ஏகாரம் - அசை; அறத்தொடு நிலை ஏதீடு. (பொருளியல், 13). 'அரியவாகுமோ', 'பயந்தமார்பே' என்றும் பாடம்; மெய்ப்பாடு - பெரு மிதம்; பயன் - களவு வெளிப்படுதல். (6)

**367.** பொரியரைக் கோங்கின் பொன்மருள் பகுவீ
விரியிணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி
விரவுமல ரணிந்த வேனிற் கான்யாற்றுத்

தேரொடு குறுக வந்தோன்
பேரொடு புணர்ந்தன் றன்னையிவ ளுயிரே.

எ-து: இதுவுமது. நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

இ-ள்: பொரிந்த அரையையுடைய கோங்கினது பொன் போலும் பசிய பூவை விரிந்த இணரையுடைய வேங்கையது பூவோடு வேறுபடச் சூடிப் பரந்த மலரணிந்த வேனிற்கண் கான்யாற்றிடத்தில் யாம் அழுந்துழித் தேரொடு குறுக வந்தவன் பெயரோடு கலந்தது இவளுயிர், அன்னையே! எ-று.

அறத்தொடுநிலை ஏதீடு. இது, "முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து - நல்லியல் பிழந்து நடுங்குதுயருறுத்துப் - பாலையென்பதோர் படிவங்கொள்ளும்" (சிலப். காடுகாண். 64-6) என்பதற்கியையக் குறிஞ்சிக் கருப்பொருளாகிய வேங்கையும் முல்லைக் கருப்பொருளாகிய கான்யாறும் பாலையின் முதற் பொருள் கருப்பொருளாகிய வேனிலுங் கோங்குங் கூறியிருத்தல் காண்க. இது காலத்தாற் பாலை. வேங்கைப்பூக் கூறியதால் இவளைக் கூடியுளன் என்றும் கோங்கம்பூக் கூறியதால் பிரிந்திருக்கின்றானென்பதுங் கூறியவாறு.

'கான்யாற்றுத் தேரொடு குறுக வந்தோன்' என்றது, கான்யாற்றில் யாங்கள் அழுந்துழிக் குறுக வந்தோன் என்றவாறு. எனவே புனறருபுணர்ச்சி கூறியவாறு. 'பேரொடு புணர்ந்தன்று இவளுயிர்' என்றது, அன்றுதொட்டு இவளுயிர் இன்னான் தந்த உயிரென அவன் பேரோடு பட்டது என்றாவாறாம். ஒடு - உடனிகழ்ச்சி; மெய்ப்பாடும் பயனும் அவை.

(7)

368. எரிப்பூ விலவத் தூழ்கழி பன்மலர்
பொரிப்பூம் புன்கின் புகர்நிழல் வரிக்குந்
தண்பத வேனி லின்ப நுகர்ச்சி
யெம்மொடு கொண்மோ பெருமநின்
னம்மெ லோதி யழிவில ளெனினே.

எ-து: "வருத்த மிகுதி சுட்டுங் காலை - யுரித்தென மொழிப வாழ்க்கையு ளிரக்கம்" (பொருளியல், 32) என்ப தால், 'வேனிற் காலத்து நும்மொடு விளையாட்டு நுகரவரு வல்' என்று பருவங் குறித்துப் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

இ-ள்: எரிபோலும் பூவையுடைய இலவமரத்து மலர்ந்து வாடியுதிர்ந்த பல பூக்கள், பொரிபோலும் பூவையுடைய புன்கின் குற்றமமைந்த நிழலிற் கோலஞ் செய்யும் தண்ணிய பதத்தையுடைய வேனிற்காலத்து விளையாட்டாகிய இன்ப நுகர்ச்சியை எம்மோடு கொள்வீராமின், பெரும! நினது அழகிய மெல்லிய கூந்தலையுடையாள் நீ வருந்து ணையும் ஆற்றியுளளாயின். எ-று. மோ - அசை; மெய்ப் பாடு - பெருமிதம்; பயன் - செலவழுங்குவித்தல். (8)

369. வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழின்
முளைநிரை முறுவ லொருத்தியொடு நெடுநற்
குறிநீ செய்தனை யென்ப வலரே
குரவ நீள்சினை யுறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே.

எ-து: "அவனறிவாற்றவறியும்" (கற்பியல், 6) என்னுஞ் சூத் திரத்துப் "பல்வேறு நிலை"யாற் கொள்வது. பரத்தை யொருத்தியுடன் பொழிலகத்துத் தங்கி வந்த தலைமகன் தலைமகள் வினாவியவழி, 'யாரையும் அறியேன்' என்றா னாக அவள் கூறியது.

இ-ள்: செழித்த மலர் நெருங்கிய வண்டுகளொலிக் கின்ற பொழிலின்கண் முளைபோலும் நிரைந்த பற்களை யுடைய ஒருத்தியோடு முன்னாளின் தங்கி விளையாடினை யென்று கூறுவார், அக்கூற்றாகிய அலர் குரவினது நீண்ட சினைக்கண் தங்கும் வேனிற் பருவத்திற்குரிய குயிலினது ஒலியினும் பெரிது, எ-று.

ஏகாரம் - பிரிநிலை; ஒடு - உடனிகழ்ச்சி; இது பாலைக் குரிய வேனிற்கண் நிகழுங் குரவுங்குயிலுங் கூறுதலிற் பாலை யாயிற்று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின்மறுத்தல். (9)

370. வண்சினைக் கோங்கின் தண்கமழ் படலை
யிருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப
நீநயந் துறையப் பட்டோள்
யாவ ளோவெம மறையா தீமே.

*எ-து: இதுவுமது. பரத்தையொருத்திக்குப் பூவணிந் தான் என்பது கேட்ட தலைமகள், அஃதில்லையென்று மறைத்த தலைமகற்குக் கூறியது.*

*இ-ள்: வளவிய சினையையுடைய கோங்கம் பூவாலாய குளிர்ந்த வாசனையுடைய மாலையைக் கரிய சிறகை யுடைய வண்டுக் கூட்டம் மொய்க்கவணிந்த நீ விரும்பித் தங்கியவள் யாவளோ? மறையாதே, சொல். எ-று.*

*இது பாலைக்குரிய கருப்பொருளாகிய கோங்கு கூறின மையிற் பாலையாயிற்று. ஓகாரம் - விழைவு; மெய்பாடும் - பயனுமவை. (10)*

முன்னிலைப் பத்து முற்றிற்று

---

## *38. மகட்போக்கியவழித் தாயிரங்கு பத்து*

371. மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலு
முயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்
சுரநனி யினிய வாகுக தில்ல
வறநெறி யிதுவெனத் தெளிந்தவென்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே.

*எ-து*

தன்னு மவனு மவளுஞ் சுட்டி
மன்னு நிமித்த மொழிப்பொருள் தெய்வ
நன்மை தீமை யச்சஞ் சார்தலென்
றன்ன பிறவு மவற்றொடு தொகைஇ
முன்னிய கால மூன்றுடன் விளக்கித்
தோழி தேஎத்துங் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலு
மாகிய கிளவியு மவ்வழி யுரிய (அகத்திணை 36)

என்பதால் தலைமகன் தலைமகளை உடன்கொண்டு சென்றுழி மகட்போக்கிய நற்றாய் நெஞ்சொடு சொல்லியது.

இ-ள்: வீரர் பறை முழக்கினால் மயில்களாடா நிற்கும் மிகவுயர்ந்த மலையினுண்டாகிய மேகங்கள் மழையைச் சொரிந்து வழி பெரிதுமினிமையுடையவாகுக, கற்பு நெறி யிதுவென்று தெளிந்த பிறைபோலும் நுதலையுடைய எனது சிறுமகள் சென்ற காடு, எ-று.

தில்ல - விழைவு. 'தாயிரங்கிய பத்து' என்றும், 'தாயிரங்குப் பத்து' என்றும் பாடம்; 'கொட்டு மஞ்ஞை' எனவும் பாடம்.

அறநெறி இதுவெனதெளிந்த என் மகளென்று தாய் கூறவே, உடன்போக்குத் தருமமென்று மகிழ்ந்து கூறி எதிர் காலத்தை நோக்கி நன்மை குறித்து நெஞ்சோடு கூறிய வாறு காண்க, மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஆற்றுதல்.

(1)

372. என்னு முள்ளினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொ
டழுங்கன் மூதூ ரலரெழச்
செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே.

எ-து: "தன்னுமவனும்" என்னுஞ் சூத்திரத்து 'அன்ன பிறவு' மென்பதால், தலைமகள் உடன்போயவழித்தாய் என்னை நினைப்பாளோ என இரங்கிக் கூறியது.

இ-ள்: தன்னெஞ்சு பொருந்தும்படி தெளிவித்த வஞ்சினத்தையுடைய காலையுடன், இரக்கத்தையுடைய மூதூரிடத்து அலரெழ வளவிய பல மலைகளைக் கடந்த எனது மகள் என்னை அங்கு நினைப்பாளோ? எ-று.

தன்னை என்றது தலைவியை. சொன்னவண்ணஞ் செய்து முடிப்பது வஞ்சினம். ஒடு - உடனிகழ்ச்சி, இனி, இரக்கத் தையுடைய மூதூரில் அலர் எழ வளவிய பல மலைகளைக் கடந்து சென்றவெனது மகள் தன் நெஞ்சு யாரையு; நினை யாமல் தன்னை நினைக்கும்படி தெளிவித்த காளையோடு என்னையும் நினைப்பாளோ என்றும் உரைக்கலாம். இதில்

தன்னை என்றது தலைவனை; ஒடு எண்ணொடு, மாதாவை மறக்கப்படாதென்பதால் தன்னை விதந்து கூறினாள். மெய்ப்பாடு -அவலம்; பயன் - ஆற்றாமை நீங்குதல். (2)

373. நினைத்தொறுங் கலிழு மிடும்பை யெய்துக
புலிக்கோட்பிழைத் தகவைக்கோட்டுமுதுகலை
மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும்
வெஞ்சுர மென்மக ளுய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே

எ-து: இதுவும் முற்சூத்திரத்து அச்சங் கூறியது. தலைமகளைத் தலைமகன் கொண்டு தலைக்கழிந்த கொடுமை நினைந்து நற்றாய் கூறியது.

இ-ள்: புலியாற் கொலையாதலைத் தப்பிய கவைத்த கோட்டையுடைய முதிய கலையானது தனது பிணைமான் அணைய ஆண் குரலால் விளிக்கும் வெய்யசுரத்தில் எனது மகளைக் கொண்டுசென்ற புதுமையார்ந்த வலிய வில்லையுடைய விடலையது தாய் யான் என் மகளை நினைக்குந்தோறும் அழுகின்ற துயரத்தை அடைவாளாக, எ-று.

தீமையையும் அச்சத்தையும் தன்னெஞ்சொடு விளக்கிக் கூறியவாறு. இவட்காக யான் பட்ட துயரம் அவன்றாயும் படவேண்டும் என்றவாறுமாம். மெய்ப்பாடு அச்சத்தைச் சார்ந்த வெகுளி; பயன் - அது. (3)

374. பல்லூழ் நினைப்பினு நல்லென் றூழ
மீளி முன்பிற் காளை காப்ப
முடியகம் புகா அக் கூந்தலள்
கடுவனு மறியாக் காடிறந் தோளே.

எ-து: இதுவும் முற்சூத்திரத்து 'அன்ன பிற'வாற் கொள்வது. தலைமகள் உடன் போயவழி அவளிளமை நினைந்து இரங்கித் தாய் கூறியது.

இ-ள்: பலமுறை நினைப்பினும் மிக்க வலியுடைய காளை காப்ப முடியகம்புகாத கூந்தலையுடையாள் உலாவுந்

*தொழில் வல்ல குரங்கும் போயறியாத மரங்கள் செறிந்த நல்ல கோடை பொருந்தியவாய காடிறந்தாள், எ-று.*

*காலகுருகு என்றாற்போல என்றூழ காடு என்க. என் றூழ் = கோடை. 'மீளிமுன்பின்' என்றது 'வலிமுன்பின்' என்றாற் போல; மெய்ப்பாடு - அழுகை; பயன் - அது.* (4)

**375.** **இதுவென் பாவை பாவை யிதுவென்**
**னலமரு நோக்கி னலம்வரு சுடர்நுதற்**
**பைங்கிளி யெடுத்த பைங்கிளி யென்றிவை**
**காண்டொறுங் காண்டொறுங் கலங்க**
**நீங்கின ளோவென் பூங்க ணோளே.**

*எ-து: இதுவும் மேலைச் சூத்திரத்துக் "கண்டோர் பாங் கினும்" என்பதால், சேரியும் அயலுந்தேடிக் காணாது வந்தா ரைக் கண்டு தலைமகள் தாய் சொல்லியது.*

*இ-ள்: இது என்னுடைய பாவைபோல்வாளது விளை யாட்டுக்குரிய பாவை, இது என்னுடைய சுழலுநோக்கம மைந்த இன்பம் வருதற்கேதுவாய் ஒளி பொருந்திய நுதலை யுடைய பசிய கிளியினது வசனம் போலும் வசனமடை யாள் எடுத்த பசிய கிளி, என்று சொல்லி இவையிற்றை நான் காணுந்தோறுங் காணுந்தோறுங் கலங்க, பூப்போ லுங் கண்ணாள் என்னை விட்டு நீங்கினளோ? எ-று.*

*பாடபேதம்:-*

**இதுவென் பாவைக் கினிய நன்பாவை**
**யிதுவென் பைங்கிளி யெடுத்த பைங்கிளி**
**யிதுவென் பூவைக் கினிய சொற்பூவையென்**
**றலம்வரு நோக்கி னலம்வரு சுடர்நுதல்**
**காண்டொறுங் காண்டொறுங் கலங்கி**
**நீங்கின ளோவென் பூங்கணோளே.**

*இ-ள்: இது என்னுடைய விளையாட்டிற்குரிய பாவை போல்வாளது இனிமையைத் தருமழகிய பாவை, இது என் பைங்கிளிபோல் வாளெடுத்து வளர்த்த பசிய கிளி, இது என் பூவைக்கு இனிமையைத் தரும் சொல்லையுடைய நாகண வாய் என்று சொல்லிச் சுழலும் நோக்கினாள் காணுந்தோறுங்*

காணுந்தோறும் கலங்கியிரங்க, இன்பம் வருதற்கேதுவாய வொளி பொருந்திய நுதலையுடைய பூப்போலுங் கண்ணினாள் என்னை விட்டு நீங்கினாளோ? எ-று.

இரண்டினும் ஒகாரம் இரக்கம். கலங்கி என்பதைக் கலங்க வெனினுமாம். கலங்கி என்பதைத் தலையிமேலாக்கிச் சுரத்திற் காணுமிவைகளைத் தான் வைத்திருந்தவற்றிற் கினியவாக நினைந்து கலங்கிச் சென்றாளோவென அவள் செயலைத் தாய் நினைந்து சொன்னாளெனினுமாம். அடுக்கு மிகுதிக்கண் ணது. என்று வினைப்பொருளின் வந்தது. பாவை - சுரத்தின் குராம்பாவை; தலைமகள் - காணுதல். மெய்ப்பாடும் பயனும் அவை. (5)

376. நாடொறுங் கலிழு மெனினு மிடைநின்று
காடுபடு தீயிற் கனலியர் மாதோ
நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்
பூப்புரை யுண்கண் மடவரற்
போக்கிய புணர்த்த வறனில் பாலே.

எ-து: இதுவும் மேலைச்சூத்திரத்து 'தீமை' என்பதால் தலைமகள் போயவழி நற்றாய் விதியை வெகுண்டு சொல்லியது.

இ-ள்: இன்பத்தையுடைய நெடிய நகரினுள்ளார் கல்லெனக் கலங்க, பூப்போலும் மையுண்ட கண்ணையுடைய மடவரலைக் காட்டின்கண் போக்கும்படி செய்த தீவினையானது, என் மகளையில்லாது நாடொறும் அழுமெனினுங் காட்டினிடையே நின்று காட்டினுண்டாகுந் தீயைப் போலக் கொதிப்ப தாக, எ-று. மாதோ - அசை; உம்மை - எச்சம்; மெய்ப்பாடும் பயனும் அவை. (6)

377. நீர்நசைக் கூக்கிய வுயவல் யானை
யியம்புணர் தூம்பி னுயிர்க்கு மத்தஞ்
சென்றனண் மன்றவென் மகளே
பந்தும்பாவையுங் கழங்குமெமக் கொழித்தே.

*எ-து: இதுவும் மேற்சூத்திரத்து 'அன்னபிறவு' மென்பதால், தலைமகள் உடன்போயவழி அவள் பந்து முதலாகிய கண்ட நற்றாய் கலங்கிச் சொல்லியது.*

*இ-ள்: நீர்வேட்கைக்கு மேற்கொண்ட வருத்தமுடைய யானை, நெடுவங்கியம் என்னும் வாத்தியம்போல நெட்டுயிர்ப் புக் கொள்ளுங் காட்டின்கண், என் மகள் தனது பந்தையும் பாவையையும் கழங்கையும் எமக்கு விட்டுச் சென்றனளே, எ-று.*

*'இயம்புணர் தூம்பு' என்பது "கண்ணிடை விடுத்த களிற் றுயிர்த் தூம்பின்"[1] என்பதனுடையானு முணரப்படும். நசைக்கு - நான்காவது அதன்பொருட்டாதற்கண் வந்தது. மன்ற - தேற்றுப் பொருளின்கண்ணது; ஏகாரம் - அசை நிலை; உம்மை - எண்ணும்மை; மெய்ப்பாடும் பயனும் அவை. (7)*

378. செல்லிய முயலிப் பாஅய சிறகர்
வாவ லுகக்கு மாலையாம் புலம்பப்
போகிய வவட்கோ நோவேன் றேமொழித்
துணையிலள் கலிழு நெஞ்சி
னிணையே ருண்க ணிவட்குநோ வதுவே.

*எ-து: இதுவும் மேலைச் சூத்திரத்து "தோழிதேஎத் தும்" என்பதால், தலைமகள் உடன்போயவழி அவள் தோழி யாற்றாமை கண்ட நற்றாய் சொல்லியது.*

*இ-ள்: போதற்கு முயன்று பரந்த சிறகினையுடைய வாவல் உயரப் பறக்கும் மாலைக்காலத்தின் யாம் வாடச் சென்ற அவள் மேற்கொண்ட காதல் காரணமாக நான் நோவா நின்றேன், தேன்போலும் மொழியினையுடையாளைத் துணையிலளாய கலிழ்கின்ற நெஞ்சினையுடைய இவட்கும் ஒத்தவழகிய மையுண்ட கண் வருந்தா நிற்கின்றது, எ-று.*

*சிறகர் - அர் ஈற்றுப்போலி; கு முன்னது காதல், பின்னது நட்பு; ஏகாரம் - பிரிநிலை; பிரிந்தகாலத்துத் துயருறுத் தலின் தேமொழியென்றாள். "ஆர்ந்தார்வாயிற் றேனும் புளிக்கும்" என்ப. மெய்ப்பாடும் பயனும் அவை. (8)*

---

1. மலைபடுகடாம், 6.

379. தன்னம ராயமொடு நன்மண நுகர்ச்சியி
னினிதாங் கொல்லோ தனக்கே பனிவரை
யினக்களிறு வழங்குஞ் சோலை
வயக்குறு வெள்வே லவற்புணர்ந்து செலவே.

*எ-து: இதுவும் மேற்சூத்திரத்து "அவ்வழியாகிய கிள வியுமுரிய" என்பதால், புணர்ந்துடன் போகியவழித் தோழி யறத்தோடு நிற்பக்கேட்ட நற்றாய், 'அதனை முன்னேயறி வித்து நாம் மணம் புணர்த்த ஒழுகாது போயினள்' என நொந்து சொல்லியது.*

*இ-ள்: தன்னை விரும்பி ஒழுகும் ஆயத்தோடு செய்யும் நல்ல மணத்தினும் மற்று மனுபவங்களினும் இனிமை யுடையது கொல்லோ அவட்கு? பனி பொருந்திய மலைக் கண் கூட்டமாகிய யானைகள் சஞ்சரிக்குஞ் சோலையின் விளங்குதலுற்ற வெள்ளிய வேலையுடைய தலைவனைக் கூடிச் செல்கின்றது, எ-று.*

*ஒடு - உடனிகழ்ச்சி; கொல்லோ - ஐயவினா; ஏகாரம் - பிரி நிலை; மெய்ப்பாடு - மருட்கை; பயன் - அது. (9)*

380. அத்த நீளிடை யவனொடு போகிய
முத்தேர் வெண்பன் முகிழ்நகை மடவர
றாய ரென்னும் பெயரே வல்லா
றெடுத்தேன் மன்ற யானே
கொடுத்தோர் மன்றவவ ளாயத் தோரே.

*எ-து: "எஞ்சி யோர்க்கு மெஞ்சுத லிலவே" (அகத் திணை. 42) என்பதால், தலைமகள் உடன்போயவழித் தெருட்டு வார்க்குச் செவிலித்தாய் சொல்லியது.*

*இ-ள்: காட்டின் நீண்ட வழியிடத்துத் தலைவனோடு சென்ற முத்துப் போலும் வெண்பல்லுத் தோன்றும் நகை யையுடைய மடப்பந் தோன்றுதலை யுடையாளது தாயர் என்று கூறும் பெயரே வல்ல வண்ணம் எடுத்தேன் மிக யான், பெரிதும் அப்பெயரைக் கொடுத்தவர்கள் அவளின் ஆயத்தோர், எ-று.*

ஒடு - உடனிகழ்ச்சி; ஏர் - உவமவுருபு; "துளி தலைத் தலை இய மணியேரைம்பால்"[1] என்றாற்போல. பெயரே ஏகாரம் - தேற்றம்; யானோஏகாரம் பிரிநிலை. 'தாயளென் னும் பெயரேனல்லாறு' என்றும் பாடம். மெய்ப்பாடு - அழுகை; பயன் ஆற்றுதல். (10)

மகட்போக்கியவழித் தாயிரங்கு பத்து முற்றிற்று

---

## 39. உடன்போக்கின்கண் இடைச்சுரத்துரைத்த பத்து

**381.** **பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து**
**செங்கான் மராஅத்த வரிநிழ லிருந்தோர்**
**யார்கொ லளியர் தாமே வார்சிறைக்**
**குறுங்கான் மகன்றி லன்ன**
**வுடன்புணர் கொள்கைக் காத லோரே.**

எ-து: "பொழுதுமாறும்" (அகத்திணை. 40) என்னுஞ் சூத்திரத்து "சேய்நிலைக் ககன்றோர் செலவினும்" என்ப தால், உடன்போக்கின்கண் இடைச்சுரத்துக் கண்டோர் சொல்லியது.

இ-ள்: நெல்லியின் பசிய காயைப் பலவின் காயுடனே உண்டு செய்யதண்டையுடைய வெண்கடம்பினவாய அழ கிய நிழலில் இருந்தோர் யார்கொல்? அன்புடையாரிற் றாமே யன்புடையர், நீண்ட சிறகினையுடைய குறுகிய காலையுடைய மகன் றிலையொக்கும் ஈருடம்பிலோருயிர் கலந்தன்மைக் காதலர், எ-று.

கொல் - ஐயம்; தாமே - ஏகாரம் பிரிநிலை; பலாக்கா யுண்டல் "அத்தப் பலவின் வெயிறின் சிறுகா - யருஞ்சுரஞ் செல்வோர் அருந்தினர் கழியும்"[2] என்பதானறிக. 'அகன்றில்' என்றும் பாடம். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - மகிழ்தல். (1)

---

1. அகம், செய்.8, 15.
2. இந்நூல், செய்.351.

382. புள்ளொலிக் கமர்த்த கண்ணள் வெள்வேற்
றிருந்து கழற்காளையொ டருஞ்சுரங் கழிவோ
ளெல்லிடை யசைந்த கல்லென் சீறூர்ப்
புனையிழை மகளிர்ப் பயந்த
மனைகெழு பெண்டிர்க்கு நோவுமார் பெரிதே.

*எ-து: இதுவுமது. தலைமகள் இடைச்சுரத்தினது ஊரின் கண் எல்லிடைத் தங்கியவழி, அவ்வூர்ப் பெண்டிர் பார்த்து இரங்குதல் கண்டார் சொல்லியது.*

*இ-ள்: பறவைகளின் ஒலிக்குத் தன்னியல்பின் வேறு பட்ட கண்ணளாய வெள்ளிய வேலையுடைய திருத்தமுற்ற கழலையுடைய காளையுடனே அரிய காட்டைக் கடந்தவள் பகற்கண் தங்கிய ஒலிபொருந்திய சீறூரின் அலங்கரிக்கப் பட்ட இழையணியும் மகளிரைப் பெற்ற மனைக்கண் வாழும் பெண்டிர்க்கு நோய் பெரிது, எ-று.*

*கெழுவும் மாரும் - அசை; மெய்ப்பாடு - அது; பயன் உடன் போக்குத் தகாதெனல். (2)*

383. கோட்சுரும் பரற்று நாட்சுரத் தமன்ற
நெடுங்கான் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி
வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு நின்ற
மள்ள னுள்ள மகிழ்கூர்ந் தன்றே
பஞ்சாய்ப் பாவைக்குந் தனக்கு
மஞ்சாய் கூந்த லாய்வது கண்டே.

*எ-து: இதுவுமது, உடன்போகிய தலைமகள் தலை மகன் வளைத்த கொம்பிற்பூக்கொண்டு தனக்கும் பாவைக் கும் வகுக்கக் கண்டார் கூறியது.*

*இ-ள்: தேனைக்கொள்ளும் வண்டுக ளொலிக்கின்ற காலையில் காட்டின்கண்ணவாய மிக நெடிய காலையுடைய கடம்பின் குறிய சினையைப் பற்றி வலமாகச் சுரித்த வெள்ளிய பூங்கொத்தைக் கொய்தற்குக் கொடுத்து நின்ற வீரனது மன மகிழ்ச்சி மிகுந்தது, ஐந்து வகையான ஆராய்ந்து முடிக்குங்*

கூந்தலையுடையாள் தனக்கும் பசிய தண்டான்கோரை யாற் செய்த பாவைக்கும் வகுத்தலைக் கண்டு, எ-று.

அஞ்சாய் கூந்தல் - அன்மொழி; ஏகாரம் - தேற்றம்; 'ஆய்வதுகொண்டே' என்றும் பாடம். மெய்ப்பாடு - உவகை; பயன் மகிழ்தல். (3)

**384.** **சேட்புல முன்னிய வசைநடை யந்தணிர்**
**நும்மொன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்**
**யாய்நயந் தெடுத்த வாய்நலங் கவின**
**வாரிடை யிறந்தன ளென்மி**
**னேரிறை முன்கையென் னாயத் தோர்க்கே.**

எ-து: "எஞ்சியோர்க்கு மெஞ்சுதலிலவே" (அகத்.42) என்பதால், உடன்போகிய தலைமகள் ஆண்டு எதிர்வரும் அந்தணர்க்குக் கூறியது.

இ-ள்: தூரிய விடத்தைக் கருதிய அசைந்த நடையையுடைய அந்தணிர்காள்! நும்மை யானொன்று இரந்தனளாய் மொழிகின்றேன், எம்மூர்க்கண்ணே (என்னைக் கெடுத்திருந்து வருந்தும்) ஒத்த சந்தினையுடைய முன்கையையுடைய ஆயத்தாருக்கு, யாய் விரும்பி யெடுத்த ஆராயப் படுமின்பம் அழகு பெற அரிய காட்டு வழியைக் கடந்தனளென்று கூறுவீராமின், எ-று. மெய்ப்பாடு - உவ்கை; பயன் - வருத்தம் தணிவித்தல். (4)

**385.** **கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்**
**கோள்வல் வேங்கை மலைபிறக் கொழிய**
**வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்**
**கூறுமின் வாழியோ வாறுசென் மாக்க**
**ணற்றோ ணயந்து பாராட்டி**
**யெற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே.**

எ-து: இதுவுமது. வரைவு மறுத்துழி உடன்போய தலைமகள் இடைச்சுரத்துக் கண்டாரை 'யான்போகின்ற படியை யாய்க்கு நீர் கூற வேண்டும்' எனச் சொல்லியது.

இ-ள்: தறுகண்மை யுடைய காளையோடும் நெடிய தேரையேறிக் கொலைத்தொழில் வல்ல வேங்கை பொருந்திய மலைகள் பின்னே கழிய, வேறாகிய பல அரிய காட்டைக் கடந்தாள் அவளென்று எனது நல்ல தோள்களை விரும்பி முன்னெல்லாம் பாராட்டி இப்போது என்னைக் கெடுத்து அவ்விடத்திருந்த நல்வினையிலளாய யாய்க்கு இவ்வழிப் போகின்றவர்களே! கூறுவீராமின், எ-று.

ஒடு - உடனிகழ்ச்சி; வாழி - முன்னிலையசை; ஓகாரம் - சிறப்பு; "தேரும் யானையுங் குதிரையும் பிறவும் - ஊர்ந்தன ரியங்கலு முரியரென்ப" (தொ. பொருளி. 18) என்பதால், களவொழுக்கத்தின்கண் ஊர்தியிற் சேறல் வழுவாயினும் அமைக்கப்பட்டது. 'அறனில்யாய்' என்றாள் வரைவு நேர்ந்து மணச் சிறப்புக் காணாது மறுத்தமையின். 'வேங்கைய' என்றும்; 'வேரன்மல ருஞ் சுரம் என்றும் பாடம். மெய்ப்பாடு மருட்கை; பயன் - போக்குணர்த்தியாற்றுதல். (5)

386. புன்கண் யானையொடு புலிவழங் கத்த
நயந்த காதலற் புணர்ந்துசென் றனளே
நெடுஞ்சுவர் நல்லின் மருண்ட
விடும்பை யுறுவிநின் கடுஞ்சூன் மகளே.

எ-து: இதுவுமது. புணர்ந்துடன்போகிய தலைமகளை இடைச்சுரத்துக் கண்டார் அவள் தாய்க்குச் சென்று கூறியது.

இ-ள்: நெடிய சுவர் பொருந்திய நல்ல இல்லின்கண் இருந்து மயக்கங் கொண்ட துன்பத்தை உறுகின்றவளே! நினது கடுஞ் சூன்மகள் வலியழிந்த யானையோடு புலி சஞ்சரிக்கும் அருவழியைத் தன்னை விரும்பிய காதலனைக் கூடிச் சென்றாள், எ-று.

'நயந்த காதலற் புணர்ந்து' என்றதால், ஒருவரையொருவர் விடாத அன்பினர் என்பது பெறப்படும். பாவத்தை யுடையவனைப் பாவி யென்பதுபோல உறுதலையுடையவளை உறுவி என்றது. சென்றனளே - ஏகாரம் தேற்றம்; ஒடு - எண்ணொடு; மெய்ப்பாடும் பயனும் அவை. (6)

387. அறம்புரி யருமறை நவின்ற நாவிற்
றிறம்புரி கொள்கை யந்தணிர் தொழுவலென்
றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே
கண்டெனம் மம்ம சுரத்திடை யவளை
யின்றுணை யினிதுபா ராட்டக்
குன்றுயர் பிறங்கன் மலையிறந் தோளே.

*எ-து: "பொழுது மாறும்" (அகத்திணை. 40) என்னுஞ் சூத்திரத்து "வரவினும்" என்பதால், பின் சென்ற செவிலியால் வினாவப்பட்ட அந்தணர் அவட்குச் சொல்லியது.*

*இ-ள்: 'நல்வினை மிகும் அரிய வேதாத்தியயனஞ் செய்யும் நாவினது திறம்போன்ற திறத்தைச் செய்யுங் கொள்கையுடைய அந்தணிர்! தொழுவேன்' என்று சொல்லி, 'ஒரொண்டொடியாள் இவ்வழியாற்போயினளோ?' என்று வினாவுகின்ற பேதைமையுடைய பெண்ணே! அவளைக் கண்டேம் காட்டின்கண், இனிய துணைவன் இனிதாகப் புனைந்துரையா நிற்கப் பக்க மலைகளுயரப் பெற்ற விளங்கும் மலையைக் கடந்து சென்றாள், எ-று.*

*'அறம்புரியருமறை நவின்ற நாவிற் றிறம்புரி கொள்கை யந் தணிர்' என்ற வரையும் செவிலி கூற்றைக் கொண்டு கூறினார். இதனாற் போந்தவாய பொருள் நல்லனவற்றையே சொல்வதும் செய்வதும் உடைய அன்பினீர் என்பது. 'பேதையம் பெண்டே' என்பது, உலக நடையும் நூல் விதியும் அறியாளே என்பது. உலக நடையாவது பிறந்தவிடத்துப் பயன் படாமை. அவை முத்து, யாழிசை, பூ, சந்தனம், பெண் என்பன. நூல் விதியாவது கணவனே தெய்வமென்று அவன் சொற்படி நடத்தல். ஆதலின் அவள் போதல் அறமென்று கருதி வந்தேம், நினக்கும் அது என்றார். இதனை "எறித்தரு கதிர்தாங்கி"[1] என்னுங் கலியுட் காண்க.*

*ஏகாரம் - பிரிநிலை; அம்ம - உரையசை; நாவின்றிறம் = நடுவுநிலைமை; அம் - அசை; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - செவிலியைத் தடுத்தல். (7)*

---

1. பாலைக்கலி, செய்.8.

388. நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாத்து வரிநிழ லிரீஇச்
சிறுவரை யிறப்பிற் காண்குவை செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்வேல் விடலை முன்னிய சுரனே.

*எ-து: "பொழுது மாறும்" (அகத். 40) என்னுஞ் சூத்திரத்து "விடுப்பினும்" என்பதால், தேடிச் சென்ற செவிலிக்கு இடைச் சுரத்துக் கண்டார் அவளைக் கண்ட திறங் கூறியது.*

*இ-ள்: நெருப்பைப்போல விளங்கும் சூரியனது கொதிப்பாகிய சினந்தணியும்பொருட்டுக் கரிய காலையுடைய யாவினது அழகிய நிழலிலிருந்து சிறிதாகிய காலவெல்லையைக் கடந்தால், நெருங்கிய கொடியையும் பொன்போலு மழகிய மேனியையுமுடைய மடந்தையோடு வெற்றி பொருந்திய வேலையுடைய விடலை முற்பட்ட காட்டைக் காண்பாய், எ-று. ஒடு - உடனிகழ்ச்சி; ஏர் - உவமவுருபு; யா - ஒருவகை மரம்; மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஆற்றுதல். (8)*

389. செய்வினைப் பொலிந்த செறிகழ னோன்றாண்
மையணற் காளையொடு பைய வியலிப்
பாவை யன்னவென் னாய்தொடி மடந்தை
சென்றன ளென்றி ரைய
வொன்றின வோவவ ளஞ்சிலம் படியே.

*எ-து: "எஞ்சியோர்க்கு மெஞ்சுத லிலவே" (அகத்திணை. 42) என்பதால், பின் சென்ற செவிலித்தாய், வினவப் பட்டோர் 'கண்டோம்' என்புழிச் சொல்லியது.*

*இ-ள்: செய்யப்படுந் தொழில் பொலிவுபெற்ற இறுகிய கழலணிந்த வலிய தாளையுடைய கரிய தாடியையுடைய காளையொடு, மெல்ல நடந்து கொல்லிப்பாவை போலும் எனது அழகிய தொடியணிந்த மடந்தை சென்றாளென்றர்; வியக்கத்தக்க அவளது அழகிய சிலம்பணியுந் தாள்கள் அதற்குப் பொருந்தியன அன்றே! எ-று.*

ஐய - வியக்கத்தக்க என்னும் பொருளவாதல், "ஆயி தழ்ப் பன்மல ரையகொங் குறைத்தர"[1] என்பதிலும், "தெரு ளூற வைய முடிப்பையின் றெனவே"[2] என்பதிலுங் காண்க.

ஒடு - உடனிகழ்ச்சி; ஓகாரம் - எதிர்மறை; 'சென்றனள்' என்னு மளவுங் கண்டோர் கூற்றைக் கொண்டு கூறினாள். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஐயப்படுதல்; (9)

390. நல்லோர் ஆங்கட் பரந்துகை தொழுது
பல்லூழ் மறுகி வினவு வோயே
திண்டோள் வல்விற் காளையொடு
கண்டனெ மன்ற சுரத்திடை யாமே.

எ-து: 388ஆம் செய்யுளிற் கூறிய "தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்" என்பதால், பின்சென்ற செவிலித் தாய் பலரையும் வினாவக் கண்டோர் தாங்கண்டவாறு அவட்குக் கூறியது.

இ-ள்: நல்லோராகிய அவர்கள்கண் சென்று கைதொ ழுது, பலமுறை மறுக்கமுற்று 'இவ்வழிக்கண் இவ்வகை யாள் ஒருத்தி சென்றாளோ?' என்று வினாவுவோயே! அவள் வலிய தோளின் வலிய வில்லையுடைய ஒரு காளையுடன் இக்காட்டுவழிக்கண் சென்றது யாம் கண்டேம், எ-று.

ஒடு - உடனிகழ்ச்சி; யாம் காணாமையில்லை; கண்டும், அறன் எனக் கருதிப் போந்தேம் என்றவாறு. ஆற்றுதலின் மன்ற தெளிவுப்பொருளின் வந்தது. மெய்ப்பாடு - பெருமி தம்; பயன் - ஆற்றுவித்தல். (10)

உடன்போக்கின்கண் இடைச்சுரத்துரைத்த பத்து முற்றிற்று

---

1. பாலைக்கலி, 28, 8.
2. கல்லாடம், செய்.1, 40.

## 40 . மறுதரவுப் பத்து

391. மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொ
டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே.

எ-து: "தன்னு மவனும்" (அகத்.36) என்னுஞ் சூத்திரத்து "மன்னுநிமித்தம்" என்பதால், உடன்போகிய தலைமகள் மீடற் பொருட்டுத் தாய் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது.

இ-ள்: நல்ல இறகினையுடைய சிறு கருங்காக்கையே! அன்பையுடைய முறைமை பொருந்திய நினது சுற்றத்தோடு நீயுமுண்ணும் பொருட்டுப் பசியவூனிடப்பட்ட பசிய நிணமாகிய உணவைப் பொன்னாற் செய்யப்பட்ட பாத்திரத்தின் வைத்துத் தருகுவேன்; யாதானாயின், வெவ்விய சினம் பொருந்திய வெற்றியமைந்த வேலையுடைய காளையோடும் சென்ற அழகிய சில்லுப்போல முடிக்கப்படும் கூந்தலையுடையாளை வரும் வண்ணம் கரைவாயாக, எ-று.

அன்பாவது பிறப்பு வகையாற் றொடர்புடையார் மாட்டுத் தோன்றும் மனநெகிழ்ச்சி. அது இன்ப துன்பங்களிற் காணப்படும். காகத்துக்கு இக்குணம் விசேஷமுடைமையின் அன்புடை மரபின் என்றாள். "நோயுமின்பமும்" என்னும் (பொருளியல், 2ஆம்) சூத்திரப்படி இன்பமும் துன்பமுமாகிய இரண்டின் நிலைக்களமாக மெய்ப்பாடு தோன்ற, அஃறிணைப் பொருளை உயர்திணைப் பொருட்படுத்திச் செய்யாதன செய்வனவும் சொல்லாதன சொல்வனவுமாக "பால்கெழுகிளவி நால்வர்க்கு முரித்தே" (பொருளியல், சூத்.5) என்பதால் நற்றாய் மகட்போக்கி வருந்துவாள் தன்னெதிரே தோன்றிய காகத்தை நோக்கி மறுவில் காக்கையே! செய்ந்நன்றி கொன்றார்க்கு உய்தியில்லை எனப்படுதலின் மறவேன்;

நீயெனக்கு ஒருதவி செய்வாய்; அது யாதாயின், என்னருமை மகளொருத்தி என்னைத் துறந்து தன்னை விரும்பியவோர் காளையின்பின் சென்றாள், அவளை இந்நகருக்கு வரக் கூறு வாயாக; அப்படியாயின் நீயும் இப்போது ஒரு குறையை யுடையாயுழல்வாய், அதுதான் உணவின்மையாற் போலும்; அதற்கு நீயேயன்றி அன்புடைய நின் சுற்றத்தாரும் கூட உண்டு பசி வருத்தமில்லையாக உங்களுணவிற் சிறந்த ஊனோடு கலந்த நிணத்தைப் பகலுணவாக அழகிய பொற் கலத்திலே தருவேன் என்றாளென்க.

'அன்புடை மரபினின் கிளையார' என்றதால், அன்பினை யுடைய என்கிளை மகிழவென்றும், 'பச்சூன் பெய்த பைந்நிண வல்சி' என்றதால், வேறுபாடிலராய்த் தலைவனுந் தலை வியு மின்றே வரல் வேண்டுமென்றும், 'பொலம்புனை கலத் தில தருகுவென்' என்றதால் இங்கே மணச்சிறப்பு நிகழத் தருவாய் என்றும் உவமவாயிற்படுத்துக் கூறியவாறு.

ஒடுக்கல் - உடனிகழ்ச்சி; மாதோ - அசை. 'கரைந்திடுமே' என்றும் பாடம்; அதற்கு 'அன்புடை மரபினின் கிளை' எனப் பாடமிருத்தலின் பொருத்தமின்று. தன் கிளையென் றிருத்தல் வேண்டும். கரைவதற்குக் கொடுப்பேன் என்றாள். அதற்கு மெய்ப்பாடு அவலம், இதற்கு உவகை. பயன், தலை மகளைக் காண்டல். "பணங்களஞ் சாலும் பருவர வார்த்த வன் றில்லையன்ன" என்னும் சிற்றம்பலக்கோவையினுங் காண்க. (1)

392. வேய்வனப் பிழந்த தோளும் வெயிறெற
வாய்கவின் றொலைந்த நுதலு நோக்கிப்
பரியல் வாழி தோழி பரியி
னெல்லையி லிடும்பை தருஉ
நல்வரை நாடனொடு வந்த மாறே.

எ-து: "எஞ்சியோர்க்கு மெஞ்சுதலிலவே" (அகத். 42) என் பதால், உடன்போய் மீண்டு வந்த தலைமகள் வழிவரல் வருத்தங் கண்டு ஆற்றளாகிய தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: வேய் தனது வனப்பை இழத்தற்குக் காரணமாகிய தோளையும் வெயில் வருத்துதலால் ஆராயப்படுங் கவின்றொ லைந்த நுதலையும் பார்த்து வருந்தாதே, வாழ்வாயாக, தோழி! நீ வருந்தின் நான் நல்ல மலைநாடனோடு வந்த காரணம் எல்லையில்லாத துன்பத்தைத் தராநிற்கும். எ-று.

வாழி - அசையுமாம்; ஒடு - உடனிகழ்ச்சி; மாறு - காரணம்; மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - ஆற்றுவித்தல். (2)

393. துறந்ததற் கொண்டு துயரடச் சாஅ
யறம்புலந்து பழிக்கு மளைக ணாட்டி
யெவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன ளோநின் மகளே
வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே.

எ-து: முற்செய்யுளின் விதியால், அயலோர் தலைமகள் உடன்போய் மீண்டு வந்துழி அவள் தாய்க்குச் சொல்லியது.

இ-ள்: நின்னைத் துறந்து போய அவளை நினைத்துக் கொண்டு துன்பம் வருத்த மெலிந்து நல்வினையை வெறுத்துப் பழிக்கும் நீர்நிறைந்த கண்ணையுடையாளே! நினது வருந்தும் நெஞ்சிற்கு வருந்தாது துணையாக நின்மகள் வெய்ய திறலையுடைய வெள்ளிய வேலையுடைய விடலை முன்னாக வந்தனள், எ-று.

'கொண்டும்' என்றும், 'மயற்கணாட்டி', 'உண்கணாட்டி' என்றும், 'வெஞ்சினவெள்வேல்' என்றும் பாடம். ஓகாரம் - அசை; ஏகாரம் - பிரிநிலை; மெய்ப்பாடும் பயனுமவை. (3)

394. மாண்பில் கொள்கையொடு மயங்குதுயர் செய்த
வன்பி லறனு மருளிற்று மன்ற
வெஞ்சுர மிறந்த வஞ்சி லோதிப்
பெருமட மான்பிணை யலைத்த
சிறுநுதற் குறுமகட் காட்டிய வம்மே.

எ-து: "தன்னுமவனு" மென்னுஞ் சூத்திரத்து (அகத்திணை. 36) "அவ்வழியாகிய கிளவியுமுரிய" என்பதால்,

உடன்போய்த் தலைமகள் மீண்டுவந்துழித் தாய் சுற்றத் தார்க்குச் சொல்லியது.

இ-ள்: வம்மின், சுற்றத்தாரே! மாட்சிமையில்லாத கொள்கையுடன் மயங்குதற்குக் காரணமாய துயரையுறுத்திய அன்பில்லாத அறனும், தாம் வெவ்விய சுரத்தைக் கடந்த அழகிய சிலவாகிய கூந்தலையுடைய பெரிய அழகிய கருக்கொண்ட மான்பிணையின் நோக்கை வென்ற நோக்கையும் சிறுநுதலையுமுடைய சிறுமகளைப் பெரிதும் அருள்செய்து காட்டிற்று, எ-று.

கருக்கொண்ட மான் நோக்கென்பது, சீவ. சிந். மண் மகளிலம்பகம் 189ஆம் செய்யுளிற் காண்க.

ஒடு - உடனிகழ்ச்சி; உம்மை - சிறப்பு; மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல்; (4)

395. முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரிச்
சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கு
மின்னா வருஞ்சுரந் தீர்ந்தன மென்மெல
வேகுமதி வாழியோ குறுமகள் போதுகலந்து
கறங்கிசை யருவி வீழும்
பிறங்கிருஞ் சோலைநம் மலைகெழு நாட்டே.

எ-து: "இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு வழக்கிய லாணையிற் கிளத்தற்கு முரியன்" (தொல். செய்யுளியல், 194) என்றும், "ஒன்றாத்தமரினும்" (தொ. அகத். 41) என்னுஞ் சூத்திரத்து "அப்பாற்பட்ட வொருதிறத்தானும்" என்பதால்; தலைமகன் உடன்போக்கின்கண் இடைச்சுரத்துத் தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: உலர்ந்த மூங்கிலினிடத்துப் பிறந்த காற்றால் வளரும் மிகுந்த எரிச்சுடரானது விடுகின்ற நெடிய கொடியானது சென்று, வெடிப்பையுடைய குகைக்கண் முழங்குகின்ற இன்னாமையையுடைய அரிய சுரத்தைக் கடந்தனம், இனி மென்மெலச் செல்வாய், குறுமகளே! பூக்கள் விரவிச் சுழலும் ஒலி பொருந்திய அருவி விழுகின்ற விளங்குகின்ற பெரிய சோலையினையுடைய நமது மலைபொருந்திய நாட்டின் கண், எ-று.

விடர்முகை - இரட்டைக்கிளவி எனினுமாம். மதி, வாழி - முன்னிலையசை; வாழி - வியங்கோளெனினுமாம்; ஓ - சிறப்பு; கெழு - அசை; மெய்ப்பாடு - வியப்பு; பயன் - ஆற்றுவித்தல். (5)

396\. புலிப்பொறி வேங்கைப் பொன்னிணர் கொய்துநின்
கதுப்பய லணியு மளவை பைபயச்
சுரத்திடை யயர்ச்சியை யாறுக மடந்தை
கல்கெழு சிறப்பி னம்மூ
ரெல்விருந் தாகிப் புகுக நாமே.

இதுவுமது.

இ-ள்: புலிப்பள்ளிபோலும் புள்ளி பொருந்திய வேங்கையினது அழகிய இணைக்கொய்து நினது கூந்தலயலின் அணியும் அளவை மென்மெலக் காட்டின் வழியைக் கடந்த வருத்தத்தை யாறுவாயாக, மடந்தையே! மலைகள் பொருந்திய சிறப்பினையுடைய நமதூருக்குப் பகல் விருந்தினராக நாம் புகுவோம், எ-று.

புலிப்பொறி - உவமத்தொகை; கெழு - அசை; புலிப்பொலி என்றும் பாடம். மெய்ப்பாடும் பயனும் அவை. (6)

397\. கவிழ்மயி ரெருத்திற் செந் நாயேற்றை
குருளைப் பன்றி கொள்ளாது கழியும்
சுரநனி வாரா நின்றன ளென்பது
முன்னுற விரைந்தநீ ருரைமி
னின்னகை முறுவலென் னாயத் தோர்க்கே.

எ-து: "எஞ்சியோர்க்கு மெஞ்சுதலிலவே" (அகத்திணை, 42) என்பதால், தலைமகள் உடன்போய் மீள்வாள் தன்னூர்க்குச் செல்கின்றாரைக் கண்டு கூறியது.

இ-ள்: கவிழ்ந்து தொங்குகின்ற மயிர் பொருந்திய கழுத்தையுடைய செந்நாயேற்றையானது, குரளைபொருந்திய பன்றியைக் கவர்ந்து கொள்ளாதுபோம் சுரத்திடைப் பெரிதும் வருகின்றாள் என்றாள் என்பது நமக்கு முன் போய் விரைந்து செல்கின்ற நீவிர், இனிய நகையையுடைய எனது ஆயத்தினர்க்குச் சொல்லுவீராமின், எ-று.

குருளை பன்றியின் இளமைக்காதல் "நாயே பன்றி"[1] என்னுஞ் சூத்திரத்தானறிக. மெய்ப்பாடு - அது; பயன் - ஆற்றுதல். (7)

398. புள்ளு மறியாப் பல்பழம் பழுநி
மடமா னறியாத் தடநீர் நிலைஇச்
சுரநனி யினிய வாகுக வென்று
நினைத் தொறுங் கலிழு மென்னினு
மிகப்பெரிது புலம்பின்று தோழிநம் மூரே.

எ-து: "தலைவரும் விழுமம் நிலையெடுத்துரைப்பினும்" (அகத்திணை, 39) என்னுஞ் சூத்திரத்து "இயல்புற" என்றதால், தலைமகள் மீண்டு வந்துழி அவட்குத் தோழி சொல்லியது.

இ-ள்: புட்களுமறியமாட்டாப் பல பழம் பழுத்து மடமானு மறிய ாட்டாத் தடநீர் நிலைத்து அச்சுரம் மிக இனிய வாகுகவென்று சுரத்தின் கொடுமையை நினைக்குந் தோறும் அழும் என்னினும் மிகப் பெரிது புலம்பினது நம்மூர், தோழியே! எ-று.

இனியவாதல் - பல பழம் பழுத்தலும் நீர்நிலைத்தலும்; உம்மை - சிறப்பு; 'பல்பழம் பழூஉ' என்றும், 'கலங்கின்று' என்றும் பாடம். மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - தம் நிலையுரைத்தல். (8)

399. நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லி னெவனோ மற்றே வென்வேன்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே.

எ-து: "தன்னுமவனும்" (அகத்திணை, 36) என்னுஞ் சூத்திரத்து "அவ்வழியாகிய கிளவியும்" என்பதால், உடன் கொண்டுபோன தலைமகன் மீண்டு தலைவியைத் தன்னில்லத்துக் கொண்டு புக்குழி அவன்றாய் அவட்குச் சிலம்பு

1. தொ. மரபியல், 8

கழிநோன்பு செய்கின்றாளெனக் கேட்ட நற்றாய் ஆண்டு நின்றும் வந்தார்க்குச் சொல்லியது.

இ-ள்: நும்மனைக்கட் சிலம்பைக் கழித்து ஒழிந்த கலியாணஞ் செய்யினும் என் மனைக்கட் செய்யும் வதுவையாகிய நல்ல கலியாணம் நீங்கச் செய்கவென்று சொல்லின் யாதோ? வெற்றி பொருந்திய வேலையுடைய குற்றமற விளங்கிய கழல் கட்டிய காலையுடைய பொய்வல்ல காளையைப் பெற்ற தாய்க்கு, எ-று. மற்றே - அசை.

பாடபேதம்:

**தம்மனைச் சிலம்பு தழீஇயயரினு**
**மெம்மனை வதுவை நன்மணங் கழிக**
**வென்றுநாஞ் சொல்லி லெவனோ தோழி**
**பையறல் விளங்கு கழலடிப்**
**பொய்வல காளையை யீன்ற தாய்க்கே.**

எ-து: இது முன்னரேபோன்று தோழிக்குக் கூறியது.

இ-ள்: தன் மனைக்கட் சிலம்பைத் தரித்து விழாக் கொண்டாடினும் எம்மனைக்கட் செய்யு நல்ல வதுவைக் கலியாணஞ் செய்யாது கழிக என்று காளை தாய்க்குச் சொல்லில் எவனோ? தோழீ! எ-று.

இரண்டிற்கும் மெய்ப்பாடு - அவலம்; பயன் - தலைவியைக் காண்டல்.

"விளம்பழம் கமழுங் கமஞ்சூற் குழிசிப் - பாசந்தின்ற தேய் கான் மத்த - நெய்தெரி யியக்கம் வெளின்முதன் முழங்கும் - வை குபுலர் விடியன் மெய்கரந்து தன்கா - லரியமை சிலம்பு கழீஇப் பன்மாண் - வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்"[1] என்று கூறப்படுதலின் கழித்துப் போதலுண்டென்பது. அன்றி "பாமரை மேகலை பற்றிச் சிலம்பொதுக்கி" என்றலினும் களவிடத்து அரவந் தோன்றாமைக் கழற்றி வைத்துப் போதலுண்டென்க. இன்றி, செலவிடத்துக் காலணி நடைக்குப் பொருந்தாமையானும் பாரமாயிருப்பதானுமாம். ஆதலின் கழற்றி வைத்துச் சென்றாட்கு தலைவன் மனைக்கண்

1. நற்றிணை, செய்.12.

*தழீஇயர்தல் ஒருதலையா வேண்டப்படும். கழீஇயயர்தல் அவ்வாறொருதலையானே வேண்டற்படாதென உணரற் பாற்று.* *(9)*

400. மள்ள ரன்ன மரவந் தழீஇ
மகளி ரன்ன வாடுகொடி நுடங்கு
மரும்பதங் கொண்ட பெரும்பத வேனிற்
காதல் புணர்ந்தன ளாகி யாய்கழல்
வெஞ்சின விறல்வேற் காளையொ
டின்றுபுகு தருமென வந்தன்று தூதே.

*எ-து: "கழிவினும் வரவினும்" (கற்பியல். 12) என்னுஞ் சூத் திரத்து "ஆகும்" என்றதால், உடன் போய் வதுவைய யரப்பட்ட தலைவி 'தலைவனோடு இன்று வரும்' எனக் கேட்ட செவிலித்தாய் நற்றாய்க்குச் சொல்லியது.*

*இ-ள்: மள்ளரையொத்த மரவத்தைத் தழுவி மகளிரை யொத்த ஆடுகொடியானது அசையும் அரிய பதங்கொண்ட பெரிய பதமாகிய வேனிற்கண் அன்பு புணர்ந்தவளாகி அழ கிய கழலையுடைய வெய்ய சினத்தைக்கொண்ட வெற்றி பொருந்திய காளையோடு இன்றைக்கு வருமென்று தூது வந்தது, எ-று.*

*தனக்குப் பொருந்திய தலைவனோடு பிரியாத காத லையுடையளாய் ஒரு குறையுமின்றி வருவள் எனத் தலை மகள் நிலை கூறியவாறு. ஏனை உவமைகள் உள்ளுறை உவமைக்குச் சிறப்புக் கொடுத்து நின்றன. மெய்ப்பாடு - உவகை; பயன் - ஆற்றுவித்தல்.* *(10)*

மறுதரவுப் பத்து முற்றிற்று

---

**பாலை முற்றிற்று**

***ஓதலாந்தையார்***

OOO

## 5. முல்லை

முல்லையாவது, இருத்தலும் அதன் நிமித்தமுமாம். அது பிரிவுணர்த்தியவழிப் பிரியாரென்றிருத்தலும், பிரிந் துழிக் குறித்த பருவமன்றென்றுதானே கூறுதலும், பருவம் வருந்துணையும் ஆற்றியிருந்தமை பின்னர்க் கூறுவனவும் இருத்தல். இனிப் பருவங்கண்டு ஆற்றாது தோழி கூறுவன வும், பருவமன்றென்று வற்புறுத்துவனவும், வருவர் என்று வற்புறுத்துவனவும், தலைவன் பாசறைக் கண்ணிருந்து உரைத்தனவும் அவைபோல்வனவும் இருத்தல் நிமித்த மெனப்படும் உரிப்பொருள்.

இதற்கு முதற்பொருளின்: நிலம் - காடுங் காடு சார்ந்த விடமும்; பொழுது - காரும் முன்பனியும் மாலையும். இவை முல்லைக்கு உரியவாவதற்குக் காரணம், பிரிந்து மீளும் தலைவனியல்பெல்லாம் பிரிந்திருந்த கிழத்தி கூறுதலே பொருளாகலின் என்க. அம்முல்லைப் பொருளாகிய மீட் சிக்குந் தலைவி இருத்தற்கும் உபகாரப்படுவது கார்கால மாம். வினைவயிற் பிரிந்து மீள்வோன், விரைபரித்தேர் ஊர்ந்து பாசறையின் நின்று மாலைக் காலத்து ஊர்வயின் வரூஉங் காலம் கார்காலமாம். அது வெம்மையும் தண்மை யும் சமப்பட்டு நின்று நீரும் நிழலுஞ் சிறந்து இன்பம் பயத் தலானும், புள்ளும் மாவும் துணையோடின்புற்று விளையாடு வன கண்டும், புல்லை மேய்ந்து கொல்லேற்றோடு புனிற் றாக் கன்றை யுள்ளி மன்றிற் புகுதரவும், தீங்குழல் இசைப் பவும், பந்தர் முல்லை வந்து மணங் கஞற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்கும் காமக்குறிப்புச் சிறத்த லின் அக்காலத்து மாலைப்பொழுதும் உரித்தாயிற்று.

கருப்பொருள்: மாயவன் தெய்வம்; சாமையும் வரகும் முதிரையும் உணவு; உழையும் புல்வாயும் முயலும் மா; கொன்றையங் குருந்தும் மரம்; கானங்கோழியுஞ் சிவலும் புள்; ஏறுகோட் பறை பறை; நிரைமேய்த்தலும் வரகு

முதலியன களைகட்டலும் கடாவிடுதலும் தொழில்; முல்லை யாழ் யாழ். முல்லையும் பிடவும் தளவும் தோன்றியும் பூ; கான்யாறு நீர்; பாடியும் சேரியும் பள்ளியும் ஊர்; இடையர் இடைச்சியர் ஆயர் ஆய்ச்சியர் தாழ்ந்தோர்; குறும்பொறை நாடன் கிழத்தி மனைவி உயர்ந்தோர்.

## 41. செவிலி கூற்றுப் பத்து

401. மறியிடைப் படுத்த மான்பிணை போலப்
புதல்வ னடுவண னாக நன்று
மினிது மன்றவவர் கிடக்கை முனிவின்றி
நீனிற வியலகங் கவைஇய
வீனு மும்பரும் பெறலருங் குரைத்தே.

எ-து: "கழிவினும் வரவினும்" (தொல். கற்பி. 12) எனுஞ் சூத்திரத்து "ஆகும்" என்பதால், கடிமனைச் சென்று வந்த செவிலி உவந்தவுள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

இனி இத்தலைச் செய்யுள் முக்காலத்தினும் செவிலி அல்லவை கடிதலும் நல்லவை யுரைத்தலும் தலைமகட்கே யன்றி நற்றாய்க்கும் உரைக்குமென்றமையின், வதுவை நிகழ்ந்து தலைவன் மனைக்கட்சென்று இல்லறமியற்றி மகப்பயந்து மகிழ்ந்திருப்பதனை அங்குச் சென்று கண்டு வந்தவள் சொல்லியது. இல்லறமியற்றியிருத்தல் கற்பாயின மையின் இங்குச் சேர்க்கப்பட்டது.

இனி வருகின்ற பாட்டு ஒன்பதனுள் முதலெட்டினுக்கும் இஃதொக்கும்.

இ-ள்: குட்டி நடுவிற் படுத்திருக்கும் மானையும் பிணையையும் போலப் புதல்வன் நடுவிற்படுப்ப நின் மகளும் தலைவனும் இசையக் கிடக்கையானது வெறுப்பின்றிப் பெரிதும் இனிமையையுடைத்தே; அது நீலநிறத்தையுடைய அகன்ற உள்ளிடமாகிய ஆகாயத்திற் சூழ்ந்த விரும்பியவற்றைப் பெறும் மேலுலகத்தவராகிய தேவரும் பெறற்கரியது, எ-று.

*மறியிடைப் படுத்த மான்பிணைபோல என்னு முவமை யால் வினையும் மெய்யும் இரண்டுவமையும் பெறப்படும்.*

*உம்பரும் - உம்பர் உலகத்தும் என்றுமாம். உம்மை சிறப்பு. மான்பிணை போல வென்பதுமானும் பிணையும் என உம்மைத் தொகையாயும் மான்பிணையென ஒரு பெய ராயும் கொள்ளப்படும். ஒன்றாய்க்கொள்ளுமிடத்து அவள் கிடக்கை என்றே பாடங்கொள்க. இடையின் மறி எனவே ஒரு பாகத்துப் பிணையும் மற்றொரு பாகத்துக் கலையுண் டென்பதும், 'நடுவண் புதல்வனாக அவர் கிடக்கை' எனவே ஒரு பக்கத்துத் தலைவன் என்பது சொல்லாமலே பெறப் படும். மெய்ப்பாடு - உவகை;. பயன் - மகிழ்வித்தல்.*

*இத்துறை யெல்லாவற்றிற்குமிவையொக்கும்.* *(1)*

402. புதல்வற் கவைஇய தாய்புற முயங்கி
நசையினன் வதிந்த கிடக்கை பாணர்
நரம்புளர் முரற்கை போல
வினிதா லம்ம பண்புமா ருடைத்தே.

*இ-ள்: புதல்வனைச் சூழ்ந்து கிடக்கும் தாயின்புறத்தே முயங்கி விருப்பமுடையனாய்த் தங்கிய தலைமகனது கிடக்கையானது பாணரது யாழின் நரம்பையுளர்தலா லுண்டாய இசையைப் போல இனிமையுடைத்து, நல்ல குணத்தையும் உடைத்து, எ-று. ஆல்ஆர் - இரண்டுமசை. இது அன்புடைமை கூறிற்று.* *(2)*

403. புணர்ந்த காதலியிற் புதல்வன் றலையு
மமர்ந்த வுள்ளம் பெரிதா கின்றே
யகன்பெருஞ் சிறப்பிற் றந்தை பெயரன்
முறுவலி னின்னகை பயிற்றிச்
சிறுதே ருருட்டுந் தளர்நடை கண்டே.

*இ-ள்: தன்னைப் புணர்ந்த காதலியினுங் காட்டிற் புதல் வனிடத்து விரும்பிய உள்ளம் பெரிதாகின்றது; அகன்ற பெரிய சிறப்பினையுடைய மகனது முறுவலின் இனிய நகையைப் பழகி, சிறுதேருருட்டுகின்ற தளர்நடையைக் கண்டு, எ-று.*

ஏகாரம் - தேற்றம்; காதலியின் - இன் பொருவின்கண்ணது. 'காதலின்' என்றும் பாடம். தந்தை பெயரன் = மகன். (3)

404. வாணுத லரிவை மகன்முலை யூட்டத்
தானவள் சிறுபுறங் கவையின னன்று
நறும்பூந் தண்புற வணிந்த
குறும்பல் பொறைய நாடுகிழ வோனே.

இ-ள்: ஒளி பொருந்திய நுதலையுடைய தலைவி மகனுக்கு முலையையூட்டத் தான் அவளது சிறுபுறத்தைப் பெரிதுஞ் சூழ்ந்தான், நறிய பூக்கள் பொருந்திய நாடுகிழவோன், எ-று.

ஏகாரம் - ஈற்றசை; 'நறும்பூந்தண் புறவணிந்த நாடு' என்பது நாட்டுவளங் கூறியவாறு. (4)

405. ஒண்சுடர்ப் பாண்டிற் செஞ்சுடர் போல
மனைக்குவிளக் காயினண் மன்ற கனைப்பெயற்
பூப்பல வணிந்த வைப்பிற்
புறவணி நாடன் புதல்வன் றாயே.

இ-ள்: ஒள்ளிய சுடரையுடைய பாண்டிற்கண் விளங்குஞ் செஞ்சுடரைப் போல ஒலி பொருந்திய மழையினாற் பல பூக்கள் பொருந்திய இடத்தையுடைய புறவணி நாடனது புதல்வன் தாயானவள் அவன் மனைக்கு விளக்காயினள், எ-று.

பாண்டிற் செஞ்சுடர் என்பது, கால்விளக்கு என்றும் அகல்விளக்கு எனவும் தேரின்கண்ணுள்ள சூரியன் எனவுமாம். சூரியனென்பது "தேரோன்மலை மறைந்தானென்பது சூரியனு ருளிமா - சூரியன் தேர்க்குதிரை" என்பதாலும் பாண்டிற் சுடர் = சூரியன் என்பது. தேர்ச்சுடர் மண்ணுக்கு விளக்காயினாற் போல இவளும் மனைக்கு விளக்காயினாளெனச் சிறப்பித்தாள் இல்வாழ்க்கைச் சிறப்புத் தோன்ற. "பூப்பலவணிந்த வைப்பு" என்பது செல்வமுடைமை கூறியவாறு. கனைப்பெயலென்பதால் வேண்டியகாலத்து மழை பெய்தலுமாம். புறவு - முல்லை நிலம். (5)

406. மாத ருண்கண் மகன்விளை யாடக்
காதலித் தழீஇ யினிதிருந் தனனே
தாதார் பிரசு மூதும்
போதார் புறவி னாடுகிழ வோனே.

*இ-ள்: அழகிய மையுண்ட கண்களையுடைய மகன் விளையாடா நிற்கக் காதலியைத் தழுவி, நிறைந்த தேனை வண்டுகளுண்ணும் பூக்கள் நிறைந்த நாடுகிழவோன் இனிதாயிருந்தான், எ-று.*

*ஏகாரம் - தேற்றம்; தாதார் பிரசமூதும் போதார் புறவி னாடு கிழவோன் என்பது, செல்வ மிகுதியுடையவனாய் விருந்தினரை யுபசரித்தலை யுடையானென்பது. 'காதலிற் றழீஇ' என்றும், 'முரலும்' என்றும் பாடம். (6)*

407. நயந்த காதலித் தழீஇப் பாணர்
நயம்படு முரற்கையின் யாத்த பயன்றெரிந்
தின்புறு புணர்ச்சி நுகுரு
மென்புல வைப்பினாடு கிழவோனே.

*இ-ள்: விரும்பிய காதலியைத் தழுவிப் பாணரது விருப்ப முண்டாகும் இசையின் அமைக்கப்பட்ட பயனைத் தெரிந்து இன்புறும் புணர்ச்சியை அனுபவிக்கும், மென்புல வைப்பின் நாடு கிழவோன், எ-று. பாடல் கேட்டிருந்தமை கூறிற்று. (7)*

408. பாணர் முல்லை பாடச் சுடரிழை
வாணுத லரிவை முல்லை மலைய
வினிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத்தன் புதல்வனொடு பொலிந்தே.

*இ-ள்: பாணர் முல்லைப்பண்ணைப் பாட, ஒளி பொருந்திய ஆபரணத்தையுடைய வாணுதலரிவையான வள் கற்பைப் பூண, வெறுப்பின்றிய கொள்கை பொருந்திய தனது புதல்வனோடும் நெடுந்தகை இனிதிருந்தான், எ-று.*

*இது அவளில்லறம் முட்டாதியற்றியமை கூறிற்று. (8)*

409. புதல்வற் கவைஇ யினன் றந்தை மென்மொழிப்
புதல்வன் றாயோ விருவருங் கவையின
ளினிது மன்றவவர் கிடக்கை
நனியிரும் பரப்பினிவ் வுலகுட னுறுமே.

இ-ள்: புதல்வனைச் சூழ்ந்து கிடந்தான் தந்தை, மெல்லிய மொழியையுடைய புதல்வனது தாயோ அவ்விருவரையு மகத்திட்டுக் கிடந்தாள், அஃது இனிதே; அவரின் அக் கிடக்கை மிகப் பெரிய பரப்பமைந்த இவ்வுலகோடு பொருந்தும், எ-று.

இது அவரின் அன்பின் தன்மை கூறியவாறு, இதனை இரண்டாம் மூன்றாஞ் செய்யுளாக வைத்தல் பொருந்தும் போலும். ஓகாரம் - சிறப்பு; உலகோடு - உலக வழக்கோடு. உலகுடன் என்னும் உடன் 'அதனினியறல்'[1] என்னுஞ் சூத்திரத்து 'அன்னபிறவும்' என்பதால் அமைக்கப்படும் ஓடு உருபின் கண்ணது. (9)

410. மாலை முன்றிற் குறுங்காட் டின்னகை
மனையோ டுணைவி யாகப் புதல்வன்
மார்பி னூரு மகிழ்நகை யின்பப்
பொழுதிற் கொத்தன்று மன்னே
மென்பிணித் தம்ம பாணன தியாழே.

எ-து: கடிமனைச்சென்று செவிலி தலைமகனுந் தலைமகளும் புதல்வனோடு பாடல் கேட்டிருந்தமை கண்டு தன்னுள்ளே உவந்து சொல்லியது.

இ-ள்: மாலை முன்றிற்கண் சிறுமையாகக் காட்டும் இனிய நகை பொருந்திய மனையோள் துணைவியாகப் புதல்வன் மார்பின்கண் ஊராநிற்கும் மகிழ்ச்சி நகையினாலுண்டாய இன்பம் அமைந்த காலத்திற்குப் பாணனது யாழ் ஒத்ததன்று, பிணியையுடைத்து, எ-று. மன் - ஆக்கம்; ஏகாரம் - பிரிநிலை; அம்ம - உரையசை; இது செவிலி தன்னுள்ளே சொல்லியது. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல். (10)

செவிலி கூற்றுப் பத்து முற்றிற்று

---

1. தொ. சொல். வேற்றுமையி. சூத். 13.

## 42. கிழவன் பருவம் பாராட்டுப் பத்து

411. ஆர்குர லெழிலி யழிதுளி சிதறிக்
கார்தொடங் கின்றாற் காமர் புறவே
வீழ்தரு புதுப்புன லாடுகந்
தாழிருங் கூந்தல் வம்மதி விரைந்தே.

*எ-து: "கரணத்தினமைந்து முடிந்தகாலை" (கற்பியல், 5) என்னுஞ் சூத்திரத்து "பண்ணமைபகுதி" என்பதால், பருவங் குறித்துப் பிரிந்த தலைமகன் அப்பருவத்துக்கு முன்னே வந்து தலைவியோடு கூடிச் செல்லாநின்றுழிப் பருவம் வந்ததாகத் தான் பருவத்துக்கு முன்னே வந்தமை தோன்றக் கூறுவான் தலைவிக்கு உரைத்தது.*

*இ-ள்: நிறைந்த முழக்கத்தையுடைய மேகம் மிக்க துளியைச் சிதறிக் காலத்தைத் தொடங்கியது, புறவமானது விரும்பப்படுகின்ற புதுப்புனலை யாடுவேம், தாழுங் கரிய கூந்தலையுடைய பெண்ணே! விரைந்து வருவாயாக, எ-று.*

*ஆர் - அசை; ஏகாரம் - தேற்றம்; சிதறி - சிதற எனினுமாம்; மெய்ப்பாடு - மருட்கை; பயன் - மகிழ்வித்தல். (1)*

412. காயா கொன்றை நெய்தன் முல்லை
போதவிழ் தளவமொடு பிடவலர்ந்து கவினிப்
பூவணி கொண்டன்றாற் புறவே
பேரமர்க் கண்ணி யாடுகம் விரைந்தே.

*இதுவுமது.*

*இ-ள்: காயாவும் கொன்றையும் நெய்தலும் முல்லையும் பேரரும்பு விரியும் செம்முல்லையுடன் பிடவமும் மலர்ந்து அழகுபட்டுப் பூவணியைக் கொண்டது புறவம், பெரிய மாறுபட்ட குளிர்ந்த கண்ணியே! அவ்விடத்து பூக்கொய்தன் முதலிய சோலை விளையாட்டை யாம் போயாடுவோம், விரைந்து வருவாயாக, எ-று.*

*விளையாட்டு நயப்புக் கூறியது. ஒடு - உடனிகழ்ச்சி; ஏகாரம் - தேற்றம்; தளவு = செம்முல்லை என்பது "சிரல்*

வாய்ச் செம்முகைத் தளவு"[1] எனமேற் கூறுமாற்றானுணர்க. மெய்ப்பாடும் பயனும் அவை. (2)

413. நின்னுத னாறு நறுந்தண் புறவி
னின்னே போல மஞ்ஞை யாலக்
கார்தொடங் கின்றாற் பொழுதே
பேரிய லரிவை நாநயத் தகவே.

இதுவுமது

இ-ள்: பேரியலரிவையே! நினது நுதல் நாறாநிற்கும் நல்ல குளிர்ந்த புறவின் நின் சாயலைப்போலச் சாயலை யுடையவாய மயில்கள் ஆலாநிற்கக் காரைத் தொடங்கி யது பொழுது, நாம் விரும்பும் வண்ணம், எ-று.

நின்னே, பொழுதே - ஏகாரங்கள் தேற்றம்; ஆல் - அசை; நாறுதல் - அழகுபெறத் தோன்றல்; மெய்ப்பாடும் பயனும் அவை. (3)

414. புள்ளு மாவும் புணர்ந்தினி துகளக்
கோட்டவும் கொடியவும் பூப்பல பழுனி
மெல்லிய லரிவை கண்டிகு
மல்ல லாகிய மணங்கமழ் புறவே.

இதுவுமது.

இ-ள்: புட்களும் மிருகங்களும் புணர்ந்து இனிதாய்த் துள்ளக் கோட்டையுடையவும் கொடிகளும் பல பூக்கள் நிறையப் பெற்று வளமுடையவாகிய மணங்கமழா நிற்கும் புறவு, மெல்லிய இயல்பையுடைய பெண்ணே! அவற்றைக் காண், எ-று.

பழுனி "கொற்பழுத்தவேலான்" என்பதுபோல. உம்மை எண் ணும்மை; மெய்ப்பாடும் பயனும் அவை. (4)

415. இதுவே மடந்தைநா மேவிய பொழுதே
யுதுவே மடந்தைநா முள்ளிய புறவே

---

1. இந்நூல், செய்.447.

யினிதுடன் கழிக்கி லிளமை
யினிதா லம்ம வினியவர்ப் புணர்வே.

இதுவுமது.

இ-ள்: மடந்தையே! இதுவே நாம் விரும்பிய காலம்; உதுவே மடந்தை! நாம் உள்ளிய புறவு; தமக்கினியாரோடும் புணர்ச்சி இனிது; அவர் கூடிக் காலத்தைக் கழிக்கின் அவர் இளமை இனிமையுடைத்து, எ-று.

ஏகாரம் - முன்னிரண்டு பிரிநிலை, பின்னவை அசை; ஆல் - அசை; அம்ம - முன்னிலையசை; இரண்டு முறை விளித்தான் காதன் மிகுதியான். மெய்ப்பாடும் பயனும் அவை. (5)

416. போதார் நறுந்துகள் கவினிப் புறவிற் றாதார்ந்து
களிச்சுரும் பரற்றும் காமர் புதலின்
மடப்பிடி தழீஇய மாவே
சுடர்த்தொடி மடவரற் புணர்ந்தனம் யாமே.

எ-து: இதுவுமது. பருவங்குறித்துப் பிரிந்த தலைமகன் பருவத்துக்கு முன்னே வந்து தலைவியோடு கூடிச் செல்லா நின்றுழி அதற்கு இனியனாத் தன்னுள்ளே சொல்லுவான் போன்று தலைவியறியுமாற்றாற் சொல்லியது. முன்னிலைப் புறம்.

இ-ள்: போதினிறைந்து நறிய பராகம் அழகு பெறுத் தும் புதலின் தேனையுண்டு களிக்குஞ் சுரும்புகள் பாடாநிற் கும் அழகிய புறவின்கண் மடப்பிடியைத் தழுவின களிறு, யாமும் விளக்கமமைந்த தொடியணிந்த மடவரலைப் புணர்ந் திருக்கின்றோம், எ-று.

கவினிய புதலின் எனவும் காம புறவின் எனவும் கொள் ளப்பட்டது. துகள்=பராகம், பூந்தாது. (6)

417. கார்கலந் தன்றாற் புறவே பலவுட
னேர்பரந் தனவாற் புனமே யேர்கலந்து

தாதார் பிரச மொய்ப்பப்
போதார் கூந்தன் முயங்கின ளெம்மே.

இதுவுமது.

இ-ள்: கார்காலம் கலக்கப்பட்டது புறவு; பலவுடன் ஏர் பரந்தன புனம்; அழகு கலந்து தாதையுண்ணும் வண்டுகள் மொய்ப்பப் பூக்கள் நிறைந்த கூந்தலையுடையாள் எம்மை முயங்கினாள், எ-று.

ஆல்கள் - அசை; ஏகாரங்கள் - தேற்றம்; இரண்டுக்கும் மெய்ப்பாடும் பயனும் அவை. (7)

418. வானம் பாடி வறங்களைந் தானா
தழிதுளி தலைஇய புறவிற் காண்வர
வானர மகளோ நீயே
மாண்முலை யடைய முயங்கி யோயே.

எ-து: "மீட்டுவர வாய்ந்த வகையின் கண்ணும்" (கற்பியல், 5, 46) என்பதனை இரட்டுற மொழிதலால், குறித்த பருவத்து உதவ வாராநின்ற வழிக்கண் உருவு வெளிப்பாடு கண்ட தலைமகன் இல்லத்துப் புக்குழித் தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: வானம்பாடியின் வெம்மையை நீக்கியமையாது மிக்க துளியைச் சொரிந்த புறவின் யான் காண்வர வானர மகளோ நீயே மாட்சிமையுடைய முலைகள் பொருந்த முயங்கியோய், எ-று.

ஓகாரம் - ஏகாரம், தேற்றம்; மெய்ப்பாடும் பயனும் அவை. (8)

419. உயிர்கலந் தொன்றிய செயிர்தீர் கேண்மைப்
பிரிந்துற லறியா விருந்து கவவி
நம்போ னயவரப் புணர்ந்தன
கண்டிகு மடவரல் புறவின் மாவே.

எ-து: இன்ப நுகர்ச்சிக்கேற்ற பருவம் வந்துழித் தலைமகளோடு புறவிற் சென்ற தலைமகன் அவ்விடத்து மாக்களை அவட்குக் காட்டிச் சொல்லியது.

இ-ள்: ஈருடலின் ஓர் உயிர் கலந்தொன்றிய குற்ற நீங்கிய அன்பினையும் பிரிந்துறுவதறியாது புதுவதாய்க் கலந்திட்டு நம்மைப்போல் விருப்பம் வரப் புணர்ந்தன. புறவின் கண்ணுள்ள மாக்கள், மடவரலே! காண்பாயாக. எ-று. மெய்ப்பாடும் பயனும் அவை. (9)

420. பொன்னென மலர்ந்த கொன்றை மணியெனத்
தேம்படு காயா மலர்ந்த தோன்றியொடு
நன்னல மெய்தினை புறவே நின்னைக்
காணிய வருதும் யாமே
வாணுத லரிவையொ டாய்நலம் படர்ந்தே.

எ-து: குறித்த பருவத்து எய்திய அணித்தாக வந்த தலைமகன் பருவத்தால் அணிகொண்ட புறவை நோக்கிச் சொல்லியது.

இ-ள்: பொன்னைப் போல மலர்ந்தன கொன்றை; நீல மணியைப்போல மலர்ந்தன இனிமையுடைய காயா; மலரப் பெற்ற தோன்றியோடு மிக்க நலத்தையடைந்தாய் புறவே! யாம் நின்னைக் காண ஒள்ளிய நுதலையுடைய அரிவையோடு நினது மிக்க அழகை நினைந்து வருவேம். எ-று.

என உவம உருபு "அவைதாம் அன்னவேய்ப்ப" என்ற (உவமவியல், 11ஆம்) சூத்திரத்து 'பிற'வாற் கொள்வது. ஒடுக்கள் - உடனிகழ்ச்சி; புறவே - ஏகாரம், விளி; யாமே - ஏகாரம் தேற்றம்; "நோயுமின்பமும்" (பொருளியல், 2) என்னுஞ் சூத்திரத்து விதி யான் கேளாதன கேட்பனவாகக் கூறப்பட்டது. 'மலர்ந்த' வென்பது தோன்றியோடும் கூறப்பட்டது. மெய்ப்பாடும் பயனும் அவை. (10)

கிழவன் பருவம் பாராட்டுப் பத்து முற்றிற்று

---

## 43. விரவுப் பத்து

421. மாலை வெண்காழ் காவலர் வீச
நறும்பூம் புறவி னொடுங்குமுய லிரியும்
புன்புல நாடன் மடமக
ணலங்கிளர் பணைத்தோள் விளங்கின செலவே.

எ-து: "மரபுநிலைதிரியா மாட்சியாவாகி - விரவும் பொருளும் விரவுமென்ப" (அகத்திணை, 45) என்பதால், வினை பலவற்றிற்கும் பிரிந்தொழுகுந் தலைமகன் பின்பு மனை வயின் நீங்காது ஒழுகுகின்ற காதலுணர்ந்தோர் கூறியது.

இ-ள்: மாலைக்காலத்துத் தடியைக் காவலர்களெறிய நறிய பூக்கள் பொருந்திய புறவின்கண் செடியின் ஒதுங்கியிருந்த முயல்கள் ஓடும் புன்புல நாடனது மடமகளின் அழகு வளரும் பெரிய தோள்கள் தலைவனது செலவைத் தடுத்தன, எ-று.

இறைச்சியைக் கருதியும் பயிர் அழித்தலைக் கருதியும் முயலைக் காணாதேயும் தடியைச் செடிக்கண் ணெறிந்து பிடிக்கக் கருத ஓடும் நாடன் மகளாதலின் தோள் பசந்து காட்டுதலின் வினையிற் சேறல் நின்றதென்றார். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - அன்பு மிகுதி கூறல். (1)

422. கடும்பரி நெடுந்தேர்க் கால்வல் புரவி
நெடுங்கொடி முல்லையொடு தளவமல ருதிர
விரையுபு கடைஇநாஞ் செல்லி
னிரைவளை முன்கை வருந்தலோ விலளே.

எ-து: "பேரிசை யுர்திப் பாகர் பாங்கினும்"; (கற்பியல், 5, 48) என்பதால், மீளுகின்றான் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.

இ-ள்: கடும்பரி நெடுந்தேர்க்கண் பூட்டிய காலால் வலிய புரவிகளை நெடிய கொடி முல்லையோடு செம்முல்லை மலர் உதிர விரையச் செலுத்தி நாம் சென்றால் நிரைந்த வளையணிந்த முன்கையையுடையாள் வருந்துதலிலள், எ-று

ஓகாரம் - தெரிநிலை; மெய்ப்பாடு - அழுகை; பயன் - பாகன். தேரை விரையக் கடாவல். (2)

423. மாமழை யிடியூஉத் தளிசொரிந் தன்றே
வாணுதல் பசப்பச் செலவயர்ந் தனையே
யாமே நிற்றுறந் தமையல
மாய்மல ருண்கணு நீர்நிறைந் தனவே.

*எ-து: "பெறற்கரும் பெரும்பொருள்" (கற்பியல், 9) என்னுஞ் சூத்திரத்து 'பிற'வாற் கொள்வது. கார்ப் பருவத்திலே பிரியக் கருதிய தலைமகற்குத் தோழி தலைமகளது ஆற்றாமை கூறிச் செலவழுங்குவித்தது.*

*இ-ள்: கரிய மேகங்கள் இடித்துத் துளியைச் சொரிந்தன; வாணுதல் பசக்கும் வண்ணம் செலவை விரும்பினாய்; யாம் நின்னைத் துறந்து அமையேம்; அழகிய மலர் போன்ற மையுண்ட கண்ணும் நீர்நிறையப் பெற்றன, எ-று.*

*ஏகாரம் - முன்னிரண்டும் தேற்றம்; பின்னது பிரிநிலை; உம்மை - முற்றும்மை; இது கார்ப் பருவத்தே கூறுதலான் முல்லையாயிற்று. தலைவருவிழுமம் எடுத்துக் கூறினாள். மெய்ப்பாடு - அழுகை; பயன் - செலவழங்குவித்தல். (3)*

424. புறவணி நாடன் காதன் மடமக
ளொண்ணுதல் பசப்ப நீசெலிற் றெண்ணீர்ப்
போதவிழ் தாமரை யன்னநின்
காதலம் புதல்வ னழுமினி முலைக்கே.

இதுவுமது

*இ-ள்: புறவி அணிகொண்ட நாடனது காதலையுடைய மட மகளின் ஒண்ணுதல் பசப்ப நீ சென்றால் தெண்ணீர்க் கண் போது விரியும் தாமரைபோன்ற நினது காதலையுடைய அழகிய புதல்வன் இனி (பாலுண்ண) முலையை விரும்பிய அழா நிற்கும், எ-று.*

*குறைவின்றி வளரும் புதல்வன் குறையுடையனாய் அழுவானென எதிர்கால நிகழ்ச்சி கூறியவாறு. குறை அவள் இறத்தலிற் பாலில்லாமை. 'அழுமணி' என்றும் பாடம். மெய்ப்பாடும் பய னும் அவை. (4)*

425. புன்புறப் பேடை சேவ லின்புற
மன்ன ரியவரி னிரங்குங் கானம்
வல்லை நெடுந்தேர் கடவி
னல்ல லருநோ யொழித்தலெமக் கெளிதே.

*எ-து: "பேரிசையூர்கிப் பாகர்பாங்கினும்" (கற்பியல், சூத் 5) என்பதால், வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்ப் பாகற்குச் சொல்லியது.*

*இ-ள்: மெல்லிய புறத்தையுடைய பேடு சேவல் இன்புற அரசரது வாத்தியகாரரின் றன்மைபோல இரங்காநிற்குங் காட்டைக் கடக்க விரைவில் நெடியதேரைச் செலுத்தின் பாகனே! எமக்குத் துன்பத்தைத் தரும் அரிய நோயைக் கழித்தல் எளிதாகும், எ-று.*

*சேவலின் பக்கத்தேயென்றுமாம். இன்புற, புறம் என்னு மிரண்டையும் உவமானம் உவமேயமாகிய இரண்டிடத் துங் கூட்டுக. மெய்ப்பாடு - அழுகை; பயன் பாகன் - தேரை விரையச் செலுத்துதல். (5)*

**426.** **வென்வேல் வேந்த னருந்தொழி றுறந்தினி**
**நன்னுதல் யானே செலவொழிந் தனெனே**
**முரசுபா டதிர வேவி**
**யரசுபடக் கடக்கு மருஞ்சமத் தானே**

*எ-து: "வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும்" என்ப தால், வேந்தற்குத் தானைத் தலைவனாய் ஒழுகுந்தலை மகன் பிரிந்து வினைமுடித்து வந்து தலைவியோடு கூடி யுறைகின்றுழி இன்னும் பிரியுங்கொல் என்று கருதிய தலை மகட்குக் கவற்சி தீரச் சொல்லியது.*

*இ-ள்: வெற்றி பொருந்திய வேலையுடைய அரசனது அரிய தொழிலைவிட்டு இனி, நன்னுதால்! யான் செலவை நீங்கினேன், முரசு பக்கத்தில் ஒலிக்க ஏவி வேற்றரசர் இறக்க வெற்றி கொள்ளும் போரிடத்து, எ-று.*

*போரிடத்துச் செலவை நீங்கினேன் என்க. யானே ஏகா ரம் - பிரிநிலை ஒழிந்தனெனே; ஏகாரம் - தேற்றம்; சமத் தானே - ஏகாரம் அசை. சமத்தானே என்பதில் ஆன் இடப் பொருளில் வந்தது. "குறிப்பறிவுறூஉங் காலையான"[1]*

1. இறையனாரகப். சூத்.10.

எனவும், "இன்ன என்னுஞ் சொன்முறையான" எனவும் இறையனாரும் தொல்காப்பியனாருங் கூறுதல் காண்க. ஆசிரியப்பாவீறு ஏகாரம் சிறப்புடைமையின் அகரம் ஏகாரமாய்த் திரிந்தது. ஆன் உருபு இறுதி அகரமாதல்; "குஐ ஆனென வருஉம் இறுதி அவ்வொடு சிவணும் செய்யுளுள்ளே"[1] என்பதே காத்தாகலின். மெய்ப்பாடு - அது; பயன் - தெளிவித்தல். (6)

427. பேரமர் மலர்க்கண் மடந்தை நீயே
காரெதிர் பொழுதென விடலொல் லாயே
போருடை வேந்தன் பாசறை
வாரா னவனெனச் செலவழுங் கினனே.

எ-து: இதுவுமது. 'பிரியுங்கொல்' என்று ஐயுற்று, உடன் படாமை மேற்கொண்டு ஒழுகுகின்ற தலைமகட்குத் தான் பிரிவொழிந்தற்குக் காரணங் கூறித் தேற்றியது.

இ-ள்: பெரிய விருப்பத்தைத் தரும் மலர்போலுங் கண்ணையுடைய மடந்தை! நீ கார்காலமென யான் போதற்குப் பொருந்தாய்; போர்த்தொழிலையுடைய வேந்தன் பாசறைக்கு அவவாரான் என்று செலவு தவிர்ந்தான்; ஆதலின் நானினிப் போதலின்று, எ-று.

ஏகாரம் - தேற்றம்; மெய்ப்பாடும் பயனும் அவை. (7)

428. தேர்செல வழுங்கத் திருவிற் கோலி
யார்கலி யெழிலி சோர்தொடங் கின்றே
வேந்துவிடு விழுத்தொழி லொழிய
யான்றொடங் கினனா னிற்புறந் தரவே.

எ-து: இதுவுமது. 'பிரியுங்கொல்' என்று ஐயுற்ற தலைகள் ஐயந்தீரச் சொல்லியது.

இ-ள்: யாம் செல்லுந்தேர் செலவழுங்கும் வண்ணம் அழகிய வில்லை வளைத்து நிறை முழக்கத்தையுடைய மேகம் சொரிதலைத் தொடங்கியது; அரசனாலேவப்படும் பெருமை

1. தொல். சொல். வேற். மயங். சூத்.25.

*யார்ந்த வினைநீங்கி, யான் நின்னைப் புறந்தருதலைத் தொடங்கினேன், எ-று.*

*ஏகாரம் - தேற்றம்; ஆல் - அசை; ஒழிய ஒழிந்து எனத் திரிக்கப்பட்டது. 'கார் தொடங்கின்றே' என்றும் பாடம். திருவில் - இந்திரவில் என்ப. சிலப். அடைக்கலக்காதை 156ம் அடி உரையிற் காண்க.*

*மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் ஐயந் தீர்த்தல். (8)*

**429.** **பல்லிருங் கூந்தல் பசப்பு நீவிடிற்**
**செல்வேந் தில்ல யாமே செற்றார்**
**வெல்கொடி யரண முருக்கிய**
**கல்லா யானை வேந்துபகை வெலற்கே.**

*எ-து: இதுவுமது. குறிப்பினாற் பிரிவுணர்ந்து வேறு பட்ட தலைமகள் உடம்படுவாளாக வேந்தர்க்கு உற்றுழிப் பிரியுந் தலைமகன் சொல்லியது.*

*இ-ள்: பலவாய கரிய கூந்தலையுடையாய்! நீ பசப்பை விடின், பகைவரது வெற்றிக்கொடி நாட்டிய மதிலை யழித்த பிறதொழிலைக் கற்றறியாத யானைப் படையை யுடைய வேந்தனது பகை வெல்லுதற்கு யாம் இக்காலத்துச் செல்வோம், எ-று.*

*தில்ல - காலத்தின் வந்தது; யாமே - ஏகாரம் பிரிநிலை; 'செற்றார் அரண முருக்கிய கல்லாயானைவேந்து பகை வெலற்கு' எனவே ஒரு தலையானே பகையை வென்று நீட் டியாது வருவல் என்று உடன்படுமாறு கூறினான். மெய்ப் பாடும் பயனும் அவை. (9)*

**430.** **நெடும்பொறை மிசைய குறுங்காற் கொன்றை**
**யடர்பொன் னென்னச் சுடரிதழ் பகருங்**
**கான்கெழு நாடன் மகளே**
**யழுத லான்றிசி னழுங்குவல் செலாவே.**

*எ-து: இதுவுமது. 'பிரியுங்கொல்' என்று ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் பருவ வரவு கூறி இது காரணத் தாலும் பிரியேன் எனக் கூறியது.*

*இ-ள்: நெடிய மலையின் மேலுள்ள குறிய காலையுடைய கொன்றை தகட்டுப் பொன்போலச் சுடர் பொருந்திய இதழைக் கொடுக்குங் காடு பொருந்திய நாடனது மகளே! நீ அழுதலை அமைவாயாக; யான் செலவை யொழிவேன். எ-று. மெய்ப்பாடும் பயனும் அவை.*

*ஐயுறுதலெங்ஙனமாயின்: தலைமகன் கச்சை முதலியன அணிதலும் அம்பு முதலியன தெரிந்தெடுத்துத் திருத்துதலும் பள்ளியிடத்திருந்து முன்னாட்களினும் விசேடமாக அருளிச் செய்தலும் முதலியன. இவற்றையறிந்த தலைவி இவை பண்டு போலா; பெரிதும் மகிழத்தக்கன போலக் காட்டின; பிரியக் கருதினான் கவடு போலும்; மற்று நின்னிற் பிரியேன் பிரியின் ஆற்றேனாவேன் என்ற சொல் பொய்ப்பட்டதாமென ஆற்றாளாயினாள். "துன்புறு பொழு தினு மெல்லாங்கிழவன் - வன்புறுத்தல்லது சேறலில்லை"[1] என்பதும் "செலவிடைய முங்கல்; செல்லாமை யன்றே - வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்"[2] என்பது மோத்தாகலின் ஆற்றிப் பின்செல்லுமென் பது. இது பாலை. வற்புறுத்தலும் செலவழுங்கலுமாகிய தலைக் கூற்றுப் பாலைப் பகுதிக்கெல்லாங் கொள்க. (10)*

விரவுப் பத்து முற்றிற்று

---

## *44. புறவணிப் பத்து*

**431.** **நன்றே காதலர் சென்ற வாறே**
**யணிநிற விரும்பொறை மீமிசை**
**மணிநிற வுருவின தோகையு முடைத்தே.**

*எ-து: "எல்லா வாயிலு மிருவர் தேஎத்தும், புல்லிய மகிழ்ச்சிப் பொருளவென்ப" (தொ.கற்.சூ.37) என்றும், "எல்லா வாயிலும் கிழவோன் பிரிவயிற் - பல்லாற் றானும் வன் பொறை குறித்தன்று" (இறையனாரகப். சூத். 53) என்றும், தோழி உறுகணோம்பலை உடையள் என்பதால், 'பிரி*

1. தொ. கற். சூ.43.
2. தொ. கற். சூத்.44.

வுடம்பட்டும் ஆற்றாய் ஆகின்றது என்னை?' என்று வினவிய வழி, 'அவர் போனசுரம் போகற்கரிதென்று ஆற்றேனாகின்றேன்' என்ற தலைமகட்கு 'வேனிற் காலங்கழிந்தது; கார்ப் பருவத் தோற்றத்திலே பிரிந்தாராகலான் அச்சுரம் நன்று' எனத் தோழி சொல்லி ஆற்றுவித்தது.

இனி வருகின்ற பாட்டு ஒன்பதிற்கும் இஃது ஒக்கும்.

இ-ள்: நம் காதலர் சென்றவழி அழகிய நிறம் பொருந்திய பெரிய மலையின்மேல் மணிபோலும் நிறத்தையுடைய சாயலைப் பொருந்தியவாய மயில்களுமுடையதாகலின் நன்று ஆற்றுவாய், எ-று.

நன்றே - ஏகாரம் தேற்றம்; ஆறே - ஏகாரம் பிரிநிலை; உம்மை மரங்களும் தளிர்த்தன அலர்ந்தன என்று சொல்ல வேண்டுதலின் எச்சம். மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஆற்றுவித்தல்; இவை பத்துக்கும் மெய்ப்பாடும் பயனும் இவை. (1)

432. நன்றே காதலர் சென்றவாறே
சுடுபொ னன்ன கொன்றை சூடிக்
கடிபுகு வனர்போன் மள்ளரு முடைத்தே.

இ-ள்: தோழி! நன்று, காதலர் சென்ற சுரம்; யாதானாயின், ஓடவைத்த பொன்னைப்போன்ற கொன்றை மலரைச் சூடிக் கலியாணத்துக்குப் போகின்றவர்களைப் போன்மள்ளரையுமுடைத்தாய் இருக்கின்றது, எ-று. (2)

433. நன்றே காதலர் சென்ற வாறே
நீர்ப்பட வெழிலி வீசுங்
கார்ப் பெயற் கெதிரிய கானமுமுடைத்தே.

இ-ள்: தோழி! காதலர் போன சுரம் நன்று; யாதானாயின் நீருண்டாக மேகங்கள் வீசுங் கார்காலத்துப் பெயலை யேற்றுக் கொண்ட காடுமுடைத்து, எ-று.

பெயற்கு என்பதில் கு உருபு ஐ உருபுப் பொருளின் வந்தது. (3)

434. நன்றே காதலர் சென்ற வாறே
மறியுடை மான்பிணை யுகளத்
தண்பெயல் பொழிந்த வின்பமு முடைத்தே.

*இ-ள்: தோழி! காதலர் சென்ற சுரமானது நன்று. கன்றை யுடைய மான்பிணை துள்ளத் தண்ணிய மழை பொழிந்த இன்பமும் உடைத்து, எ-று.* (4)

435. நன்றே காதலர் சென்ற வாறே
நிலனணி நெய்தன் மலரப்
பொலனணி கொன்றையும் பிடவமு முடைத்தே.

*இ-ள்: தோழி! காதலர் போன சுரம் நன்று; யாதானாயின், நிலன் அணிந்த நெய்தல் மலரப் பொன்னையணிந்த கொன்றையும் பிடவமும் உடைத்து, எ-று.* (5)

436. நன்றே காதலர் சென்ற வாறே
நன்பொ னன்ன சுடரிணர்க்
கொன்றையொடு மலர்ந்த குருந்துமா ருடைத்தே.

*இ-ள்: தோழி! காதலர்போன சுரம் நன்று; யாதானாயின், மாற்றுயர்ந்த பொன்போலும் ஒளி பொருந்திய பூக்கொத்துக் களையுடைய கொன்றையினோடும் மலர்ந்த குருந்த மரங் களையுடைத்து, எ-று.* (6)

437. நன்றே காதலர் சென்ற வாறே
யாலித் தண்மழை தலைஇய
வாலிய மலர்ந்த முல்லையு முடைத்தே.

*இ-ள்: தோழி! காதலர் சென்ற சுரம் நன்று; யாதானா யின், ஆலாங்கட்டிகள் அமைந்த குளிர்ந்த மழை சொரிய வாலியவாய மலர்ந்து முல்லையுமுடைத்து, எ-று.* (7)

438. நன்றே காதலர் சென்றே வாறே
பைம்புதற் பல்பூ மலர
வின்புறத் தகுந பண்புமா ருடைத்தே.

*இ-ள்: தோழி! காதலர்போன சுரம் நன்று; யாதானா யின், பசிய புதல்கள் பல பூக்களை மலர்தலின இன்பமுறத் தக்கவையான பண்பினையுடைத்து. எ-று.* (8)

439. நன்றே காதலர் சென்ற வாறே
குருந்தங் கண்ணிக் கோவலர்
பெருந்தண் ணிலைய பாக்கமு முடைத்தே.

*இ-ள்: தோழி! காதலர்போன சுரம் நன்று; யாதானாயின், குருந்த மலராலாய அழகிய கண்ணியையுடைய இடையரது பெரிய தண்ணிய நிலையவாய பாக்கத்தையுமுடைத்து, எ-று.*

*கண்ணி = முடியில் அணியும் மாலை என்பது சிந். நாமகளிலம்பகம் 164ஆம் செய்யுளிற் காண்க. பாக்கம் = சிற்றூர். (9)*

440. நன்றே காதலர் சென்ற வாறே
தண்பெய லளித்த பொழுதி
னொண்சுடர்த் தோன்றியும் தளவமு முடைத்தே.

*இ-ள்: தோழி! காதலர்போன சுரம் நன்று; யாதானாயின், குளிர்ந்த மழை பெய்து பாதுகாத்த காலத்தின் ஒள்ளிய விளக்குப்போலும் மலரையுடைய தோன்றியும் செம்முல்லையுமுடைத்து, எ-று.*

*நன்றே - ஏகாரம் பிரிநிலை; ஆறே - ஏகாரம் தேற்றம்; இப்பத்தின் கண்ணுள்ளவற்றிற்கும் இஃதொக்கும். உம்மை எச்சம். ஒண்சுடரென்னும் அடையான் செம்பூவென்பது பெறப்படும். இப்பத்துக்கும் மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஆற்றுவித்தல். (10)*

புறவணிப் பத்து முற்றிற்று.

---

## *45. பாசறைப் பத்து*

441. ஐய வாயின செய்யோள் கிளவி
கார்நா ளுருமொடு கையறப் பிரிந்தென
நோய்நன்கு செய்தன வெமக்கே
யாமுறு துயரமவ ளறியினோ நன்றே.

*எ-து: "ஒன்றாத் தமரினும்" (அகத்திணை. 41) என்னுஞ் சூத்திரத்துப் "பாசறைப் புலம்பலும்" என்பதால், சென்ற வினை முடியாமையிற் கார்காலம் வந்தவிடத்து மீளப் பெறாத தலைமகன் தலைமகளுழை நின்றும் வந்த தூதர் வார்த்தை கேட்டு இரங்கியது.*

*இ-ள்: வியக்கத்தக்கவாயின செய்யோள் கிளவிகார் கால இடியேறோடு செயலறும் வண்ணம் பிரிந்ததனால் எமக்கு நோயை மிகச் செய்தன; யாமிவ்விடத்துறு துயரம் அவளறியின் நன்று, எ-று.*

*செய்யோள் கிளவி வியக்கத்தக்கவாயின; பிரிந்தே னாகக் கார்காலம் இடியோடு செயலறும் வண்ணம் மிக நோயைச் செய்தன எமக்கு; யாமிவ்விடத் துறுகின்ற துய ரத்தை யவளறியின் நன்று என்றுமாம்.*

*இப்பத்திற்கும் மெய்ப்பாடு - அவலம்; பயன் - தலைமக ளைக் காண்டல்.* (1)

**442.** பெருஞ்சின வேந்த னருந்தொழி றணியின்
விருந்துநனி பெறுதலு முரியண் மாதோ
விருண்டுதோன்று விசும்பி னுயர்நிலை யுலகத்
தருந்ததி யனைய கற்பிற்
குரும்பை மணிப்பூட் புதல்வன் றாயே.

*எ-து: வேந்தற் குற்றுழிப் பிரிந்த தலைமகன் வினை முடியாமையிற் பாசறைக் கண்ணிருந்து பருவவரவின்கட் சொல்லியது.*

*இ-ள்: பெருஞ்சினத்தையுடைய வேந்தனது அரிய போர்த் தொழில் முற்றப்பெறின், இருண்டு தோன்றா நிற் கும் விசும்பின் உயர்ந்த நிலைத்தாகியவுலகத்துள்ள அருந் ததி போலுங் கற்பினையுடைய குரும்பைபோன்ற வடிவுள் மணிகளையுடைய கிண்கிணிப் பூணணித்த புதல்வன் தாயா னவள் விருந்தாற்றுதலை மிகப் பெறுவாள், எ-று. மாதோ அசை.* (2)

**443.** நனிசேய்த் தென்னாது நற்றே ரேறிச்சென்
றிலங்கு நிலவி னிளம்பிறை போலக்

காண்குவெந் தில்லவவள் கவின்பெறு சுடர்நுதல்
விண்ணுய ரரண்பல வெளவிய
மண்ணுறு முரசின் வேந்துதொழில் விடினே.

*இதுவுமது.*

*இ-ள்: விண்ணளவோங்கிய அரண்கள் பலவற்றைக் கைக்கொண்ட சீவிச் செய்யப்பட்ட வெற்றி முரசினை யுடைய வேந்தனது தொழிலை விடப்பெறின், மிகத் தூரிய என்று கருதாது நல்ல தேரையேறிச் சென்று, விளங்கும் நில வினையுடைய எண்ணாட் பக்கத் திளம்பிறையைப் போல விளங்கும் அவளது அழகு பெறும் சுடர்நுதலைக் காண பேம், எ-று.*

"மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப்
பசுவெண் டிங்கள் தோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குஞ் சுடர்நுத லென்ப"[1]

*என்றார் குறுந்தொகையினும். தில்ல - விழைவின் கண்ணது. மண்ணுதல்-சீவுதல். 'மண்ணாமுச்சி' என்பதாலுணர்க. (3)*

444. பெருந்தோண் மடவரற் காண்குவெந் தில்ல
நீண்மதி லரணம் பாய்ந்தெனத்தொடி பிளந்து
வைந்நுதி மழுகிய தடங்கோட் டியானை
வென்வேல் வேந்தன் பகைதணிந்
தின்னுந் தன்னாட்டு முன்னுதல் பெறினே.

*இதுவுமது*

*இ-ள்: பெருந்தோளையுடைய மடவரலைக் காண்பேம், நீண்ட மதிலாலாகிய அரணத்தைப் பாயத் தொடிப்பூண் பிளந்து கூரிய நுதி மழுங்கிய வளைந்த கோட்டையுடைய யானையையுடைய வெற்றி பொருந்திய வேலையுடைய அரசன் பகையைத் தணிந்து இன்னுந் தன்னாட்டுக்குப் போதலைக் கருதப்பெற்றால், எ-று. தில்ல - விழைவின் கண்ணது. (4)*

445. புகழ்சால் சிறப்பிற் காதலி புலம்பத்
துறந்துவந் தனையே யருந்தொழிற் றகட்டூர்

---

1. குறுந்தொ. செய். 129.

நல்லேறு தழீஇ நாகுபெயர் காலை
யுள்ளு தொறுங் கலிழு நெஞ்சம்
வல்லே யெம்மையும் வரவிழைத் தனையே.

*எ-து: பாசறைக் கண்ணிருந்த தலைமகள் பருவ வரவின் கண் தலைமகளை நினைந்து நெஞ்சொடு புலந்து சொல்லியது.*

*இ-ள்: புகழ் நிறை சிறப்பினையுடைய காதலி புலம்பும்படி அவளை விட்டு இங்கு வந்தனையே; அருந் தொழிலையுடைய பாசறையின்கண் நல்ல ஏற்றைத் தழுவி நாகானது போகும் பொழுது, அவற்றின் செயலை நினைக்குந்தோறுங் கவிழும் மனமே! விரை வில் எம்மையும் வரும்படி செய்தாய், எ-று. ஏகாரம் - பிரிநிலை; உம்மை - எச்சம்; 'வரவழைத்தனையே' என்றும் பாடம். (5)*

**446.** முல்லை நாறுங் கூந்தல் கமழ்கொள
நல்ல காண்குவ மாஅ யோயே
பாசறை யருந்தொழி லுதவிநங்
காதனன் னாட்டுப் போதரும் பொழுதே.

*எ-து: பாசறைக்கண்ணிருந்த் தலைமகன் பருவ வரவின் கண் உருவு வெளிப்பாடு கண்டு சொல்லியது.*

*இ-ள்: முல்லைப்பூ மணம் வீசுங் கூந்தலானது வாசனை கமழ நல்லவற்றை யாம் காண்பேம், மாயோயே! பாசறையின் அரிய தொழிலையுதவி நம்முடைய விருப்பமமைந்த நல்ல நாட்டிற்குப் போம்பொழுதின், எ-று. (6)*

**447.** பிணிவீடு பெறுக மன்னவன் றொழிலே
பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை
யாடு சிறைவண் டவிழ்ப்பப்
பாடல் சான்ற காண்கம்வா ணுதலே.

*எ-து: வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் அவண் வினைமுற்றி மீளும் வேட்கையானாய்ப் பருவ வரவின்கண் தலைமகளை நினைத்துச் சொல்லியது.*

*இ-ள்: வேந்தனது போர்த்தொழில் பிணிப்புவிடுவ தாக; பனியால் வளரும் செம்முல்லையின் சிச்சிலிவாய் போலுஞ் செவ்விய முகையிடத்து ஆடும் சிறை வண்டா னது விரிப்பப் பாடல் சான்றன காண்பேம், வாணுதலே! எ-று. ஏகாரம் - பிரிநிலை.* *(7)*

**448.** தழங்குரன் முரசங் காலை யியம்பக்
கடுஞ்சின வேந்தன் றொழிலெதிர்ந் தனனே
மெல்லவன் மருங்கின் முல்லை பூப்பப்
பொங்குபெயற் கனைதுளி காரெதிர்ந் தன்றே
யஞ்சி லோதியை யுள்ளுதொறுந்
துஞ்சா தலமர னாமெதிர்ந் தனமே.

*எ-து: இதுவுமது. வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலை மகன் பருவம் வந்தவிடத்தினும் மீளப்பெறாது அரசன் செய்தியும் பருவத்தின் செய்தியும் தன் செய்தியும் கூறி ஆற் றானாயது.*

*இ-ள்: தழங்குங் குரலினையுடைய முரசானது காலை யின் ஒலியா நிற்கக் கடுஞ்சினத்தையுடைய அரசன் போர்த் தொழிலை யெதிர்ந்தான்; மெல்லென அவன் பக்கத்தே முல்லைகள் பூக்கும் வண்ணம் மிகுந்த பெயலாகிய நெருங் குந் துளியைக் கார்காலம் எதிர்ந்தது, அழகிய சிலவாகிய கூந்தலையுடையாளை நினைக்குந்தோறும் துஞ்சாது துன் பத்தை நாம் ஏற்றுக்கொண்டேம், எ-று. 'தழங்கு குரல்', 'முழங்கு குரல்' என்பனவும் பாடம்.* *(8)*

**449.** முரம்புகண் ணுடையத் திரியுந் திகிரியொடு
பணைநிலை முணைஇய வயமாப் புணர்ந்து
திண்ணிதின் மாண்டன்று தேரே
யொண்ணுதற் காண்குவம் வேந்துவினை விடினே.

*எ-து: முற்சூத்திரத்து "முடிந்தகாலத்துப், பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்" (அகத்திணை, 41) என்ப தால், பாசறைக்கண் வேந்தனொடு வினைப்பொருட்டாற் போந்திருந்த தலைமகன் அவ்வேந்தன் மாற்று வேந்தர் தருதிறைகொண்டு மீள்வானாகப் பொருந்துழித்தானும்*

மீட்சிக்குத் தேரைச் சமைத்த எல்லைக்கண்ணே அவ்வரசன் பொருத்தந்த விர்ந்து மீண்டும் வினைமேற் கொண்டானாகக் கூறியது.

இது வேந்தன் திறைகொண்டு மீள்வுழித்தானும் சமைத்த தேரை அழைத்துக் கண்டு திண்ணிதின் மாண்டன்று தேர் எனப் பாகனொடு கூறியவழி, அவ்வேந்தன் திறை வாங்காது பகைமேற் சென்றானாகப் பாகனை நோக்கிக் கூறியது. இது நச்சினார்க்கினியர் கருத்து.

மீள்வானாகப் பிரிந்துழித் தேர் சமைத்து அழைத்துழைக் கண்டவெல்லைக்கண் என்பது புத்தகப் பாடபேதம்.

இ-ள்: பருக்கைக் கற்கள் கண் உடையத் திரிகின்ற திகிரியோடும், பந்தியின் நிற்றலை வெறுத்த வெற்றியையுடைய குதிரைகள் பூண்டு தேர் திண்திணதாய் மாட்சிமைப் பட்டது; வேந்தன் போரைத் தவிரின் நாம் ஒள்ளிய நுதலையுடையாளைக் காண்பேம், எ-று. ஒடு - உடனிகழ்ச்சி; ஏகாரம் - தேற்றம். (9)

**450.** முரசுமாறிரட்டு மருந்தொழிற் பகைதணிந்து
நாடுமுன் னியரோ பீடுகெழு வேந்தன்
வெய்ய வுயிர்க்கு நோய் தணியச்
செய்யோ ளிளமுலைப் படீஇயரென் கண்ணே.

எ-து: "பாசறைப் புலம்பல்" என்பதால், வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன் வினைமுற்றாமையிற் பாசறைக் கண்ணிருந்து தன் மனக் கருத்துரைத்தது.

இ-ள்: போர்ப்பறை மாறாக ஒலிக்கும் அரிய தொழில் பொருந்திய பகையைத் தணிந்து பெருமையமைந்த வேந்தன் தன் நாட்டைக் கருதுவானாக, வெய்யவாய நெட்டுயிர்ப்புக் கொள்ளும் நோய்தணியச் செய்யோளது இளமுலையிடத்து என் கண்களானவை படுக, எ-று. 'இடைமுலை' என்று பாடம். இப்பத்துக்கும் மெய்ப்பாடு அவலம்; பயன் - தலைமளைக் காண்டல். (10)

பாசறைப் பத்து முற்றிற்று

---

## 46. பருவங்கண்டு கிழத்தியுரைத்த பத்து

451. கார்செய் காலையொடு கையறப் பிரிந்தோர்
தேர்தரு விருந்திற் றவிர்குதல் யாவது
மாற்றருந் தானை நோக்கி
யாற்றவு மிருத்தல் வேந்தனது தொழிலே.

*எ-து: "அவனறிவாற்றவறியுமாகலின்" (கற்பியல், 6) என்னுஞ் சூத்திரத்துப் "பல்வேறு நிலையினும்" என்பதால், வேந்தர்க் குற்றுழிப்பிரிந்த தலைமகன் குறித்த பருவ நினைந்து ஆற்றியிருந்த தலைமகள் அப்பருவ வரவின்கட் பாசறையி னின்றும் வந்தார். அரசன் செய்தி கூறக்கேட்டு ஆற்றாளாய்ச் சொல்லியது.*

*இ-ள்: கார்செய்காலையுடன் செயலறும் வண்ணம் பிரிந்தோர் தேரானது தரும் விருந்தினைத் தாராது விடுதல் எத்தன்மையது? மாற்றுதற்கரிய சேனையைப் பார்த்து மிகவும் தங்குதல் வேந்தனது தொழில், எ-று.*

*யாவது = எத்தன்மையது. வருவர் என ஆற்றாளரனாள் அவன் செய்தி கேட்டு நீட்டித்திருத்தல் அவன் தொழில் என ஆற்றினாளென்க. இப்பத்திற்கும் மெய்ப்பாடு - அவலம்; பயன் - தலை மகனைக் காண்டல். (1)*

452. வறந்த ஞாலந் தெளிர்ப்ப வீசிக்
கறங்குர லெழிலி கார்செய் தன்றே
பகைவெங் காதலர் திறைதரு முயற்சி
மென்றோ ளாய்கவின் மறையப்
பொன்புனை பீரத் தலர்செய் தன்றே.

*எ-து: இதுவுமது. குறித்த பருவத்து வாராது தலைமகன் பகைமேல் முயல்கின்ற முயற்சி கேட்ட தலைமகள் கூறியது.*

*இ-ள்: நீர் வற்றிய கோடைக்காலந் தளிர்தலுண்டாகத் துளியைச் சிதறிக் கறங்கு குரலையுடைய மேகம் கார்காலத்தையுண்டாக்கியது; பகையை விரும்பிய நங்காதலர் மாற்று வேந்தரை வென்று திறை வாங்க முயலும் முயற்சியானது*

நம் மெல்லிய தோள்களின் மிக்க அழகு மறையும்படி பொன்னாற் புனைந்தாற் போலும் பீர்க்கலரையுண்டாக்கியது. பீர்க்கலர் = பீர்க்கம்பூ. (2)

453. அவலுறுந் தேரை தெவிட்ட மிசைதொறும்
வெங்குரற் புள்ளின மொலிப்ப வுதுக்காண்
கார்தொடங் கின்றாற் காலை யதனா
னீர்தொடங் கினவா னெடுங் கணவர்
தேர்தொடங் கின்றா னம்வயி னானே.

எ-து: பருவங் கண்டாற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: பள்ளத்தினுள்ள தேரையொலிக்க, மேலிடந்தோறும் வெவ்விய குரலையுடைய பறவைகள் ஒலிக்க, உவ்விடத்தே காண்பாயாக! காரைத் தொடங்கியது காலம், அதனால் நீரைச் சொரியத் தொடங்கின நெடிய கண்கள், நம்மிடத்து அவர் தேர் வரத் தொடங்குல் இல்லையாயிற்று, எ-று. ஆல், ஆன்கள் அசை, 'மிசைதொறும்' = அவற்றையுண்ணுந் தொறும் எனினுமாம். (3)

454. தளவின் பைங்கொடி தழீஇப் பையென
நிலவி னன்ன நேரரும்பு பேணிக்
கார்நயந் தெய்து முல்லையவர்
தேர்நயந் துறையுமென் மாமைக் கவினே.

எ-து: பருவ வரவின்கண் தலைமகள் ஆற்றாளாய்த் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: தளவினது பசிய கொடியைத் தழுவி மெல்லென நிலவைப் போன்ற ஒத்த அரும்பைப் பாதுகாத்துக் கார் காலத்தை விரும்பியிருக்கும் முல்லைக்கொடி; தலைவரது தேர் வரவை விரும்பி இருக்கும் எனது மிக்க அழகு, எ-று. (4)

455. அரசுபகை தணிய முரசுபடச் சினைஇ
யார்குர லெழிலி சோர்தொடங் கின்றே

யளியவோ வளிய தாமே யொளிபசந்து
மின்னிழை நெகிழச் சாஅய்த்
தொன்னல மிழந்தவென் றடமென் றோளே.

*எ-து: ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.*

*இ-ள்: அரசன் பகைமேற் சென்ற தொழில் குறைய முரசொலியடங்க, கோபித்து நிறைந்த குரலையுடைய மேகம் மழையைச் சொரிதலைத் தொடங்கியது; அளியவோ? அளியதாமே, ஒளி பசப்பூரப்பட்டு ஒளியையுடைய இழை நெகிழும் வண்ணம் மெலிந்து பழைய அழகு இழக்கப் பெற்றன எனது பெரிய மெல்லிய தோள்களானவை, எ-று.*

*ஏகாரம் - முன்னது தேற்றம்; பின்னவை - அசை; ஒகாரம் - இரக்கம்.*

*(பழையவுரை) அரசு பகை தணிந்து எல்லாரும் மீளும் வண்ணம் கார் வந்தது; இத்தோளுக்குரியவரோ போதார்.* (5)

456. உள்ளார் கொல்லோ தோழி வெள்ளிதழ்ப்
பகன்மதி யுருவிற் பகன்றை மாமலர்
வெண்கொடி யீங்கைப் பைம்புத லணியு
மரும்பனி யளைஇய கூதி
ரொருங்கிவ ணுறைத றெளித்தகன் றோரே.

*எ-து: குறித்த பருவம் வரவும் தலைமகன் வந்திலனாக ஆற்றாளகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*இ-ள்: நம்மை நினையார் கொல்லோ? தோழியே! வெள்ளிய இதழையுடைய பகற்சந்திரன் போலும் வடிவு பொருந்திய பகன்றையினது பெரிய மலர் வெண்கொடியைப் பசிய ஈங்கைப் புதலானது அணியா நிற்கும் அரிய பனி கலந்த கூதிர்காலத்தே ஒருசேர இவ்விடத்து யாம் தங்குவேமென்பதைத் தெளிவித்துச் சென்றவர், எ-று. கொல்லோ - ஐயவினா.* (6)

457. பெய்பனி நலிய வுய்தல்செல் லாது
குருகின நரலும் பிரிவருங் காலைத்

துறந்தமை கல்லார் காதலர்
மறந்தமை கல்லாதென் மடங்கெழு நெஞ்சே.

*எ-து: பருவ வரவின்கண் ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகன் சொல்லியது.*

*இ-ள்: பெய்யும் பனி வருத்த உய்யமாட்டாது, பறவை யினம் ஒலிக்கும் பிரிதலரிய காலத்து நம்மைப் பிரிந்திருத் தலைப் பொருந்தமாட்டார் காதலர், அதனை மறந்திருக்க மாட்டாது, என்னுடைய மடம்பொருந்திய நெஞ்சம், எ-று.*

*'மடங்கெழுநெஞ்சே' என்றாள் தலைவர் பிரிந்திருக் குங் காலத்து அவனாற் கற்பிக்கப்பட்ட கற்பனையைக் கடந் திரங்குதல் தகாதென்பதை நினைந்து மனத்தின்மேல் ஏற்றிக் கூறினாள். எனவே தானாற்றினேனென்பதுபடக் கூறினாள்; எப்படியெனின் நான் ஆற்றேனாயன்று கவல்கின்றது, அவர் குறித்த பருவம் வந்தது கண்டு தாமெடுத்துக் கொண்ட வினைமுடியாது வருந்தி வருவர் கொல்லோ என ஆற்றே னாயினேனென்பது. இதனை மேற்போந்தனவும் வருவனவு மாகிய கிளவிகட்கெல்லாங் கொள்க. (7)*

458. துணர்க்காய்க் கொன்றை குழற்பழ மூழ்த்தன
வதிர்பெயற் கெதிரிய சிதர்கொ டண்மலர்
பாணர் பெருமகன் பிரிந்தென
மாணல மிழந்தவென் கண்போன் றனவே.

*எ-து: பருவங்குறித்துப் பிரிந்த தலைமகன் வரவு பார்த் திருந்த தலைமகன் பருவமுதிர்ச்சி கூறி ஆற்றாளாயது.*

*இ-ள்: கொத்தாகக் காய்கள் பொருந்திய கொன்றை மரங் கள் குழல்போலும் பழத்தை உதிர்த்தன; அதிரும் பெயலுக்கு ஏற்றுக் கொண்ட சிந்துதலுற்ற குளிர்ந்த மலர்கள் பாணர் பெருமகனாகிய தலைவன் பிரிய மாட்சிமை பொருந்திய அழகையிழந்த எனது கண்களைப் போன்றன, எ-று.*

*கொன்றைப் பழத்தைக் குழற்குவமை கூறுதல் "கொன் றைப் பழக் குழற்கோதையர்" என்ப வளையாபதியினும். இனிக்*

"கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ"[1] என வேய்ங் குழலும் என்ப சிலப்பதிகாரத்தும், கொன்றைமலரைக் கண் ணுக்குவமையாக "கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்"[2] என மேலுங் கூறுவர். பழ மூழ்த்தன, மலர் கண்போல் அழ கிழந்தன எனப் பருவமுதிர்ச்சி கூறியது. சிதா=சிந்துதல். (8)

459. மெல்லிறைப் பணைத்தோட் பசலை தீரப்
புல்லவு மியைவது கொல்லோ புல்லா
ராரண்கடந்த சீர்கெழு தானை
வெல்போர் வேந்தனொடு சென்ற
நல்வய லூர னறுந்தண் மார்பே.

எ-து: வேந்தன் வினைமுற்றினான் நின் காதலர் கடுக வரு வர் எனக்கேட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

இ-ள்: மெல்லிய முன்சந்தினைப் பொருந்திய பணை போலும் தோள்கள் பசலை நீங்க, புல்லவும் இயைவது கொல்லோ? பகைவரது வெல்லற்கரிய அரணத்தை வெற்றி கொண்ட சிறப்பினையுடைய சேனையையுடைய போரை வெல்லுகின்ற அரசனோடு போன நல்ல வயலூரனது, நறிய தண்ணிய மார்பினை, எ-று.

கொல் - ஐயம்; ஓகாரம் - சிறப்பு.; ஒடு - உடனிகழ்ச்சி. "நிலம் பெயர்ந்துறைபு நிலையியன் மருங்கிற்-களவுறை கிளவி தோன்றுவதாயிற் - றிணைநிலைப் பெயர்க்கோள் கிழவற் கும் வரையார்"[3] என்றும், "திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே"[4] என்றுங் கூறலின் ஊரன் எனப்பட்டது. (9)

460. பெருஞ்சின வேந்தனும் பாசறை முனியா
னிருங்கலி வெற்பன் றூதுந்தோன்றா
ததையிலை வாழை முழுமுத லசைய
வின்னா வாடையு மலைக்கு
மென்னா குவென்கொ லளியென் யானே.

எ-து: வேந்தற்குற்றுழிப் பிரிந்த தலைமகனைப் பருவ முதிர்ச்சியினும் வரக்காணாது தலைமகள் சொல்லியது.

1. சிலப். 17. ஆய்ச்சியர் பாட்டு, 1
2. இந்நூல், செய். 500.
3. இறையனாகப். சூ. 51.
4. தொ. அகத். சூ. 12.

*இ-ள்: பெரிய சினத்தையுடைய வேந்தனும் பாசறைக் கண்ணிருத்தலை வெறான்; பெரிய முழக்கத்தையுடைய நம் வெற்பனது தூதும் வருதலின்று; நெருங்கிய இலையை யுடைய வாழையின் பெரிய அடி அசையும்படி துன்பஞ் செய்யும் வாடையும் அலைவைச் செய்யும்; எளியனாகிய யான் எவ்விதமாவேன், எ-று.*

*வேந்தனும்; உம்மை எச்சம்; தூதும் - உம்மை சிறப்பு வாடையும்; உம்மை முற்று. இப்பத்துக்கும் மெய்ப்பாடு - அவலம்; பயன் - தலைமகனைக் காண்டல்.* *(10)*

பருவங்கண்டு கிழத்தியுரைத்த பத்து முற்றிற்று

---

## *47. தோழி வற்புறுத்த பத்து*

461. வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக்
கான்பிசிர் கற்பக் கார்தொடங் கின்றே
யினையல் வாழி தோழி யென்பதூஉ
நிற்றுறந் தமைகுவ ரல்லர்
வெற்றி வேந்தன் பாசறை யோரே.

*எ-து: "பெறற்கரும் பெரும் பொருள்" (கற்பியல், 9) என் னும் சூத்திரத்து 'பிறவும்' என்பதால், பிரிவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி வரவுகூறி, 'உரைத்தபருவம் வந்ததாக லான் அவர் வருவார்' என வற்புறீஇயது.*

*இ-ள்: மேகம் சிந்துகின்ற துளி முதலிய கூட்டத்தி னால் பிடவானது மொட்டுக்கள் விரிய, கானம் சிந்துதல் செய்யக் கார் தொடங்கியது; தோழியே! வாழி, வருந்தற்க; சிறிதும் நின்னைத் துறந்து இருப்பாரல்லர், வெற்றி பொருந் திய வேந்தனது பாசறைக்கட்சென்ற நந்தலைவர், எ-று.*

*கான்பிசிர் கற்ப என்றது, 'மழை பெய்திட்டால் மரம் பெய் யும்' என்னும் முறைமை பற்றிக் கூறியது. இவை பத்திற்கும் மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஆற்றுவித்தல்.* *(1)*

462. ஏதில பெய்ம்மழை காரென மயங்கிய
பேதையங் கொன்றைக் கோதைநிலை நோக்கி
யெவனினி மடந்தைநின் கலிழ்வே நின்வயிற்
றகையெழில் வாட்டுந ரல்லர்
முகையவிழ் புறவி னாடிறந் தோரே.

*எ-து: பருவங் கண்டு வேறுபட்ட தலைவியைத் தோழி பருவமன்றென வற்புறீஇயது.*

*இ-ள்: காலமல்லாத காலத்துப் பெய்யுமழையைக் கார் கால மழையென்று மயங்கிய பேதைமையுடைய கொன்றை மரத்தின் மாலையாந்தன்மை பொருந்திய அலர்நிலையைப் பார்த்து எப்படி இப்போது மடந்தையே! நினது கலக்கம்? நின்னிடத்துப் பொருந்திய அழகைக் கெடுப்பவர் அல்லர், முகைகள் விரியும் புறவின் நாட்டைக் கடந்து சென்றவர், எ-று.*

*பேதையங்கொன்றை எனவும், மடந்தை எனவும் அறி வின்மை தோன்றக் கூறினாள். ஏகாரம் - எதிர்மறை; 'மயங்கிப்' என் றும் பாடம். (2)*

463. புதன்மிசை நறுமலர் கவின்பெறத் தொடரிநின்
னலமிகு கூந்த றகைகொளப் புனைய
வாரா தமையலோ விலரே நேரார்
நாடுபடு நன்கலந் தரீஇயர்
நீடினர் தோழிநங் காத லோரே.

*குறித்த பருவம் வரவும் தலைமகன் தாழ்த்துழித் தோழி காரணங்கூறி வற்புறீஇயது.*

*இ-ள்: சிறுதூறின் மேலுள்ள மணம் வீசும் மலரைக் கவி னுண்டாகத் தொடுத்து நினது அழகுமிகுங் கூந்தலானது மெருமை கொள்ளத் தரித்தற்கு வராது அமையல் இவர், பகைவரது நாட்டின் கண்ணுண்டாகும் நல்ல பொருளைத் தருதற்கு நீட்டித்தார் தோழியே! நமது காதலர், எ-று.*

*ஓகாரம் - சிறப்பு; ஏகாரம் - தேற்றம். "பிழைத்தது பிழை யாதாகல் வேண்டியும் பிரிவு"[1] எனக் கூறலின், நேரார் நாடு படுநன்கலம் என்பது பகைவர் திறைதந்த நாடு காத்து அத னிடத்துண்டாம் பொருள் என்பது. (3)*

---

1. தொல். அகத். சூத். 28.

464. கண்ணெனக் கருவிளை மலரப் பொன்னென
விவர்கொடிப் பீர மிரும்புதன் மலரு
மற்சிர மறக்குந ரல்லர்நின்
னற்றோண் மருவரற் குலமரு வோரே.

*எ-து: வரைந்த அணுமைக்கண்ணே பிரிந்த தலைமகன் குறித்த பருவம் வந்துழி, 'இதனைமறந்தார்' என்ற தலைமகட்குத் தோழி 'வரைதற்கு முன் அவரன்புடைமை இதுவாக லான் மறத்தல் கூடாது' எனச் சொல்லி வற்புறீஇயது.*

*இ-ள்: மகளிர் கண்ணைப் போலக் காக்கணங் கொடி மலர, பொன்னைப்போலப் படருங் கொடியாகிய பீர்க்குக் கரிய புதலின்மேல் மலரும் பனிக்காலத்தின் நம்மை மறந் திருப்பாரல்லர், நினது அழகையுடைய தோளை சேர்தற் குச் சுழன்று திரிவோர், எ-று.*

*கருவிளை கண்ணிற்குவமை; "காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்-நீர்வார் கண்ணிற் கருவிளை மலர" என்பதுங் காண்க. பின்பனிக்கால மென்க, "பின்பனிதானு முரித்தென மொழிப"[1] எனப் பாலைக்குக் கூறலின்.* (4)

465. நீரிகு வன்ன நிமிர்பரி நெடுந்தேர்
கார்செய் கானம் பின்படக் கடைஇ
மயங்குமல ரகல நீயினிது முயங்க
வருவர் வாழி தோழி
செருவெங் குருசி றணிந்தனன் பகையே.

*எ-து: பருவங்கண்டு வேறுபட்ட தலைமகளை வேந்தன் வினை முடித்தான் எனக்கேட்ட தோழி 'வருவர்' என வற்புறீஇயது.*

*இ-ள்: நீர்விழுந்தன்மைபோன்ற நிமிர்ந்த குதிரை பூணப் பட்ட நெடிய தேரைக் கார் செய்காடு பின்னாகச் செலுத்திக் கலக்கப்பட்ட மலரணிந்த மார்பை நீ இனிமையுற முயங்கு தற்கு நந்தலைவர் வருவார் தோழி! வாழி, போரை விரும்பிய அரசன் மாற்றுவேந்தர் மேற்கொண்ட பகையைத் தணிந் தான், எ-று.*

---

1. தொ. அகத்திணை. சூத். 10.

'நீரிகுவன்ன பரித்தேர்' என்றதால் வினையுவமையும் உருவுவமையுங் கொள்ளப்படும். உயர்விடத்தினின்று வீழ்தல் பெறப்படும். அது மலையினின்றும் அருவி வீழ்தல்; விழும் நீர் பிறிதோரிடத்துத் தங்காது பள்ளத்திற் றங்குவதுபோலத் தேரும் பிறிதோரிடத்துத் தங்காது மனைக்கண் வந்து தங்குமென்பது. இனி, தேர் மலையும் அருவி தேரிடைப் பூண்ட பரியுமாம். 'நீரிரிகுவன்ன' என்றும் பாடம். (5)

**466.** வேந்துவிடு விழுத்தொழி லெய்தியேந்து கோட்
டண்ணல் யானை யரசுவிடுத் தினியே
யெண்ணிய நாளகம் வருதல் பெண்ணியற்
காமர் சுடர்நுதல் விளங்குந்
தேமொழி யரிவை தெளிந்திசின் யானே.

எ-து: பிரிவின்கண் ஆற்றாளாய தலைமகளை 'அவர் போன காரியம் இடையூறின்றி முடித்துவருதல் பல்லாற்றானுந் தெளிந்தேன்' எனத் தோழி சொல்லி ஆற்றுவித்தது.

இ-ள்: வேந்தனாலேவப்படும் பெருமை பொருந்திய வினைமேற் சென்று ஏந்திய கோட்டினையுடைய பெருமையிற் சிறந்த யானையரசை விட்டு இப்பொழுதே தம்மாற் குறிக்கப்பட்ட நாளுள் வருதலை, பெண்ணியல்பமைந்த அழகிய ஒளி பொருந்திய நுதல் விளங்குகின்ற இனிய வசனத்தையுடைய அரிவையே! யான் தெளிந்தேன், எ-று.

ஏகாரம் - தேற்றம்; "பிரிவி னீட்டம்" என்னும் இறை. 41ஆம் சூத்திரவுரையான் நாட்குறித்துப் பிரிந்தானென்றறியப்படும். (6)

**467.** புனையிழை நெகிழச் சாஅய் நொந்துநொந்
தினையல் வாழியோ விகுளை வினைவயிற்
சென்றோர் நீடினர் பெரிதெனத் தங்காது
நம்மினும் விரையு மென்ப
வெம்முரண் யானை விறற்போர் வேந்தே.

எ-து: தலைமகன் வினைவயிற் பிரிய ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

இ-ள்: அலங்கரிக்கப்பட்ட ஆபரண நெகிழ மெலிந்து மிக நொந்து வருந்தற்க, தோழியே! போர்த்தொழிலின் மேற் சென்றவர் நீட்டித்தார் மிக என்று தங்காது, நந்தலைவரது வெவ்விய வலியையுடைய வெற்றி பொருந்திய போரை யுடைய யானையரசு தலைவனை வரவிரும்பும் நம்மைக் காட்டினும் விரைந்துவரும் என்று கூறுவர், எ-று.

வாழியோ - அசை; உம்மை - சிறப்பு; இறையனாரகப் பொருள், 53ஆம் சூத்திரத்தின் உதாரணச் செய்யுளான் போர்க்குச் சென்ற யானை, குதிரை தங்காமை உணர்க. (7)

468. வரிநுணல் கறங்கத் தேரை தெவிட்டக்
கார்தொடங் கின்றே காலை யினிநின்
னேரிறைப் பணைத்தோட் கார்விருந் தாக
வடிமணி நெடுந்தேர் கடைஇ
வருவரின் றுநங் காத லோரே.

எ-து: பிரிவுநீட ஆற்றாளாய தலைமகட்குத் தோழி பருவங் காட்டி இன்றே வருவர் என வற்புறீயது.

இ-ள்: புள்ளியுடைய நுணலானது கறங்காநிற்கத் தேரைகள் ஒலியாநிற்கக் காரைத் தொடங்கியது காலம்; இனி நினது ஒத்த சந்தினையடைய பருத்த தோள்கட்கு அது பவிக்கப்படும் விருந்தாக, அடிக்கும் மணி கட்டிய தேரைச் செலுத்தி நங்காதலர் இன்று வருவர், எ-று

நுணல் - தவளை விசேடம்; ஏகாரம் - தேற்றம். (8)

469. பைந்தினை யுணங்கல் செம்பூழ் கவரும்
வன்புல நாடற் றரீஇய வலனேர்
பங்க ணிருவிசும் பதிர வேறொடு
பெயறொடங் கின்றே வானங்
காண்குவம் வம்மோ பூங்க ணோயே.

எ-து: பிரிவுநீட ஆற்றாளாய தலைமகட்குத் தோழி 'அவரை நமக்குத் தருதற்கு வந்தது காண் இப்பருவம்' எனக் காட்டி வற்புறீஇயது.

*இ-ள்: பசிய தினையுலர்தலைச் செம்பூழ்ப் பறவை கவருகின்ற வன்புல நாடனைத் தருதற்கு முகில்கள் வலத்தே எழுந்து அழகிய இடமகன்ற பெரிய ஆகாயமதிர இடியோடு மழை பெய்தலைத் தொடங்கியது; ஆதலின், அழகிய கண்ணையுடையாளே! (பிரிந்த தலைவர் கூறிய பருவம் கடிதின் வந்தது, வருவர்) யாங் காண்பேம் வா, எ-று.*

*வன்புலநாடன் = முல்லை நிலத்தலைவன். வலனேர்பு "உலக முவப்பவலனேர்பு"[1] என்றாற்போல. ஒடு உடநிகழ்ச்சி. ஏகாரம் - தேற்றம்; மோ - அசை.* *(9)*

**470. இருநிலங் குளிர்ப்ப வீசி யல்கலு**
**மரும்பனி யளைஇய வற்சிரக் காலை**
**யுள்ளார் காதல ராயி னொள்ளிழை**
**சிறப்பொடு விளங்கிய காட்சி**
**மறக்க விடுமோநின் மாமைக் கவினே.**

*எ-து: பருவம் வந்தது கண்டு தாம் குறித்த இதனை மறந்தாரென வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.*

*இ-ள்: பெரிய நிலங்குளிர வீசி நாள்தோறும் தாங்கற்கரும் பனிகலந்த வாடைக்காலத்தை நினையர் காதலராயின், ஒள்ளிய இழையாளே! சிறப்பொடு விளங்கிய நினது மாமைக் கவின் காட்சி மறக்கவிடாது.*

*ஒடு - ஒடணிகழ்ச்சி; ஓகாரம் - எதிர்மறை; முதல் இரண்டு அடிக்கும்=நிலமீரமுறவீசி நாள்தோறும் தாங்கற்கரிய குளிர் கலந்த முன்பனிக் காலத்தை என்று பொருள் கூறினுமாம். இப்பத்திற்கும் மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஆற்றுவித்தல்.* *(10)*

தோழி வற்புறுத்த பத்து முற்றிற்று

---

1. திருமுருகா. 1.

## 48. பாணன் பத்து

471. எல்வளை நெகிழ மேனி வாடப்
பல்லித ழுண்கண் பனியலைக் கலங்கத்
துறந்தோன் மன்ற மறங்கெழு குருசி
லதுமற் றுணர்ந்தனை போலா
யின்னும் வருதி யென்னவர் தகவே.

*எ-து: "பெறற்கரும் பெரும்பொருள்" (கற்பியல், 9) என்னுஞ் சூத்திரத்துப் 'பிறவும்' என்பதால் பருவ வரவின்கண் தூதாகி வந்த பாணன் கூறியவழித் தோழி சொல்லியது.*

*இ-ள்: ஒளி பொருந்திய வளை கழல, மேனி வாடப் பல விதழ்களையுடைய மலர்போலும் மையுண்ட கண் பனிய லைத்தலாற் கலங்கத் துறந்தான் மிக மறத்தையுடைய குரி சில்; அதை யுணர்ந்தவனைப் போலாய் இன்னும் வருகின் றாய், அவர் தகைமை யாது? எ-று. மற்று - அசை; மெய்ப் பாடு - அழுகை; பயன் - தலை மகன் தகைமையுணர்தல். (1)*

472. கைவல் சீறியாழ்ப் பாண நுமரே
செய்த பருவம் வந்துநின் றதுவே
யெம்மி னுணரா ராயினுந் தம்வயிற்
பொய்படு கிளவி நாணலு
மெய்யா ராகுத னோகோ யானே.

*எ-து: இதுவுமது. குறித்த பருவம் வரவும் தலைமகன் வாரா னாகியவழித் தூதாக வந்த பாணற்குத் தோழி கூறியது.*

*இ-ள்: தொழில் வல்ல சிறிய யாழ்ப்பாணனே! நுந் தலைவர் குறித்துக் கூறிச் சென்ற காலம் வந்து நின்றது; அதை அவர் எம் போலுணரப் பெறாராயினுந், தம்மிடத் துப் பொய்யுண்டாகுங் கிளவிக்கு நாணுதலையுமறியாரா தற்கு யான் நோவா நின்றேன். எ-று.*

*எய்யார் = அறியார், 'எய்யாமையே யறியாமையே' என்பதோத்தாகலின். (தொ. உரியி. 46).*

நுமரே - ஏகாரம் பிரிநிலை; நின்றதுவே - எகாரம் தேற்றம்; உம்மை - இழிவு சிறப்பு; நாணலும் - உம்மை எச்சம்; ஓகாரம் - சிறப்பு; மெய்ப்பாடு - மருட்கையைச் சார்ந்த அழுகை; பயன் - தலைமகன் வரவு விருப்பம். (2)

**473.** பலர்புகழ் சிறப்பினுங் குருசி லுள்ளிச்
செலவுநீ நயந்தனை யாயின் மன்ற
வின்னா வரும்பட ரெம்வயிற் செய்த
பொய்வ லாளர் போலக்
கைவல் பாணவெம் மறவா தீமே.

எ-து: "அவனறிவாற்ற வறியும்" (கற்பியல், 6) என்னுஞ் சூத்திரத்துப் "பல்வேறு நிலையினும்" என்பதால், 'தலைமகன் பிரிந்த நாட்டிற் செல்வேம்' என்ற அவன் பாணற்குத் தலைமகள் சொல்லியது. இது தூதுவிடக் கருதிக் கூறியதென்பர் நச்சினார்க்கினியர்.

இ-ள்: பலரானும் புகழப்படும் சிறப்பினையுடைய நுமது தலைவனைக் கருதிச் செல்லுதலை நீ விரும்பினாயாயின், பெரிதும் இன்னாமை பொருந்திய அரிய துன்பத்தை எம்மிடத்துச் செய்த பொய் வல்லாரைப் போல, தொழில் வல்ல பாணனே! எம்மை மறவாதே, எ-று.

'நுங்குருசில்' என்றாள் பாணன் தலைவன் நாட்டிற்குப் போதலினும் தனக்குத் துயரஞ் செய்தலினும் பொய்வலாளரென்றாள் சொன்னபடி செய்யாமையின். கைவல் பாண வென்றாள் தூது சென்று பெண்களை அவற்கு வசப்படுத்தலின். தம் வருத்தத்தைச் சொல்ல வேண்டுமென்பாள் எம் மறவாதீமென்றாள். மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தூதுவிடுதல். (3)

**474.** மையறு சுடர்நுதல் விளங்கக் கறுத்தோர்
செய்யரண் சிதைத்த செருமிகு தானையொடு
கதழ்பரி நெடுந்தே ரதர்ப்படக் கடைஇச்
சென்றவர்த் தருகுவ லென்னு
நன்றா லம்ம பாணன தறிவே.

எ-து: இதுவுமது. பிரிவின்கண் ஆற்றாமை கண்டு, 'தூதாகிச் சென்று அவனைக் கொணர்வல்' என்ற பாணன் கேட்பத் தலைமகள் கூறியது.

'இது பாணனைத் தூது விட்டுக் கூறியது' என்பர் நச்சினார்க்கினியர்.

இ-ள்: குற்றமற்ற ஒளி பொருந்திய நுதல் விளங்க, பகைவரது செவ்விய அரணையழித்த போர் மிக்க சேனையுடன் விரைந்து செல்லும் குதிரை பூண்ட நெடிய தேரை வழியுண்டாகச் செலுத்திச் சென்றவரை அழைத்துத் தருவேனென்னும் பாணனது அறிவுடைமை நன்மையுடைத்து, எ-று.

ஒடு - உடனிகழ்ச்சி; அம்ம - முன்னிலையசை; ஆல் - அசை.

மெய்ப்பாடு - உவகையைச்சார்ந்த பெருமிதம்; பயன் - தூது போக்கல்; நச்சினார்க்கினியர் கருத்திற்கு-கேட்போர் தோழி; மெய்ப்பாடு - அது; பயன் - மகிழ்தல். (4)

**475.** தொடிநிலை கலங்க வாடிய தோளும்
வடிநல னிழந்தவென் கண்ணு நோக்கிப்
பெரிதுபுலம் பினனே சீறியாழ்ப் பாண
னெம்வெங் காதலொடு பிரிந்தோர்
தம்மோன் போலான் பேரன் பினனே.

எ-து: இதுவுமது. பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தலைமகனுழை நின்றும் வந்தார் கேட்பத் தன் மெலிவு கண்டு இரங்கிய பாணனைத் தோழிக்கு மகிழ்ந்து சொல்லியது.

இ-ள்: இறுகத் தரித்த தொடி நிலையினின்றும் வேறுபட வாட்டமுற்ற தோளையும் மாவடுவின் அழகை இழக்கப்பெற்ற எனது கண்ணையும் பார்த்து மிகப் புலம்பினன் சிறிய யாழ்ப்பாணன், என்னிடத்திற் கொண்ட மிக்க காதலோடு பிரிந்து போனார் தம்மவனைப் போலாகான், எம்மிடைப் பேரன்பினையுடையன், எ-று.

தொடி = வளை கழலாதிருப்பதற்கு முன் கையில் இறுகத் தரிப்பது. நிலைகலங்கவென்பது இறுக்கமின்றி அசைய; உம்மை - எண்ணும்மை; ஏகாரம் - தேற்றம்; மெய்ப்பாடு - மருட்கை; பயன் - தூது போக்கல். (5)

**476.** கருவி வானங் கார்சிறந் தார்ப்பப்
பருவஞ் செய்தன பைங்கொடி முல்லை

பல்லான் கோவலர் படலைக் கூட்டு
மன்பின் மாலையு முடைத்தோ
வன்பில் பாண வவர்சென்ற நாடே.

*எ-து: இதுவுமது. 'பிரிவாற்றாமை அவற்கும் உள தன்றே, நீ வேறுபடுகின்றது என்னை?' என்ற பாணற்குத் தலைமகள் கூறியது.*

*இ-ள்: மின் இடி முதலிய தொகுதியையுடைய முகில்கள் கார்காலத்திற் சிறந்தவாய் ஒலிப்பப் பசிய கொடியாகிய முல்லைகள் அலர்ந்து பருவஞ் செய்தன; பல ஆனிரையை யுடைய ஆயர் இலைத் தொடையைத் தொடுக்கும் அன்பில்லாத மாலைக்காலமும் உடைத்தோ? அன்பில்லாத பாணனே! தலைவர் சென்றநாடு, எ-று.*

*படலை - இலைத்தொடை என்பது, "பைந்தளிர்ப் படலை பரூஉக்காழாரம்"[1] என்பதனுரையிற் காண்க. உம்மை - சிறப்பு; மெய்ப்பாடு - அழுகை; பயன் - அது. (6)*

477. பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமொ டரும்பட ருழப்போள்
கையறு நெஞ்சிற் குயவுத் துணையாகச்
சிறுவரைத் தங்குவை யாயிற்
காண்குவை மன்னாற் பாணவெந் தேரே.

*எ-து: "ஒன்றாத் தமரினும்" (அகத்திணை. 41) என்னுஞ் சூத் திரத்துப் "பாசறைப் புலம்பலும்" என்பதால், தலைமகண் மாட்டுப் பாணனைத் தூதாக விடுத்த தலைமகன் கூறியது.*

*இ-ள்: குளிர்ந்த மலர்போலும் நெடிய கண்ணிற் பசலை பரக்க, வெறுப்பு நிறைந்த துன்பத்தோடு அரிய நினைவு மிகுதியால் வருந்துவோளது துன்புறு நெஞ்சிற்கு வருத்தந் தீர்க்குந் துணையாகச் சிறிது காலந் தங்குவையாயின், காணுவை, நமது தேரை, எ-று.*

---

1. சிலப்.4, அந்திமாலை. 41.

ஒடு - உடனிகழ்ச்சி. "உயாவே உயங்கல்" (தொல். உரி யியல் 73) என்றலின் உயா - வருத்தம் என்பது; மன் - ஆக்கம்; ஆல் - அசை. 'நெஞ்சத் துயவுத் துணையாகி' என்றும் பாடம். மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வருத்தந் தணிவித்தல். (7)

478. நீடின மென்று கொடுமை தூற்றி
வாடிய நுதல ளாகிப் பிறிதுநினைந்
தியாம்வெங் காதலி நோய்மிகச் சாஅய்ச்
சொல்லிய துரைமதி நீயே
முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே.

எ-து: இதுவுமது. பிரிந்துறையுந்தலைமகன் தலைமகள் விட்ட தூதாய் சென்ற பாணனை 'அவள் சொல்லிய திறம் கூறு' எனக் கேட்டது.

இ-ள்: நீடித்தேமென்று கொடியவற்றை எடுத்துக் கூறி, வாட்டம் பொருந்திய நுதலையுடையளாய், வேறு நினைத்து, யாம் விரும்புங் காதலி நோய் மிகுவான் மெலிந்து சொல்லி யதை அறியேனாய எனக்கு முல்லை யாழ்ப்பாணனே! நீ சொல்லுவாய், எ-று.

பிறிது நினைத்தல் - நீட்டித்தலின் வாரானென நினைத் தல்; மதி - முன்னிலையசை; ஏகாரம் - தெளிவு; மற்று - வினை மாற்று. 'பிறிதுநினைந் தியாம்வெங் காதலி நோய்மிகச் சாஅய்'-வேறு நினைத்து அந்த விருப்பத்தையுடைய காதலி யுற்ற நோயை யாமுற்று மிகமெலியச் சொல்லியது சொல் லென்றான், அன்பின் தன்மை தோன்ற. அ என்னுஞ் சுட்டு இயற்கைப் புணர்ச்சிக்கண் நிகழ்ந்தவற்றைக் குறித்தது; பிறிது நினைத்தல் - இயற்கைப் புணர்ச்சிக்கண் நிகழ்ந்த வற்றை இகழ்ந்து பிறிது நினைத்தல். மெய்ப்பாடு - அழுகை யைச்சார்ந்த பெருமிதம்; பயன் - தலைவி நிலையறிதல். (8)

479. சொலலுமதி பாண சொல்லுதோ றினிய
நாடிடை விலங்கிய வெம்வயி னாடொறு
மரும்பனி கலந்த வருளில் வாடை
த்னிமை யெள்ளும் பொழுதிற்
பனிமலர்க் கண்ணி கூறிய தெமக்கே.

*எ-து: இதுவுமது. தலைவிவிடத் தூதாய்ச் சென்ற பாணன் மாற்றங்கூறக் கேட்ட தலைமகன் 'இவ்வாடை வருத்தத்திற்கு மருந்தாக இன்னுங் கூற வேண்டும்' எனக் கூறியது.*

*இ-ள்: நாட்டிடத்தை விலகிய எம்மிடை நாடோறும் அரிய பனி கலக்கப்பட்ட அருளில்லாத வாடையானது தனித்தமையால் எள்ளும் பொழுதின், பனி பொருந்திய மலர்போலுங் கண்ணாள் நின்னிடத்துக் கூறிவிட்டது எமக்கு நீ சொல்லுந் தோறும் இனியவாயிருக்கின்றவாத லின், பாணனே! இன்னுஞ் சொல்லுவாய், எ-று.*

*மதி - முன்னிலையசை; பொருள்கோள் விற்பூட்டு. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல் (9)*

**480.** நினக்குயாம் பாணரு மல்லே மெமக்கு
நீயுங் குருசிலை யல்லை மாதோ
நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி
யீரித ழுண்க ணுகுத்த
பூசல் கேட்டு மருளா தோயே.

*எ-து: "நிலம் பெயர்ந் துறைதல் வரைநிலை யுரைத்தல் - கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவையுரிய" (கற்பியல், 28) என்பதால், தலைமகட்குத் தூதாய்ப் பாசறைக்கட் சென்ற பாணன் தலைமகனை நெருங்கிச் சொல்லியது.*

*இ-ள்: தலைவ! நினது விருப்பத்தையுடைய காதலி தன் மனைக்கண்ணிருந்து தனிமையுற்று ஈரிய இதழ் பொருந்திய மையுண்கண்கள் நீர் சொரிந்த வருத்தத்தைக் கேட்டும் அருள் செய்யாதோய்! நினக்கு யாம் பாணருமல்லேம், எங் கட்கு நீ தலைவனுமல்லை, எ-று.*

*உம்மை - இழிவு சிறப்பு; மாதோ - அசை; பூசல் = வருத் தம் என்பது "புலம் பெயர்ந்தொளிந்த களையாப்பூசல்" எனப் பதிற்றுப்பத்து 44ஆம் செய்யுளிற் காண்க. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - தலைமகனை மனைக்கண் செலுத்துதல் (10)*

பாணன் பத்து முற்றிற்று

---

## 49. தேர் வியங்கொண்ட பத்து

481. சாயிறைப் பணைத்தோ ளவ்வரி யல்குற்
சேயிழை மாதரை யுள்ளி நோய்விட
முள்ளிட் டூர்மதி வலவநின்
புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே.

*எ-து: "பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும்" (கற்பியல், 5) என்பதால், வினைமுற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறியது.*

*இ-ள்: வாடிய சந்துபொருந்திய பருத்ததோளும் அழகிய வரி பொருந்திய அல்குலும் சிவந்த இழையையுமுடைய மாதரை நினைத்து நம் நோய் தீரத் தாற்றுக்கோலை மா மேலிட்டுப் புட் போல நிலந்தீண்டாத செலவினையுடைய கலித்த குதிரைபூண்ட நினது தேரை, பாகனே! செலுத்துவாய், எ-று.*

*எண்ணும்மை தொக்கது. முட்கோல் குதிரைகளை ஏவுங் கருவி; அதை இக்காலத்துச் சவுக்கென்ப.*

வடிகயி றாய்ந்து முட்கோல் வலக்கையாற் றாங்கி வென்றி
முடிகெனப் புரவி முள்ளாலுறுத்தினான்.........

*என்றார் சிந்தாமணியிலும் (காந்தருவ. செய். 302)*

புள்ளியற் கலிமா என்பதை,
வினைவயிற் பிரிந்தேன் மீண்டுவருங் காலை
யிடைச்சுர மருங்கிற் றவிர்த லில்லை
யுள்ளம் போல வுற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா வுடைமையான

*(கற்பியல், 53) என்பதானுணர்க.*

*மதி - முன்னிலையசை; தாற்றுக்கோலில் முள்ளுடைமையின் முட்கோல் எனப்படும். முள்ளிடுதல் = தாற்றுக்கோல் முள்ளை மாவின்மேற்றைக்கச் செய்தல். விரைந்து செல்வது கருதி அதன் வருத்த நோக்காது கூறினான். (1)*

482. தெரியிழை யரிவைக்குப் பெருவிருந் தாக
வல்விரைந்து கடவுமதி பாக வெள்வேல்

வென்றடு தானை வேந்தனொடு
நாளிடைச் சேப்பி னூழியி னெடிதே.

இதுவுமது.

இ-ள்: தெரியப்படும் இழையை யணிந்த அரிவைக்குப் பெரிய விருந்தாக மிக விரைந்து செலுத்துவாய், பாகனே! வெற்றி வேலாகிய வென்று அடுகின்ற தானையையுடைய வேந்தனோடு ஒரு முகூர்த்தம் இவ்விடைத்தங்கின அம்முகூர்த்தம் ஒரூழியினும் நீட்டித்தது, எ-று.

மதி - முன்னிலையசை; ஒடு - உடனிகழ்ச்சி; இன் நீக்கப் பொருட்டு.

தானை வகையின் வேல் ஒன்றாயினமையின் வேற்றனை வேந்தனென்றான். அது "பெரும்பகை தாங்கும் வேலினானும்" என்ப வாகைத்திணையின் (தொ. புறத். சூத். 21). வேலை விதந்து கூறுதல் வெற்றியுடையதெனப் பொருள்படலானும், முக்கட் கடவுட்கும் முருகற்கும் படையாகலானும், பிற சான்றோருஞ் சிறப்பக் கூறலானுமாம்.

'வென்றடுதானை' = பகைவரை யஞ்சுவித்து வெல்லலும், அஞ்சாதாரை அட்டு வெல்லலுமாம். நாள் என்றது ஈங்குச் சிறிது காலத்தை. காதலுடையாரைப் பிரிந்திருப்பார்க்கும் பிரியா திருப்பார்க்குங் காலம் வேடுபடுதல் கணமோரூழி, ஊழியோர் கணம், என்னும் முதுமொழியானுணரப் படும். இன் - உவமை யுருபெனினுமாம். (2)

483. ஆறுவனப் பெய்த வலர்தா யினவே
வேந்துவிட் டனனே மாவிரைந் தனவே
முன்னுறக் கடவுமதி பாக
நன்னுத லரிவை தன்னலம் பெறவே.

இதுவுமது.

இ-ள்: வழி அழகு பொருந்த மலர்கள் பரந்தன; அரசனும் போர் தொழிலை விட்டான்; மாவும் விரைந்தன; ஆதலின் நல்ல நுதலையுடைய அரிவைத் தனது இன்பத்தைப்

*பெறும் பொருட் டாக, பாகனே! முற்படச் செலுத்துவாய், எ-று.*

*'முன்னுற' என்பதை திருக்கோவை. 16ஆம் செய்யுளிற் காண்க. ஏகாரங்கள் - எண்ணேகாரங்கள்.* *(3)*

**484.** வேனி னீங்கக் கார்மழை தலைஇக்
காடுகவின் கொண்டன்று பொழுதுபாடு சிறந்து
கடியக் கடவுமதி பாக
நெடிய நீடின நேரிழை மறந்தே.

*இதுவுமது.*

*இ-ள்: கோடை நீங்கர் கார் மழையைச் சொரிந்து காடானது அழகைக் கொண்டது; யாம் ஒத்த இழையாளை மறந்து மிக நீட்டித்தனமாகலின், கார்காலமானது பெருமை சிறக்க, விரையச் செலுத்துவாய், பாகனே? எ-று.*

*நேரிழை - ஆகுபெயர்; சிறந்து சிறக்க எனத் திரிக்கப் பட்டது.* *(4)*

**485.** அரும்பட ரவல மவளுந் தீரப்
பெருந்தோ ணலம்வர யாமு முயங்க
வேமதி வலவ தேரே
மாமருண் டுகளு மலரணிப் புறவே.

*இதுவுமது.*

*இ-ள்: அரிய படராகிய அவலம் அவளும் நீங்க, பெரிய தோள் அழகு வர, யாமும் முயங்க, மாக்கள் மயங்கித் துள்ளும் புறவின், பாகனே! நமது தேரை விரையக் கடவுவாய், எ-று.*

*உம்மை - முன்னையது எச்சம் பின்னையது முற்று; ஏ=செலுத்து, முதனிலைவினை, இதனை அகம் 134, நற்றிணை 21 என்னுஞ் செய்யுட்களிற் காண்க.* *(5)*

**486.** பெரும்புன் மாலை யானாது நினைஇ
யரும்பட ருழத்தல் யாவ தென்றும்
புல்லி யாற்றாப் புரையோட் காண

வள்புதெரிந் தூர்மதி வலவநின்
புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே.

இதுவுமது.

இ-ள்: பெரிய புன்மாலையின் அமையாது நினைத்து அரிய துன்பத்தை அனுபவித்தல் எத்தன்மைத்து? என்றுந் தழுவியும், ஆற்றாத உயர்ச்சியையுடையோளைக் காண்டற்கு, பாகனே! நினது புட்போன்ற இயல்பினையுடைய கலித்த குதிரை பூண்ட தேரை வாரைத்தெரிந்து பிடித்தியக்கிச் செலுத்துவாய், எ-று. (6)

487. இதுமற் பிரிந்தோ ருள்ளும் பொழுதே
செறிதொடி யுள்ள முவப்ப
மதியுடை வலவ வேமதி தேரே.

இதுவுமது.

இ-ள்: இக்காலம், பிரியாதார்போலன்று, பிரிந்தார் நினைவு கூரும் பொழுது ஆதலின், செறிந்த தொடியணிந்த காதலியுள்ளம் மகிழ யாம் போதற்குப் பாகுநூன் முற்றக் கற்ற மதியையுடைய பாகனே! நினது தேரைச் செலுத்து வாய், எ-று.

மன் - ஒழியிசை; ஏகாரம் - தேற்றம். (7)

488. கருவி வானம் பெயறொடங் கின்றே
பெருவிறற் காதலி கருதும் பொழுதே.
விரியுளை நன்மாப் பூட்டிப்
பருவர நீரக் கடவுமதி தேரே.

இதுவுமது.

இ-ள்: தொகுதியையுடைய மேகம் பெயலைத் தொடங்கியது காதலி கருதுங்காலம்; அவள் துன்பம் நீங்க, பெரிய வெற்றியமைந்த விரியும் பிடர்மயிரையுடைய நல்ல குதிரையைப் பூட்டி நினது தேரை, பாகனே! செலுத்துவாய், எ-று.

பெருவிறல் நன்மா எனக் கூட்டுக. ஏகாரம் - முன்னது தேற்றம், பின்னது அசை. (8)

489. அஞ்சிறை வண்டி னரியின மொய்ப்ப
மென்புல முல்லை மலரு மாலைப்
பையு ணெஞ்சிற் றைய லுவப்ப
நுண்புரி வண்கயி றியக்கிநின்
வண்பரி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே.

*இதுவுமது.*

*இ-ள்: அகத்தே சிறையையுடைய வண்டின் அழகிய இனம் மொய்க்கப் புறவினிடத்தாய மெல்லிய முல்லை மலருகின்ற மாலைக் காலத்துத் துன்பம் பொருந்திய நெஞ்சினளாகிய தையல் மகிழ, நுண்ணிய புரியமைந்த வண்மை பொருந்திய கடிவாளக் கயிற்றை இயக்கி, பாகனே! நினது வண்பரி நெடுந் தேரை விரையச் செலுத்துவாய், எ-று.*

*இன் - சாரியை; மதி - முன்னிலையசை.*

"அஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்
குன்றமர்ந் துறைதலு முரிய னதாஅன்று"

*எனத் திருமுருகாற்றுப்படை (76ஆம் அடி)யிலும் வருதல் காண்க.* *(9)*

490. அந்தீங் கிளவி தான்றர வெம்வயின்
வந்தன்று.................
ஆய்மணி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே.

*இதுவுமது.*

*இ-ள்: அழகிய இனிய கிளவியை யுடையாள் தர எம்மிடத்து வந்தது.................. ..........................................................அழகிய மணி கட்டிய நீண்ட தேரை, பாகனே! விரைந்து செலுத்துவாய், எ-று.*

*ஏகாரம் - தேற்றம்; இச்செய்யுளின் இரண்டாமடியிற் சில சீர்கள் காணப்படவில்லை.*

*இப்பத்திற்கும் மெய்ப்பாடு - உவகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - பாகன் தேரைக் கடிது செலுத்துதல்.* *(10)*

தேர்வியங் கொண்ட பத்து முற்றிற்று

---

## 50. வரவுச் சிறப்புரைத்த பத்து

491. காரெதிர் காலையா மோவின்று நலிய
நொந்துநொந் துயவு முள்ளமொடு
வந்தென மடந்தைநின் னேர்தர விரைந்தே.

*எ-து: "காணத்தி னமைந்து முடிந்த காலை" (கற்பியல், 5) என்னுஞ் சூத்திரத்துப் 'பண்ணமை பகுதி'யாற் கொள்வது: வினை முற்றிப் புகுந்த தலைமகன் பள்ளியிடத்திருந்து தலைமட்குச் சொல்லியது.*

*இ-ள்: கார் முற்படுங் காலத்து யாந் தடையின்று மெலிய வருந்தி வருந்தி வாடும் நெஞ்சோடு வந்தனெம், மடந்தையே! நினது அழகைத் தர விரைந்து, எ-று.*

*ஒவுதல் ஒழிதல் என்பது "ஒல்லும் வகையானறவினை யோவாதே"[1] என்பதனானுமறிக. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்வித்தல்.* (1)

492. நின்னே போலு மஞ்ஞை யாலநின்
னன்னுத னாறு முல்லை மலர
நின்னே போல மாமருண்டு நோக்க
நின்னே யுள்ளி வந்தனெ
னன்னுத லரிவை காரினும் விரைந்தே.

*இதுவுமது:*

*இ-ள்: அழகிய நுதலையுடைய அரிவையே! யாம் வரும் வழியிடத்து, நின்னைப்போலும் சாயலினையுடைய மயில்கள் ஆட, நினது நுதல் நாற்றத்தை வீசும் முல்லை மலரா நிற்க, நின்னைப் போல மாக்கள் மருண்ட நோக்கத்தை யுடையவாய் நோக்க, அவையிற்றை நோக்கிக் காரினும் விரைந்தேனாய் நின்னை நினைந்து வந்தேன், எ-று.*

*ஏகாரம் - முன்னிரண்டும் தேற்றம்; பின்னது - பிரிநிலை; இன் - நீக்கம்; உம்மை - சிறப்பு; நீக்கி எனவும் பாடம். மெய்ப்பா டும் பயனும் அவை.* (2)

---

1. திருக்குறள், செய் 33.

493. ஏறுமுரண் சிறப்ப வேறெதி ரிரங்க
மாதர் மான்பிணை மறியொடு மறுகக்
கார்தொடங் கின்றே காலை
நேரிறை முன்கைநின் னுள்ளியாம் வரவே.

*இதுவுமது.*

*இ-ள்: ஏறுகள் கோட்டான் மண்ணையிடந்து சத்தித்து வலி சிறப்ப, இடி அதற்கு எதிர் சத்திக்க, காதலையுடைய பிணை மான் மறியோடு மறுகக் காரைத் தொடங்கியது காலம், ஒத்த சந்து பொருந்திய முன்கையையுடையாளே! நின்னையுள்ளியான் வர, எ-று.*

*ஏகாரம் - தேற்றம்; மெய்ப்பாடும் பயனும் அவை. (3)*

494. வண்டு தாதூதத் தேரை தெவிட்டத்
தண்கமழ் புறவின் முல்லை மலர
வின்புறுத் தன்று பொழுதே
நின்குறி வாய்த்தனந் தீர்கினிப் படரே.

*இதுவுமது.*

*இ-ள்: வண்டுகள் தாதையுண்ணா நிற்க, தேரைகள் ஒலியா நிற்க, தண்ணிய நறு நாற்றம் வீசும் புறவினிடத்து முல்லைகள் மலரா நிற்க, இன்பத்தையுறுத்தது காலம்; அரிவையே! நினது குறிப்புக்கு வாய்க்கப் பெற்றனம் ஆதலின் இனித் துன்பத்தைத் தீர்குவாய், எ-று.*

*ஏகாரம் - தேற்றம்; குறி - பிரிவாற்றாமையைத் தருங் கார் காலத்திற்கு வரவேண்டுவது; மெய்ப்பாடும் பயனும் அவை. (4)*

495. சென்னில மருங்கிற் பன்மலர் தாஅய்ப்
புலம்புதீர்ந் தினிய வாயீன புறவே
பின்னருங் கூந்த னன்னலம் புனைய
வுள்ளுதொறுங் கலிழு நெஞ்சமொடு
முள்ளெயிற் றரிவையாம் வந்த மாறே.

*இதுவுமது.*

இ-ள்: செல்லுகின்ற நிலமருங்கின் பல மலர்கள் பரந்து தனிமை தீரப்பட்டு இனிமையுடைய ஆயின புறவு; பின்னிய கரிய கூந்தல் நல்லழகைச் செய்ய, நினைக்குந்தோறுங் கலிழும் நெஞ்சத்தோடும், முட்போலும் கூரிய எயிற்றினையுடைய அரிவையே! யாம் வந்த காரணம், எ-று.

யாம் வந்தமாறு கூந்தல் நன்னலம் புனைய எனக் கூட்டி முடிக்க. ஏகாரம் - தேற்றம்; 'செந்நில' மென்றும் 'வந்தவாறு' என்றும் பாடம். மெய்ப்பாடும் பயனும் அவை. (5)

**496. மாபுதல் சேர வரகிணர் சிறப்ப**
**மாமலை புலம்பக் கார்கலித் தலைப்பப்**
**பேரமர்க் கண்ணி நிற்பிரிந் துறைநர்**
**தோடுணை யாக வந்தனர்**
**போதவிழ் கூந்தலும் பூவிரும் புகவே.**

எ-து: "பெறற்கரும் பெரும் பொருள்" (கற்பியல், 9) என்னுஞ் சூத்திரத்துப் பிறவாற் கொள்வது:- அது தலைமகன் வரவு மலிந்து கூறுவது. குறித்த பருவத்தின்கண் தலைமகன் வந்துழித் தோழி தலைமகட்குச் சொல்லியது.

இ-ள்: மாக்கள் சிறு தூற்றைச் சேர, வரகின் இணர்கள் சிறக்க, கரியமலை தனிமையுடைய, காரானது கலித்து மழையைப் பெய்ய, பெரிய அமர்த்த கண்ணாளே! நின்னைப் பிரிந்துறைந்தவர் நினது தோளுக்குத் துணையாதற்கு வந்தாராதலின் போதவிழுங் கூந்தலும் இனிப் பூவை விரும்புவதாக, எ-று. உம்மை - சிறப்பு; மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்வித்தல். (6)

**497. குறும்பல கோதை கொன்றை மலர**
**நெடுஞ்செம் புற்ற மீயல் பகர**
**மாபசி மறுப்பக் கார் தொடங் கின்றே**
**பேரிய லரிவைநின் னுள்ளிப்**
**போர்வெங் குருசில் சென்ற வாறே.**

இதுவுமது.

இ-ள்: குறிய பல கோதைகளைக் கொன்றையானது மலர, நெடிய சிவந்த புற்று ஈயலைக் கொடுக்க, மாக்கள் பசியை

மறுப்பக் கார் தொடங்கியது. பெரிய அழகையுடைய அரிவையே! நின்னை நினைத்து, போரை விரும்பிய குரிசில் வந்த காரணம், எ-று.

ஏகாரம் - தேற்றம்; கொன்றைப்பூ மாலைபோல மலர்தலின் கோதை எனப்பட்டது. மெய்ப்பாடும் பயனும் அவை. (7)

498. தோள்கவி னெய்தின தொடிநிலை நின்றன
நீள்வரி நெடுங்கண் வாள்வனப் புற்றன
வேந்துகோட் டியானை வேந்துதொழில் விட்டென
விரைசெல னெடுந்தேர் கடைஇ
வரையக நாடன் வந்த மாறே.

இதுவுமது.

இ-ள்: நிமிர்ந்த கோட்டையுடைய யானையையுடைய வேந்தன் போர்த் தொழிலை விட்டானாக, விரைந்து செல்லுந் தன்மையையுடைய நீண்ட தேரைச் செலுத்தி, வரையக நாடன் வந்த காரணத்தால் நினது தோள் அழகு பெற்றன, வளையல் நிலையின் நின்றன, நீண்ட செவ்வரி பொருந்திய நீண்ட கண் வாளின் அழகைப் பெற்றன, எ-று. மெய்ப்பாடும் பயனுமவை. (8)

499. பிடவ மலரத் தளவ நனையக்
கார்கவின் கொண்ட கானங் காணின்
வருந்துவள் பெரிதென வருந்தொழிற் ககலாது
வந்தன ரானங் காதல
ரந்தீங் கிளவிநின் னாய்நலங் கொண்டே.

இதுவுமது.

இ-ள்: பிடவ மரம் மலரவும் செம்முல்லை அரும்பையீனவுங் காரினாலே அழகைக் காண்ட புறவைக் காணின் மிகவும் வருந்துவாளென்று அரிய போர்த் தொழிலின்கண் நீட்டியாது, அழகிய இனிய சொல்லையுடையாளே! நினது மிக்க அழகைக் கொண்டு நந்தலைவர் வந்தார், எ-று.

ஆலும் ஏயும் - அசை; தொழிற்கு என்னும் நாலாவது ஏழாவதன் பொருட்கண் வந்தது.

"கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய"

*என்பதில் மணற்கு என்பதுபோல, (தொல் வேற்று. மயங். சூத். 23). மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்வித்தல். (9)*

500. கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்
குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்
தொல்கவின் பெற்றன விவட்கே வெல்போர்
வியனெடும் பாசறை நீடிய
வயமான் றோன்றனீ வந்த மாறே.

*எ-து: வினை முற்றிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.*

*இ-ள்: வெல்லுகின்ற போரையுடைய விசாலித்த நீண்ட பாசளைக்கண் நீட்டித்த சிங்கத்தையொத்த தலைவனே! நீ வந்த காரணத்தால், கொன்றைப் பூவைப்போல மை தீட்டிய கண்கள் மலையகத்துள்ள நீண்ட சுனையின் கணுள்ள குவளை மலரைப் போல இவளுக்குப் பழைய அழகைப் பெற்றன, எ-று.*

*இன் - உவமவுருபு; ஏகாரம் - பிரிநிலை; வயமான் - உவமத் தொகை வேற்றுமைத் தொகையாக்கினும் பொருந்தும்; இப்பொருட்கு வயமான் = குதிரை; மெய்ப்பாடும் பயனும் அவை.*

வரவுச் சிறப்புரைத்த பத்து முற்றிற்று

---

**முல்லை முற்றிற்று**

***பேயனார்***

*ஐங்குறு நூறு முற்றிற்று*

மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலன் – கருதிய
பாலையோத; லாந்தை பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு.

*இத்தொகை தொகுத்தார்:*

**புலத்துறைமுற்றிய கூடலூர்கிழார்;**

*தொகுப்பித்தார்:*

**யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையார்.**

# செய்யுள் முதற் குறிப்பகராதி

வே



ooo

# அரும்பத அகராதி

## (எண்கள் பாட்டின் எண்கள்)

### அ

## ஆ

## இ

ஈ



உ

### தே



### தை



### தொ



### தோ



### ந

பீ



பு



பூ

## வே



## வை



## வெள



அரும்பத அகராதி முற்றிற்று



## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| பொருள் புதிது | 35. 00 |
| ஆளும் தமிழ் | 28. 00 |
| புதிய அமைச்சகம் புரிந்த பணிகள் | 10. 00 |
| தமிழின் பா வடிவங்கள் | 35. 00 |
| சங்க இலக்கியம் – கவிதையியல் நோக்கு | 110. 00 |
| நாடக மேடை நினைவுகள் | 160. 00 |
| சின்னணைஞ்சான் கதை | 65. 00 |
| தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள் | 110. 00 |
| நன்னூல் மூலமும் கூழங்கைத்தம்பிரான் உரையும் | 65. 00 |
| யாப்பருங்கலம் | 170. 00 |
| மண்டல புருடர் வழங்கிய சூடாமணி நிகண்டு | 65. 00 |
| தமிழ் நாடகமேடை முன்னோடிகள் | 40. 00 |
| காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் – ஓர் ஆய்வு | 60. 00 |
| திருக்குற்றாலநாத சுவாமி கோயில் வரலாறும் பண்பாடும் | 60. 00 |
| வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும் | 65. 00 |
| தமிழ்நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள் | 100. 00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள், தொகுதி – 1 | 100. 00 |
| கதிர்வேற்பிள்ளை – தமிழ்ச் சொல்லகராதி, மூன்று பாகங்கள் | 600. 00 |
| தொல்காப்பியப் பொருளதிகாரம் – ஆங்கில மொழிபெயர்ப்பு | 40. 00 |
| சதாசிவப் பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள் | 40. 00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள், தொகுதி–1 | 50. 00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள், தொகுதி–2 | 40. 00 |
| நாட்டிய நன்னூல் | 25. 00 |
| கன்னடத்தில் காரைக்காலம்மையார் வரலாறு | 20. 00 |
| கபிலர் | 70. 00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 75. 00 |
| வேதகிரியார் சூடாமணி நிகண்டு | 65. 00 |
| தமிழக மேடை நாடகப் பெண் கலைஞர்கள் – குறிப்பேடு | 25. 00 |
| Tamil India | 40. 00 |
| Studies in Tamil Prosody and Poetics | 45. 00 |
| Persona in Tolkapiyam | 50. 00 |
| A Grammar of Contemporary Literary Tamil | 80. 00 |
| Cilappatikaram (மொ.நூ.ம.ப) | 100. 00 |
| Tani pacura togai (மொ.நூ.ம.ப) | 30. 00 |
| Dedication (மொ.நூ.ம.ப) | 25. 00 |
| Temple chimes (மொ.நூ.ம.ப) | 20. 00 |
| Nala venba (மொ.நூ.ம.ப) | 45. 00 |
| Tamil Heroic Poems (மொ.நூ.ம.ப) | 40. 00 |